بسم الله الرحمن الرحيم

# ஆரிபு நாயக வசனம்.

இஃது,

நாகூர் - தர்கா மகா வித்துவானும், மதுரைத்
தமிழ்ச்சங்கப் புலவரு ளொருவரும், வித்வஜன சேகர
நும், ஷமஏ ஜஹானும், (உலகதீபம்) பல நூலாசிரியரு மாகிய

ஸ்ரீ - ல - ஸ்ரீ.

## குலாம்காதிறு நாவலர்

இயற்றியது.

---

ஐயன்பேட்டை. காதிறுசாகிபவர்கள் குமாரரும்
இலங்கைப் பிரதான வர்த்தகருமாகிய

கனம்பொருந்திய ஸ்ரீமான்.

## அப்துல்கனி சாகிபு

அவர்களின் பொருளுதவியால்,



சென்னபட்டணம்:
முஸ்லிம் அபிமானி யந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1904.

---

## வசனச் சிறப்புப பாயிரம்.



இஃது,

திரிசிரபுரம்.

இலக்கண உபாத்தியாயரும்,

மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவருளொருவரும்,

எஸ். பி. ஜி. காலேஜ் பிரதம தமிழ்ப் பண்டிதருமாகிய

ம-ா-ா-ஸ்ரீ.

ஆ. கா. பிச்சை யிபுறுகீம் புலவர்

இயற்றியது.



உலகுநகை யறிவொரீஇ யொருபொருளை யறிந்து தெரிந் துயர்ந்தார் தம்மு, ளிலகுதவத் தருந்தகையா ரிருங்காதை யினைத்தமிழி னியற்றி முன்னம், பலகுணனும் பயப்பவரு ளாரியநா யகமெனும்பேர்ப் பருவ றன்னை, விலகுதவ வசனமா கியரியற்றி யருள்கெனப்பல் விழைந்தார் கேட்ப. (1)

குடைவிரிய நிழல்விரியுங் கொள்கைபோற் பொருள் விரித்தாக் கொடுத்தான் செஞ்சொன், னடைவிரியப் புலமாக்க ளிடைவிரிய வியலுடைமா நலன்மற் றெல்லா, மடைவிரியு மிருவகைக் காவியமுழுது மிலக்கணநூ லடைய வுந்தற், புடைவிரிய விரிகடலே ழையவியு ளொடுங்கிய வா புகழுட் கொண்டோன். (2)

என்னுவி யென்றவனை யநுள்ளி யினிதிருப்ப வென்னை யன்னான், றன்னுவி யென்றுள்ளித் தானிருக்கு மிம்

மாற்றந் தானென் றன்றி, மன்னுமற் றொருமாற்ற மின்றி
யறி வாற்கலையான் வயதி னுன்மன், முன்னுனோ னன்றியு
மெற் குபதேச முறைமையினு மூத்தோ னம்ம. (3)

அகப்பொருளி னிலக்கணமெற் கறிவுறீஇப் புரந்த
மையி னருஞ்சி ராசான், மிகப்பொலியுந் தமிழ்ப்புலவர்
சிரந்தாழ்க்கும் பெரும்புலமை வீறு மிக்கோன், சகத்துல
வப் பலபநுவ லியற்றுபுதற் பெயர்யாண்டுந் தரிப்ப வைத்
தோன், மகத்தமருந் திருநாகூர் வாழ்குலாம் காதிறுநா வ
லர் பிரானே. (4)

மறைமொழியு நபிகள்பெரு மானருளு முலகுதலை வ
ணக்கு மாண்பி, னிறைமொழியு மிடைவிரா அ யுத்துவி
தத் தொடுஞான நிலைமை மிக்குக், கறைமொழியும் வ
ழூப்பொருளு மின்றிவிளங் குறுமிந்நூல் கற்பார்க்
கொன்று, துறைமொழியும் வைப்பாகு மெனினம்ம வி
தன்பெருமை சொல்லற் பாற்றே. (5)

இவ்வசனப் பெருநூலச் செய்தியமிக் கருதிய மீத்
து மாறு, மெவ்வெவரும் வியக்குமா றியற்றியோ னையனா
கரீடஞ்சால் வாழ்க்கைத், திவ்வியகற் புரவலவன் காதி
றுசா கிபுதவத்துச் செல்வத் தோன்றல், கவ்வையகன் மா
கீர்த்திப் பேரருளி னுயரப்துல் கனியா மன்னே. (6)

முற்றிற்று.

---

## அத்தியாய நாமாவலி.

அத்தியாய நாமாவளி

முற்றிற்று.

---

## இக்கிரந்தத்துளமைந்த

## அறபுவாக்கிய அட்டவணை.





முற்றிற்று.

## பிழைதிருத்த அட்டவணை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 18 | அலைவ | அலைகிவ |
| 33 | 20 | சிகறின்றி | சிகரின்றி |
| 34 | 10 | பொழிப்பு கருத்து | பொழிப்புக் கருத் |
| 51 | 18 | போர்த்திப | போர்த்திய |
| 54 | 20 | எரிக்கின்ற | எறிக்கின்ற |
| 84 | 27-28 | " " | ' ' |
| 122 | 24 | பஞ்ழுஸாவுதா | பஞ்சமுஷாவுதா |
| 168 | 30 | சொன்னூர் | சொன்னூர். |
| 172 | 12 | செயற்கைகளை | செயற்கைகள் |
| 184 | 21 | வர்ளோடு | வர்களோடு |
| 190 | 24 | தெவித்தீர் | தெரிவித்தீர் |
| 196 | 29 | அதனைக்தாங்க் | அதனைத்தாங்க |
| 205 | 10 | பயிற்ச்சி | பயிற்சி |
| 229 | 15 | தூய்பாகம் | தாயபாகம் |
| 237 | 11 | சுல்தான் முகம்மது, | சுல்தான் முகம்ம |
| 248 | 11 | கேட்டும் | கேட்கும் |
| 350 | 17 | கிசந்தம் | சங்கீதம் |
| 276 | 25 | மறவை | மறைவு |
| 279 | 13 | ஒழுகி | ஒழுகி, |
| 281 | 1 | ருமொழி | திருமொழி |
| 287 | 16 | கையிது | சையிது |

பிழைதிருத்த அட்டவணை

முற்றிற்று.

بسم الله

# முகவுரை.

ஆரிபுநாயக வசனம் என்பது, குத்புல் ஆலம், சுல்தானுல் ஆரிபீன், சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு நாயகமவர்களின் திருச்சரித மனைத்தையும் ஒருங்குணர்த்தும் ஒரு முழுக்கிரந்தம். ஆரிபுநாயகம் என்னும் புராணத்தினின்று வசனமாக்கப்பட்டமையால், ஆரிபுநாயக வசனம் எனப் பெயர் பெற்றது. இது, நீக்கப் பொருண்மை யுணர்த்தும் ஐந்தனுருபும் பொருளு முடன்றொக்க தொகை. ஆரிபுநாயகத்தினின்று ஆன வசனம் என விரியும். இதனை மத்தியபதலோபன் என்பர் வடநூலார். திரிபினுக்குத்தவரும் ஆறுவதுதொக்கதொகை யென்பாருமுளர்.

ஆரிபுநாயகம் என்பது, ஆரிபுகளுள் நாயகம் எனக் கூட்டிப்பிரிக்கவில்லென்னும் யோகவியாகத்தின்கண்வரும் உள்ளென்னும் நிர்த்தாரணை சத்தமி புணர்ந்து கெட்டு சுல்தானுல் ஆரிபீன் என்னும் பொருட்டாய்ப் பின்னர் அவர்களின் சரிதத்திற்காயிற்று. ஆரிபுகளுக்கு நாயகம் எனச் சத்தமி வருமிடத்துச் சட்டிவந்து புணர்ந்து கெட்டதெனினு மமையும். ஆரிபு என்னும் ஒருமைப்பால் இங்குத் தன்னிலை திரிந்து ஆரிபீன் என்னும் பன்மைப்பாலை விளக்கி, சாதியொருமையாய் நின்றது. ஆரிபாகிய நாயகம் என இருபெயரொட்டாய் நின்றதென்றாலோ வெனின்;— அது, சுல்தானுல் ஆரிபீன் என்னும் பெயர்ப்பொருளோடு மாறுபடுதலிற் பொருந்தாது. ஆரிபு என்பது, தத்துவங்கடந்து அருவாய் விளங்கும் அல்லா என்னும் ஒரு முழுமுதற்பொருளைத் தெரிந்துகொண்டா ரொருவர் பெயர்.

பதவியின் தரத்திற் கேற்கும் பல வேறு வகைப்பட்ட காரண நாமங்களை யுடைய ஒலியாக்களும் அவர்களுட் சிறந்த அக்தாபுகளும் இன்ன தன்மைய ரெனவும், இம்மை மறுமைகட்குத் தேவையாகும் எவ்வகை நற் கருமங்களையும் நிறைவேற்றி யருளும

அவர்கள்பால் நாம் இரந்துகேட்குதல் ஆகுமெனவும், அங்ஙனங் கேட்பவற்றை அவர்கள் நிறைவேற்றுவார்க ளெனவும் அதற்கு அவர்கள் தகுதியுடையார்களே யெனவும, நம் மார்க்கத்துப் பண்டை யாசிரியர்கள் செய்துள்ள நூல்கள் பல நன்குணர்த்துகின்றன. அவற்றை மறப்பார் நம்மவருள் யாருமிலர். இவ்விஷயங்களுட் சிலவற்றை முன்னர் யான் செய்துள்ள கன்ஜுல் கறாமத்து என்னும் கிரந்தபீடிகையிற் சொல்லியிருக்கின்றே னாதலின், இங்கு விரித்துரைத்திலேன்.

இக்கிரந்த சரிதத்திற்குரிய நாயகமான சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், அவ்வகை மகத்துவம் பெற்ற அக்தாபுகளுள் மிக்க மேம்பாட்டினையுடையவர்கள். இவர்கள் மகிமை முழுமையும் இக் கிரந்தமுழுதும் பரந்து கிடத்தலின், இதனை ஈறுபோகப் படிப்பார் யாரும் அவற்றை நன்குணர்ந் தறிவரென இங்கு விரித்துரைக்காது நிறுத்தினேன். இவர்களின் அரும்பெரும் மகத்துவ மனைத்தும் எழுதிமுடிக்குந்தன்மையவல்ல வென்பதும் இதனால் நன்கு புலப்படும்.

இந் நாயகமவர்களின் திருநாமமும் இவர்கள் தீக்ஷைபெற்ற றபாஇத் தரீக்குமே இத்தேசமெங்கும் மிக்க பிரபலமாய் வழங்குகின்றனவன்றி, சரிதாதியற்புத மான்மியங்கள் பல்கி வழங்குதலில்லை. அதற்குக் காரணம்: அவற்றை உணர்த்தும் நூலொன்று இங்கு வழங்கும் தமிழ்ப்பாஷையில் இல்லாமையே யாம். அச் சரிதாதி யற்புதங்களையும், அவர்கள் நிருமித்த அகுமதிய்யா என்னும் தரீக்கு விவரத்தையும் உணர்த்தும் நூல்கள் பல அறபு பாஷையி லியற்றப்பட்டு, அவ்வத் தேசத்தே மலிந்து வழங்குகின்றன. அவற்றுள், நூறுல் அகுமதிய்யா என்னும் நூலுமொன்று. இதுவே அவ்வெல்லா நூல்களுள்ளும் பிரதானமானது. நாயகமவர்களின் சரிதாற்புதமான்மிய மெல்லாம் விரியவுணர்த்தும் நூல், இஃதொன்றே யாம். இதனைச் செய்தவர்: நாயகமவர்களின் சீவியகாலத்து உடனிருந்த ஸைது அப்துல்லாஹில் மத்றி என்னும் பெரியோர். இந் நூலுட் சிலபாகங்கள் இத்தேசத்துப் பிரதான பட்டணங்களிரண்டொன்றி லுள்ள மத்றஸா என்னும் அறபு பள்ளிக்கூடங்களில் மாத்திரம் அருமருந்தனவாய்க் காணப்படுகின்றனவன்றி, அம் முழு நூலும் இங்குக் காண்பதரிது. அவற்றுள்ள சரிதாற்புதங்கள் [illegible]ற்றைக்கொண்டு இத் தேசத்தார் சிறிதும் பெரிதுமாச் செய்த

மௌலூதுகள் இரண்டு இங்கு எங்கும் வழங்குகின்றன. இவையும் அறபு பாஷையிற் செய்யப்பட்டனவாதலின், அவற்றுள்ளுறை பொருளை விளங்கி யறிதல், அப்பாஷை கற்றோர்க்கன்றி ஏனையர்க்கு அரிதாயிருக்கின்றது.

எங்ஙனமாயினும் நாயகமவர்களின் சரித்திராதியற்புதங்களையுணர்த்துமொருநூல் சுதேசபாஷையிலில்லாமை, நந்நாட்டார்க்குப் பெரியதோர் குறையேயாம். இக்குறைதீர்க்குமெண்ணம், தமிழ் வளஞ்சிறந்த யாழ்ப்பாணத்து முஸ்லிம்களுள் ஒரு பாலார்க்குச் சிலவருடங்கட்குமுன் உண்டாயிற்று. அவர்களே நாயகமவர்களின் சரிதமான்மியத்தை யோர் தமிழ்க்காவிய மாக்குதல் வேண்டுமென்றுகருதி, அங்ஙனங் காவியமாகப் பாடுதற்கு என்னையே விருப்புற்று வேண்டிக்கொண்டார்கள். பெரியதோர் காவியஞ் செய்தற்குத் தக்க கல்வி என்பா லில்லையாயினும் "ஒலிமார் மான்மியங்களையுரைப்பார்க்கு அல்லாகுத்தஆலா வின் அருளுண்டாம்" என்பது ஆன்றோர்வாக்காதலின், அவனருளோடு நாயகமவர்களின் நல்லருளைக்கமும் ஒருசேரப் பெறுதற்கு அவாவுற்று அவ்வேண்டுகோட்கிசைந்து, காவியஞ்செய்ய வொருப்பட்டேன். காவியத்திற்கு ஓம்படைகூறிக் கடவுள்வாழ்த்தும் நாடும் நகரும் பாடுந்தனையும் சரிதநூலகப்படவில்லை, எங்குந்தேடினும் கிடைப்பது அரிதாயிருந்தது. அச்சமயத்தே, கொழும்பு நகரத்துள்ளதோர் மதுறஸாவிலிருந்து நூறுல் அதுமதிய்யாவின் சில பிரதிகள் அவ் யாழ்ப்பாணத்தார் கிடைக்கப்பெற்று, அவற்றையெனக் கனுப்பினார்கள். அப்பிரதிகளை யான் பார்வையிட, நாயகமவர்களின் சரித்திராதியற்புதங்களுட் சிலவே அவற்றிற் காணப்பட்டன. ஆதலின், அவற்றை யொருகாவியம் நிரம்பாதென்று கண்டு, இச்சரித முழுதும் யார்பாலுளதெனப் பின்னும் பலவிடத்துந் தேடினேன்; நாயகமவர்களின் திருவருட்பொருட்டினால், முழுச் சரித்திராதியற்புதங்களுமமைந்த பிரதியொன்று எளிதில் எனக்குக் கிடைத்தது. அது, நூறுல் அதுமதிய்யாவினின்று மொழிபெயர்த்ததோர் பிரதியேயாம். அது கிடைக்கப்பெற்று யான் மிகக் களிகூர்ந்து, யாழ்ப்பாணத்தார்க்குத் தெரிவித்து, ஹிஜ்றத்து 1312-ம் வருடம் ஆரிபுநாயகம் என்னும் அபிதான காவியமாக அதனைப் பாடி முடித்து, பாட வேண்டிக்கொண்டாரின் விருப்பப்படி யாழ்ப்பாணத்திற்கே கொண்டுசென்று, அங்குள்ள சிறந்த தமிழ்ப்புலவர்களும் பிறரும் [illegible]

ருஞ் சவையிற் பலநாள் அரங்கேற்றிவந்து, பின்னர் அச்சிட்டேன். அதுவே 43 - படலங்களையும், 2373 - செய்யுட்களையு முடைய ஆரிபுநாயகம் என்னும் புராணம்.

ஆரிபுநாயகம் காவியமென்னும் பொருட்டொடர்நிலைச் செய்யுளாதலின், அதனுட் பொதிந்த சரிதமான்மியங்களை உணர்ந்தறிதல் சிறந்த கல்விமான்கட்கன்றி, ஏனையர்க் கரிதேயாம். நம்மவருள் அங்ஙனஞ் சிறந்த கல்விமான்கள் பலர் ஆங்காங்கிருப்பினன்றோ அது வியாக்கியானஞ் செய்யப்பெற்று, நாயகமவர்களின் சரிதமான்மியம் வெளியுறும்! அத்திறக் கல்விமான்களை இங்கு எங்குங் காண்பதரிதே. அதற்கு உரைகூறும் ஆற்றலுடையார் யாழ்ப்பாணத்துச் சிலரும், இங்கு ஒருசிலருமேயுள்ளார். ஆதலின், நாயகமவர்களின் சிறந்த மான்மியங்கள் தமிழ்ப்பாஷையிற் றிரும்பியும், சிப்பிக்குட் பொதிந்த முத்துப்போல ஆரிபுநாயகத் துட் பொதிந்தன்றோ கிடப்பவாயின! அதனால், அஃதும் பலர்க்கும் பலன் பயவாததாயே முடிந்தது.

ஆரிபுநாயகம் அச்சிட்ட காலந்தொட்டு அது சாமானியர்க்குப் பலன்றராதிருப்பதை முஸ்லிம் சகோதரர்பலர் கருதி, அதனை வசனமாக்குதல் வேண்டுமெனப் பலதடவைகளில் என்பாற் சொல்வாராயினர். ஒரு சரிதத்தைக் காவியமாக்குதலும், ஒரு காவியத்தை வசனமாக்குதலும், இலகுவான கருமமா! அவ்வகைக் கருமத்திற் பழகினார்க்கன்றிப் பிறர்க்குச் சிரமந் தெரியாது. எவ்வகைச் சிரமமாயினும் பொறுத்திருந்து செய்துமுடித்தற்குத் துணியினும் அதற்கு நேரும் பொருட்செலவுமன்றோ கவனித்தற்பாலது. பலர்க்கும் பலன்றரும் நல்றவழியிற் பொருளைச் செலவிட்டுப் புகழ்பெறும் அருட்செல்வமுடையாரின்றியமையாத இக்கருமம், வாளா முடிபுறுமா? இக்கருத்துக்கொண்டே அதனை வசனமாக்குங் கருமத்தில் முயலாது பலநாள் கழிந்தன. ஆயினும், இக்கருமம் நாயகமவர்கட்கு உடம்பாடாயின், எவ்வாற்றானும் நிறைவேறப் பெறுமென்னும் எண்ணமொன்று என் உள்ளத்திற் கிடந்தது.

சென்ற சிலமாதங்கட்கு முன்னர்த் திட்டச்சேரியென்னு மூரிலுள்ள முஹப்பத்துல் இக்வான் என்னும் தருமசபைக் காரியதரிசியும் என் நண்பருளொருவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ. அ. மு. நயினா முகம்மது சாகிபு அவர்களும், நண்பர் ம-ா-ா-ஸ்ரீ. நீ. குலாம்சாகிபு

அவர்களும் என்பால் வந்து: தாங்களியற்றிய ஆரிபுநாயக புராணத்துச் சில படலங்கட்கு எங்களூரில் தாங்களே வியாக்கியானம் புரிதல்வேண்டுமென மிக்க விருப்புடன் வேண்டிக்கொண்டார்கள். நாயகமவர்களின் மான்மியம் எங்கும் பல்குகவென்னுங் கோட்பாடுடையேன் யானாதலின், அன்னார் வேண்டுகோட்படி சிலநாள்காறும் அங்கு வியாக்கியானஞ் செய்தேன். அக்காலத்தும் பலர்: இத்தகைய அரும்பொருளமைந்த காவியத்தை வசனமாக்குதலே உத்தமமென ஒருமித்துக் கூறினர். ஆரிபுநாயகம் பத்தியரூபத்திருத்தலோடு கத்தியரூபத் திருத்தலும் சிறப்பீடைத்தா மென்பது எனக்கு முடம்பாடாய்ப் பலர்க்குங் கோட்பாடாயினமையால், அங்ஙனஞ் செய்தேமுடிப்பமென யான் துணிபுற்று, ஹிஜ்றத்து 1322-ம் வருடம் றபீயுலவ்வல் மாதம் இதனைத்தொடங்கி, கோத்திரமுதல் உபாத்தீருக நாற்பத்தோ ரத்தியாயங்களையுடைய கிரந்தமாச் செய்து முடித்தேன்.

இது செய்து முடிந்தபின், அச்சிடுதற்கு முயல நேர்ந்தது. அதற்கு வேண்டுமான பொருளைத் தம்கைப்பொறுப்பாச் செலவிட முன்வருவாரொருவர் இங்கின்மையால், யாதுசெய்வது! எவர்க்குங் கைப்பொறுப்பின்றிப் புத்தகத்திற்கு முற்பணக்கிரயம் குறைந்ததாக நியமித்துப் பலரிடத்தும் கையொப்பம்பெற்று அப்பொருள் கொண்டு அச்சிடலாமெனத் தீர்மானித்து, விளம்பரப்பத்திரம் அச்சிட்டு எங்கும் பரத்தி, கையொப்பப்பணஞ் சேர்த்தற்கு அங்கங்கே நிருவாகிகளும் நியமிக்கப்பட்டாயினர். ஆயினும், நூற்றுக்கணக்கில் வேண்டுமான முழுத்தொகையும் அங்ஙனமொருமிக்கச் சேர்ந்து அச்சிட்டு முடிதற்குக் காலநீட்டிப்பும், மிக்க பிரயாசையுமுண்டாமென்று மெண்ணம் பெரிதாய், அச்சுவிஷயத்தில் மனக்கிளர்ச்சி சிறிதுமின்றி இருக்க நேர்ந்தது. இஃதிங்ஙனமாக,

தஞ்சைமா நகரத்தைச் சேர்ந்த ஐயன்பேட்டையிற் கனதனவானாயிருந்து விளங்கிய காதிறுசாகிபு அவர்களின் செல்வக்குமாரராயவதரித்து, இலங்கைப் பிரதானவர்த்தக சிகாமணியாயும், அருந்தமிழ்ப் புலவரை ஆதரித்தருளும் அரிய வள்ளலாயும் கீர்த்திபெற்றுச் சிறந்து விளங்கும் ஸ்ரீமாந். அப்துல்கனிசாகிபு அவர்கள் ஆரிபுநாயக வசனம் அச்சிடுதற்கு முற்பணஞ் சேர்க்கப்போந்ததைக் கேள்வியுற்று, உடனே ஐஞ்ஞூறு ரூபாயை யெனக் கனுப்பி, ஒருகடிதமு மெழுதினார்கள். அக் கடிதத்தில் "தாங்கள் ஆரிபு

நாயக வசனம் அச்சிடப் பிரயத்தனப்படுவதாகக் கேள்விப்பட்டேன். பலரிடம் பணஞ்சேர்த்து அச்சிட வேண்டுமென்று வேண்டாம். இதனுடன் நானனுப்பிய பணத்தைக்கொண்டு அச்சுவேலையைத் தொடங்கிவிடுங்கள். பின்னும் தேவையானபணம் வேண்டும்போது அனுப்பத் தயாரா யிருக்கிறேன்" என எழுதியிருந்தது. இக்கடிதம் எனக்கு மனோற்சாகத்தையும், அளவிறந்த ஆநந்தத்தையும் தந்தது. பொருளீட்டுதலொன்றே தம் கடமையெனக்கொண்டு உபகாரவழியிற் செலவுபண்ணிப் புகழ்பெறக் கருதாதார் மிக்க இக்காலத்து, இத்தகைப் பொருளும் பெருங்குணமு முள்ளாரொருவரைக் காண்பது அரிதினு மரிதே யாம். பொருள்பெற வாழ்தலிற் புகழ்பெற வாழ்தலன்றோ சிறப்புடைத்து? இதுபற்றியே "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று" என்று வள்ளுவருஞ் சொன்னார். கல்விமான்களோடு பழகி [illegible] கண்டு கற்றாரை யாதரிப்பக் கடமை பூண்டமையால், காலத்திற்குக் காலம் யான் வேண்டும்போதெல்லாம் எனக்குப் பேருதவிசெய்துவரும் பெருங்கொடை வள்ளலாகிய இவ் வுத்தமசீல ரெழுதியனுப்பிய கடிதங்கண்ட வன்றே இனிப் பணஞ்சேர்ந்து அச்சிடக் காத்திருந்ததைக் கைவிட்டு, இவ் வுபகாரபுருஷரின் ஒப்பிலாத்திரவியங்கொண்டு இக்கிரந்தத்தை அச்சிட்டேன். இங்ஙனம் பெரும்பொருளுதவிப் பேரருள்புரிந்த பிரபல புண்ணியர்க்கு நாயகமவர்கள் இருமையிடத்தும் பிரதியருள் புரிவார்களாக.

ஆரிபுநாயக புராணத்துள் பத்திய ரூபத்திற்கேற்ப முன்பின் மாறிக்கிடக்கும் விஷயங்கள் சிலவற்றை யெடுத்து, கத்திய ரூபத்திற் கேற்ப வேண்டுமிடங்களில் இக்கிரந்தத்தே யமைத்திருக்கின்றேன்; அவ்வப்படலத்தை அவ்வவ் வத்தியாயத்தோ டொப்புநோக்குவார் உய்த் துணரக்கடவர். அப்புராணத்து வருணனை முதலிய வமைந்த அருஞ் செய்யுட்களுள் பலவற்றின் [illegible] பொருள்களும் அங்கங்கு விளக்கப்பட் டிருத்தலால், அதனைப் படிப்பார்க்கு இக்கிரந்தம் பெரிதும் பலன்படுவது மன்றி, அதன் கடினமான செய்யுட்களின் பொருளையும் இதுகொண்டு எளிதி லறிந்துகொள்ளுதலுங்கூடும்.

இக்கிரந்தம் நாயகமவர்களின் விசேஷசரிதங்களும் அற்புதங்களும் மகிமைகளும் பொதிந்திருப்பதோடுகூட, தௌவீதுமவரி

பார்க்களும்பல இடத்திற்கிடம் அமையப்பெற்றிருக்கின்றது. அன்றியும், நாயகமவர்கள் திருநாமங்களுள் புராணத்திற் சொல்லப்படாத தொண்ணூற்றொன்பது அஸ்மாக்களும் இதில் அமைந்திருக்கின்றன. இன்னும், செய்யுட்களில் அமைதலாகாது புராணத்து விடுபட்டுப் போந்த தலீல், ஹதீது, துஆ, பைத்து, அறபு வேறு வாக்கியங்கள் பல இக் கிரந்தத்துச் சேர்த்து அறபு பாஷையில் அவ் வக்ஷரங்கொண்டே அவ்வவ் விடங்களில் அவற்றின் பொருள்களோடு அச்சிடப்பட் டிருக்கின்றன. ஆதலின், இக்கிரந்தம் ஆபத்தை யகற்றுதற்கும், ஆகற்பாலதை நிறைவேற்றுதற்கும், எவ்வகையிடுக்கண்களிலும் நம்மைக் காப்பதற்கும் தக்கதோர் சாதனமே யாம். இதனை வைத்திருக்கும் நம்மவர்க்கு மிக்க பலனெய்து மென்பது யான் கூறவேண்டுவ தொன்றன்று. ஆயினும், வைத்து வழங்குவோர், பரிசுத்தத்தோடே வைத்துக் கொள்ளுதல் கடமையென்பதை மாத்திரம் ஞாபகப் படுத்துகின்றேன்.

முந்திய ஆரிபுநாயக புராணத்தும் அதன் வசனமாகிய இக்கிரந்தத்துமுள்ள விஷயங்களுள் வருணனைகளாயுள்ளன அனைத்தும் என்னுடைய கற்பனையேயன்றி, சரிதவிஷயங்களில் யானாக வொன்றுஞ் செய்திலேன். அவையெல்லாம் முதனூலிற் கண்டவையே யாம். ஆரிபுநாயகம் முன்னரச்சிட்டு வெளியுற்றபின்னர் அதனைக் கண்ணுற்று அழுக்காறெய்திய பெருமான்கள் ஒரு சிலர், என்னை யிழித்தற்பொருட்டு இலக்கணக் குற்றங் காண்டற்கு ஆற்றல்கெட்டு "ஒளி விலாயத்துப் பதப்பு" "மிஅறாஜு" என்னும் இவ் விருவிஷயங்களையும் வாரித் தலையிற்போட்டுக்கொண்டு, அவை காரணமாகப் பலவாறு தூற்றினர். அது, அன்னாரின் கல்விக் குறைவாலும் பொறாமை மிகையாலும் நேர்ந்ததென யான் வாய் மூடி யிருந்தேன். இப்போது தருணம் வாய்த்தமையால், அவர்களெடுத்துக்கொண்ட விஷயங்களின் உண்மை இன்னதெனப் பலருமறியும் வண்ணம் இக்கிரந்தத்தே அவ்வவ்விடங்களில் விளக்கியுள்ளேன். அப்பெருமான்கள் இக்கிரந்தத்தையுங் கண்டு மனக்கொதியுற்றுப் பின்னும் வாயில் வந்தனவற்றைப் பிறர் நகையையும் பேணாது பிதற்றுதற்குத் தலைப்படினும் படுவர். யான் செய்த நூல்களிற் குற்றங்கண்டு என்னைத் தூற்றுதற்குத் திறனுளதாயின், எழுத்துச் சொற் பொருள் யாப் பணிகளிலும், வாக்கியத் தொடர்பு முடிபுகளிலுங் குற்றங்கண்டு மெய்ப்பித்துத் தூற்றுவதன்றோ முறை

மை! அங்ஙனமின்றி, முதனூலிற் கிடந்தவண்ணங் கூறிய சரிதத்
திற்குற்றம்பிடித்து, அதற்கு என்னைத் தூற்றுதலால் யாதுபலன்?
சரிதக்குற்றம் என்பாலதாமா? நாயகமவர்களையும், அவர்களின்
சரிதமின்னதென்று முன்னர் எழுதிவைத்த பெரியோரையும் தூற்
றினாலன்றோ பலன்பெறலாம்! இவ்வகைப்பட்டதோர் கருமத்தை
நுழைந்து செய்துமுடித்தற்கு ஆற்றலில்லாத அழுக்காற்றுமாக்கள்
பின்னை யாதுதான் செய்வர்! அன்னார் தன்மையை உலகமே ம
திப்பதாக. யான் செய்துள்ள ஒவ்வொரு கிரந்தத்தும் படும் பிரயா
சை இனைத்தென்பதனையும், இஃதுமோ ரருஞ்செய்கையேயென்
பதனையும், மனநீதியும் கல்விப் பெருக்கமு முள்ள மகான்கள் அறி
யாதிரார்.

அச்சுச்சோதனைப் பிரதிகளைக் கண்ணுங்கருத்து மொன்றுபட
ஊன்றி நோக்குமிடத்தும், மனிதத்தன்மைக் கேற்பச் சிற்சிலதவறு
தல்கள் உண்டாவ தியற்கையே. அவ்வாறு இக்கிரந்தத்துத் தவறிப்
போந்த சில வழுக்களைப் பின்னர்க்கண்டு, அவற்றைத் திருத்திய
தோர் பிழைதிருத்தப் பத்திரமு மச்சிட்டு இதனோடு சேர்த்திருக்
கின்றது. அதிற் கண்டவை யன்றிப் பின்னுஞ் சிலவும், அச்சடிக்
குங்காற் பிறழ்ந்த முற்றுப்புள்ளி முதலிய வாக்கியக்குறிகளும் வழு
விக் காணப்படுமாயின், வாசிப்போர் அவற்றையும் ஒருசேர இடத்
திற் கேற்பத் திருத்திக் கொள்ளுதல் கடமையாம். "குற்றங்கடிந்
து குறைபெய்து வாசித்தல், கற்றறிந்த மாந்தர்கடன்" என்பது
ஆன்றோர்வாக் கன்றோ?

அறபில் யா என்றும் விளியுருபேற்றுவரும் பெயர்கள் "யா
சுல்தானல் ஆரிபீன்" "யா தாஜல்வாஸிலீன்" "யா கௌதல்
அஃலம்" என உல் என்பது அல் என்னுந் திரிபுபெற்றன்றோ வரு
தல்விதி? இக் கிரந்தத்துள் அவைகள் இவ்விதி பெற்றும் பெறாதும்
வந்திருப்பதோடு, இன்மைப் பொருட்டாய் வரும் ஙபீ என்னுஞ்
சொல் சிலவிடத்து அறபின் உச்சரிப்புக் கேற்பத் தீர்க்கமாயும்,
சிலவிடத்துத் தமிழ்த் தொடர்மொழிக்கேற்ப இரச்சுவமாயும் வந்
திருக்கும். முற்றக் கற்றூர்க்கு இருவேறுவகைப்பட வந்தமை குற்
றமாயின் பொறுத்தருள்க.

இக்கிரந்தம் சென்னையின்கண் அச்சிடுங் காலத்து, இதனை
யச்சிட்ட "முஸ்லிம் அபிமானி" யந்திரசாலைத் தலைவரும், ஞான
ஸ் தாதுவிர்த்தி போதினி முதலிய கிரந்தகர்த்தாவும் ஞானிலைத்

தியசாத்திர பண்டித சிகாமணியுமாகிய ஹலறத்து ஹகீம், பா. முகம்மது அப்துல்லாசாகிபு அவர்கள் தமது யந்திரசாலையை என் சொந்தம்போலப் பாவிக்கவிடுத்து, யானெடுக்க வேண்டிய பிரயாசைகளையெல்லாம் தாமே யெடுத்துக்கொண்டு, தம்முடைய வேலைமிகுதியைக் கருதாது யானெழுதி யனுப்பிய கையெழுத்துப் பிரதிக்கு அச்சுப்பிரதி வேறுபடா வண்ணம் ஒவ்வொரு பிரதியையும் பன்முறை யொப்புநோக்கி, கால நீட்டித்தலையும் பாராது அவற்றை என் பார்வைக்கு மறுப்பிவந்து அச்சிட்டு முடித்துக் கொடுத்த பேருதவி, ஒருபோதும் மறத்தற்பாலதன்று. வேற்றொருதவி யின்றி யானொருவனே தனித்திருந்து செய்யும் இவ்வகைக் கருமத்தில் ஒருவர்செய்யு முதவி தினைத்துணையாயினும், மலைத்துணையாக் கொள்வதன்றோ என் கடமை?

இக்கிரந்தத்துப் பெருமையினையும் என் சிறுமையினையும் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து, இது நிறைவேறப் பெற்றமைக்குக் கருணாலயமாகிய நாயகமவர்களின் அற்புத மகிமையே காரணமாம். ஒன்றுக்கு மாகாத சிறியருட் சிறியேனான என்னை இப்பெரியகருமத்திற் புகுத்தி நடப்பித்து இதனை நிறைவேற்றி யருளிய நாயகமவர்களின் திருவடிக்கு அடிமைபூண்டு என்றைக்குந் துதியாநின்றேன்.

வா. குலாம் காதிறு நாவலன்;
கிரந்தகர்த்தா.

முகவுரை முற்றிற்று.

---

بسم الله الرحمن الرحيم

# ஆரிபு நாயக வசனம்.

## ஹம்தும், ஸலவாத்தும்.

---

ஓரேயொரு கர்த்தனைப் புகழ்கின்றேன். அவன் எவ்வகைப்பட்ட கர்த்தன் எனில்;— தன்னுடைய தாத்தின் அந்தரங்கத்தை அமா என்னும் வானத்திலிருந்து தபீஅத்துல் குல்லு என்னும் பூமியில் ஹிக்மத்தைக் கொண்டு இறக்கி அஸ்மாவின் குணங்களை குத்றத்தைக் கொண்டு வெளியாக்கும் பொருட்டு நுத்பா என்னும் சிப்பிக்குட் பொதிய வைத்தபோது, அது, நப்ஸானிய்யாவாகிய அந்தகாரத்திரையில் மறைந்து பொறிபுலாதிகளின் அநுபவத்தைச் சேர்ந்த இச்சையிற்றிரும்பி முன்னிருந்த தானத்தை மறந்து கிடக்கையில், பயிரங்க ரூபத்தில் அன்பியாக்களையும் அந்தரங்க ரூபத்தில் ஔலியாக்களையும் அநுப்பி மலக்கூத்து என்னுந் தீபங்களைக் கொளுத்தச்செய்து, அத் தீபங்களால் அது தன் நன்மைதீமைகளைத் தெரிந்து கொண்டு தான் செய்யவேண்டிய கடமை இன்னதென் றுணர்ந்து பிரயாசையுடன் அக்கடமையைச் செய்து அஹதியத்தாகிய ஹலறத்திற் சேரும்படி ஆக்கினனே, அவ்வகைப்பட்ட புகழுக்குரிய மகத்துவமுள்ள அல்லா என்னும் திருநாமத்தை யுடைய ஒருவனே யாம்.

ஸலவாத்தும், ஸலாமும், ஒருவர்க்குச் சொல்கின்றேன். அவ்வொருவர் யாரெனில்;— மறைந்த பொருளாய் அறியப்படாதிருந்த அல்லாகுத் தஆலா தன்னைத் தானறியவும் பிறரறியவும் வெளிப்படுதற்கு ஏற்ற தானமும், சிருஷ்டிகளனைத்தையும் சிருஷ்டித்தற்கு உபாதானகாரணமும், அன்பியாக்களும், ஔலியாக்களும், வெளியாதற்கு மூலமுமாய் அவதரித்த காத்திமுல் அன்பியா, சையிதுல் முறுஸலீன், ஷபீஉல் முதுனபீன், ஹபீபு றப்பில் ஆலமீன், அகுமது முஜ்தபா, மகுமூது முறுத்தலா, முகம்மது முஸ்தபா ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களே யாம். அவ் ஸலவாத்தும் ஸலாமும் அவர்கள் கிளைஞர்கள் மீதும், தோழர்கள் மீதும், சந்ததிகள் மீதும் உண்டாவதாக.

இவ்வகை ஹம்தும் ஸலவாத்தும் சொன்னபின், சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்களின் சிறந்த சரிதஞ் சொல்கின்றேன்.

---

1-ம் அத்தியாயம்.

# கோத்திரம்.

[இது, ஷலபத்து சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு ஹுஸைனுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்களின் கோத்திரவரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு வரன்முறை யுரைப்போர் என்னும் றவி:— ஸைது அப்துல்லாஹில் மதறீ.]

சுவர்க்கலோகத்து அரச குமாரர்களாகிய இமாம் ஹஸன் இமாம் ஹுஸைன் றலியல்லாகு அன்குமா இருவரும் "நீர் இல்லையானால், உலகம் இல்லை" என்று அல்லாகுத் தஆலா முன்னேக்கிச் சொன்ன மகத்துவமுள்ள நம் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் அருமை மகளார் பாத்திமா றலியல்லாகு அன்கா என்ற செல்வக் குமாரர்கள். இவர்கள் பூலோகத்திலேயே சுவர்க்கலோகத்துப் பட்டாடைகளை உடுத்து, அங்குள்ள சிறந்த மாதுளம் பழங்களைத் தின்ற மகிமையுள்ளவர்கள். இவர்களின் மேம்பாடான அருமை பெருமைகள் இவ்வளவின வென்று அறிதல் யார்க்கும் அறிது. நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் இவ்விரு பௌத்திரர்களையும் தங்கள் புத்திரர்கள் என்றும் திருவாய்மலர்ந்து பல தடவைகளிற் சொல்லியிருக்கின்றார்கள்.

அன்றியும், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் ஒளி நபி ஆதம் அலைகிஸ்ஸலாமவர்களில் நின்று மகன் மகன் வழியாய் ஒவ்வொருவரிடத்தும் தங்கிவந்து அப்துல் முத்தலிபு இடத்துத் தங்கினபோது, அது அவரில் நின்று மூன்று பங்காய்ப் பிரிந்து இரண்டு பங்கு அவர் மக்

களுள் அப்துல்லா இடத்தும், மற்றொரு பங்கு அபீத்தாலிபு இடத்தும் வந்து தங்கின என்றும், அப்துல்லா இடம் தங்கின பங்கு நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களிடம் வந்து தங்கி, அவர்களில் நின்று அவர்கள் மகளார் பாத்திமா றலியல்லாகு அன்கா இடத்து வந்து தங்கிற்று என்றும், அபீத்தாலிபு இடம் வந்து தங்கின பங்கு அவர் குமாரர் அலி றலியல்லாகு அன்கு அவர்களிடம் வந்து தங்கிற்று என்றும், இருவரும் விவாகஞ்செய்யப் பெற்றபின் அம்மூன்று பங்கும் ஒன்றாய்க் கலந்து திரண்டு சரிபாதி கொண்ட இரண்டு பங்காய்ப் பிரிந்து, ஒரு பங்கு ஹஸனும், மற்றொரு பங்கு ஹுஸைனும் ஆயின என்றும், ஆதலால், அவ்விரு நாயகர்களும் இரு ஒளிகளாயும் இருக்கின்றார்கள் என்றும், இதற்கு ஆதாரமாக நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்கள் திருவாய் மலர்ந்து சொன்ன ஹதீது ஒன்று உண்டு என்றும் சொல்லப் படுகின்றது. அந்த ஹதீது:—

وعن جابر بن عبد الله رضى الله عنهما عن النبي صلى
الله عليه وسلم

ان الله خلقني وخلق عليا نوريق بين يدي العرش نسبح الله
ونقدسه قبل ان يخلق آدم بالفى عام فلما خلق الله آدم اسكننا فى
صلبه ثم نقلنا من صلب طيب و بطن طاهر حتى اسكننا فى صلب
ابراهيم ثم نقلنا من صلب ابراهيم الى صلب طيب و بطن طاهر حتى
اسكننا فى صلب عبد المطلب ثم افترق النور فى عبد المطلب فصار
ثلثاه فى عبد الله و ثلثه فى ابى طالب ثم اجتمع النور منى و من
على فى فاطمة فالحسن والحسين نوران من نور رب العالمين

[“வ அன் ஜாபிறிபுனு அப்தில்லாஹி றலியல்லாது அன்துமா அனின்னபிய்யி ஸல்லல்லாது அலைகிவஸல்லம்:—”]

“ * இன்னல்லாஹ கலகனீ வகலக அலிய்யன் நூறைனி பைன யதயிஸ் அற்ஷி நுஸப்பிஹுல்லாஹ வ நுகத்திசுஹு கப்ல அன் யக்லுக ஆதம பி அல்பை ஆமின் பலம்மா கலகல்லாஹு ஆதம அஸ்கனஹு பீ ஸுல்பிஹி தும்ம நகலஹு மின் ஸுல்பின் தையிபின் வ பத்னின் தாஹிறின் ஹத்தா அஸ்கனஹு பீ ஸுல்பி இபுருஹீம் தும்ம நகலஹு மின் ஸுல்பி இபுருஹீம் இலா ஸுல்பின் தையிபின் வ பத்னின் தாஹிறின் ஹத்தா அஸ்கனஹு பீ ஸுல்பி அப்தில் முத்தலிபி தும்ம மப்தறகன்னூற பீ அப்தில் முத்தலிபி பஸாற துலுதாஹு பீ அப்தில்லாஹி வ துலுதுஹு பீ அபீத்தாலிபி தும்மஜ்தம அன்னூற மின்னீ வமின் அலிய்யின் பீ பாத்திமத்த பல்ஹஸனு வல் ஹுஸைனு நூருனி மின்னூறி றப்பில் ஆலமீன்” என்பதாம்.

இதன் பொருள்:—

[“ இந்த ஹதீதை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்கள் திருவாய்மலர்ந்து சொன்னார்கள் என்று, ஜாபிறிபுனு அப்துல்லாஹி றலியல்லாஹு அன்ஹுமா சொன்னார்கள்:—”]

[“ திடமாக அல்லா வாகிறவன் என்னைப் படைத்தான், பின் அலியையும் படைத்தான்; இரண்டு ஒளிகளாக. அவன் ஆதத்தைப் படைப்பதற்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் அற்ஷின்வசமீபத்தில் நாங்கள் அவனைத் தஸ்பீஹு செய்து கொண்டும், தூய்

---

* இந்த ஹதீது சைகு அப்துற் றகுமானுஸ் ஸபூரிய்யி அஷ்ஷாபி இய்யி அவர்கள் செய்த “ நுஜ்ஹத்துல் மஜாலிஸ்” என்னும் கிரந்தத்து, 2-ம் புத்தகத்து, 180-ம் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. இதன் தாற்பரியந்தான் நான்செய்த ஆரிபுநாயகம் என்னும் புராணத்து, கோத்திரப் படலத்து “ ஒன்று மூன்று யிரண்டு மொன்றுமா யிரண்டாய் முன்ன, தின்றிகழ் சாத்தி மாவாயேனைய தலியாய்த் தோற்றிப், பின்றிபண் டொன்றாய் மூன்றும் பிறக்கிரண் டாகி மேன்மை, துன்னெறி லசனாய் வண்மை யுசைனு மாய்த் துளங்கிற் றன்றே” என்னும் 3-ம் செய்யுட்கு அமைந்தது. இந்த வொளிதான் விலாயத்து என்றது.

தாங்கிக்கொண்டும் இருந்தோம். அவன் ஆதத்தைப் படைத்தபோது, அவருடைய முதுகந் தண்டில் எங்களைக் குடியிருத்தினான். பிந்தி அவன் எங்களை நறு மணமான ஒவ்வொரு முதுகந்தண்டில் நின்றும், துப்புரவான ஒவ்வொரு வயிற்றில் நின்றும் இபுறாஹீமுடைய முதுகந் தண்டில் குடியிருத்தும் வரையும் திருப்பினான். இபுறாஹீமுடைய முதுகந்தண்டில் நின்று அப்துல் முத்தலிபுடைய முதுகந்தண்டில் எங்களை அவன் குடியிருத்தும் வரையில் நறு மணமான ஒவ்வொரு முதுகந்தண்டிலும், துப்புரவான ஒவ்வொரு வயிற்றிலும் திருப்பினான். பின்பு அந்த ஒளி அப்துல் முத்தலிபு இடத்தில் நின்று மூன்றாய்ப் பிரிந்தது. அந்த மூன்றில் இரண்டு பங்கு அப்துல்லா இடத்தில் ஆயின; மூன்றில் ஒரு பங்கு அபீத்தாலிபு இடத்தில் ஆயிற்று. பின்னும் அந்த ஒளி என்னில் நின்றும் அலீயில் நின்றும் பாத்திமா இடத்தில் ஒன்றாய்ச் சேர்ந்தது. ஆதலால், ஹஸனும், ஹுஸைனும் றப்பில் ஆலமீனுடைய ஒளியில் நின்றும் இரண்டு ஒளிகளாவார்கள்" என்பதேயாம்.]

இமாம் ஹஸன் இமாம் ஹுஸைன் றலியல்லாகு அன்குமா இருவரின் மேம்பாடுகளைப்பற்றி நபி முகம்மது ஸல்லல்லாகு அலைவ ஸல்லமவர்கள் திருவாய் மலர்ந்து பல ஹதீதுகள் சொல்லியிருக்கின்றார்கள். அவற்றை ஆதாரமாக் கொண்டு பல கிரந்தங்கள் பல பெரியோர்களால் செய்யப்பட்டும் இருக்கின்றன. இக்கிரந்தத்துக் கதா நாயகரான சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், இவ்விரு நாயகர்களுள் இளைய நாயகராகும் இமாம் ஹுஸைன் றலியல்லாகு அன்கு அவர்கள் வமிசத்தில் பிறந்தவர்கள்.

ஹலறத்து சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல்கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் தந்தை, சையிது அபுல் ஹஸன் அலி. இவர்கள் தந்தை, சையிது யஹ்யா. இவர்கள் தந்தை, சையிது தாபித்து. இவர்கள் தந்தை, சையிது காஸிம். இவர்கள் தந்தை, சையிது சைதுஅலி. இவர்கள் தந்தை, சையிது ஹஸன். இவர்கள் தந்தை, சையிது சுல்தானுல் மஹ்தி. இவர்கள் தந்தை, சையிது அபுல்காஸிம்.

இவர்கள் தந்தை, சையிது முகம்மது. இவர்கள் தந்தை, சையிது ஹுஸைன். இவர்கள் தந்தை, சையிது அகுமது. இவர்கள் தந்தை, சையிது மூஸாதானி. இவர்கள் தந்தை, சையிது இபுறுஹீமுல் முறுதலா. இவர்கள் தந்தை, சையிது மூஸாகாலிம். இவர்கள் தந்தை, சையிது ஜஃபறு ஸாதிகு. இவர்கள் தந்தை, சையிது முகம்மது பாகிறு. இவர்கள் தந்தை சையிது இமாம் ஜைனுல் ஆபிதீன். இவர்களின் தந்தையே இமாம் ஹுஸைன் றலியல்லாகு அன்கு.

இனி இவர்களின் தந்தை அமீறுல் மூமினீன் சையிதினா அலி றலியல்லாகு அன்கு என்பதும், அவர்கள் தந்தை அபீத்தாலிபு என்பதும், அவர்கள் தந்தை அப்துல் முத்தலிபு என்பதும், அவர்களின் தந்தையில் நின்று நபி ஆதம் அலைகிஸ்ஸலாமவர்கள் வரையும் உள்ள கோத்திரப் பிதாக்கள் இன்னார் இன்னார் என்பதும் சீறு முதலான பிரதான நூல்களிற் காணப்படுமாதலால், அவ்வளவில் முடித்தேன். இக்கோத்திரக் கிரமப்படி சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் அறபியும், ஹாஷிமியும், குறைஷியும், சையிது மானவர்கள். இவர்கள் தந்தையின் சந்தான பரம்பரையில் ஹுஸைனியா யிருப்பது அன்றி, தாய்வழியில் றபாஇய்யா யிருக்கின்றார்கள். அதனாலேதான் இவர்களைக் குலப்பெயர் சேர்த்துச் சொல்லும் இடத்து “ஹுஸைனுற் றபாஇ” என்கின்றோம்.

கோத்திரம் முற்றிற்று.

## உ-ம் அத்தியாயம்.

## காட்சி.

—:—

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் அவதாரமாவதற்கு முன் அவர்களைப்பற்றி ஜாஹிது அகுமது என்னும் பெரியோர் கண்ட காட்சியைச் சொல்கின்றது. இதற்கு ராவி:— அது கண்ட ஜாஹிது அகுமது.]

அகன்று விரிந்த பூலோகத்தில் மிகச் சிறந்து விளங்கும் தேசங்கள் பலவற்றுள்ளும் இருக்கு தேசமும் ஒன்று. அது அறபிருக்கு, அஜமிருக்கு என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரு பிரிவுகளில் அஜமிருக்கு என்பது, பாரிஸ் தேசத்து மேற்பாகம். அங்கேதான் திஹ்றூன், ஹம்தான், இஸ்பஹான், ஷீராஜ், கர்மான் என்பன முதலிய பிரதான பட்டணங்கள் இருக்கின்றன. இப்போது நான் இங்கே சொல்லவேண்டியது அஜமிருக்கைப் பற்றியன்று. ஆதலால், இனிவரும் சரித்திரங்களுக்குத் தேவையாகும் பட்டணங்கள் சிலவற்றை வாசிப்போர் ஞாபகத்தில் வைக்கும்பொருட்டே இங்கே எழுதினேன். இனி இதனை இவ்வளவில் நிறுத்தி, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் அவதாரமான அறபிருக்கைப்பற்றிச் சற்றே சொல்கின்றேன்.

அறபிருக்கு என்பது அறபு தேசத்திற்குக் கிழக்கும், பாரிஸ் தேசத்திற்கு மேற்கும், அர்மனிய்யா தேசத்திற்குத் தெற்கும், பாரிஸ் குடாக்கடலுக்கு வடக்கும் ஆகிய இந்நான்கு எல்லைக்கும் நடுவில் இருக்கின்றது. இத்தேசத்து வடபாகம், குர்திஸ்தான் என்று சொல்லப்படும். இதற்கு வடக்கேதான் அர்மனிய்யா இருக்கின்றது. இத்தேசம்

தொன்றுதொட்டு முஸ்லிம் அரசர்களாலேயே ஆளப்படு கின்றது. அங்கே திஜ்லா, புறாத்து என்னும் பிரதான நதிகள் இரண்டும் வெகு தொலையிலிருந்து வளைந்து வளைந்து ஓடிவந்து, பஸ்றா என்னும் பட்டணத்திற்குச் சற்றுத் தூரத்தில் ஒன்றாய்க் கலந்து பாரிஸ் குடாக்கடலிற்போய் விழுகின்றது. இவ்விரு நதிகள் அன்றி, அநேகம் சிற்றாறுகளும் அங்கங்கே ஓடிச் செல்கின்றன. மேகங்கள் படியும் மலைச் சிகரங்களில் நின்று சலசலென்று ஒலித்துச் சரிந்து விழுந்து வருகின்ற தெண்ணீர் அருவிகள் தரையைக் குத்திக்குடைந்த சுனைகளும், ஆழமான நீரோடைகளும், பரந்த ஏரிகளும் இடத்திற்கு இடம் காணப்படும். வானத்தை அளாவுகின்ற மலைத் தொடர்களும், குன்றுகளும், உயர்ந்த கற்பாறைகளும், செங்குத்தான மலைச்சரிவுகளும், கணவாய்களும், செழித்து வளர்ந்திருக்கும் பசும்புல் அடர்ந்த பள்ளத் தாக்குக்களும், அநந்தம் அங்கேயுண்டு. மேகத்தைத் தாவுகின்ற பலவகைப்பட்ட தருக்கள் ஓங்கிவளர்ந்து, கிளைகள் அடர்த்தியாய் ஒன்றோடு ஒன்று பிணைந்து, வெயில் வெளிச்சம் உள்ளே நுழையாமல் இருள் அடர்ந்து அகன்ற பயங்கரமுள்ள கரிய பெரிய காடுகள் பல அங்கே யிருக்கின்றன. உலகத்திற் பிரபல்யப்பட்ட உயர்சாதிப் போர்க்குதிரைகள் அந்தக் காடுகளிலேதான்பல்குகின்றன. அச்சத்தைத் தருகின்ற வேங்கையும், மதயானையும், கரடியும், ஓநாயும் ஆன துஷ்ட வனவிலங்குகள் பிளிறிக்கொண்டு அங்கே சஞ்சரித்துத் திரிந்தும், ஒளலியாக் [illegible]டைய ஆணை செல்லும் இடமாதலால், மனிதரை ஒருபோதும் தீங்கு செய்வது இல்லை. உலகப் பற்றுவிட்டு வனவாசிகளாய்ச் சென்று தவஞ்செய்யும் துறவிகளுக்கு அங்குள்ள காடுகள் மிக ஏற்றவை. நம் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவ் ஸல்லமவர்கள் அவதாரமான அன்று இடிந்து விழுந்து பாழ்பட்ட பதினன்கு அடுக்குக் கொத்தளமுள்ள கிசுறு

வின் அரணிப்பான கோட்டை, அங்குள்ள காடுகளில் ஒரு காட்டுள்ளேதான் இருக்கின்றது. அதனை * "புறாஜுல் அஜம்" என்பார்கள்.

இன்னும், அங்குள்ள நாடுகளில் இயற்கையமைப்பாயுள்ள வளப்பத்தையுடைய செழிப்பான மலைச்சாரல்களில் மனிதரால் பயிரிடப்படாமல் தாமே விளையும் விளைபொருள்கள் பல எங்கும் பொலிந்து மலிந்து விளங்கும். மா, பலா, மாதுளை, நாரத்தை, கொழிஞ்சி முதலான மதுரமுள்ள பழங்கள் குலை குலையாய்ப் பழுத்துக் குலுங்கும் தருக்கள் அடர்ந்த தோப்புக்களும், பலவேறுவகைப்பட்ட பூக்கள் பூத்துச் சொரியும் சோலைகளும், ஈக்கள் திரட்டிவைத்த தித்திப்பான தேன் கூடுகள் தொங்குகின்ற கருப்பங் கொல்லைகளும் அதிகம் உண்டு. ஏரிகரைகளில் பவளம் போன்ற சிவந்த கால்களுள்ள நாரை முதலான பக்ஷிகள் பலவேறு குரலோசையுடன் மீன்களைக் கொத்தித்தின்று திரியும். நீரோடைகளிலும், தாமரை, அல்லி, நீலோற்பலம் முதலான நீர்ப் பூக்கள் நிரம்பிப் படர்ந்த தடாகங்களிலும் அன்னப்புட்கள் கிடந்து நீந்தி விளையாடும். தினை முதலியன விதைத்திருக்கும் கொல்லைகளில் புள்ளிமான்களும், கலைகளும் விரைந்து துள்ளித் துள்ளி உலாவும். முயற் கூட்டங்கள் செழிப்பான பசும்புல் நிலங்களில் அச்சமின்றி மேய்ந்து திரியும். கிளி, குயில் முதலிய இனம் இனமான பறவைகள் மரக்கிளைகளில் இருந்து இனிமையாகச் சத்திக்கும். கொழுமதியான இந்நாடுகளில் வழிப்பயணம் போகும் பிரயாணிகளுக்கு இக்காட்சிகள் அளவிறந்த மன ஆ

---

* அஜம் தேசத்தில் நின்று அங்கே சென்ற கௌதுல் அதலம் குத்புல் அக்தாபு சையிது முகியத்தீன் அப்துல்காதிறு ஜைலானி ஆண்டகை யவர்கள் இடிந்து கிடக்கும் பாழ்ங் கொத்தளத்திற் போயிருந்து தவஞ்செய்தார்கள் ஆதலால், அதற்கு "புறாஜுல் அஜம்" என்று பெயர்வைக்கப் பட்டது. "அஜமுடைய ராசி" என்பது அதன்பொருள்.

நந்தத்தைத் தராசிற்கும். விளைச்சல் குறைவுபடாத வயல்
வெளிகள் பார்ப்பவர் கண்களுக்குப் பச்செசன்று பசிய வில்
ஓதிப் படாம் விரித்தாற்போலத் தோற்றும்.

இந்த அறபிருக்கு என்னும் வளங்கள் பொருந்திய
தேசத்தில் அலங்காரமான பட்டணங்கள் அநேகம் அங்
கங்கே உண்டு. பாபிலோன், கர்பலா என்னும் பட்டணங்
கள் புறாத்து ஆற்றுப்பக்கத்தில் இருக்கின்றன. அந்தேசத்
துப் பட்டணங்களுள் சிறப்புள்ள தலைப் பட்டணம் பகுதா
து என்னும் நகரந்தான். அது திஜ்லா ஆற்றங்கரையிற்
கட்டப்பட் டிருக்கின்றது. ஒரு காலத்தில் பூலோகத்து
முஸ்லிம் ராச்சியம் முழுமைக்கும் அதுவே ராஜமா நகரமா
யிருந்தது. சில நூறாண்டுகளுக்கு முன் முஸ்லிம் களுக்கு
கலீபா வாயிருந்த சுல்தான் ஹாறூன் றஷீது என்பவர் தம
து சிங்காசனத்தை அந்த பகுதாது நகரத்திலேதான் அ
மைத்திருந்தார். அங்கே பூர்வ காலத்துச் சிற்ப சாஸ்திரி
களாற் கட்டப்பட்ட சித்திரமான பல கட்டிடங்கள் இருக்
கின்றன. அன்றியும், ஹனபி மதுஹபு இமா மாகிய இமா
முல் அதுலம் நுகுமானிபுனு தாபித்து [அபூஹனீபா] றலியல்
லாகு அன்கு அவர்களதும், ஒளலியா க்களுக்கு சுல்தானா
கிய கௌதுல் அதுலம்; குத்புல் அக்தாபு சையிது முகியித்தீன்
அப்துல் காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்களது
மான மகத்துவமுள்ள இரண்டு கபுறுஸ்தான் களும் அங்
கேதான் இருக்கின்றன.

பகுதாது நகரத்திற்கு அருகாமையில் பதாயிகு என்று
ஒரு ஊர் இருக்கின்றது. அதற்கு உம்முல் உபைதா என்
னும் ஒரு பெயர் உண்டு. அது, நானாவகையான நறிய மலர்
களைப் பூத்துச் சொரிகின்றனவும், வாய்க்கு இனிமையான
கனிவர்க்கங்களைப் பழுத்துச் சிந்துகின்றனவுமான குளி
ருள்ள சோலைகளாற் சூழப்பட்டு, பல அலங்காரமான கட்
டிடங்களையும் ஆலயங்களையும் உடையதாய், ஸாதாத்து மார்

களான ஒலியார்க்கள் அநேகர்க்குக் குடியிருப்பாயுள்ள
சிற்றார். அந்த ஆரிலேதான் சுல்தானுல் ஆரிபீன் சையிது
அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பிறந்தார்
கள். இதனை இவ்வளவோடே நிறுத்தி, இனி இவ்வத்தி
யாயத்து வரலாற்றைச் சொல்கின்றேன்.

மேலே சொன்ன பதாயிகு நகரத்தில் ஜாஹிது அகுமது
என்று ஒரு பெரியோர் இருந்தார்கள். அவர்களை ஆரிபீன்
களுடைய பொக்கிஷம் என்னும் பொருளுள்ள கன்ஜால்
ஆரிபீன் என்று எல்லாரும் சொல்வார்கள். அவர்கள் உல
கப்பற்று விட்டு எவ்வித இச்சைகளினும் தம் மனதைச்
செல்லவிடாமல் தடுத்துத் திருப்பிய நிராசையாளராய், என்
றைக்கும் உண்மைப் பொருளாகிய அல்லாகுத் தஆலா வை
யன்றி வேறொரு பொருளையும் நாடாதவர்களா யிருப்பவர்
கள். அதனாலேதான் அகுமது என்னும் இயற்பெயருடன் நி
ராசையாளர் என்னும் பொருளுள்ள ஜாஹிது என்னும் சி
றப்புப் பெயரும் அவர்களுக்குச் சேர்த்து வழங்கப்பட்டது.

அல்லாகுத் தஆலா வை அறியும் அறிவில் தெளிவுபெற்
ற அந்த ஜாஹிது அகுமது, சுல் தானுல் ஆரிபீன் சையிது அ
குமதுல் கபீறுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்கள் அவ
தார மாவதற்குச் சில காலத்திற்கு முந்தி ஒரு நாள் வெள்
ளிக்கிழமை யிரவு நடுச்சாமத்தில், பதாயிகு நகரத்துப் பெரி
ய ஆலயத்தினுள்ளே போய் மிகுறுப்பு பக்கத்தில் நின்று, பொ
ழுதுபட்டு இருபது நாழிகைக்குமேல் தொழுவதாகிய சிறு
மை இரண்டு றக்அத்தை யுடைய தஹஜ்ஜுத்து என்னும்
சுன்னத்துத் தொழுகையை முதலாம் றக்அத்தில் குர்ஆன்
வேதத்து முப்பது அத்தியாயங்களையும் இரண்டாம் றக்
அத்தில் அவ்வேதத்து ஸூறத்துல் இகுலாசு ஆகிய குல்
ஹுவல்லாகு அஹது என்னும் தலைப்பைக்கொண்ட ஸூ
றத்தையும் ஓதித் தொழுது முடித்துவிட்டு, இனி வரும்

பஜ்று என்னும் பறுலு தொழுகையை எதிர் பார்த்துக் கொண்டு நெற்றியைத் தரையிற் படவைத்து சுஜூது என்னும் இருப்பிலேயே இருந்தார்கள்; அப்போது அவர்களுக்குக் கண்கள் இரண்டும் மூடி ஒருவித உறக்கம் உண்டாயிற்று. கண்கள் மூடினபோது, அல்லாகுத் தஆலா வின் நாட்டத்தையன்றி, வேறே எந்த நாட்டத்தையும் அவர்கள் உள்ளத்தில் வைத்திருக்க இல்லை. அவ்வாறு கண்கள் மூடி அறிதுயில் கொள்ளும்போது பிரபஞ்சத்தின் தோற்றரவுகளுக்கு இன்றியமையாத சாக்கிரம் என்னும் அவத்தை அறவே நீங்கினபடியால், இனிச் சொப்பன அவத்தையின் வாசல் திறக்கப்பட்டது. பெரியோர்களுக்கு உண்டாகும் சொப்பனம், அழுக்குப்பிடித்த மனத்தையுடைய நாம் காணும் சொப்பனம் போல்வதன்று. அவர்களின் பொறிபுலாதிகள் சாக்கிரத்தில் அநுபவிப்பது போலவே சொப்பனத்திலும் எல்லாவற்றையும் அநுபவிக்கும். அவர்களுக்கு உரிய இவ்வகைச் சொப்பனத்தைத்தான் "ரூயா" என்பார்கள்.

ஜாஹிது அகுமது அவர்களுக்கு மேற்சொன்ன வண்ணம் சொப்பனம் உண்டாய் அதன் வாசல் திறந்தவுடன், அவர்கள் கண்களில் மிக விசாலமான கடைவீதி யொன்று தெரிந்தது. அக் கடைவீதியில் விற்பனைக்கு வைத்திருக்கும் பொருள் அல்லாகுத் தஆலா வின் றஹ்மத்து என்கின்ற பேரருள் ஒன்றேயன்றி, மற்றவையல்ல. அதனை வாங்குதற்கு வந்து அங்கே கூடிநிற்போர் ஒளலியாக்களே யன்றி, மற்றவரல்லர். ஹக்கு வேறு, கல்கு வேறு என்று இரண்டுபட்ட போழ்தெல்லாம் உபூதியத்து என்கின்ற அடிமைத்தன்மையை இறுத்து, பின் இரண்டறக் கலந்து வஹ்தானியத்து என்கின்ற ஒருமைப் பாட்டில் தரிபடும் உயர்பதம் பெற்ற ஒளலியாக்களுள் முன் இருந்து இறந்து சென்றவர்களும், அக்காலத்தில் சீவித்து இருப்பவர்களும், இனிப் பிறப்ப

வர்களுமான மூன்று காலத்து ஒளலியாக்களும் அந்தக்கடைவீதியில் பெருந்திரளாய்க் குழுமி நின்றார்கள்.

நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களும், அவர்கள் அஸ்ஹாபுகளும் அல்லாத மற்ற ஒளலியாக்கள் என்னும் பட்டம்பெற்ற எல்லாரும் அந்தக் கடைவீதியிற் கூடி, தாம் தாம் செய்த நன்மைகளைக் கிரயமாக் கொடுத்து அல்லாகுத் தஆலாவின் பேருளை வாங்க நிற்கும் காட்சியை ஜாஹிது அகுமது கண்டபோது, தாமும் அக்கூட்டத்துள் ஒருவராய்க் கலந்து நிற்பதாக அவர்களுக்குப் புலப்பட்டது. அப்போது அவங்களெல்லாரும் மகத்துவமுள்ள அல்லாகுத் தஆலாவின் தஜல்லி என்னும் தோற்றத்தைத் தரிசிப்பதற்கு நாட்டங்கொண்டு, எல்லார் முகங்களும் ஒரு முகமாகப் பெரும் வேட்கையுடன் நின்றார்கள்.

அவ்வாறு நிற்கும்போது, கண்கள் இருண்டு மழுங்கும்படியான பெரிய சோதியொன்று மின் வெட்டினாற் போல ஆகாயத்தில் தோன்றி, வானம்வரையும் அளாவிச் சொலித்தது. பிரகாசம் மிகுத்த அச்சோதியை அங்கே நிற்கும் ஒளலியாக்கள் எல்லாரும் பார்த்துத் திகைப்புற்று நின்றார்கள். இவ்வாறு இணையற்றதான தன் சோதியைத் தோற்றரவாக் காட்டின அல்லாகுத் தஆலா ஆனவன் குறுநகையுடன் அங்கு நிற்கும் ஒளலியாக்களை விளித்து “குற்றமற்ற என் ஒளலியாமார்களே, நீவிர் எல்லாரும் இப்போது என்னுடன் சம்பாஷணை பண்ணுங்கள்; உங்களுக்குத் தேவையான எதையும் என்னிடத்துக் கேளுங்கள்” என்று கட்டளை பண்ணினான். கட்டளையிட்ட இந்தச் சத்தம் ஆகாயத்தில் தொனித்தபோது அந்த ஒளலியாக்கள் எல்லாரும் அக்கட்டளைப்படி பேசாமலும், ஒன்றைக் கேட்காமலும், அந்தச் சோதியில் மாழ்கி வாய்மூடி நின்றார்கள். ஒளலியாக்களுக்கு உண்டாகும் அல்லாகுத் தஆலாவின் தஜல்லியாத்து என்னும் தோற்றரவு இதுதான். இது அ

வர்களின் றூயா என்னும் சொப்பனத்தில் அன்றி உண்டாகாது. அப்போது அவர்கள் அவனுடன் சம்பாஷிக்கவும், தேவையானதைக் கேட்கவும் பெறுவார்கள்.

எல்லாரும் வாய்மூடி நிற்கும் அந்தப் பெருந்திரளான ஒளலியாக்களுள் தாமும் ஒருவராய் நின்று இந்தக் காட்சியைக் காண்கின்ற ஜாஹிது அகுமது அல்லாகுத் தஆலாவை விளித்து "எவ்வகை மேம்பாட்டினாலும் அறிதற்கு அரிதாய் எல்லாவற்றையும் படைத்துக் காத்து ஆள்கின்ற பெருமிதமும் வன்மையுமுள்ள அல்லாவே, மிக உயர்வான இந்தத் தானத்தில் உன்னுடைய வரிசையும், பதவியும், பெருமையும் நிரம்பித் ததும்புகின்றன. உன் ஒளலியாக்கள் எல்லாரும் கூட்டங் கூட்டமாய்த் திரண்டு இங்கே வந்திருக்கின்றார்கள். இது, உன்னுடைய பேரருளாகிய றஹ்மத்து மலிவாய் விற்கப்படும் கடைவீதியாயிருக்கின்றது. அந்தப் பேரருளை வாங்குதற்கும், உன் திருவசனத்தைக் காதாரக்கேட்டு உன்னுடைய தோற்றத்தைத் தரிசிப்பதற்கும் பேராவல் கொண்டே இந்த ஒளலியாக்களெல்லாம் இங்கே கூடி நிற்கின்றார்கள். உன்னை விரும்பியுள்ள இந்த ஒளலியாக்களை உவந்து நீயும் விரும்பியிருக்கின்றாய். இவர்கள் கொண்டுள்ள நட்பினையும், வழிபாட்டினையும் இவர்களை நீ பொருந்திக்கொண்டாய். ஆதலால் இவர்களோடு கலந்து நிற்கும் உன் அடிமையான எனக்கு இப்போது ஒரு எண்ணம் பிறக்கின்றது. அதனை உன்னிடத்து முறையிடுகின்றேன். அதற்கு நீ பிரதி அருளவேண்டும். அதாவது;— அளந்து அறிதற்கு அரும் பொருளாகிய உன்னை வழிபட்டவர்களாய் இங்கே வந்து திரண்டு நிற்கும் இந்த ஒளலியாக்களுள், உன்னை வணங்கும் வணக்கத்திலும், உன்னோடு கொண்டுள்ள நட்பிலும், உன்மீது வைத்த இச்சையிலும் மற்றும் உரித்தான வேறுவகையிலும் மிக்கவர் யார்? அதனை அறியவேண்டும் என்பதொன்றே என்

எண்ணம்" என்று சொன்னார்கள். இவர்கள் இவ்விதம்
கேட்டதெல்லாம்:— அக்காலத்துச் சீவித்திருக்கும் ஔலி
யாக்களுள் சிறந்தோர்களான மஹ்பூபுல் அகுலம் அலியிபு
னுஹைஹத்தி, தாஜுல் ஆரிபீன் அபுல்வபா றலி யல்லாகு அன்
குமா ஆகிய இவ்விருவரில் ஒருவரையே தனக்கு உவப்புள்
ளார் என்று அல்லாகுத் தஆலா சொல்வான் என்கின்ற
எண்ணங்கொண்டேயன்றி, வேறல்ல. இவ்வித எண்ணங்
கொண்டு அல்லாகுத் தஆலா இடம் கேட்டுவிட்டு, தம் என்
ணப்படியே பிரதி வரும் என்று ஜாஹிது அகுமது வழி
பார்த்து நின்றார்கள்.

அப்போது ஆகாயத்தில் "என் அன்புள்ள ஔலியாக்
களே, என்னுடைய உவப்பு மிக்க ஹபீபாயும், ஆஷிகாயும்
உள்ள ஒரு வாலிபர் நீவிர் நிற்கும் கடை வீதிவழியே என்
னைக் காண்பதற்கு வருகின்றார். என்னுடைய நிகரற்ற தாத்
தும் ஸிபாத்தும் வெளியான தினத்தின் மகத்துவத்துமேல்
ஆணையாக அவர் எனக்கு ஹபீபு; நான் அவர்க்கு ஹபீபு.
நான் அவரைக் காண்பதற்கு ஆவல் கொண்டிருக்கின்றேன்;
அவர் என்னைப் பொருந்திக் கொள்வதை நான் விரும்புகின்
றேன்; அவர் வரவை நான் எதிர்பார்க்கின்றேன். அவர்
இதோ வருகின்றார். ஆதலால், நீவிர் எல்லாரும் கூடிக்
கொண்டு நிற்காமல், வழிவிடுத்து விலகிநில்லுங்கள். அவர்
வருவதற்கு இடங்கொடுங்கள்" என்று அல்லாகுத் தஆலா
வின் சத்தம் அசரீரியாய்த் தொனித்தது. இச்சத்தங்கேட்
ட ஔலியாக்களெல்லாம் புதுமையடைந்து, தாங்களும்
அந்தச் சிறந்த வாலிபரைப் பார்க்கலாம் என்று அவாக்
கொண்டு, ஒரு நெடும் வீதிபோல வழிவிட்டு, எந்தப் பக்
கத்தில் நின்று அவர் வருகின்றாரோ என்று நான்கு திக்கி
லும் கண்பரப்பிப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அவ்
வாறு நிற்கையில், வானத்தில் நின்று மலாயிக்கத்துகள் அ
ளவற்றபேர் கூட்டங் கூட்டமாய் இறங்கினார்கள். அவர்க

ருள் சிலர் கைகளில் உயர்ந்த வெள்ளித்தடிகளும், சிலர் கைகளில் தங்கத் தடிகளும், சிலர் கைகளில் ஒளிபிறங்கான கொடிகளும் பிடிக்கப்பட்டிருந்தன. இவ்விதம் இறங்கின மலாயிக்கத்துகள் எல்லாரும் அந்தக் கடைவீதி வழியே "அல்லாகுத் தஆலா வுடைய ஔலியாக்களே, நீவிர் அனைவரும் வழிவிட்டு நில்லுங்கள். அல்லாகுத் தஆலா வுடைய மஹ்பூபும் மஉஷூக்கும் ஆனவர் வருகின்றார். அவர்க்காகப் பாதையை விசாலமாக்குங்கள். அவரை நீவிர் கனப்படுத்துவதற்காக விலகி நில்லுங்கள்" என்று சொல்லிக்கொண்டு வந்தார்கள். இப்படிக் கட்டியஞ் சொல்லப் படுகின்றபோது, அங்கே நிற்போருடைய கண்களுக்கு அலங்காரமான ஒன்று காணப்பட்டது.

சுவர்க்கலோகத்துச் சாதி ரத்தினங்களுள் உயர்ந்த பசுங்கதிர்களையுடைய மரகதத்தாலான பல்லக்கு ஒன்று ஆகாயத்தினின்று இறங்கிற்று. அது, வானத்திற் கொளுத்தப்பட்டதாய், ஒளிமயமாய்த் தோற்றிற்று. அந்தப் பல்லக்கினுள் அங்கே கூடிநிற்கும் ஔலிமார் கூட்டத்துட் காணப்படாத பேரழகுள்ள வாலிபர் ஒருவர் இருக்கின்றார். முன் சொன்ன மலாயிக்கத்துகள் அன்றி, வேறு பல மலாயிக்கத்துகள் எண்ணிறந்தபேர்கள் அந்தப் பல்லக்கைச் சூழ்ந்து நிற்கின்றார்கள். அவர்களுள் அநேகர் "ஸுப்ஹானல்லா" என்னும் தஸ்பீஹும், அநேகர் "அல்ஹம்து லில்லா" என்னும் தம்ஹீதும், அநேகர் "லாஇலாஹ இல்லல்லாகு" என்னும் தஹ்லீலும், அநேகர் "அல்லாஹு அக்பர்" என்னும் தக்பீரும் சொல்லிச் சத்திக்கின்றார்கள். பின்னும் அநேகர் "ஔலியாக்களே, வழிவிடுங்கள்; விலகி நில்லுங்கள்; மஹ்பூபுல்லா வருகின்றார்; மஉஷூக்குல்லா வருகின்றார்" என்று கூறுகின்றார்கள்.

இவ்விதமாக இறங்கின பசுங்கதிர் விளங்கும் பல்லக்கு அந்தக் கடைவீதியில் நிற்கும் ஒளலியாக்களை நெருங்கி, அவர்கள் விட்டவழியே சென்றது. அப்போது அங்குள்ள ஒளலியாக்கள் [இது காண்கின்ற ஜாஹிது அகுமது உள்பட] எல்லாரும் அந்தப் பல்லக்கை முன்னோக்கிப்போய், அதற்குள் இருக்கின்ற வாலிபருக்குத் தாழ்மையாய் நின்று "அஸ்ஸலாமு அலைக்கும் யா மஹ்பூபுல்லா" என்று ஸலாம் சொன்னார்கள். பல்லக்கினுள் தலைகுனிந்து உட்காந்திருக்கும் அந்த வாலிபர், இவர்கள் சொன்ன ஸலாத்திற்குப் பிரதியாக "வ அலைக்கும் ஸலாம் யா ஒளலியா அல்லா" என்று மாத்திரம் சொல்லிவிட்டு, திரும்பி நிமிர்ந்து ஒருவரையும் பாராமல் இருந்திட்டார்; இதற்குள் பல்லக்கு வெகுதூரம் போய்விட்டது.

அவர்கள் சொன்ன ஸலாத்திற்கு அந்த வாலிபர் பிரதிமாத்திரம் கூறி மற்றொன்றும் பேசாமல் குனிந்த வண்ணமாய்ப் போயிட்டபடியால்; இது என்ன இறுமாப்பு! என்று அவர்மீது எல்லார்க்கும் பொறுமை உண்டாயிற்று. இவ்விதம் அவர்கள் உள்ளத்தில் பொறுமை கொண்டதை அறிந்த அல்லாகுத் தஆலா அவர்கள் அனைவரையும் விளித்து "என் ஒளலியாக்களே, என்னுடைய மஹ்பூபமீது நீவிர் பொறுமை கொள்ளாதீர்கள். அது கொள்வது உங்களுக்கு நியாயமும் ஒழுங்கும் ஆகாது. அவர்க்குத் தாழ்மையாயிருங்கள். அவர் எனக்கு மஉஷூக்கானவர். அவரிடத்து நான் அதிக ஆசைவைத்திருக்கின்றேன். அவர் என் அந்தரங்கம்" என்று கண்டிப்பான கட்டளை பண்ணினன்.

இப்படிக் கட்டளை பண்ணினவுடன், இது காண்கின்ற ஜாஹிது அகுமது அல்லாகுத் தஆலாவை விளித்து "உலகத்தைப் படைத்து ஆள்கின்ற வல்லமையுள்ளவனே, உன்னுடைய மஹ்பூபும் மஉஷூக்குமாய் இப்போது மரகதப்

பல்லக்கில் வந்தாரே, அவருடைய நாமகரணம் என்ன?" என்று கேட்டார்கள். இக் கேள்விக்கு அல்லாகுத் தஆலா "அவருடைய நாமம் அகுமதுல் கபீறு" என்று விடை சொன்னான். பின்னும் "யா அல்லா, அவர் இவ்வுலகத்தில் எங்கிருக்கின்றார்? அவரிருக்கும் இடத்தை எனக்குத் தெரிவி; நான் போய் அவரைத் தரிசனை பண்ணவேண்டும்" என்று ஜாஹிது அகுமது கேட்டார்கள். அதற்கு அல்லாகுத் தஆலா "அவர் இப்போது இருக்கும் தானம், அவர் தந்தையுடைய முதுகுத் தண்டுதான்" என்று மறுமொழி சொன்னான். அதைக்கேட்ட ஜாஹிது அகுமது "ஆனால், அவர் தந்தையார்? அவர் பெயர் என்ன? அவர் யாருடைய குமாரர்?" என்று மறுபடியும் அல்லாகுத் தஆலா இடம் கேட்டார்கள். அதற்கு அல்லாகுத் தஆலா "அவர் தந்தை ஒலிமாருள் ஒருவர்; அவர் பெயர் அபுல் ஹஸன் அலி. அவர் யஹ்யா வுடையகுமாரர். அந்த அபுல் ஹஸன் அலி என்பவர் அறபாத்து மலையுச்சியிலே என்னுடைய வணக்கத்தில் தரிபட்டாய் என்மீது இச்சை மீறினவராய் இப்போது நிற்கின்றார். நீர் அவரிடம்போய், அவரைத் தரிசனை பண்ணிக் கொள்வீராக. கண்ட காட்சியை மறவாமல் அவரிடம் சொல்வீராக" என்று விடைகொடுத்தான்.

ஜாஹிது அகுமது காணும் காட்சி இவ்வளவில், சொப்பனத்து அரிய வாசல் அடைபட்டது. உடனே அவர்களுக்குச் சாக்கிரம் என்னும் விழிப்பு வந்தது. விழித்தவுடன் தாம் கண்ட அரியபெரிய காட்சியை எண்ணி உள்ளந் தடுமாறி, சற்று நேரம்வரையும் மயக்கியிருந்தார்கள். அப்போது, பஜ்று தொழுகைக்கு அழைக்கும் பாங்கு சத்தம் கேட்டது. உடனே ஜாஹிது அகுமது மனத்தெளிவுற்று எழுந்து உலு செய்து பஜ்று தொழுகையைத் தொழுது முடித்தார்கள்.

வானத்து நக்ஷத்திரங்கள் மழுங்கக் கிழக்கு வெளுத்து, தாமரைகள் முகைமுறுக்கு அவிழ்ந்து இனிமையான தேனைத் துள்ளிதுள்ளியாகச் சிதறும்படி சூரியன் உதயமாயிற்று. அப்போது ஜாஹிது அகுமது தாம் புறப்பட்டுப் போய் அபுல் ஹஸன் அலியைத் தரிசித்து, கண்ட காட்சியை அவர்களிடம் சொல்லவேண்டும் என்று கருதி அல்லாகுத் தஆலாவின் அச்சப்பாட்டுடன் ஆலயத்தில் நின்று வெளிப்பட்டு, தம் வீட்டுக்குப் போகாமல் நேரே மக்காவை நோக்கி நடந்தார்கள். பதாயிகு பட்டணத்தை விட்டுப் புறப்பட்ட அவர்கள் சில நாள் நடந்து, சிறப்பான மக்கா நகரத்தை அடைந்து, அங்குள்ள மகத்துவமுள்ள அறபாத்து மலையை நெருங்கிப் பார்த்தார்கள்; பார்த்தபோது, அதன் உச்சியில் அபுல் ஹஸன் அலியவர்கள் நிற்பது அவர்களுக்குத் தோற்றிற்று. அபுல் ஹஸன் அலியவர்களுக்கு முன்னே நபீ கலீலு அலைகிஸ்ஸலாமவர்கள் ககுபா என்னும் பரிசுத்தமான ஆலயத்தை எதிர் நோக்கித் தாழ்மையுடன் நிற்பதும் அவர்கள் கண்ணுக்குத் தெரிந்தது. உடனே ஜாஹிது அகுமது மலையுச்சியிற்போய் அவர்களை அடுத்து நின்று "அஸ்ஸலாமு அலைக்கும் யா அபுல் ஹஸன் அலி" என்று ஸலாம் சொன்னார்கள், அதற்கு அவர்கள் "அலைக்கும் ஸலாம் யா ஜாஹிது அகுமது" என்று பிரதி சொன்னார்கள்.

அதன்பின் ஜாஹிது அகுமது அபுல் ஹஸன் அலியின் முதுகு புறம் நோக்கி "அஸ்ஸலாமு அலைக்கும் யா ஸையிது அகுமதுல் கபீறு" என்று ஸலாம் சொன்னார்கள். உடனே அபுல் ஹஸன் அலியுடைய முதுகந் தண்டின் உள்ளேயிருந்து மெல்லிய இனிமையான குரலுடன் "அலைக்கும் ஸலாம் யா ஜாஹிது அகுமது. உம்மையும், உம்மோடு அந்த றஹ்மத்து விற்கும் கடைவீதியிற் குழுமி நின்ற ஔலியாக்களையும் அல்லாகுத் தஆலா பொருந்திக் கொள்வானாக" என்று பிரதி வந்தது. இது கேட்ட ஜாஹிது அகுமது ஆச

சரியப்பட்டு மகிழ்வெய்தி, தாம் கண்ட காட்சி விவரம் அனைத்தையும் அபுல் ஹஸன் அலி யிடம் சொன்னார்கள். அதைக்கேட்ட அவர்கள் பெரிதும் மகிழ்வடைந்தார்கள். பின் ஜாஹிது அகுமது பதாயிகுக்கு மீண்டார்கள்.

காட்சி முற்றிற்று.

---

3-ம் அத்தியாயம்.

## அ வ தா ர ம்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீர் றலி யல்லாகு அன்கு அவர்கள் பூலோகத்தில் அவதாரமான வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— சைகு ஹய்மா தீபுனு அபுல் பறக்காத்தும், சைகு அப்துல் றஹீம் மீபுனு அப்பாகுல் குறைஷியும்.]

முன்னே வருணித்த அறபிருக்கு என்னும் தேசத்தில் பதாயிகு என்று ஒரு ஊர் இருப்பதாகச் சொன்னேன். அந்த பதாயிகைச் சேர்ந்த நாட்டு வளப்பம் இவ்வகைப் பட்டதென்று வரையறுத்துச் சொல்ல மதிநுட்பமுள்ள எந்தக் கல்விமானாலும் இயலாது. ஒலியாக்கள் பிறந்து சஞ்சரிக்கும் இடமாதலால், அல்லாகுத் தஆலா அந்நாட்டை மிகச் செழிப்பாக்கி வைத்திருக்கின்றான். மழைவளங் குன்றாது பருவந்தோறும் தவறின்றிப் பெய்கின்றபடியால், தானியாதி விளைபொருள்கள் அனைத்தும் விளைச்சல் பழுதுறாமல் பலன் தராநிற்கும். விலையுயர்ந்த சந்தனம், அகில், சண்பகம், குங்குமம் முதலான வாசனையுள்ள தருக்களும், தேமா, பலா, வில்வம், விளா, ஈந்து, நாரத்தை, எலுமிச்சை, மாதுளை, மகிழ் முதலான கனி தரும் விருக்ஷங்களும், வாழை, கமுகு, தெங்கு முதலியவைகளும், பலவேறு நிறங்களையும் நறிய வாசனைகளையு முடைய மலர்களைச் சொரி

கின்ற கொன்றை, கோங்கு, புன்னை யாதி மரங்களும், நாலாவகைச் செடி கொடிகளும் அடர்ந்து குளிர்ந்த காவனங்கள் பல எங்கே பார்த்தாலும் காணப்படும். ஆகாயத்தை அளாவிநிற்கும் காவனங்களில் மான், மரை, முயல் முதலான புல்வாய்கள் நின்று துள்ளி விளையாடாநிற்கும். கிளைகள் அடர்ந்த விருக்ஷங்களில் குயில்கள் இருந்து இசைபாட, குளிர்ச்சியுள்ள நிழல்களில் மயில்கள் நின்று மரகதம்போன்ற சிறகு விரித்து நடிக்கும். வண்டினங்கள் மலர்களிற் சென்று தித்திப்பான தேனையுண்டு, பலவகையான கீதங்களைப் பாடாநிற்கும். தாமரையும் அல்லியும் குவளையும் நெருங்கி மலர்ந்த தடாகங்களில் வாளை, கெண்டை முதலான மீன்கள் குதித்துக் குதித்துத் திரியும். இவையன்றி, இன்னும் பலவான வளப்பமுள்ள சோலைகள் சூழ்ந்த நாட்டினையுடையது பதாயிகு நகரம். மகிமை வாய்ந்த நகரங்களுள் இதுவும் ஒன்றா யிருக்கின்றது.

பதாயிகு நகரத்து மாடமாளிகைகள் வெண்ணிறச் சாந்து மெழுகப்பட்ட எழு நிலையினவாய், மேகத்தை அளாவு வினவாய், வெகு சித்திரமாய்த் தோற்றும். அவ்வித மாளிகைகள் நிரை நிரையாய் அமைந்த நெடிய வீதிகள்தோறும் குதிரை, யானை, ஒட்டகம் முதலான ஊர்திகள் நடமாடும் தொனி சமுத்திரம் போல ஒலிக்கும். மாணிக்கம் முதலான ரத்தினங்களும், பலவகை லோகங்களாற் செய்த பாத்திரங்களும், பட்டு முதலான ஆடைகளும், பொன் வெள்ளிகளால் ஆன நகைகளும், தானியவர்க்கங்களும், பழவகைகளும், வேறு பல பண்டங்களும் குவித்து வைத்து விற்கப்படும் கடைவீதிகளின் காட்சி வெகு அலங்காரமா யிருக்கும். பலவா யுயர்ந்த உன்னதமான கோபுரங்கள் அமைந்துள்ள ஆலயங்கள் அந்நகரத்துள் அங்கங்கே யிருத்தலால், அல்லாகுத் தஆலா வின் திருவசனமாகிய குர்ஆன் என்னும் வேதசத்தம் இரவுபகலாகச் சத்தித்துக்

கொண்டிருக்கும். கல்வி பயிலும் மாணாக்கர் எண்ணிறந்தோர் கூடியிருந்து இலக்கிய இலக்கணாதி நூல்கள் ஓதும் கல்லூரிகள் பல அங்கேயுண்டு. சாதாத்துகளான ஒளலியாக்களும், மஷாயிகு மார்களும், போதகாசிரியர்களுமான பெரியோர்கள் பலர் அங்கே குடியிருக்கின்றார்கள். பதாயிகு நகரத்து அருமை பெருமைகளைப்பற்றி முழுமையும் வருணிப்பார் யாரும் இல்லர். ஆதலால், இம்மட்டில் முடித்து விஷயத்தை ஆரம்பிக்கின்றேன்.

இவ்வித மேம்பாடு அமைந்த பதாயிகு நகரத்தில், சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் தந்தை சையிது அபுல் ஹஸன் அலி யவர்கள் வாழ்ந்திருந்தார்கள். ஆணவம், காமியம், மாயை என்னும் மூக் குற்றங்களும்படிந்து தெய்வ வழிபாடு சிறிதும் இன்றித் தீங்குவிளைக்கும் மனமுடையார் யாராயினும் இவர்களின் கருணைக் கண் பார்வைபெற்றால், அவை யொழிந்து நேர்பட்டு, நல்லொழுக்கம் உடையோராவர். மார்க்கத்துக் குறிப்பிடப்பட்டனவாய விதிவிலக்கு என்னும் இருவிஷயங்களின் பாகுபாடுகளையும், அவற்றைச் சார்ந்த ஆசாரங்களையும் தேன் ஒழுகினாற்போலத் தம்மை அடுத்தார்க்குப் போதிக்கும் போதனா சக்தியும், ஏழைகளுக்கு வேண்டுவனவற்றை வரையாது கொடுக்கும் ஈகையும், பிறர் புகழ்ந்து கூறுமிடத்து விருப்பும் இகழ்ந்து கூறுமிடத்து வெறுப்பும் ஆகிய இருவகைக் குணங்கள் இன்மையும், சிறப்பான சாந்த குணமும் உள்ளவர்கள். பிக்ஹு, அகாயிது, தஸவ்வுபு என்னும் மார்க்கத்துக் கல்வி வகை மூன்றினும் கடல் போலக் கற்றுத் தேர்ந்தவர்கள். தம் கடமை இன்னதென்பதைச் சிறிதும் மறவாமல் என்றைக்கும் அல்லாகுத் தஆலாவின் வணக்கத்தில் தரிபட்டவர்கள். இன்னும் அவர்கள் மனிதரோடு சகவாசம் பண்ணுதலை விட்டுத் தனியே துறவுபூண்டு, சிலகாலம் மகா தவஞ்செய்து சித்திபெற்றவர்

கள். அருள் அடக்கம் முதலான நல்லொழுக்கம் அனைத்தினும் சிறப்புற்று, அவ்வூரில் உள்ள ஸாதாத்துமார் அனைவருக்கும் ஒரு கிரீடம்போல விளங்கினார்கள்.

ஸையிது அபுல் ஹஸன் அலி யவர்கள் இவ்விதம் மேன்மை பெற்று வாழுங் காலத்தில் தம் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒரு துணைவி வேண்டும் என்று நாட்டங் கொண்டபோது, அவர்களின் சுற்றத்தார் குலம், நலம், கல்வி முதலியவற்றில் தங்களோடு ஒத்த ஒரு குடும்பத்திற் பெண்பேசி, நல்ல தினத்தில் நல்ல முகூர்த்தத்தில் மணமுடிப்பித்தார்கள். அந்தப்பெண் பதாயிகு நகரத்தில் உள்ள றபாஇக் கிளையில் மேம்பாடுள்ள அபூபக்கர் என்னும் பெரியோருடைய குமாரத்தி. அவர் பெயர் ஆயிஷா. அபூபக்கர் என்னும் அந்தப் பெரியோருடைய மூதாட்களில் றபீஉத்தீன் என்று ஒருவர் இருந்தார். அவருடைய கிளையார்க்குத்தான் "றபாஇய்யா" என்று பெயர்.

அபூபக்கருற் றபாஇ யவர்களின் மகளாராகிய ஆயிஷா அழகிற் சிறந்த பெண்மணி. உலகத்து மாதர்களுக்கு உரிய கற்பு முழுவதும் கொளுவி நிற்கும் ஒரு கொளுகொம்பு போன்றவர். கல்வி கேள்விகளிற் சிறப்புவாய்ந்து, அல்லாஹுத் தஆலா வுக்கு வழிபட்டு மார்க்கத்தில் ஒழுகி நடக்கும் அக்காலத்து மாதர்களுள் ஆயிஷா நடுநாயகமானவர், அவரது றபாஇ என்னும் கிளைக்குத் தீபமானவர். இவ்வித மேன்மைபெற்ற அறிவிற்சிறந்த ஆயிஷா என்னும் அழகிய நாயகியோடு ஸையிது அபுல் ஹஸன் அலி யவர்கள் கலந்திருந்து இல்லறம் நடத்தினார்கள். அருட்செல்வம் பொருட்செல்வம் என்னும் இரண்டினும் குறைபாடு இன்றி, விருந்தோம்பல் முதலான நற்கருமங்களில் சிறிதும் வழுவாது இருவரும் வாழ்ந்திருந்தார்கள்.

ஸையிது அபுல் ஹஸன் அலி யவர்களும், அவர்களின் ப்ரிய மனைவியாராகிய ஆயிஷாவும், அல்லாகுத் தஆலா வின் பேரருள் வாய்ந்து அவர்களின் இல்லறத்தில் எவ்விதக் குறைவும் உண்டாகாது அன்புடன் வாழுங்காலத்தில், ஸையிது அபுல் ஹஸன் அலி யவர்கள் முதுகந்தண்டில் இருந்த சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீர் றலியல்லாகு அன்கு அவர்களை ஆயிஷா வின் உதரத்தில் அல்லாகுத் தஆலா அமைப்பித்தான். அல்லாகுத் தஆலா வின் நியமகப்படி ஆயிஷா வின் வயிற்றிலான அந்தக் கரு, நாட்குநாள் வளர்ந்து வந்தது. சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீர் றலியல்லாகு அன்கு அவர்கள் தந்தையின் முதுகில் நின்று தாயார் வயிற்றிற் கருவாய்த் தரிபட்ட மகிழ்ச்சியால், சராசரங்கள் அனைத்தும் ஆநந்தத்தில் அமிழ்ந்து பூரித்தன. இவ்வண்ணம் உலகம் முழுவதும் பெருமகிழ்வெய்த ஆயிஷா வின் கருப்பத்தில் அமர்ந்திருக்கும் கரு வளர்ந்து கொண்டிருந்தது.

பந்துபோலும் இளங் கொங்கைகளையுடைய பெண்கள் நுதலில் தீட்டும் திலதம்போன்ற பால்போலும் இனிய மொழிகளையுடைய ஆயிஷா வுக்குச் சகோதரரும், அபூபக்கருற் றபாஇ யவர்களுக்குக் குமாரருமான ஒருவர் பதாயிகு நகரத்தில் இருந்தார்கள். அவர்கள் பெயர் மன்ஸூறு. அவர்கள் அல்லாகுத் தஆலா வுக்கு வழிபட்டு ஒழுகி நடக்கும் ஒலியாக்களுள் ஒருவரும், முன்னே சொன்ன றபாஇக்கிளைக்கு நாயகமு மானவர்கள்.

தவத்தில் மிகச் சிறந்த மன்ஸூறுற் றபாஇ யவர்கள் ஒருநாள் நடுச சாமத்தில் தம் வீட்டுப் படுக்கையறைக்குள் நித்திரை செய்தார்கள். களங்கமின்றிப் பளிங்குபோலத் தெளிந்த இருதயத்தில் அல்லாகுத் தஆலா வையன்றி வேறொரு பொருளையுங் கருதாமல் அவர்கள் அறிதுயில்

செய்யும் அந்த நேரத்தில் றாயர் என்கிற சொப்பனமும் ஒன்று காணப்பட்டது.

மன்ஸூறற் றபாஇ யவர்கள் காண்கின்ற சொப்பனத்தில், மகிமை பெற்ற மதீனா நகரத்து ஆலயம் தெரிந்தது. அலங்காரமான அந்த ஆலயத்தின் உள்ளே நபிமார் அனைவர்க்கும் நாயகமான நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகி வஸல்ல மவர்கள் தங்கள் அஸ்ஹாபிகள் அனைவரும் சூழ்ந்திருப்ப உட்கார்ந்திருக்கின்றார்கள். அவர்கள் பக்கத்தில் அழகிய சிறுவர் ஒருவர் நிற்கின்றார். அந்தச் சிறுவருடைய சிரசில் நபி நாயக மவர்கள் தங்கள் வலதுகையை வைத்துக் கொண்டிருக்கின்றார்கள். எவ்விதமான சத்தமும் அங்கே யில்லை. எல்லோரும் வாய்கள் மூடித் தாழ்மையா யிருக்கின்றார்கள். இவ்வாறாக மன்ஸூறற் றபாஇ யவர்கள் கண்டு ஆச்சரிய முற்று, மகிமையும் சிறப்பும் உள்ள அந்தச் சபையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மன்ஸூறற் றபாஇ யவர்கள் தாம் காணும் சொப்பனத்தில் இவ்வாறு பார்த்துக்கொண்டு நிற்கும்போது, நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்கள் இவரை நோக்கி: மன்ஸூறே என்று விளித்துத் தங்கள் பக்கத்தில் நிற்கும் சிறுவரைச் சுட்டிக் காட்டி “இந்தச் சிறுபிள்ளையுடைய மகத்துவத்தையும், பதவியையும் உமக்கு நான் சொல்கின்றேன். நீர் மனங்கவிந்து கேட்பீராக.” என்று சொல்லிவிட்டு மறுபடியும் பின் வருமாறு சொல்கின்றார்கள்:—

“மன்ஸூறே, இம் மண்ணுலகத்தில் நபியாய்ப் பிறந்த எல்லாரிலும் நானே சிறப்புடையேன். அதுபோல், இந்தச் சிறுபிள்ளையானவர் ஒலியாய்ப் பிறந்தார், இனிப் பிறப்பார் எல்லாரிலும் சிறப்புடையவர். இன்னும் இவர் என் சந்ததிகளில் உள்ளவர்; என் உரிமை அனைத்திற்கும் இவர்

பொறுப்பாளர்; எந்த வகையிலும் தலைமை பெற்றவர்.
அன்றியும் இவர் எனது இஸ்லாம் மார்க்கத்தினவான ஷ
ரீஅத்து, தரீகத்து, ஹகீகத்து, மஅரிபத்து என்னும் நான்கு
சாதனங்களையும் உலகத்தில் மிக விளக்குவிப்பார். பாத்
தின், லாஹிறு என்கின்ற அகம் புறம் என்னும் இருவகைப்
பொருளையும் நன்கு தேர்ந்து, மனிதர்க்கு நல் வழி காட்
டுவார். இவர் என் சந்ததி; இவர்க்குப் பெயர் அகுமதுல்
கபீறிபுனு அபுல் ஹஸன் அலி. அபூபக்கருடைய மக
னே, கேட்பீராக. இவர் என் சந்ததி. என் அதிகாரங்க
ளுக்கு இவர் உரித்தாளர். மன்ஸூறே, இவர் என் சந்ததி.
எனக்குப் பிரதியானவர். என் அந்தரங்கமானவர்" என்
று இம்மட்டுஞ் சொல்லி, தங்கள் வலக்கரத்தினால் அந்தச்
சிறுவரின் முகத்தைத் தடவிவிட்டு மறுபடியும் "மன்ஸூ
றே, இன்னும் கேட்பீராக. இவர் என் சந்ததி; அகுமதுல்
கபீறு. இவரை உவந்து பேணி நடப்பவன் எவனோ அவனை
நான் உவந்து பேணிக்கொள்வேன். கியாமத்திலே அவனை
என் மன்றாட்டத்தினால் காப்பாற்றுவேன். இவரை எவன்
வெறுத்துக் கோபிக்கின்றானோ அவனை நான் வெறுத்துக்
கோபிப்பேன். இவரைப் பகைத்தவன் என்னைப் பகைத்த
வனாவான். இன்றைக்கு நாற்பதாம் நாள் இவர் அவதார
மாவார். மன்ஸூறே, இவர் விஷயத்தில் நீர் என் உம்மத்
து மார்களுக்கு நன் மாராயம் சொல்வீராக. இவர் பிறப்
பதைக் குறித்து, எல்லார்க்கும் அறிவிப்பீராக" என்று
இவ்வளவுஞ் சொல்லி முடித்தார்கள்.

நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்கள்
திருவாய் மலர்ந்து அருளிய இத் திருவசனங்களையெல்
லாம் கேட்டு நின்ற மன்ஸூறு இவ்வளவில் நித்திரையில்
நின்று விழித்தார்கள். விழித்து எழுந்தபோது அவர்க
ளுக்கு உண்டான ஆநந்தம் இவ்வளவினது என்று சொல்
வது அரிது. முந்திக் கேள்விப்பட்டுள்ள விஷயங்களா

னும், அபுல் ஹஸன் அலியுடைய மகன் என்பதானும், அப்பிள்ளை தம் சகோதரி வயிற்றில் இருக்கும் பிள்ளை தான் என்று மன்ஸூறு அறிந்து, அதன் மகத்துவத்தைக் குறித்து அதிக ஆச்சரியப்பட்டார்கள்.

பின்பு, மன்ஸூறுற் றபாஇ யவர்கள் அதிகாலையில் எழுந்து தொழுது முடித்து, நபி நாயக மவர்கள் ஏவின வண்ணம் அப் பிள்ளையைப்பற்றித் தம் சுற்றத்தார்களுக்கும், ஊரிலுள்ள மற்றும் முஸ்லிம்களுக்கும் தெரிவித்தார்கள். இதைக் கேட்ட அவர்களெல்லாரும் புதுமையும், சந்தோஷமும் அடைந்தார்கள்.

அந்தக் காலையிலேயே மன்ஸூறுற் றபாஇ யவர்கள் தாம் கண்ட சொப்பனத்தைத் தம் சகோதரியாகிய ஆயிஷா இடம் சொல்லிக்காட்டலாமென்று எண்ணி, ஆயிஷா குடியிருக்கும் வீட்டு வாசலுக்கு வந்தார்கள். தலைவாசலில் வரும்போதே, உள்ளேயிருக்கும் ஆயிஷா வுக்கும், அவர் வயிற்றிலிருக்கும் பிள்ளைக்கும் சம்பாஷணை நடக்கும் சத்தம் அவர்கள் காதிற்கேட்டது. இச்சத்தங் கேட்டவுடன் மன்ஸூறுற் றபாஇ யவர்கள்: ஆ! இது என்ன ஆச்சரியம்! என்ன மகத்துவம்!" வயிற்றினுள் கருவாயிருக்கும் பிள்ளை பேசுகின்றதே! இன்னும் பேசி முடியுந்தனையும் நாம் உள்ளே புகாமல் வாசலில் நின்றே கேட்போம் என்று கருதி, அந்த மனையின் தலை வாசலிலேயே நின்று விட்டார்கள். மனைக்குள் ஆயிஷா வாகிய தாய்க்கும், அவர் வயிற்றுள் இருக்கும் அகுமதுல் கபீறு ஆகிய பிள்ளைக்கும் கீழ் வருமாறு சம்பாஷணை நடக்கின்றது.

தாயாராகிய ஆயிஷாவின் கருப்ப அறைக்கண் இருக்கும் சிசுவாகிய சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், மாணிக்கக் கிண்ணத்திருந்து அமிர்தம் ஒழுகுவதுபோல மலர் வாய்திறந்து இனிய மெல்லிய கு

ரலாய் [அஸ்ஸலாமு அலைக்கும் யா உம்மீ] "என் அன்னையே, உங்களுக்கு என் ஸலாம் உண்டாவதாக" என்று மொழிந்தார்கள். ஆச்சரியகரமாகத் தம் வயிற்றுள் இருந்து இச் சத்தங் கேட்டமாத்திரத்தில் ஆயிஷா திகைத்து, பின் இது நம் வயிற்றில் இருக்கும் பிள்ளையின் சத்தந்தான் என்று மனந்தெளிந்து, தம் வாய்திறந்து [வ அலைக்கும் ஸலாம் யா வலதீ] "என் மகனே, உனக்குப் பிரதி ஸலாம் உண்டாவதாக. உன் பெயர் என்ன?" என்று சொல்லிக் கேட்டார். தாயார் கேட்ட இக்கேள்விக்கு "அன்னாய், என் பெயர் அகும்துல் கபீறு" என்று உடனே மறுமொழி சொன்னார்கள். தம் மகன் பெயர் சொன்னபோது, ஆயிஷா மறுபடியும் பிள்ளையை விளித்து "என் அருமை மகனே, இனி வரவிருக்கும் கியாமத்து நாளில் இருபுறமும் தீத்திரள் கொழுந்துவிட்டு எரிய நரகத்துமேற்போடப்படும் ஸிறுத்துல் முஸ்தகீம் என்னும் பாலமானது, அல்லாகுத் தஆலா வைத் தரிசித்தற்கு இடமான சுவர்க்கம் புகுதுவார்க்கு ஒரு பெருந் தடையாயுள்ளது. அதை இலகுவிற்கடந்து அங்கே செல்லுதல் பாவிகளுக்கு இயலாதது. மகனே, உன்னைச் சுமந்திருக்கும் நான் பாவியாயிருக்கின்றேன். அப்படியிருக்கும் நான், மிகவளைந்து நீண்ட அபாயகரமான அந்தப் பாலத்தை எளிதிற்கடந்து சென்று அல்லாகுத் தஆலா வைத் தரிசிப்பதற்கு இன்றியமையாச் சில உபதேச மொழிகளை உன் வாய்திறந்து எனக்குச் சொல்வாயாக" என்று கேட்டனர். தங்கள் தாயார் ஈடேறுதற்கு அறவுரையான உபதேசஞ் சொல் என்று கேட்க, வயிற்றுள் இருக்கும் சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பின்னும் வாய்மலர் திறந்து அன்னையை விளித்து "என் தாயே, தாங்கள் வேண்டிய வண்ணம் அல்லாகுத் தஆலா வை எளிதாய் அணுகித் தரிசித்து அவனது பேரருளைப் பெறுதற்கு

இன்றியமையாத ஒன்பது வகைக் கடமைகளை உங்களுக்கு இப்போது நான் சொல்கின்றேன். அவற்றைத் தாங்கள் கேட்டு, மறவாதவண்ணம் அவ்வொன்பது கடமைகளையும் செய்து வருவீர்களாக. அவையாவன:— எந்த நேரத்தும் சிறு துடக்கின்றித் துப்புரவோடிருக்குதலான உலுவைத் தொடர்பாக்கொண்டு இருத்தல் ஒன்று; என்றைக்கும் உபவாசம் ஆகிய நோன்பை விடாமல் வைத்துக்கொள்ளுதல் ஒன்று; பலன் இல்லாத வீண் சொற்களைச் சொல்லாமல் வாயை மூடிப் பேணிக்கொள்ளுதல் ஒன்று; காலத்தை அவமே கழிக்காமல் இயலுந்தோறும் கல்வத்து என்கின்ற யோக இருப்பில் இருந்து வருதல் ஒன்று; அல்லாகுத் தஆலாவின் திக்று என்னும் தியானத்தை விட்டிடாமல் "லாஇலாஹ இல்லல்லாஹு" என்கின்ற கலிமாவை இதயத்திற்கொளுவி, மன உருக்கத்துடன், கலப்பின்றி, அந்தரங்கமாகவாயினும் பயிரங்கமாகவாயினும், அந்தர் முகத்தில் எடுத்தல் படுத்தல் என்னும் இருவகை உச்சரிப்பில் ஒருவகைகொண்டு எந்தநேரத்தும் நடத்துதல் ஒன்று; அல்லாகுத் தஆலா அன்றி வேறுபொருள் ஒன்றும் இருதயத்துள் ஊடாடாதவண்ணம் தடுத்துக் காத்துக்கொள்ளுதல் ஒன்று; ஒரு பிரேதம் குளிப்பாட்டுபவனிடத்து எப்படித் தன்னை ஒப்புவித்திடுகின்றதோ அப்படி, மனதை ஞானதேசிகரிடத்து ஒப்புவித்திடுதல் ஒன்று; நன்மை தீமைகளாகிய இரண்டும் நாம் அநுபவித்தற்குக் கருத்தனாகிய அல்லாகுத் தஆலா இடத்திருந்தே வருகின்றன என்று அமைதியாயிருத்தல் ஒன்று; சுவர்க்கத்துச் சுகாநுபவங்களை விரும்புதலும் நரகத்தை வெறுத்தலும் ஆகிய இவ்விருகருமங்களையும் ஒழித்துவிட்டிருக்குதல் ஒன்று. ஆக இவ்வொன்பது கடமைகளையும் தாங்கள் வழுவாது செய்து வருவீர்களாயின், அல்லாகுத் தஆலாவை அணுகுதற்கு இக்கருமமே குறுகியவழியாகும்.

இது ஒப்பற்றதென்று அறிவீர்களாக" என்று அதிக அன்புடன் சொன்னார்கள். இவற்றை ஆயிஷா கேட்டு மகிழ்வடைந்தார்.

தாய்க்கும் பிள்ளைக்கும் நிகழ்ந்த சம்பாஷணை இம்மட்டில் முடிந்தது. இதனைத் தலைவாசலில் நின்று கேட்டுக்கொண்டிருந்த மன்ஸூறம் றபாஇ மனைக்குட்புகுந்து, தம் சகோதரியாகிய ஆயிஷா வை நோக்கி, தாம் வாசலில் நின்று கேட்டுக்கொண்டிருந்த விஷயத்தைப் பற்றி ஆச்சரியத்துடன் சொல்லி, அன்று இரவு கண்ட சொப்பனத்தையும், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் சொன்னவைகளையும் விவரித்துச் சொன்னார்கள். அவற்றைக்கேட்ட ஆயிஷா பின்னும் மனம் பூரித்து இருந்தார்.

இது நிகழ்ந்த நாற்பதாம் நாள் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் சொப்பனத்திற்சொன்னவாறு ஆயிஷா வுக்குக் கருமாரி கண்டது. சுற்றத்தாரும் அண்டை அயலில் உள்ளாருமான பலபெண்கள் ஆயிஷாவின் மகப்பேறுக்காக அவர் மனையில் வந்து குழுமினார்கள். ஆயிஷா வின் நாயகரும், சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தந்தையுமான சையிது அபுல் ஹஸன் அலியும், அவர்களைச் சார்ந்தார் பலரும் பெருமகிழ்வுடன் கூடி இருந்தார்கள்.

ஆயிஷா வுக்குக் கருமாரி நேரத்திற்கு நேரம் அதிகமானபோது பணிவிடைகாரப் பெண்கள் பலர் நெருங்கி நின்று, வாய்மொழியை எதிர்பார்த்து இருந்தார்கள். அங்கே வந்திருக்கும் மற்றப் பெண்கள் தத்தமக்கு ஏற்ற கருமங்களில் எச்சரிப்பாய் நின்றார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் பிரசவத்தின் தருணம் ஆய்விட்டது.

தருணம் ஆனவுடன், கைறுல் ஔலியா, கௌதுல் அகுலம், குத்புல் ஆலம், தாஜுல் வாஸிலீன், மஹ்பூபு றப்பில்

ஆலமீன், சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் சையிது அகு
மதுல் கபீறு ஹஸைனுற் றபாஇ றலியல்லாகு அன்கு
அவர்கள் ஆயிஷா ஆகிய தாயாரின் சிறப்பான வயிற்
றில் நின்று, உலகத்தைப் பொதிந்து மூடிக் கிடக்கும்
அஞ்ஞானமாகிய இருட் பிழம்பு அற்று மெய்ஞ்ஞான
சோதியே எங்கும் சொலிக்கக் கரிய கடல்வாய்க்கண்
இளம் ஞாயிறு உதயமானாற்போலப் பூமியில் அவதார
மாணுர்கள். தவத்திற் சிறந்த ஒளலியாக்களுக்குக் கண்
ணிற் கருமணிபோலவும், மனிதர்க்கும் ஜின் களுக்கும்
நேர்வழிகாட்டுதற்குக் களங்கம் அற்ற முழுமதி யொன்று
வந்தாற்போலவும் நாயகமவர்கள் அவதரித்தபோது, சுவர்க்
கத்து மாதர்கள் மலர்மாரி பெய்தனர்; வானவர் வாழ்த்
தா நின்றனர்; பூலோகத்து மனிதரும் ஜின் களும் களிகூர்ந்
து துதித்தனர்; விலங்குகளும் பறவைகளும் சோபனங்கூ
றின. அக்காலத்தில் நாயகமவர்கள் அவதாரமான தன்மை,
இறாக்கு என்னும் மனையினிடத்து, பதாயிகு ஆகிய அகலி
லே வேதசாரம் ஆகிய நெய்யைவிட்டு, மோக்ஷ வீட்டிற்
கொண்டுசேர்க்கின்ற ஒரு மொழியாகிய கலிமா என்னும்
திரிபோட்டு, அத்திரியில் தீன் என்னும் சுடரைக் கொளுத்
திவைத்த ஒரு தீபம் பிரகாசித்தாற் போன்றது.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்
லாகு அன்கு அவர்கள் அவதாரமான காலம்:— ஹிஜ்றத்து
* ஐஞ்ஞூறும் ஆண்டு. வானம் அளவும் ஒரு மலைக்குவட்
டிற்கொளுத்திவிட்ட பேரொளித் தீபம்போல நாயகமவர்
கள் அவதாரமானபின், பேறுகாலத்துச் செய்யும் ஒழுங்
குகளும், சடங்குகளும் செய்யப்பட்டன. தந்தை தாய்
ஆகிய இருவரின் கிளையார்களும் ஒருங்கு கூடியிருந்து சந்
தோஷங் கொண்டாடினார்கள். பிறந்த குழந்தைக்கு அப்

---

* இன்ன மாதம், இன்ன திகதி, இன்ன நாள், அவதாரமா
னதென்று பூர்வக் கிரந்தத்திற் குறிக்கப்படவில்லை.

போது செய்யத்தக்க கருமங்கள் அனைத்தும் செய்து, தாயார் ஆயிஷா மகளை மடிமீது வைத்து அமுதூட்டினர்.

பிறகு, நாயகமவர்களுக்கு நாமகரணஞ்செய்வதற்காக எல்லாருங் கூடியிருந்து, முன் அல்லாகுத் தஆலா வும் பின் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களும் சொன்ன, வண்ணம் "அகுமதுல் கபீறு" என்று பெயரிட்டு அழைத்தார்கள். அன்று முதற்கொண்டு இந்தத் திவ்விய திருநாமம் உலகத்தார்க்குக் கிடைத்தற்கு அரிய மந்திரம் ஒன்று வாய்த்ததுபோலாயிற்று. உடலைப்பற்றி நின்று உலைத்து வருத்தும் எல்லா நோய்களுக்கும், உள்ளத்தில் வேரூன்றியிருந்து ஊனை உருக்கி உடலை வாட்டிக் கொல்லுதற்குக் காரணமாயுள்ள தீராக் கவலைகளுக்கும், வேறு வகையான தீமைகள் அனைத்திற்கும் இத்திருநாமமே மருந்தும் ஆயிற்று.

பிதா மாதாக்கள் என்னும் இருவர் ஆவிகளையும் ஒரு உடற்கண் வைத்தாற்போலப் பாவித்து, கண்ணுறை மணியைக்காப்பதுபோலப் பிள்ளையைக் காத்துச் சீராட்டி வளர்த்தார்கள். வானத்தில் தோற்றிய இளம் பிறை நாளுக்கு நாள் வளர்வதுபோல நாயகமவர்கள் வளர்ந்து வந்தார்கள்.

அவதாரம் முற்றிற்று.

---

4-ம் அத்தியாயம்.

## கல்வி கற்றது.

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் கல்வி பயின்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— ஸைது அலி.]

குபிர் என்னும் இருட் போர்வையால் மூடப்பட்டிருந்த இவ்வுலகம் ஞானவெளிச்சம் பெற்று விளங்கும் பொருட்டு நபியாய் வந்த முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களுக்குப் பௌத்திரராகிய சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தந்தையும் தாயும் சுற்றத்தாரும் ஆகிய அன்புடையவர்களால் உயிர்போலக் கருதப்பட்டு, அல்லாகுத் தஆலாவின் பேரருள் கொண்டு வளர்ந்தார்கள். செவியிற் றொள்கின்ற மனிதராதிப் பலவகைப் பிராணிகளுக்கும் பரம ஆநந்தம் பழுத்தாற்போல உள்ளங்குளிர்ந்து உவப்புண்டாம்படிக்கும், துஷ்டப் பிசாசுகள் வெகு தூரத்திற்சென்று ஒதுங்கியடங்கும்படிக்கும், மாணிக்கத்தாலான மலர் ஒன்றில் நறுமணம் உண்டானாற்போல நாயகமவர்களின் அழகிய திருவாயில் மழலைமொழிகள் விளங்கத் தொடங்கின. அம்மழலை மொழியை வானவரும் விரும்பிச் செவிசாய்ப்பார்கள். அதைக் கேட்டுக் களிகூர்தற்கு அநேகர் அவாக்கொண்டிருப்பார்கள். இவ்வகை மழலை மொழி வழங்குவதோடு நாயகமவர்கள் சிறடி யெடுத்துவைத்து நடைபழகுதற்கும் ஆரம்பித்தார்கள்.

நாயகமவர்கள் நடைப்பழக்கமுற்று நடக்கத் தொடங்கின காலத்து, வானத்து மலாயிக்கத்துகள் கண்ணை இமைகாப்பதுபோலக் காக்க ஆரம்பித்தார்கள். உலகத்து மனிதர்கள் தங்கள் கண்ணுறை மணியேயென்றும், சுற்றத்தார் தம் உயிரேயென்றும் பேணி, உவந்திருந்தார்கள். அக்காலத்தில் நாயகமவர்களுக்குப் பிராயம் நான்காயிற்று. அவர்கள் அவதரித்தது முதற்கொண்டு நான்கு வருடங்களும், நான்கு மாதங்களும், நான்கு நாட்களும் ஆன சுபவேளையில் வித்தியாரம்பஞ் செய்விக்கக் கருதி எல்லாரும் சூழ்ந்திருந்து அவ்வூரில் உள்ள ஸைகு அலி என்னும் சிறந்த கல்விமான் இடம் நாயகமவர்களை ஓதவைத்தார்கள். வானத்து மலக்குகள் மகிழ்ச்சி கற்கவும், பூமியின் கண்ணுள்ள மனிதர்கள் ஆசாரங்களைக் கற்கவும், தீனுல் இஸ்லாம் என்னும் மார்க்கத்தார் வஹ்தானியத்து என்னும் ஒருமைப்பாடு இதுதானென்று கற்கவும், பகைவர்கள் அறிவைக் கற்கவும், அடைந்தார் யாரும் பரிசுத்தம் இதுதானென்று கற்கவும், என்றைக்கும் அருகில் இருப்பார் யாரும் மனத்தெளிவைக் கற்கவுமாக, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றவியல்லாகு அன்கு அவர்கள் அவ்வாசிரியரிடத்திருந்து நிகரின்றிக் கல்வி கற்றுவந்தார்கள்.

நாயகமவர்கள் முந்தி, அல்லாகுத் தஆலாவின் திருவசனமாய், இம்மை மறுமைகள் இரண்டிற்கும் இன்றியமையாச் சாதனமாய், முன்னிருந்த மூன்று வேதங்களின் உட்பொருள் முழுதும் ஒருங்கு அமைந்ததாய், நம் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகி வஸல்லமவர்களுக்கு இறங்கிய நான்காம் வேதமாகிய குர்ஆன் முழுவதையும் ஓதிமுடித்தார்கள். அதன் பின், எழுத்துவிதிகளும், அவற்றின் பாகுபாடுகளும் அமைந்த ஸறுபு என்னும் நூலும், சொற்களுக்குரிய இலக்கணங்களும், அவற்றின் முறைமைகளும் ஒருங்கமையப் பெற்ற நகுவு என்னும் நூலும், எழுத்தும்

அசையும் சீரும் தளையும் அடியும் அவற்றின் பாகுபாடுக ளும் அமைந்த கவி செய்தற்கு இன்றியமையாததான அ ரூலு என்னும் நூலும், எதுகைபாதித் தொடை விகற்பங் களை உணர்த்தும் கவாபி என்னும் நூலும், தன்மை உவ மை உருவகம் தீவகம் என்னும் நான்கின் அடியாக இய க்கப்பட்ட நிலைக்களத்துப் பிறக்கும் அணியிலக்கணத் திற்கு உரிய பதீஉ என்னும் நூலும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளையும், பொருள் நிலை பொருட்கோள் என்பன வற்றையும் விரித்துணர்த்தும் மஆனீ என்னும் நூலும், பதம் பொழிப்பு கருத்து விசேடம் என்னும் நான்கு வகையாக எடுத்துக் காட்டும் உரையிலக்கணங் கள் அடங்கிய பயானி என்னும் நூலும், விடயங்களின் காரண காரியங்களை நிரூபித்தற்குச் சாதனமான தருக்கத் தின்பாற்பட்ட மன்திகு என்னும் நூலும், இயற் சொல் திரி சொல் திசைச் சொல் என்பன இன்னின்னவை, வெ ளிப்படைச் சொல் குறிப்புச் சொல் வழக்குச் சொல் இன் னின்னவை என்று சொற்பகுதிகளை விளக்கும் இலக்கிய மாகிய லுகத்து என்னும் நூலும் ஆகிய எல்லாவற்றையும் ஐயந்திரிவின்றித் தெளிவுறக் கற்றுத் தேறினார்கள்.

இவை கற்றபின் அல்லாகுத் தஆலா வின் திருவசனமா கிய பரிசுத்தமான குர்ஆன் வேதத்திற்கு அதன் அகப் பொருள் புறப்பொருள் அனைத்தும் விளங்க விரித்து எழு தப்பட்ட வியாக்கியானங்களாகிய பலவகை தப்ஸீர் களை யும், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகி வ ஸல்ல மவர்கள் தங்கள் உம்மத்துமார் கடைத்தேறும் வண்ணம் அருளிய திருவாய் மொழியாகிய ஹதீது கள் அடங்கிய பல நூல்களை யும் தெளிவுற ஓதிமுடித்து, விதி விலக்குகளும், நன்மை தீமைகளும், கடமைப் பாடானவைகளும், அவை அல்லா தனவும் அடங்கிய இஸ்லாம் மார்க்கத்துக் கட்டளை நூலாகி ய பிக்ஹும், இஸ்லாம் மார்க்கத்து ஒவ்வொரு விஷயத்தி

னும் நிருணயங்கொள்ளுதற்கான அறிவுகள் பொலிந்து வி
ளங்கும் அகாயிது, அல்லாகுத் தஆலா வை இன்னபடியென்
று அறிந்து அவனையே உண்மையாக்கி மற்றப் பிரபஞ்சத்
தோற்றங்கள் அனைத்தையும் இன்மையாக்கி அவனோடு
ஒன்றுபடுதலாகிய வஹ்தானிய்யத்து என்னும் ஒருமையில்
தரிபடுதற்கு ஆன விஷயங்கள் எல்லாம் பொதிந்த தஸவ்வுபு
என மூன்றுவகைப்பட்டு, இஸ்லாம் மார்க்கத்திற்கு இன்றி
யமையாததாய் இருக்கும் முக்கியக் கல்வி முழுவதையும்
குற்றந்தீரக் கற்றுத் தெளிந்தார்கள்.

அதன்பின், இலக்கக் குறிகளும், தானவிகைகளும்,
தொகுத்தல், பிரித்தல், பெருக்கல், கழித்தல் என்னும் இ
வைகளும், இவற்றின் பாகுபாடுகளும் அமைந்த கணித
சாஸ்திரமாகிய ஹிஸாபு, எழுவகைப்பட்ட தாதுவும், பத்
துவகைப்பட்ட நாடியும், அவற்றின் வேறுபாடுகளாலா
கும் மூன்றுவகைப் பிணிகளும், அவற்றிற்கு ஏற்ற மருந்
து வகைகளும் அடங்கிய வயித்திய சாஸ்திரமாகிய திப்பு
என்னும் சாஸ்திரங்களையும், இவையன்றி இன்னும் இ
வ்வுலகீக விஷயங்களுக்கு வேண்டுமான வேறு கல்விகளை
யும் கற்றுத் தேறினார்கள்.

நாயகமவர்கள் கற்கவேண்டுமான கல்வி இனி இல்லை
யென்னும் வரையும் கற்றார்கள். உலகத்தில் உள்ள இல்மு
என்னும் கல்வி அவ்வளவும் நாயகமவர்களின் கல்பு என்
னும் இருதயத்தையே இருப்பிடமென்று அங்கே சென்
று தங்கின. கல்வி வளருந்தோறும் நாயகமவர்களுக்கு நல்
லொழுக்கம், நற்குணம், நன்னடக்கை, நற்புகழ் எல்லாம்
கூடவளர்ந்து வந்தன.

கல்விகற்றது முற்றிற்று.

5-ம். அத்தியாயம்,

## தாயிறூத் தகர்த்தது.

—(*)—

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலி
யல்லாகு அன்கு அவர்கள் ஸைகு அலி யிபுனு காரி என்னும் ஆசிரி
யரிடத்துக் கல்வி பயின்றுவரும் காலத்து, ஒரு விருந்துச் சபை
யில் சங்கீதம் பாடி தாயிறு அடித்த பாணனுடைய தாயிறவைப் ப
றித்து உடைத்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:—
மேற்கூறிய ஸைகு அலி யிபுனு காரி.]

சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்
லாகு அன்கு அவர்கள் தங்கள் ஆசிரியரான ஸைகு அலி என்
போரிடத்து இருந்து கல்வி பயிலும் காலத்து, தங்கள் சி
ஷியகாலத்து ஒவ்வொரு நேரத்தையும் கல்விப்பழக்கத்திலே
யே கழித்துவந்தனர்கள். தெண்ணீர் நிறைந்துள்ள குளிர்ந்
த ஒரு தடாகத்து வண்டினம் ஒலிக்கும் அழகிய பூக்கள்
பலவுள்ளும் சிறந்த தாமரைமலர் போல, ஸைகு அலி யின
து கழகத்தில் கல்விபயிலும் மாணாக்கர் பலருள்ளும் நா
யகமவர்களே மிகச் சிறப்புற்று விளங்கினார்கள். நாயகமவர்
களின் மாசற்ற மனம், அகன்று விரிந்த பெரிய கடலிடத்
துச் சென்று நீர் பருகி நிறைந்த கரிய மழைமுகில் போ
லக் கல்வியில் நிரம்பித் ததும்பிற்று. அவர்கள் கருணை நி
றைந்த கண்கள், அறிவு சிறிதுமின்றி அலமே திரியும்
மனிதர் பெறுந்தோறும் விம்பிய அறிவாளராகும் தன்
மையுள்ள நோக்கம் அமைந்து சிறந்தன. நாட்கு நாள் வ
தேறுவதால், நாயகமவர்கள் திருமேனி பேரழகுவாய்ந்து
அவயவ லக்ஷணங்கள் அவ்வளவும் பொலிந்து, பார்

பலர் கண்ணையும் கருத்தையும் கவருந் தன்மையில் சொலித்தது. வானத்து மலாயிக்கத்துகள் பலர் நாயகமவர்களைச் சூழ்ந்து என்றைக்கும் மெய்க் காப்பாளராய் நிற்பார்கள். சராசரங்கள் அனைத்தும் தீமைகள் அணுகாவண்ணம் அவர்கள் திருவடிகளில் அடைக்கலம் புகுதற்கு அவாக் கொள்ளாநிற்கும். உயர்ந்த மலைகளையும் பொடித்துக் காற்றிற் பறத்தும் வலிவுள்ள ஜின்களும், துஷ்டத்தனஞ்செய்கின்ற கொடிய பிசாசுகளும், நாயகமவர்களின் அஹ்மதுல் கபீறு என்னும் மந்திரம் போன்ற நாமத்தைச் செவியிற் கேட்டக்கால், அஞ்சி வெருண்டு அதிகத் தூரம் அகன்று ஓடாநிற்கும். தூரந்துலையிற் சஞ்சரிக்கும் பெரியோர் பலர் வந்து வந்து நாயகமவர்களின் திருவடிக் தாமரைகளைத் தொட்டு முத்தங் கொள்ளாநிற்பர். நாயகமவர்கள் இவ்வாறு சிறப்பு வாய்ந்து, சகல கலைகளிலும் வல்லவராய் விளங்கினார்கள்.

நாயகமவர்கள் இவ்வாறாகக் கல்விகற்கும் காலத்தில், பதாயிகு நகரத்திலுள்ள தனிகருள் ஒருவர் அவ்வூர்ப் பிரதான மனிதர் சிலர்க்கு விருந்தொன்று கொடுத்தற்கு எண்ணி, விருந்துண்ண வரும் தினம் இதுவென்று குறிப்பிட்டு அங்குள்ள சில ஒலிமார்க்கும், மஷாயிகு மார்களுக்கும், நாயகமவர்களின் ஆசிரியரான சைகு அலிக்கும், அவர்களிடத்துக் கல்வி பயிலும் பிள்ளைக்கார்களுக்கும் தெரிவித்து, நீவிர் அனைவரும் அன்றைத்தினம் என் வீட்டுக்கு விருந்துண்ண வரல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்; அதற்கு அவர்களெல்லாம் சம்மதித்திருந்தார்கள்.

விருந்துக்கு எனக் குறித்த நாள் வந்தபோது அந்தத் திரவியவந்தர் தமது மனையை அலங்கரித்து, சித்திரமான விரிப்புகள் விரித்து, தழுவணைகள் பல அங்கங்கே போட்டு வெகு சிறப்பாக்கி, பின், உயர்ந்த சோறு கறிக

ளும், தித்திப்பான பலகாரங்களும், இனிமையான கனிவர்க்கங்களும், பலவிதத் தீம்பானங்களும், மற்றும் விருந்துக்கு வேண்டுமான பலவும் செய்து தயார் பண்ணிக்கொண்டு, முன்னமே தெரிவித்திருந்த ஒலி கள் மஷாயிகுகள் வர்த்தகர்கள் அனைவரையும் ஆளனுப்பி அழைத்தார். விருந்துக்கு அழைக்கப்பட்ட எல்லாரும் அவர் மனையிற் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களுடன் நாயகமவர்களுக்கு ஆசிரியராயிருக்கும் சைகு அலியும் அவர்கள் மாணாக்கர் எல்லாரையும் அழைத்துக்கொண்டுபோனார்கள். அம்மாணாக்கர்களுடன் நாயகமவர்களும் விருந்திற்குப் போயிருந்தார்கள்.

விருந்துண்ணவந்த எல்லாரும் முறைமைப்படி பந்தியிருந்தபின், உண்பன தின்பன பருகுவன அனைத்தும் கொண்டுவந்து பரிமாறப் பட்டன. அனைவரும் அவற்றை உண்டும் தின்றும் பருகியும் உள்ளங் குளிர்ந்தார்கள். பின், சந்தனம், மலர், தாம்பூலம் அனைத்தும் கொடுக்கப்பட்டன. அவற்றைப் பெற்ற விருந்தாளரெல்லாம் இனிய உணவு முதலானவற்றை அநுபவித்த சந்தோஷத்தாற் பூரித்து, முகம் மலர்ந்து உட்காந்திருந்தார்கள்.

அந்த விருந்துச் சபையில், நரம்புகள் பலவற்றைக் கொளுவி நான்கு வகையில் அமைத்து இனிய ஓசையைத் தராநிற்கும் வீணையை வாசித்து, மதுரமுள்ள தேன் ஒழுகிறாற் போலச் சங்கீதம் பாடுகின்ற இன்னிசைக்காரன் ஒருவனும் அழைக்கப்பட்டிருந்தான். விருந்து வீடுகளில் அவ்வித ராகம் பாடுவோரை அழைத்து வைத்துச் சங்கீதம் கேட்பது அந் நாட்டு வழக்கம்.

உண்டு தின்று தீர்ந்து எல்லாரும் இருக்கும்போது, அவ் விசைபாடுவோன் தன் வீணையைச் சுதிகூட்டி, கையிலிருக்கும் தாயிரு என்னும் பறையைக் கொட்டி வாசிக்கத்

தொடுத்தான். இசைபாடுதலிற் சிறிதும் வழுவாது யாழை மீட்டி, தாயிரூவையும் அடித்து இனிமையான பாட்டுக்களைப் பாடினான். அவன் பாடும் இனிய குரலோசையும், அதற்கேற்ற வீணாகானமும், பாட்டுக்களின் நுண்மையான உட்பொருளும் அந்தச் சபைக்கண் இருந்தார் எல்லாரையும் உருகச் செய்தன. அவர்கள் உள்ளம் உருகி, உயிர் உருகி, உடலும் உருகிப்போமபடி ஆயிற்று. அங்கே வந்திருப்பவர் எல்லாரும் சாமானியர் அல்லர்; அல்லாகுத் தஆலாவுடைய இஷ்கு என்னும் பேராசை கொண்ட பெரியோர்கள். ஆகலால், அவன் செய்யும் வீணாகானம் அவர்களைப் பேரின்ப ஆநந்தத்திற் கொண்டு சென்றது. அதனால் அவர்கள் தத்தம் இருதயங்களையெல்லாம் அப்போது அல்லாகுத் தஆலாவின் பக்கத்தே திருப்பிக்கொண்டார்கள். அந்த நேரத்தில் எல்லாரும் விருந்துண்டு தீர்ந்தபடியால், சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்கள் ஆசிரியராகிய சைகு அலியின் செருப்புக் கழற்றி வைத்திருக்கும் இடத்தில் அதற்குக் காவலாய் உட்கார்ந்திருந்தார்கள்.

இன்னிசைக்காரன் சங்கீதம் பாடும்போது பரம இசையின் ஆநந்தத்தில் மனங்களைத் திருப்பிய எல்லாரும் அமைந்த சிந்தனையோராகள், உள்ளம் என்னும் அகலிலே மனவுணர்ச்சியாகிய நெய்யைவிட்டு நிரப்பி, லாஇலாஹ இல்லல்லாகு என்னும் திக்ருகிய தியானத்திரியைத் திரித்துப் போட்டு, அத்திரியில் அல்லாவின் இஷ்கு என்கின்ற பரம இச்சையாகிய சுடரைக் கொளுத்திவிட்டார்கள். அச்சுடர் அத்திரியிற் பற்றி நின்று எரியத் தொடங்கிற்று. மனவுணர்வை வசீகரித்துத் தன்வயப் படுத்தும் திண்பொருள் அமைந்த பாட்டுக்களை இன்னிசைக்காரன் பாடுபிடத்து, அப்பெரியோர்களின் உள்ளத்தில் பரம இச்சை என்கின்ற அக்கினி மூண்டு கொழுந்துவிட்டு எரிவது இயற்கைதானே.

அவ் வின்னிசைக்காரனுடைய இனிய ஓசைகள் பரம இச்சையாகிய சுடர் பற்றியெரியும் திக்று என்னும் திரியைத் தூண்டாநிற்ப, அச்சுடர் மழுங்காமல் மேலும் மேலும் எரிந்து பிரகாசித்தது. அதனால், எல்லாரும் தம்மை மறந்து, அவ்விச்சையால் உருகி, பெருக்கெடுத்து நிற்கும் ஆநந்தக்கடலில் மிதந்து அமிழ்ந்தினார்கள். தாமும், ஏனைப் பிரபஞ்சங்களும் உண்டென்பது அவர்கள் உள்ளத்தில் சிறிதும் இல்லை. எல்லாவற்றையும் மறந்து, பேராநந்தம் தரும் அப்பரம இச்சைக்குள் முழுகிக் கிடந்தார்கள். அப்போது அவர்கள் நிலை, சாக்கிரமின்றிச் சொப்பனத்தையும் கடந்த சுழுத்திநிலையா யிருந்தது. ஆதலால் அவர்கள், உணர்ச்சி யற்றுச் சன்னதங் கொண்டாற் போலத் தலை தளம்பி ஆடி அசையத் தலைப்பட்டார்கள்.

இசை பாடுகின்றோனால் உண்டாம் இனிய வோசையால் எல்லாரும் ஆடி யசைந்துகொண்டு, இச்சையாகிய ஒரு உணர்வேயன்றி வேறே யுணர்ச்சி சிறிது மின்றிக் கிடக்கின்ற அந்நேரத்தில், தங்கள் ஆசிரியரின் செருப்பிற்குக் காவலிருந்த நல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் இருப்பைவிட்டுப் பறந்து எழுந்து இளஞ் சிங்கம் ஒன்று பாய்வதுபோல அந்த இன்னிசைக்காரனிடத்துப் பாய்ந்து, அவன் கையிற் பிடித்திருக்கும் தாயிறு வைப்பிடுங்கித் தரையில் அடித்து உடைத்துத் தூரத்தில் எறிந்துவிட்டு, தாங்கள் இருந்த இடத்திற் போய் உட்காந்துவிட்டார்கள்.

நாயகமவர்கள் கடுஞ் சினங் கொண்டு தாயிறு வை உடைத்தமாத்திரத்தில், பாட்டுப் பாடுதலையும், வீணைவாசித்தலையும் அவன் நிறுத்தினான். ஆதலால், அங்கு நிகழ்ந்த இன்பமான சத்தம் நின்று போயிற்று. பரம இச்சையாகிய அக்கினிச் சுடர் பற்றியெரிந்த திக்று என்னும் திரியைத்

ஆண்டிநின்ற இன்னிசைச் சந்தம் திடீரென நின்றபோது, சுழுத்திநிலையிற் படிந்துகிடந்த அவர்கள் அனைவரும் உணர்ச்சி பிறந்து அவ்விச்சையை மறந்து சாக்கிரநிலையில் ஆனார்கள். இவ்வாறு ஆனதால், அப்போது அவர்களுக்கு உண்டான சினம் ஆறத்தக்கது அன்று. ஒருவரை ஒருவர் பார்த்து "நாம் நின்ற நிலையிலிருந்து மாறுதற்கு இவ்வாறு செய்தவர் யார்?" என்று விசாரித்தார்கள். உணர்ச்சி அற்றுக்கிடந்த அவர்களுக்கு யாது தெரியும்! நிகழ்ந்ததை ஒருவரும் அறியவில்லை. பின் அந்த இன்னிசைக்காரனே அவர்களை நோக்கி, நிகழ்ந்த காரியத்தைச் சொல்லிக்காட்டினான்.

தாயிருவை இவர் பறித்துத் தகர்த்து எறிந்தார் என்று அவன் சொன்னபோது, அவர்களுக்குப் பிறந்த சினம் கொஞ்சமல்ல. அவர்கள் கண்களில் அக்கினிப்பொறி தெறிப்ப நாயகமவர்களைச் சினந்து பார்த்துவிட்டு; பின் சைகு அலி யை நோக்கி "சைகே, பார்த்தீரா? உம்மிடத்துக் கல்விகற்கும் அந்தச் சிறுமாணாக்கர் இவன் அடித்த தாயிருவைப் பிடுங்கி உடைத்து எறிந்தனராம். அதனை ஏன் என்று நீர் கேட்பீராக" எனச் சொன்னார்கள். அதற்கு சைகு அலி "அது சரிதான். நீவிரே என் மாணாக்கரான அச்சிறுவரை 'ஏன் அப்படிச்செய்தீர்' என்று கேளுங்கள். அதற்கு அவர் நேரான மறுமொழி தந்தால் ஆகட்டும். இல்லையாயின் நானே கேட்கின்றேன்" என்று பிரதி சொன்னார்கள். இதனைக் கேட்ட அவர்கள் அனைவரும் சுல்தானுல் ஆரிபீனவர்களைச் சினந்த பார்வையாகப் பார்த்துக் கீழ்வருமாறு கேட்கின்றார்கள்:—

"சிறுபிள்ளாய், நாங்கள் எல்லாரும் மூழ்கிக் கிடந்து இன்பம் நுகரும்பொருட்டு எங்கள் உள்ளம் என்னும் ஊற்றுக்கண்களில் நின்று அல்லாகுத் தஆலா வின் இஷ்கு என்கின்ற பேராநந்தப் பிரவாகம் பெருகி வழிதற்குக் கரு

வியாயிருந்த தாயிருவை, நீர் ஏன் பிடுங்கி உடைத்து எறிந்தீர்? அதற்குக் காரணம் என்ன?" என்று உக்கிரத்தோடே கேட்டார்கள். இக் கேள்விக்கு நாயகமவர்கள் மலர்வாய்திறந்து "நான் செய்த அக்கருமத்தின் காரணம் இன்னது என்று நீவிர் அறிதல் வேண்டுமாயின், அவ் வின்னிசைக்காரனையே விளித்து 'உன் உள்ளத்தில் யாது கருதினை?' என்று கேளுங்கள்; அப்போது வெளிவரும்" என்று மறுமொழிகொடுத்தார்கள். இவ்வாறாக நாயகமவர்கள் சொன்ன இச் சொல்லை அவர்கள் கேட்டு, நன்றென்று சற்றே சினந் தணிந்து, இசைபாடுவோனை விளித்து "நீ இன்னிசை நிகழ்த்துகையில் உள்ளத்தில் யாது கருதினை? மறைக்காது சொல்" என்று கேட்டார்கள். அவர்கள் இவ்வாறு கேட்ப, அவ் வின்னிசைக்காரன் சொல்கின்றான்:—

"அறிவின் மிக்க பெரியோர்களே, நேற்று இவ்வூரில் இன்ன வீதியில் ஒரு விருந்து நிகழ்ந்தது. அவ்விருந்திற்கு வந்து கூடியிருந்தார் அனைவரும் கள்ளுஞ் சாராயங்கள் குடிப்பதில் மேம்பாடுள்ளவர்கள். என்னையும் இசைபாடுதற்காக அங்கு அழைத்திருந்தார்கள். அவர்கள் விருந்துண்டு தீர்ந்தபின் கள்ளுஞ் சாராயமாதிப் பானவர்க்கங்களை அளவின்றிக் குடித்து, நான் இசைபாடத் தொடுத்தவுடன் ஆடியசைந்து உருண்டு புரண்டார்கள். அவ்வாறு அவர்கள் செய்தது அவர்கள் குடித்த குடிவெறியால் அன்றி, வேறல்ல. இப்போது இங்கே நிகழ்ந்த விருந்தில் நீவிரும் அவ்வாறு ஆடி யசைந்ததால் நேற்று அவர்கள் குடித்ததுபோலவே இவர்களும் குடித்து வெறிகொண்டிருக்கின்றார்கள் என்று உங்களை நான் எண்ணினேன். மதியற்ற நான் இவ்வாறு எண்ணித் தீருமுன் இந்தச் சிறுபிள்ளை என்மீது பாய்ந்து வந்து விழுந்து, தாயிருவைப் பிடுங்கித்

தகர்த்து எறிந்தார். இதுவேயன்றி நான் கருதினது வேறில்லை" என்றான்.

இதைக் கேட்ட அந்தப் பெரியோர்கள் எல்லாரும்: ஆ! இவன் நம்மை இகழ்வாகக் கருதினமையாலன்றோ! அவ்வாறு கருதின உள்ளக்கருத்தை இச்சிறுபிள்ளை உணர்ந்து அறிந்து இவ்வாறு செய்தனர். இது நியாயந்தான். இவர் மகா மகிமையுள்ளவர். இவ்விதம் நம்மைப் பேணிக் காக்கும் பெருங் குணமும் பேரழகும் வாய்ந்த இச் சிறுபிள்ளையன்றி, நம்மை ரக்ஷிப்பார் இனி வேறில்லை. இவருடைய திருவடிகளே இனி நமக்குத் தஞ்சமாயிருக்கட்டும். இனி இவர்பருவ காலத்தில் உலகத்திற்கு மேம்பாடுடையோர் ஆவார். இவரை மனிதர்கள் தொடர்வார்கள் என்று மனதாரச்சொல்லிவிட்டு, ஒவ்வொருவரும் நாயகமவர்களின் கரத்தைப்பிடித்து முத்தமிட்டுத் துதித்துக் கொண்டாடிப் புகழ்ந்து களிகூர்ந்தார்கள். பின்பு அந்த விருந்துச்சபை கலைந்தது.

தாயிருக் தகர்த்தது முற்றிற்று.

---

6-ம் அத்தியாயம்.

## மக்கா யாத்திரை.

———:O:———

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பரிசுத்தமான * மக்கா நகரத்திற்குச் சென்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— சைகு அஜீஜுல் பதாயிகியும், சைகு அபூ முகம்மது ஈஸாவும், சைகு யஃகூபிபுனு தற்றூறும்.]

---

* மக்கா நகரத்திற்குச் சென்றது என்று பொதுப்படச் சொன்னபடியால், இவ் யாத்திரை ஹஜ்ஜு செய்வதற்குச் சென்றது அன்று. இவ்வாலாறு கூறுமிடத்து ஹஜ்ஜின் கடமைகளைச் செய்ததாகக் கூறாமையால், இது ஹஜ்ஜாக மாட்டாது. பிற்கா

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல் லாகு அன்கு அவர்கள் இல்மு கள் எல்லாவற்றையும் கற்று முடித்து, அதன்பின் அல்லாகுத் தஆலா வை வணங்கும் இபாதத் தில் முயன்று அஃதே சிந்தனையாய் இராப்பகல் வேறு எவ்வித எண்ணமும் இன்றி, வணக்கத்தையே நித் தியகருமமாக்கிக்கொண்டு பதாயிகு நகரத்தில் இருந்தார் கள். அல்லாகுத் தஆலா வின் வழிபாட்டிலும், உயிர்கள் மாட்டுள்ள இரக்கத்திலும், மனத்துடன் போராடாநிற்கும் அவல நினைவுகளால் உண்டுபடும் உலக இச்சையை அடக் குதலிலும், பெரும்பாலும் மனிதரோடு கூடியிராமல் தனி மையா யிருத்தலிலும், தம்மை அடைந்தார்க்கு நேர்வழி பெறும்படி நல்லறிவு கொளுத்துதலிலும் சிறு பிராயத்தி லேயே இணையின்றிச் சிறந்தார்கள். பின்பு நாயகமவர்க ளுக்குப் பாலியப்பருவம் வந்துவிட்டது.

பாலியதிசை யடைந்தபின் பேரறிவும், பெருங்குண மும், பேரழகும் முதிர்ந்து, காண்பவர் மனங்களைக் கவ ரும் தன்மையில் ஆனார்கள். அக்காலத்தில்தானே அல்

---

லத்தில் தங்கள் முரீதீன் களாகிய சிஷ்யர்கள் அநேகர் புடை சூழ ஹஜ்ஜு செய்ய மக்கா வுக்குப் போனார்கள் என்றும், மக்கா வுக்குள் நுழையும்போது எல்லார் கைகளிலும் தாயிறு வைப்பி டித்து அடித்துக்கொண்டு நுழைந்தார்கள் என்றும், ஊர்க்குள் தா யிறு அடிப்பதை மக்கா வின் ஷரீபு தடுத்தார்கள் என்றும், நாயக மவர்கள் சினங்கொண்டு தங்கள் கையிலிருந்த தாயிறு வை ஆகா யத்தில் எறிந்தார்கள் என்றும், அப்போதே கதுபா வின் மதிட் சு வர்மேல் நான்குபக்கத்தும் தாயிறு வின் சத்தம் எழும்பிப் பே ரொலியாய் ஒலித்தது என்றும், அதுகண்ட ஷரீபு அஞ்சி நடுங்கித் தடுக்காது நிறுத்தினார்கள் என்றும், பின்பு நாயகமவர்கள் தாயிறு முழக்கத்துடன் கதுபா வை வலம்வந்து ஹஜ்ஜை நிறைவேற்றினார் கள் என்றும் சில கிரந்தங்களில் தனிப்பட எழுதப்பட்டிருக்கின்ற து. ஆதலால், அதுதான் ஹஜ்ஜு யாத்திரையாகும். இந்த வர லாறு எனக்குக்கிடைத்த முதற்கிரந்தத்தில் இல்லை.

லாகுத் தஆலா வின் பேரருள் நிறையப் பெற்றுக் கொண்டதால், உலகவழக்கத்திற்கு மாற்றமான "கவாறிக்குல் ஆதாத்து" என்னும் அற்புதங்களாகிய கருமாத்துகள் சிறுக்ச் சிறுக நிகழத்தொடங்கின. மலுஹறுல் விலாயத்து என்னும் ஊற்றுக்கண் திறந்தது. விரும்பிச்செய்யப்படாமல் தம்மில்தாமே அற்புதங்கள் நிகழ்வதை நாயகமவர்கள் பெரிதென்று எண்ணி அவற்றை மதித்துப் பாராட்டவில்லை. தவம் என்னும் வித்தை நட்டி, அதற்கு தௌக்கு என்னும் பேரின்பத் தண்ணீர் ஊற்றி; பாவந்தரும் அவலவினைவுகளான களைகளைப்பிடுங்கி, நட்டினவித்தைப் பேணிக்காத்து வளர்த்துவந்தார்கள். கற்ற கல்வியைக்கொண்டு எவ்விதப்பாடுபட்டுத் தவஞ்செய்யினும், இன்னநிலைமையைக் கடைப்பிடித்து நில் என்று நிறுத்துதற்கு ஒரு ஞானதேசிகர் வேண்டும் ஆதலின், முந்தி ஒருவரைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம் என்று நாயகமவர்கள் கருதி, வாஸ்து நகரத்திருந்து அங்கேவந்து குடியிருக்கும் சைகு அலாவுத்தீன் அலியுல் வாஸ்தி என்னும் பெரியோரிடத்து இறுஷாது பெற்றுக்கொண்டார்கள். அந்தப் பெரியோர் கொளுத்தின மெய்ஞ்ஞானச் சுடர் நாயகமவர்களின் இருதயத்தில் பிரகாசித்துக்கொண் டிருந்தது. அதனால், அநேகர் நாயகமவர்களிடத்து முரீதாக வேண்டும் என்று விரும்புறார்கள்.

நாயகமவர்கள் இறுஷாது பெற்றபின், அவர்கள் தங்களிடம் நேர்வழி பெறுதற்கு வருவோர் பலர்க்கு நல்லறிவு கற்பித்து நேர்வழி காட்டுதற்கு ஆரம்பித்தார்கள். மனிதருக்கு நேர்வழி காட்டுதல் மாத்திரம் அன்று; தங்கள் திருவாய்மொழி கொண்டும், கருணை நிறைந்த கண்களின் பார்வைகொண்டும், அவரவர்க்கு உரிய நோய் முதலான பல துன்பங்களையும் நீக்குவார்கள். பதாயிகு நகரத்து சையிது அபுல் ஹஸன் அலி யுடைய புத்திரர் சையிது அகு

மதுல் கமீறு என்னும் பாலியர் அல்லாகுத் தஆலாவின் அருள் பெற்றவர்; அவரால் மனிதர்கள் இம்மை மறுமைகளுக்கு வேண்டுமான பலவித நன்மைகளையும் அடைகின்றார்கள் என்று அங்கங்கே உள்ளவர்கள் வியந்து பேசத் தலைப்பட்டார்கள். இந்தப் பிரஸ்தாபம் எங்குஞ்சென்றது. இதைக் கேட்கும் மனிதர்கள் பல புறங்களிலும் இருந்து திரள் திரளாய் நாள்விடாமல் பதாயிகுக்கு வரத் தொடங்கினார்கள். அவ்வாறு வருபவருள் துன்பந்தீர வருவார்க்கு அவரவர் துன்பங்களைத் தீர்த்து, சந்தோஷத்தோடு போகும்படி அநுப்புவிப்பார்கள்.

இறுஷாது பெறுதற்கு நாட்டங்கொண்டு வருவோர்களை நாயகமவர்கள் ஒருவர் ஒருவராகத் தங்களுக்கு எதிரேயிருத்தி, அல்லாகுத் தஆலா வின் * தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது அஸ்மாக்களையும் அவரைப்பார்த்து ஓதி முடித்து: இவ் அஸ்மாக்களில் எது உன் உள்ளத்திற் பதிந்தது? என்று கேட்பார்கள். அதற்கு அவர்: ஒன்றும் பதியவில்லை என்று மறுமொழி சொன்னால், அத்தனை அஸ்மாக்களையும் மறுத்தும் திருப்பியோதுவார்கள். திருப்பி ஓதுமிடத்து அவ் அஸ்மாக்களுள் ஒன்று எதிரேயிருப்பவருடைய மனத்திற்பதிந்தால், அப்பதிந்ததற்கு ஏற்ற வகையில் அவர்க்கு உபதேசஞ்செய்து, அதற்குத்தக்க மந்திரங்களையும் போதித்து அநுப்புவார்கள். மூன்றுதரம் திருப்பித் திருப்பி ஓதியும் அஸ்மாக்களுள் ஒன்று மனத்திற் பதியாவிட்டால், நாயகமவர்கள் அவரைப்பார்த்து: நீயிதற்குப் பக்குவியல்லை; திருந்தமாட்டாய். அல்லாகுத் தஆலா நாடினால், திருந்துவன் போ என்றுசொல்லி அநுப்பிவிடுவார்கள்.

---

* தொண்ணூற்றொன்பது அஸ்மாக்கள் என்றும் கிரந்தபேதமுண்டு.

சுல்த்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் இவ்வாறு சிறந்து விளங்கும் காலத்து ஓரிரவு நித்திரைக்குப் படுத்திருக்கும் நடுச்சாமத்தில், மகத்துவமுள்ள மக்கா நகரத்திற்குப்போய் ககுபாவை வலம்வரல் வேண்டுமென்னும் வேட்கை அவர்கள் மனதிற் பெருகிற்று. இவ் வேட்கை மீறினபோது அவ்விராமுழுதும் நாயகமவர்கள் கண் மூடாமல் விழித்திருந்து, கிழக்கு வெளுத்து பஜ்று நேரம் ஆனவுடன் எழுந்து தொழுது முடித்து, மக்காவுக்கு யாத்திரை யானார்கள். ஏறிச் செல்லுதற்கு ஒரு வாகனமாவது, பசிக்குத்தின்ன ஒரு பலகாரமாவது, வழிச்செலவிற்கு ஒரு காசாவது, களைந்து உடுத்துதற்கு ஒரு மாற்றுவஸ்திரமாவது, கூடவருதற்கு ஒரு துணையாளாவது இல்லாமல், கால்நடையாய், வெறுங்கையாய், தன்னந் தனியாய், அல்லாகுத் தஆலா மீது வைத்த ஆசையைப் பெருக்காநிற்கும் கருத்த கம்பளியொன்றை மாத்திரம் முடிமுதல் அடிவரையும் போர்த்துக்கொண்டு, மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றுபொறிகளும் ஒன்றித்துநிற்க ஒருமுகங்கொண்டு தங்கள் வீட்டைவிட்டு வெளிப்பட்டார்கள்.

அகிலாண்ட கோடிகளை அமைத்து ஆள்கின்ற மகத்தான அல்லாகுத் தஆலா வைத் தொழுது அவன் வீட்டை வலம் வருதற்கு ஆவல்கொண்டு புறப்பட்ட நாயகமவர்கள், எங்கும் பரந்து கவிந்த இருட்கூட்டம் கலைந்து அலைகடலிற்சென்று அடங்கும்படி பொற்கொல்லன் உருக்கியடித்த பசும்பொற்றகடுபோல இளஞ்சூரியன் கீழ்த்திசைக்கண் தோன்ற அதன் கதிர்கள் பாயும் விடியற்காலத்தில் பதாயிகு நகரத்தின் ஆலயவீதிவழியே நடந்து சென்றார்கள். நாயகமவர்கள் அவ்வாறாகச் செல்லும்போது, அவ்வீதியில் உள்ள ஆலயத்தின் தலைவாசலில் அலி என்பவரும், யஃகூபு என்பவரும் உட்கார்ந்து, இருதத்துடைய ரகசியங்களை

யும் அதைச்சார்ந்த வேறு விஷயங்களையும் குறித்துச் சம்பாஷித்துக்கொண் டிருந்தார்கள். அவ்விருவரும் நாயகமவர்கள் கம்பளம் போர்த்துத் தனியே காலைநேரத்திற் புறப்பட்டுச் செல்வதைக் கண்டார்கள்.

கண்டபோது, அவ்விருவருள் யஃகூபு என்பவர் அலியோடு பேசுவதை நிறுத்திவிட்டு விரைந்து எழுந்து நாயகமவர்களைத் தொடர்ந்து போய்நின்று, பணிந்த மொழியுடன் "நாயகமே, தாங்கள் இந்தக் காலைவேளையில் எங்கே போவதற்காக நடந்துசெல்கின்றீர்கள்?" என்று கேட்டார். நாயகமவர்கள் அவரைத் திரும்பிப்பார்த்து "யஃகூபே, நான் இவ்வாறு ஒன்றியாய்த் தனித்து என் பாட்டனார் முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்கள் அவதாரமான மக்கா நகரம்போய், அல்லாகுத் தஆலா வின் வீடென்கிற இணையில்லாத கதுபா வை வலம் வருவதற்கு ஆசைகொண்டு போகின்றேன்" என்று பிரதி கூறினார்கள். யஃகூபு அதைக்கேட்டு "யா ஸையிதீ, அப்படியாயின், என் உள்ளமும் அதை விரும்புகின்றது. ஆதலால், தமியேனும் தங்கள் திருவடிகளைத் தொடர்ந்து கூட வருவதற்குத் தேவரீர் சம்மதித்து அருள்புரிதல் வேண்டும்" என்று நாயகமவர்களைநோக்கிச் சொன்னார். அதற்கு அவர்கள் "யஃகூபே, என்னைப்போல் நீரும் மன உறுதிகொண்டு அங்கே போவதற்கு விருப்புள்ளீராயின், உமக்கு நன்மாராயம் உண்டாகட்டும்; என்னோடு நடந்து வருவீராக" என்று கட்டளையிட்டார்கள். உடனே யஃகூபு மக்கா வுக்குச் செல்ல ஒருப்பட்டு, நாயகமவர்களைப் போலவே வெற்றாளாய், தமக்குரிய எல்லாவற்றையும் வெறுத்து அங்கிருந்தபடியே கூடத்தொடர்ந்து நடந்தார். நாயகமவர்கள் முன்னும், யஃகூபு பின்னுமாய், அல்லாகுத் தஆலா மீது வைத்த பேராவல் ஒன்றையன்றிப் பிறிது ஒன்றையும் விரும்பாமல் நடந்து சென்றார்கள்.

இருவரும் பூஞ்சோலைகள் சூழ்ந்த பதாயிகு நகரத்தை விட்டு வெளிப்பட்டு அதன் எல்லையைக் கடந்தபோது, காந்தக் கல் இழுக்குமிடத்து அதனோடு ஒட்டுதற்கு விரைந்து செல்கின்ற இரும்பு இழுபடுமாறு அவ்விருவரும் மக்கா நகரத்திற்குத் தாமாகவே இழுபட்டார்கள். நகரத்து எல்லையைக் கடந்து நாற்பது அடிகள் நடந்து எதிரே பார்த்தபோது, அவர்கள் கண்களுக்கு முன்னே மக்கா நகரத்துக் கதுபா வின் ஹரம் என்னும் அரண் தெரிந்தது. மனங்களிற் படிந்த மாசுகளை அகற்றித் தெளியச் செய்யும் கதுபா வின் ஹரத்தைக் கண்டமாத்திரத்தில் முக்தி யஃகூபு உள்ளாந்தடுமாறி, பின்பு, ஸையிது அகுமதுல் கபீரைப் பின்தொடர்ந்த தன்மையாலன்றோ நமக்கு இந்த ஆச்சரியமான காரியம் நிகழ்ந்தது! அதனால் நாம் ஒருவாறு பாக்கியமுடையோமேயாம் என்று களிகூர்ந்தார். இவ்வற்புதக் கருமம் அவர்க்குச் சந்தோஷகரமானதாகவே யிருந்தது.

நாயகமவர்களின் கண்களுக்குக் கஞூபா தெரிந்தபோது, மன அச்சத்தால் நடுநடுங்கிக் கண்ணீர் பெருக்கெடுப்ப அழத் தொடங்கினார்கள். அவர்கள் அழுததெல்லாம் அல்லாகுத் தஆலா வுக்கு அஞ்சியேயன்றி, வேறல்ல. நாயகமவர்கள் கண்ணீர் விட்டவர்களாய்ப் பெரிய சத்தத்தோடு யஃகூபை விளித்து "யஃகூபே, இப்போது நமக்குச் சம்பவித்திருக்கும் இக்காரியம் மிகவும் இழிவானது. இதில் எவ்விதப் பிரயோசனமும் இல்லை. இஃதொரு மாயாசாலம் போலும், சிறுவர் விளையாடுவது போலுமாம். நாம் சரீரப் பாடுபட்டுக் கால்நடைப் பயணமாய் வழிநடந்து மக்காவுக்குப்போய், கதுபா வைத் தரிசித்து வலம்வருதற்கு விரும்பிப் புறப்பட்டோம். அவ்விருப்பம் மீன் சென்ற வழிபோல இல்லாமையாயிற்று. ஆதலால், இப்போது நமக்கு முன்னே சமீபத்தில் தோன்றுகின்ற மக்கா வுக்குள் நான் போகமாட்டேன். நம் பதாயிகுக்கு மீள்வதே நலம்"

என்று சொல்லிவிட்டு, உடனே திரும்பினார்கள். இதைக் கேட்டு யஃகூபும் கூடத் திரும்பினர். அழுத கண்களையும் ஏங்கிய நெஞ்சினையும் உடையவர்களாய் நாயகமவர்கள். திரும்பி, அல்லாகுத் தஆலா வுக்கு மிகத் தாழ்மையோடு வந்து தங்கள் மனைக்குட் சென்றார்கள். யஃகூபு தமது இருப்பிடஞ் சென்றார்.

மனைக்குட் புகுந்த நாயகமவர்கள் தாங்கள் இருக்குமிடத்திற்போய் உட்கார்ந்து, அந்தநேரமுதல் அல்லாகுத் தஆலா இடத்து அழுது கீழ்வருமாறு முறையிட ஆரம்பித்தார்கள்:—

"அகிலாண்ட சராசரங்கள் அனைத்திற்கும் ஆதியானவனே, அடியார்கள்மீது இரக்கம் உள்ளவனே, எவ்ராலும் எவற்றாலும் அறியப்படாத ஒளியையுடையவனே, அப்புரவான குணத்தை யுடையவனே, நீதியுள்ளவனே, நாடியவர்களுக்கு நேர்வழி காட்டுகின்ற அநாதியானவனே, உன்னுடைய இணையில்லாத தாத்து எதுவோ அதனையே யன்றிப் பிறிதொன்றையும் நாடாத ஒருவன், இப்போது எனக்குச் சம்பவித்த கருமாத்து என்னும் அற்புதத்தை ஒரு பொருளென்று மதித்து விரும்பிச் செய்ய மாட்டான். இன்னும் படைக்கப்பட்டவற்றுள் நேர்வழி பெற்றவை அனைத்தும் அந்த தாத்து ஒன்றையே நாடாநிற்கும். உண்மையாக ஒரு ஹபீபானவன் மஹ்பூபானவனை வஞ்சிக்கமாட்டானன்றோ! உன் அடியார்களுள் மிக்க எளியனான எனக்கு உன்னையன்றி வேறு துணை யார்? ஒருவரும் இல்லை. அனைத்தவற்றை உண்டாக்குபவன் நீயே; அங்ஙனம் உண்டாக்கினவற்றை அழிப்பவன் நீயே; உன் அடிமைகள் ஆன எங்களைக் காப்பவன் நீயே; எனக்கு உவப்புள்ள ஹபீபு நீயே; என்றைக்கும் என்மீது அன்புள்ள பார்வை வைத்து ரக்ஷிப்பவன் நீயே; உன்னையன்றி வே

றொன்றையும் கருதிப்பாராத எனக்கு மஉஷூக்கும் நீயே; மக்ஸூதும் நீயே"

என்று அன்று பகலும் இரவும் ஓயாமல் அல்லாகுத் தஆலா இடத்துக் கைகளேந்தி இரந்து கண்ணீர்மாரி சிந்த அழுதுகொண்டிருந்து, மறுபடியும் மக்கா வுக்குப் போக நாடி, மறுநாட் காலையிற் புறப்பட்டார்கள். முன்னைப் போலவே வாகனம் முதலான யாதொன்றும் இன்றி வெறுங் கையாய், உடுத்திய ஆடையோடும் போர்த்திய கம்பளியோடுமே மனையில் நின்று வெளிப்பட்டார்கள். முந்தித்தொடர்ந்துபோன யஃகூபு இப்பிரயாணத்திற் கூடப் போகவில்லை. நாயகமவர்கள் ஒன்[illegible]பாயே புறப்பட்டு பதாயிகு நகரத்து வீதிகளைக் கடந்து வெளியில் ஆனார்கள்.

நாயகமவர்கள் மக்கா வின் திசையை நோக்கி நடந்தார்கள். நடக்கும்போது அவர்கள் இருதயத்தில் வழியில் தேடிக்கொள்ள வேண்டியது என்று ஒரு பொருளும் இல்லை. பசிக்குத் தின்னுதலும் இல்லை. அப்படித் தின்னாமையால் உடலில் வாட்டமும் இல்லை. இவ்வகைப் பிரயாணத்தினாற் குறைந்துபோனது ஒன்றும் இல்லை. அல்லாகுத் தஆலா வையன்றி மற்றொருநாட்டமும் அவர்களுக்கு இல்லை. இவ்வாறாக இனிய தேன்வழியும் கனிகளைப் பழுத்துச்சொரிகின்ற காவனங்களையும், அகன்ற ஆகாயத்தைத் தடவுகின்ற தருக்கள் நெருங்கிய வனங்களையும் நாயகமவர்கள் கடந்து நடந்தார்கள். வழியிற் சோலைகள்தோறும் நாயகமவர்கள் கஃபா வின் வேட்கைமீறித் தனியே போவதைக் கண்டு காவனத்து உலாவும் மயில்கள் அங்கங்கே நின்று நீலநிறத் தோகைகளை விரித்து ஆடாநிற்கும். குயிற்குலங்கள் மரக்கிளைகளிற் கூவாநிற்கும். பூக்கள்தோறும் வண்டினங்கள் மொய்த்திருந்து இன்னிசை பாடாநிற்கும். மணிப்புறாக்களும், அன்றில்களும் சோடி சோடியாயிருந்து கீதஞ் செய்யாநிற்கும்.

நாயகமவர்கள் மலையும் மலைச்சார்புமான குறிஞ்சிநிலத்திற்போந்து, அங்கே நிகழும் காட்சிகளுள், உச்சிக்கண் குமுறுகின்ற மழைமேகங்கள் மூடிக்கிடப்ப வெள்ளிய அருவிகள் ஒலித்துவிழும் பிளப்புக்களுள்ள மலைத்தொடர்களையும், சாரல்களில் கரிய பெரிய யானைகள் கரும்புகளை முரித்துப் பிடிகளுக்குத் தின்னக்கொடுத்துத் தாமுந் தின்று திரிதலையும், பிறர்க்குத் தீங்கிழைக்கும் வஞ்சகர் நெஞ்சுபோல இருண்டுகிடக்கும் காடுகளில் நெற்பொரியை வாரி யிறைத்தாற்போலப் பூத்துச் சொரிந்துநிற்கும் புன்கமர நிழல்கள்தோறும் கவலைக்கிழங்கு தோண்டியெடுத்த குழிகளில் கரிய மயிரைச் சொரிந்து வைத்ததுபோலக் கரடிகள் சுருண்டுகிடந்து தூங்குதலையும், வழிப்பயணஞ் செல்லும் கூத்தர் பல்மரக் கிளைகளிற் கட்டித் தொங்கவைத்த மத்தளங்களைப் பலாப்பழம் என்று மந்திகள் கருதிச்சென்று தம் கருத்த கையால் தட்டிப்பார்த்தவிடத்து அம்மத்தளத்தில் நின்றுவந்த சத்தத்தால் அஞ்சி வெருண்டு தூரத்திலுள்ள மலைக் குகைகளில் ஓடி ஒளித்து நின்று மருண்ட பார்வையாற் பார்ப்பனதையும், திணைக்கொல்லைகளில் முற்றின கதிர்களை ஒடித்தெடுத்த மந்திகள் கற்பாறைகளிற் போய் உட்கார்ந்து கைகளாற் கசக்கி வாயில் இட்டுக் கன்னங்களிற் பிதுங்க அடக்கிக்கொண்டு வீண்சொற்பேசாது கல்லடக்கி வாய்பேணியிருக்கும் முதியோர்போலத் திரிவதையும், இராக்காலத்துப் பாம்புகள் கக்கின நாகரத்தினங்களின் வெளிச்சத்தில் பெரிய வேங்கைகள் தம் பிணைக்களைக் காக்கும்பொருட்டு அங்கங்கே செத்துக்கிடக்கும் விடக்குக்களை இழுத்துச்செல்லுதலையும், புலியோடு போராடித் தோற்று ஓடுகின்றயானைகள் மூங்கிற்காட்டில் விழுந்துசெல்லுமிடத்து ஒன்றோடு ஒன்று உராஞ்சுதலால் அம்மூங்கிலில்நின்று உதிர்கின்றமுத்துக்கள்சரிந்துவிழும் அருவிநீர்த்திவலையோடு கலந்து மழைபோலச் சொரிவதையும், மிகவும்

ஓங்கிவளர்ந்த மூங்கில் நுனியில் ஈக்கள் தொகுத்துவைத்த தேன்கூட்டை உடைத்துத் தித்திப்பான தேனைக் குடித்தற்கு மந்திகள் ஏறிப்போய் அம்மூங்கில் நுனியில் நிற்பது கழைக்கூத்தாடி கம்பநுனியில் ஏறிநிற்பதுபோலத் தோற்றுவதையும் கண்டு, காடும் காட்டுச் சார்புமான முல்லைநிலத்திற்போந்து, அங்கே நிகழும் காட்சிகளுள், கானலாறுகள் பக்கத்தே வளைந்து தழுவிச் செல்லாநிற்பக் கூரிய முனைகளுள்ள முள்ளாற்கட்டின வேலிக்குள் சிறுகழிகளாற் பிணைத்துக்கட்டின பலவகைக் குடிசைகளையும், இடையில் இழை நுழைதற்கு இடமின்றி ஒன்றோடு ஒன்று நெருங்கி நிற்கும் முலைகளையுடைய இடைச்சிமார் வளையல் ஒலிக்குஞ் கைகளில் மத்துப் பிடித்துத் தயிர்கடைகின்ற ஓசையைப் புலிச்சத்தமென்று அகன்ற கண்களையுடைய மான்கள் கருதி அங்கங்கே நின்று மறுகுதலையும், பருத்த செவிகளுள்ள வெள்ளிய முயல்கள் திரிகின்ற வரகங்கொல்லைகளில் போராடிநிற்கின்ற சிறிய கவுதாரிகள் கோவலர் கன்றுகளைக் கொட்டிலிற் கட்டிவிட்டு ஆன் நிரைகளைக் காட்டிற் கொண்டுசென்று மேயச்செய்து தாம் மரநிழலிற் சாய்ந்திருந்து பின் அந்நிரைகள் ஒருங்குசேரக் கையிற்பிடித்து ஊதும் புள்ளாங்குழலின் இனிமையான ஓசையைக் கேட்டுப் போராட்டம் ஒழிந்து நிற்பதையும், பூனைப்பற்போன்று அரும்பி மலர்கின்ற முல்லையும் கொன்றையும் காயாவும் அலர்ந்து காடெங்கும் கமகமென்று பரிமளிக்குமாறு பூக்களைச் சிந்துவதையும், கானங்கோழிகள் இடைச்சியரின் குரவை யாரவாரத்தாற் பிரிந்த பெடையை நினைந்துநின்று இரங்குவதையும் கண்டு, கானல் பரந்த பாலைநிலத்திற் போந்து, அங்கே நிகழும் காட்சிகளுள், கல்லைக்குடைந்து செய்த சிறிய வாயினையுடைய உண்ணத்தகாத கலங்கல் நீர் அருகிக்கிடக்கும் உவர்க்கேணியின் பக்கத்தே வளைந்த வாலுள்ள ஈன்றணுமை தீராத

நாய்கள் தோலான குலைகள்பொருந்திய வயிற்றினைச் சரிய விட்டுப் பசியோடு முடங்கிக் கிடத்தலையும், வாட்களை நட் [illegible]மேல் நட்டதுபோன்றிருக்கும் பருக்கைக்கற் கள் பரவி மனிதர் நடந்து அறியாத இடமெங்கும் இ லுப்பைகள் பூத்துத் துளையிட்ட முத்துப்போல மலர்கள் சொரிந்து கிடப்பதையும், திசைதப்பி வந்து மதங்குன்றி ன யானைகள் தூரத்திற் பார்த்துத்தெரியும் கானலை நீரென்று கருதிச்சென்று நீரில்லாமைகண்டு எய்த்து வாயுலர்ந்து நீண்ட துதிக்கையை நீட்டித் தொங்க விட்டுக்கொண்டு மேடேறின மரக்கலம்போல நிற்பதையும், வாகைக்காய் முதிர்ந்து காய்ந்த நெற்றுக்கள் கலகலென்று ஒலிக்கும் ஒலியைக்கேட்ட பருந்துகள் தூரத்தில் உள்ள கற்குகை தோறும் போய் அங்குள்ள மறவர்கள் வழிப்போவாரை அலைத்து வருத்தும் தீய செய்கையை நினைத்து உட்கார்ந் து இருத்தலையும், உழிஞ்சின்மரத்தில் நின்று இரைதேடி யிறங்கிவந்த உடும்பு தீத்திரள்போலக்கிடக்கும் பாறைக்கற் களின் இடையே தவழ்ந்து சூடுபொறுக்காமல் படத்தைவி ரித்துப் பலபுறமும் ஓடிச்செல்கின்ற நாகங்களின் படநிழ லில் ஒதுங்கப்பார்க்குதலையும், மலைகளும் பிளக்குமாறு எரிக்கின்ற கொடியவெயிலில் இரைக்கென்று வந்து மு டக்கியிட்ட கயிறுபோலப் புரண்டுகிடந்து செத்த பாம்பு களின் தலையிலுள்ள ரத்தினக்கற்கள் ஈயார்கைப் பொருள் பலனற்றுக் கிடப்பதுபோலக் கிடப்பதையும், எச்சம் இ லைகள் வெயிற்பட்டிருத்தலால் முள்ளம்பன்றியின் முதுகு போலத் தோற்றுநிற்கும் குடிசைதோறும் அங்குக் குடியி ருக்கின்ற மறவச்சாதியார் கூடியிருந்து வேளைப் பூண்டுக ளைப் பறித்து உப்பின்றி அவித்துப் பசிதீரத் தின்னுதலை யும், வழிபறிகாரத் தீயோர் குடியிருத்தலால் மேகங்கள் நிழலிட்டு மேலே செல்லாத்தன்மையின் மழைத்துளியை என்றும் அறியாது அகன்று புகைபரந் திருத்தலையும்

கண்டு, வீபலும் வயற்சார்புமான மருதநிலத்திற்போந்து, அங்கே நிகழும் காட்சிகளுடன், இருகரைகளிலும் செழித்தோங்கிநிற்கும் சோலைகளின் மலர்களும் அவ[illegible]ங்களும் தேன்களும் சிந்துதலால் பசும்பொ[illegible] உருக்கி வார்த்தாற்போல மேலே படர்ந்த நீர்த்திரைகள் கரையிடத்துப் பவளக்கொடிகளை ஒதுக்கிச் செவ்வானம்போலச் செய்யாநிற்கச் சுழித்து ஓடிச்செல்கின்ற நதிகளையும், பருத்த குலைகளையுடைய தென்னைகளும் முற்றின தாறுகளையுடைய வாழைகளும் அழகிய கமுகமரங்களும் நெல்லிமரங்களும் தேமாவும் பலாவும் இஞ்சியும் மஞ்சளும் இன்னும் பலவும் பொலிந்து குளிர்ச்சி மிக்க சோலைகளையும், பெட்டையானையின் துதிக்கைபோலத் திரண்டு நீண்ட வரால்களும் கதிர்முனைபோலும் மூக்கினையுடைய ஆரால் மீன்களும் நெடிய வாளைகளும் இன்னும் பலவேறுவகைப்பட்ட மீன்களும் குதித்துத் திரியும் தண்ணீர் நிரம்பிய தடாகங்களில் ஒன்பது வகை ரத்தினங்களையும் பரத்தினாற்போலப் பலவகை நிறவேறுபாடுள்ள மலர்கள் இதழ்விரிந்து தேனை வண்டுகளுக்கு ஊட்டுதலையும், பலாப்பழம் பிதிரும்வண்ணம் மந்திகள் பறித்து எறிகின்ற தென்னங்குரும்பைகள் பாத்திதோறும் வளர்ந்துள்ள கரும்பின்மேல் வைத்துள்ள தேன்கூடுகளில் தாக்கி உடைத்தலால் அந்தேன்கள் கால்வாய்போல ஓடிச்சென்று வயல்களிற் பாய்வதையும், குளக்கரைதோறும் ஆரால்மீனைத் தேடியிருக்கும் நாரைப்புட்கள் பறக்குந்தோறும் பக்கத்தே விளையாடிநிற்கும் நண்டுகள் அஞ்சி வெருண்டு சேற்றில் வரியுண்டாக ஓடிச்சென்று வளைகளிற் புகுவதையும், வற்றுதலை அறியாது நீர் நிரம்பியுள்ள குளத்துச் செந்தாமரையிலைக்கண் சங்குகள் ஊர்ந்து ஈன்ற முத்துக்களை அன்னப்புட்கள் தாமிட்ட முட்டையென்று கருதி இறக்கைகளால் அணைத்து அடைகாத்து இருத்தலையும், சங்குகளும் நத்தை ந

கரும் சிதையும்படி நீர் நிலைகளில் விழுந்து உழக்கிச் செவ்வல்லிப்பூக்களையும் நீலோற்பல மலர்களையும் தின்று கரை [illegible] அழுகிய கால்களையுடைய எருமைகள் மஞ்சள் இலைகள் [illegible]ருகுதடவ மல்லிகைச்செடிமேல் படுத்துத் தூங்குவதையும், மாலை நேரத்திற் கொட்டும் பறைச்சத்தங் கேட்ட எருமைகள் நடக்குந்தோறும் சுரப்பான மடியில் நின்று பால் ஒழுகும்படி கொல்லைக்கண் கட்டியிருக்கும் கன்றுகளைக் கரைந்து கூப்பிட்டுக்கொண்டு வருதலையும், வானத்து விடிவெள்ளிபோலச் சிறந்த முசுண்டைப் பூக்கள் பூத்த கொல்லைகளில் காணற்பூக்கள் விரிந்து வெண்ணிறக்கொக்குப்போலத் தோற்றுவதையுங் கண்டு, கடலும் கடற்சார்புமான நெய்தல்நிலத்திற் போந்து, அங்கே நிகழும் காட்சிகளுள், வெள்ளிய மணல்தோறும் விரிந்துகிடக்கும் தாழைமடல் அன்னப்புட்போலப் பூத்து நிலவுபடர்ந்ததுபோலவும் நீலமணிபோன்ற நிறத்தினையுடைய உவர் நீர்பரந்த கடல் இருள் படர்ந்ததுபோலவும் தோற்றுதலையும், மணன்மேடுகள் வெளியாயுள்ள கானற் சோலைக்கண் புன்னையரும்புகள் முத்தென்று மருளவும் கழிமுகத்தில் முளைத்த முள்ளிகள் பூத்து நீலரத்தினமென்று மருளவும் காணப்படுதலையும், பரந்த நிலாவெளிச்சத்தில் விரிந்த இருள் சேர்ந்திருப்பதுபோல வெள்ளிய மணலிடத்து உலர்தற்கு விரித்த வலைகள் விரிந்து தோற்றுதலையும், சுறாமீன் விளையாடித்திரியும் கடல் அலைகளில் துள்ளிப்பாயும் மஞ்சட்புறம்போன்ற இறாமீனைக் கொத்தித்தின்ற நாரைகள் நீர்க்காகம்போலப் பழங்கள் பழுத்திருக்கும் தாழைதோறும்போய் அவற்றின் பூக்கள் பூத்திருப்பதுபோல இருத்தலையும், மான் குளம்புபோலக் கவருள்ள இலைகளையுடைய அடம்புக்கொடியிற் படர்ந்த பூக்களைக் கூந்தலிலே பறித்து அணிந்து கைகளில் புன்னைப் பூங்கிளையை ஒடித்துப் பிடித்து முன்றில்தோறும் நின்று விளையாடும் பரத்தியர்

அங்கே பரத்தியிட்ட புலால் உணங்கலைக் காத்துப் பறவைகளை ஓட்டாநிற்பதையும் கண்டு, பின்னும் நடந்து சென்றார்கள். இவ்வாறாகப் பலவேறு வகைப்பட்ட நிலங்களையெல்லாம் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பல் நாட்கள் நடந்து கடந்து அறபு தேசஞ்சேர்ந்து, அத்தேச வளப்பங்களையுங் கண்டு களித்து, சிறப்புள்ள மக்கா நகரத்தை நெருங்கினார்கள்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பரிசுத்த ஸ்தலமாகிய மகத்துவமுள்ள மக்கா நகரத்தைக் கண்டபோது அளவிறந்த சந்தோஷமுள்ளவர்களாய் உள்ளே புகுந்து, தன்னை அடைந்தாரின் பாவமென்னும் மன இருளை அறுத்து மெய்ஞ்ஞானதீபம் நின்று பிரகாசிக்கச் செய்யும் சிறப்பான ஹரம் என்னும் அரணையும், அதன் நடுவே சிறந்துதோற்றுநிற்கும் ககுபாவையும் கண்டு கண்கள் குளிர்ந்தார்கள். பின்பு, மக்கா நகரத்துப் பல அடுக்கு மாடங்கள் மலைபோல உயர்ந்து தெரிகின்ற அகன்ற வீதிகளையெல்லாங் கடந்து ககுபாவின் ஹரத்திற்குள்ளே புகுந்தார்கள். புகுந்த நாயகமவர்கள் உலக இயற்கையில் உள்ள இருவினைகளையும் அறவே விட்டு ஒழித்து, மனம் வாக்குக் காயம் என்னும் பிரதானமான பொறிகள் மூன்றும் ஒன்றித்து நிற்க அல்லாகுத் தஆலா புறத்திற் சாட்டி, ககுபாவை வலம்வந்தார்கள். வலம்வருதற்கு விதித்த விதிகள் சிறிதும் வழுவாமல் முறைப்படியே பிரதக்ஷணஞ் செய்தபின், மறுத்தும் அங்கே செய்யவேண்டியான ஆசாரங்கள் அனைத்தையும் செய்துமுடித்து, அல்லாகுத் தஆலாவைத் தொழுதார்கள். தொழுதுமுடித்து எழுந்து நின்று, இரு கைகளையும் ஏந்திக் கண்ணீர்விட்டு அழுது, நெஞ்சம் கரைந்து உருகி, வெகுநேரம் நின்று தங்களுக்கு வேண்டியவற்றை அல்லாகுத் தஆலா இடம் கேட்டு இரந்தார்கள்.

நாயகமவர்கள் தங்கள் முறைப்பாட்டை அல்லாகுத் தஆலா பொருந்துமவரையும் அழுதின்று இரந்து முடித்து, அங்கிருந்து மீண்டு ஒரு இடத்திற்போய்த் தங்கியிருந்தார்கள். இரண்டு மூன்று தினம் அங்கே தங்கியிருந்து, தரிசிக்கவேண்டும் இடங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு, தங்கள் கருத்து நிறைவேறினதற்காக அல்லாகுத் தஆலாவைப் புகழ்ந்து களிகூர்ந்தவர்களாய், மக்கா நகரத்தைவிட்டுப் பயணப்பட்டார்கள். நாயகமவர்கள் மக்காவில் தங்கியிருந்த நாளெல்லாம் அடுத்தடுத்துக் கதுபாவுக்குப்போய் வலம்வருதலும், நம் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் பிறந்த இடத்தைத் தரிசித்தலும், மற்றப் பிரதானமான இடங்களுக்குப்போய் வருதலுமே தொழிலாயிருந்தார்கள். இவ்விதமிருந்து மக்காவைவிட்டுப் பயணமானவர்கள், தங்கள் சுயதேசமாகிய இருக்கை நோக்கி நடந்தார்கள்.

அநுபவத்தில் இனிமையாய்த் தோன்றுகின்ற இவ்வுலகவாழ்க்கை முடிவில் மிகக் கசப்புள்ளதாய்விடும் என்பதை உணர்ந்தறிந்து அதனை வெறுத்து, பலவாய்க் காணப்படுகிற பொருள்கள் அனைத்தும் அநித்தியமாகையால் அவற்றை இன்மையாக்கி, நித்தியப் பொருளாகிய ஒருவனையே உண்மையாக்கி நிற்கும் தவ்வொழுக்கம் பூண்டு சிறப்புற்று நிற்கும் நாயகமவர்கள், தங்கள் மனவிருப்பம் முடிவுபெற்ற ஆநந்தத்தோடே முன்சென்றவழியே மீண்டு நடந்து, வழியிற் காணுகின்ற மலைகள் நதிகள் அடர்ந்த வனங்கள் செழிப்பான சோலைகள் பட்டணங்கள் எல்லாவற்றையும் கடந்து இருக்கு தேசம் அடைந்து, அதன் கொழுமதியான வனங்களையும் கண்டு களிப்புற்று, தங்கள் நகரமாகிய பதாயிகுக்குவந்து சேர்ந்தார்கள்.

மக்காயாத்திரை

முற்றிற்று.

---

7 - ம். அத்தியாயம்,

## மதீனு யாத்திரை.

——(*)——

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலி யல்லாது அன்கு அவர்கள் மதீனு [illegible]ரத்திற்குச் சென்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி[illegible]—ஸைது அப்துல்லாஹில் மக்ரி.]

சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் மக்கா நகரம்போய் மீண்டுவந்தபின், பதாயிகு நகரத்திலேயே இருந்தார்கள். அவர்களுக்கு நிகரான ஒருவர் அப்போது அங்கே யாரும் இல்லை. அளவிட்டு அறிதற்கு அரிய நித்தியவஸ்துவாகிய மகத்துவமுள்ள அல்லாகுத் தஆலா இன்ன தன்மையன்; அவன் சிருஷ்டிகளான மனிதர் என்னும் நாம் இன்னதன்மையேம்; ஏனைச்சிருஷ்டிகள் இன்ன தன்மையின என்று தெரிந்தார் யார்க்கும் நாயகமவர்கள் ஒரு கிரீடமாய் விளங்கினார்கள். அல்லாகுத் தஆலா வின் உவப்பு வரவர நாயகமவர்கள் மீது அதிகமாய், அவனால் உவக்கப்பட்ட மஹ்பூபு ஆனார்கள். நாயகமவர்களின் குலம், குணம், அறிவு, ஒழுக்கம், அன்பு, இரக்கம், வழிபாடு, அற்புதங்கள் ஆகிய இவற்றின் மேம்பாடுகளும், இன்னுமுள்ள மகிமைகளும் தேசாதி தேசமெங்கும் சென்று பரவின. அல்லாகுத் தஆலா வை அறிந்து வழிபடுதற்கு தீனுல் இஸ்லாம் என்னும் நேரான மார்க்கத்தைக் கொண்டுவந்து உலகத்தாரை ரக்ஷித்த நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களின் அருமையான பௌத்திரரும், ஒளலியாக்களின் குடும்பத்திற்குத்

தலைவருமா யிருக்கின்றார்கள் என்று உலகத்தாரெல்லாரும் நாயகமவர்களை மிகக் கொண்டாடினார்கள். நாயகமவர்களின் விலாயத்து மகத்துவத்தைக் கேட்குந்தோறும் எல்லாரும் அஞ்சி நடுங்குவார்கள். அவர்கள் இருக்குமிடத்து அனைவரும் கைகட்டித் தலைகுனிந்து இருப்பார்கள். வீதிகளில் நடந்தார்களானால், அவர்களுக்கு முன்னே ஒருவரும் நடந்துபோகமாட்டார்கள். அவர்கள் திருவாய்திறந்து பேசும்போது எல்லாரும் தலைவணங்கி முகம்பாராமல் செவிதாழ்த்தி யிருப்பார்கள். அவர்களின் திருவாய்ச்சொல் ஒவ்வொன்றையும் ரத்தினம்போல் யாவரும்பேணி மனப்பேழைக்குட் பொதிந்து வைப்பார்கள். முடிவாகச் சொல்லுமிடத்து ஒளலியாக்களும், மஷாயிகுகளும், மற்றப் பெரியார் அனைவரும் அவர்களுக்கு இணங்கிக் கீழ்ப்படிந்து, வழிபட்டு நடந்துவந்தார்கள்.

நாயகமவர்கள் சாமானிய சனங்களின் இருள் கவிந்த மனங்களெல்லாம் தெளிவடைந்து இஸ்லாம் என்னும் சோதி காணும்படி அறிவுச்சுடர் கொளுத்தி பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருக்கும் காலத்து, அவர்களுக்குத் தங்கள் பாட்டனாகிய நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களைத் தரிசிப்பதற்காக மதீனா நகரம் போகவேண்டும் என்கின்ற பேராசை உண்டாயிற்று. எவ்வகைச் சிருஷ்டியும் ஒப்பாகாத நபிகள் பெருமானார் இருக்கும் மதீனா நகரம்போதற்கு நாயகமவர்கள் விரும்பினபோது, அதற்கென்று நாளைச் சுணக்காமல் யாத்திரைக்கு ஒருப்பட்டார்கள். இவ்யாத்திரையும் முன் மக்காவுக்குப் போனவண்ணமேயாயிருந்தது. ஏறிவரும் வாகனம், இடைவழிச் செலவிற்குப்பணம், ஆற்றுணா, மாற்றுடை, வழித்துணை என்பன ஒன்றுமின்றி, தனியே புறப்பட்டார்கள்.

நாயகமவர்கள் பதாயிகு நகரத்தைவிட்டு வெளிப்பட்டு மதீனா நகரத்திசையை நோக்கினார்கள், தங்கள் [illegible] முன்

டு கம்பளியொன்றைப் போர்த்துக்கொண்டு ஊரென்றும், காடென்றும், இரவென்றும், பகலென்றும், வெயிலென்றும், நிழலென்றும், கடலென்றும், கரையென்றும், பசியென்றும், பிணியென்றும் அறியாதவர்களாய், பார்ப்பவர் "இவர் யாவரோ! எவ்வகைப் பட்டாரோ!" என மருளும் வண்ணம் நடந்து சென்றார்கள். ஓவென்று இரைந்து பெய்கின்ற மழையிலும், மலைகளும் பிளக்குமாறு மிகக் கொதித்தாய் எறிக்கின்ற வெயிலிலும், ஏறியும் இறங்கியும் போகின்ற கரடுமுரடான இடங்களிலும் பாடுபட்டு நடந்தார்கள். புறத்தே வரிகளையுடைய புலியைக் கண்டு துதிக்கையைச் சிரத்தே தூக்கி வெருண்டு ஓடுகின்ற யானைகள் பிளிறுதல் எங்கும் எதிரொலிக்கின்ற காடுகளிலும் புகுந்து சென்றார்கள். கதிர் எறிக்கின்ற ஞாயிற்றை மழைமேகம் வந்து மூடிக்கொண்டாற் போலப் பேரழகு வாய்ந்து பிரகாசம் எறிக்கும் திருமேனியைக் கறுத்த கம்பளியால் மூடிக்கொண்டு செல்கின்ற நாயகமவர்களைக் காணும் சிங்கங்களெல்லாம் திகைப்புற்று, எதிரே வராமற் பின்வாங்கிச் செல்லாநிற்கும். நாயகமவர்களின் கருணை ததும்பிவழியும் கண்களுக்குமுன்னே எதிர்ப்பட்ட புலிக்கூட்டம் அஞ்சி அகலாநிற்கும். இளைய ஞாயிறுபோலச் சுடர்வீசும் முகத்தைக் கண்ட மதயானைகளெல்லாம் வெருவிக் கலங்காநிற்கும். உலகமுழுவதும் படைத்தற்குக் காரணமான நபிகள் பெருமானாரின் பௌத்திரரான இவர்களுக்கு எதிரே நாம் எவ்வாறு செல்வது என்று கருதிக் கரடிகள் விலகிச் செல்லாநிற்கும்.

நாயகமவர்கள் இவ்வாறாக நித்திரையென்றும் விழிப்பென்றும் பேணாது தவநிலையொழுக்கத்தோடே பலநாள் நடந்து காணாதவையெல்லாங்கண்டு இருக்கு தேசத்தைக்கடந்து அறபுதேசத்தை அடைந்து, பின் அங்கும் பலநாள் நடந்து மதீனா நகரம்போய்ச் சேர்ந்தார்கள்.

நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் தீனுல் இஸ்லாம் என்னும் மேம்பாடான மார்க்கத்தை உலகமுழுதும் பரப்புதற்கு இருந்து ஆட்சிபுரிந்த ராஜமாநகரமாயும், அவர்கள் என்றும் இருக்கும் இருக்கையாயும் விளங்கும் அம் மதீனா வின் மகிமையை இன்னதென்று சொல்லவும், அதன்சிறப்பை வருணிக்கவும் யார்க்கும் சக்தியில்லை. பண்டைக்காலத்துப் பெரியோர்களாற் செய்யப்பட்ட மேலான நூல்களிலெல்லாம் அந்நகரத்து மகத்துவம்விரித்து எழுதப்பட்டுளது. பல பாஷைகளிலும் உள்ள கவிவாணர் பலர் அதனை மிகவருணித்துக் கவிகள் செய்திருக்கின்றனர். அவ் வருணனைகளுக்கு ஒப்பாகவேனும் வருணித்தற்கு மிகத்தாழ்ந்த சிறியவனை என்னாற் கூடாதாதலின்; அந்நகரச் சிறப்பைச் சிறிதும் சொல்லாது விட்டேன்.

நாயகமவர்கள் அலங்காரமான மதீனா வுக்குள்ளே புகுந்தார்கள். புகுந்து போகும்போது அந்நகரவீதிகளில் உள்ள மேன்மாடத்து ஜன்னல்கள் திறக்கப்பட்டிருந்தன. அது, பெரிய மலைகள் நாயகமவர்களைக் காண்பதற்கு விரும்பிக் கண்கள் திறந்ததற்கு ஒப்பாயிருந்தது. மாளிகைதோறும் உள்ள அழகிய பெண்கள் கரியகூந்தலுக்கு ஊட்டப் புகைத்த அகிற்புகை மாளிகைச்சிகரங்களில் திரண்டு, ஆகாயத்தே திரியும் மேகங்கள் திரண்டு நாயகமவர்களைத் தரிசிக்க வந்ததுபோலத் தோற்றும். மேன்மாடந்தோறும் கட்டிப் பறக்கும் துகிற்கொடிகள் அசைவது, நாயகமவர்களைக் கண்ட ஆநந்தத்தினால் ஆடுவது ஒத்திருந்தது. சிறந்த மனைகளிலெல்லாம் பேரழகுவாய்ந்த மாதர்கள் கூடியிருப்பது, நாயகமவர்களைத் தரிசிப்பதற்குச் சுவர்க்கத்து அரம்பையர்வந்து கூடினதுபோன்று இருந்தது.

இவ்வித அரியகாட்சிகள் தோன்ற மதீனா வின் வீதிவழியே களங்கம் அற்ற முழுமதிபோலும் பிரகாச முகத்

தோடே நாயகமவர்கள் நடந்து சென்றார்கள். வீதிகளில் அவர்களைக் காண்பவர்கள் குலமேன்மை, குணமேன்மை, கல்வியின் உயர்வு, தலைநிமிராது குனிந்தபார்வையோடு செல்லும் ஒழுக்கம், அவயவ லக்ஷணம், உருத்தோற்றம், இளம்பருவம் ஆதி இவற்றைக்கருதிப் பெரிதும் ஆச்சரியப் பட்டார்கள். சிலர் "இந்த வாலிபர் நமது நபி கள்பெருமானவர்களின் பௌத்திரராயிருப்பார்" எனவும், சிலர் "இவர் தேசங்களைக்கட்டி ஆள்கின்ற ராஜாதி ராஜராயிருப்பார்" எனவும், சிலர் "இவர் உலகவாழ்க்கையை விட்டுத் துறவுபூண்ட பெரியோராயிருப்பார்" எனவும் சிலர் "இவர் ஒலி யாயிருப்பார்" எனவும் வியப்புற்றுச் சொல்லிக்கொண்டார்கள்.

கண்டவர் வியக்க நாயகமவர்கள் குனிந்த பார்வையோடு நடந்து நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் அடங்கி விளங்காநின்ற உன்னதமான கோபுரங்களையுடைய மகத்துவம்பெற்ற ஆலயத்துத் தலைவாசலை எதிரேகண்டு, மனங்குளிர ஆநந்தக் கண்ணீர் அரும்ப இருகரங்களையும் கட்டிக்கொண்டு உள்ளே புகுந்தார்கள். புகுந்து யாது தடையும் இன்றித் தங்கள் பாட்டனாரவர்களின் இணையற்றதான கபுறுக்குப் பக்கத்திற் சென்று நின்று, தரிசனாசாரம் என்னும் ஜியாறத்து ஷறுத்து ஒருசிறிதும் தவிராது செய்துமுடித்து, அங்கேயே நிலைபெயராது கைகட்டிச் சிரந்தாழ்த்திக் கண்கள் மூடி நின்று, கீழ்வரும் இரண்டு பைத்துகளையும் சொன்னார்கள்.

1. في حالة البعد روحي كنت أرسلها
تقبل الأرض عني وهي نائبتي*

2. فهذه حالة الأشباح قد حضرت
فامدد يمينك كي تحظى بها شفتي*

1. "பீஹாலத்தில் பு உதி றூஹீ குன்து உற்ஸிலுஹா
துகப்பிலுல் கப்ற மின்னீ வஹிய நாயிபதீ.
2. பஹாதிஹி ஹாலத்துல் அஷ்பாஹி கத் ஹலறத்,
பம்துத் யமீனக கை துஹ்லா பிஹாஷபதி."

இவற்றின் பொருள்:—

[1. நான் தூரத்தேயிருக்கும்போது என்னில் நின்றும் பிரதியாகத் தங்கள் கபுறை முத்தமிடுவதற்கு என் றூஹை அநுப்பிக்கொண்டிருந்தேன்.

2. அந்த றூஹானது இப்போது உடலோடே தங்கள் சமுகத்து வந்து நிற்கின்றது. தங்கள் வலதுகரத்தை நீட்டுங்கள்; என் உதடுகள் அதனை முத்தமிட்டுப் பலன் பெற்றுக்கொள்ளட்டும்.] என்பதாம்.

இப்பொருள் அமைந்த மேற்கண்ட பைத்துகள் இரண்டையும் நாயகமவர்கள் திருவாய்மலர்ந்து சொல்லி முடித்த நிமிஷத்தில், பொன்மலைக்கு உள்ளேயிருந்து குளிர்ந்த பூரணச்சந்திரன் ஒன்று வெளிப் பட்டதுபோல நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களின் வலக்கரம் கபுறுக்குள் இருந்து வெளியில் நீண்டது. நாயகமவர்கள் அக்கரத்தைக் கண்ட மாத்திரத்தில் அடக்குதற்கு அரியமனக்களிப்போடு மிகவிரைவாய்ச்சென்று, தங்கள் பாட்டனாரவர்களின் வலக்கரத்தைத் தங்கள் இருகைகளாலும் பற்றிப்பிடித்து வாயிலும் கண்ணிலும் வைத்துப் பலதரம் முகந்து முத்தம் இட்டார்கள். மன ஆவல்தீர முத்தமிட்ட நாயகமவர்கள் தங்கள் உள்ளத்தின்கண் உள்ள விருப்பம் ஒவ்வொன்றையும் பாட்டனாரவர்களிடத்து நிறைவேற்றல் வேண்டும் என்று முறைப்பாடு செய்தார்கள். வெகுநேரம் நின்று இரந்து அனைத்தையும் பெற்றுக்கொண்டபின், நபிகள் பெருமானாரது வலக்கரம் கபுறுக்குள் மீண்டது. "என் அருமைமகனே, உம்முடைய கருமங்கள் அனைத்தும் சிறப்போடு நிறைவேறுவனவாக. நீர் போவீர்" என்று கட்டளையிட்டவாறு கரம் உள்ளே சென்றவுடன் நாயகம

வர்கள் அவ்விடம்விட்டுச் சற்றேபெயர்ந்து, பக்கத்தில் அடங்கியுள்ள அமீருல் மூமினீன் சையிதினா அபூபக்கர் ஸித்தீக்கு றலியல்லாகு அன்கு அவர்களின் கபுறுக்கு அருகிற்சென்றார்கள்.

நாயகமவர்கள் அங்கு நின்று அவர்களை ஜியாறத்துச் செய்துகொண்டு, அதன் அருகில் அடங்கியுள்ள அமீருல் மூமினீன் சையிதினா உமறிபுனு கத்தாபு றலியல்லாகு அன்கு அவர்களை ஜியாறத்துச்செய்துகொண்டு, பின், அங்கே அடங்கியிருக்கின்ற தங்கள் பாட்டியாராகிய கைறுன்னிஸா பாத்திமா றலியல்லாகு அன்கா அவர்களையும் ஜியாறத்துச்செய்தார்கள். சுவர்க்கமும் ஒப்பாகாத மகத்துவமுள்ள அந்த ஆலயத்தில் செய்யவேண்டிய தரிசனைகள் இவ்வளவையும் செய்து முடித்துக்கொண்டு, பின்பு அங்கு நின்று வெளிப்பட்டு, முன் நிகழ்ந்த விவாதத்தினால் அமீருல் மூமினீன் சையிதினா அலி றலியல்லாகு அன்கு அவர்கள் எறிந்த கல் விழுந்த இடமாகிய "ஜன்னத்துல் பகீஆ" என்னும் தானத்திற்போய், அங்கே அடங்கியிருக்கும் அமீருல் மூமினீன் சையிதினா உதுமான் றலியல்லாகு அன்கு அவர்களை ஜியாறத்துச்செய்தார்கள்.

இவை அனைத்தும் தீர்ந்தபின் நாயகமவர்கள் மதீனா நகரத்தில் மற்றுள்ள தரிசிக்கவேண்டுமான இடங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு சிலநாட் கழித்து, தாங்கள் கொண்ட எண்ணம் நிறைவேறினதற்காக மிக மகிழ்கூர்ந்து அல்லாகுத் தஆலாவைப் புகழ்ந்து, மதீனாவை விட்டுப் பயணப்பட நாட்டங்கொண்டார்கள்.

எக்காலத்தும் யார்க்கும் உண்டாகாத ஆச்சரியகரமானவிதமாய் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் வலக்கரம் கபுறில் நின்று வெளிவர, அதனைப்பிடித்து முத்தமிட்டுக்கொள்ளப் பெற்றபாக்கியம் நாயகமவர்கள் மனதில் குடியாயிற்று. தாம்கொண்ட பேராசைக்கு

அதிகப்படவே கிடைத்தது என்று பூரிப்புற்று, மதீனை விட்டுப் புறப்பட்டார்கள்.

மதீனா நகரத்தில் நின்று யாத்திரையான சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், அங்கணங்களில் நின்று தெளிந்த நீர் ஒழுகுவதுபோல மலர்களில் நின்று தேன் ஒழுகுகின்ற பூஞ்சோலைகளையும், பருத்த பாம்புகள் சுருண்டுகிடக்கும் பொந்துகளுள்ள மரங்கள் அடர்ந்த காடுகளையும், மூங்கில்கள் ஓங்கி நிற்கும் மலைகளையும், அகன்ற நதிகளையும், மற்றப் பாலைநிலங்களையும் கடந்து பலநாள் நடந்து, பதாயிகு நகரம்வந்து சேர்ந்தார்கள்.

மதீனயாத்திரை

முற்றிற்று.

---

8-ம் அத்தியாயம்.

## பைஅத்து.

---

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்கள் மாமனாராகிய சைகு மன்ஸூறிபுனு அபூபக்க றுற்றபாஇ யவர்களின் கைதொட்டு பைஅத்துக் கொடுத்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— சைகு அலியிபுனு ஹைத்தியும், அபூ முகம்மது அப்துற்றகுமானல் தப்ஸூஞ்சியும்.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களுக்கு மாமனான மன்ஸூறுற் றபாஇ என்று ஒரு பெரியோர் இருப்பதாக அவதாரம் என்னும் மூன்றும் அத்தியாயத்திற் சொன்னேனே, அவர்கள் நாயகமவர்களின் அன்னையாகிய ஆயிஷாவுக்குச் சகோதரரும், அபூபக்கருற் றபாஇயவர்களுக்குக் குமாரருமான

வர்கள்; ஹலறத்து இமாம் ஹஸன் றலி யல்லாகு அன்கு அ வர்கள் சந்ததிகளில் உள்ளவர்கள்; றபாஇ க்கிளையைச் சேர்ந்தவர்கள்; அல்லாகுத் தஆலா வுக்கு உரித்தாளரான ஒளலியாக்களுள் மிக மேம்பாடுள்ள நாயகமானவர்கள்; அவனை உணர்ந்து அறிந்து வழிபட்டு வணங்குவதில் தமக்கு இணையில்லாதவர்கள்; மனிதர் திகைக்கும் வண்ணம் அற்புதங்களைச் செய்கின்றவர்கள்.

இந்த மன்ஸூறு றிபுனு அபூபக்கறு றபாஇ யவர்கள் பதாயிகு நகரத்தில் இருக்கின்றபோது, அவ்வூராருள் ஒருவரை அங்குள்ள அடவிகளில் திரியும் வேங்கையொன்று பிடித்து, அவருடைய இருகரங்களையும் முரித்துவிட்டது. அதனை இவர்கள் கேள்வியுற்று உடனே யெழுந்து அடவியிற்போய் நின்று, அந்தவேங்கையைக் கூப்பிட்டு அதன்நெற்றியில் உள்ள உரோமத்தைக் கற்றையாகச் சேர்த்துப்பிடித்து இழுத்துக்கொண்டு, அதனைநோக்கி "எங்கள் அண்டைவீட்டாரை நீங்கள் தீங்குசெய்யவேண்டாம் என்று நான் முன் ஒருதரம் உங்களுக்குச் சொல்ல இல்லையா?" என்று கேட்டார்கள். அப்போது அந்த வேங்கை, அப்படிச் சொன்னது உண்டு என்னும் குறியாகத் தலையைத் தாழ்த்தி நின்றது. உடனே இவர்கள் சினந்துகொண்டு மறுத்தும் அதனை நோக்கி "ஏ, துஷ்ட மிருகமே, நீ அல்லாகுத் தஆலா வின் ஏவலைக்கொண்டு சாவாயாக" என்று கட்டளையிட்டார்கள். இங்ஙனம் சொல்லிவாய் மூடுமுன் அவ்வேங்கை தரையில்விழுந்து செத்தது. பின்பு இவர்கள் கைகள் முரிந்துபோன மனிதரை அருகே அழைத்து, முரிந்த துண்டுகளைத் தங்கள் கையால் எடுத்து ஒடிந்தவாயில் வைத்துச் சேர்த்துப்பிடித்துக் கொண்டு "யா ஹையு, யா கையூம், யா தல்ஜலாலி வல் இக்றாம், இந்த ஒடிந்த முட்களை ஒன்றுபடப் பொருத்துவாயாக" என்று திருவாய்மலர்ந்து சொன்னார்கள். அப்போதே

முரிந்த கைகள் ஒன்றாய்ப்பொருந்தி, முன்போல் ஆயின. பின்பு இவர்கள் தங்கள் கையாலேயே அந்த வேங்கையின் தோலை உரித்துவிட்டார்கள்.

ஒரு காலத்தில் வானத்தினின்று கொடிய தீங்கொன்று அல்லாகுத் தஆலா பூமியில் இறக்கினான். அத்தீங்கு இருக்கு தேசம் முழுமையும் சூழ்ந்துகொண்டது. அல்லாகுத் தஆலாவின் சோதனையாகிய அந்த பலாய் எங்கும் பரந்தபோது, அத்தேசத்தார் மிக வருந்தினார்கள். செழிப்புற்று வளர்ந்து நிற்கும் பயிரில் தீப்பிடித்த வண்ணம் மனிதர்கள் வருந்திப் பாடுபட்டார்கள். அத்தீங்கு பதாயிகு நகரத்திலும் அதிகமாயிருந்தது. பெரியோர்கள் அநேகர் அந்த பலாயை நீக்கென்று அல்லாகுத் தஆலா இடத்து இரந்து மன்றாடியும் அது நீங்க இல்லை.

ஆகாயம் முழுமையும் மந்தாரம் மூடிப் பயங்கரமான தோற்றத்தோடு இருப்பதையும், அதனால் உண்டாயிருக்கும் தீங்கையும், மனிதர்கள் பாடுபட்டு வருந்துதலையும் மன்ஸூறுற் றபாஇயவர்கள்கண்டு மனம் இரங்கி, மனிதர்களை நோக்கி: நீவிர் வருந்தாதீர்கள்; நான் இந்தக் கொடிய பலாயை வெருட்டுகின்றேன் என்று சொல்லிவிட்டு, தங்களின் கைத் தடியை எடுத்து ஆகாயத்தில் உயர்த்திச் சுட்டினார்கள். அந்த நேரத்தே, விலகாது பற்றி நின்ற பலாய் விலகத்தொடங்கிற்று. பின்பு இவர்கள் அங்ஙனந்தானே நின்று ஆகாயத்தைநோக்கி “யா அல்லா, உன்னுடைய காஹிறு என்னும் இஸ்மைக்கொண்டு உண்டானதீங்கை மாற்றி, றஹீம் என்னும் இஸ்மைக் கொண்டு அருள்புரிவாயாக” என்று இரந்து கேட்டார்கள்.

மன்ஸூறுற் றபாஇயவர்கள் இவ்வாறு இரந்துகேட்ட அப்போதே பயங்கரமான தோற்றத்தோடே ஆகாயத்தை மூடிக்கொண்டு தீங்கின் உருவாய்ச் செருமியிருந்த மேகங்கள் முழுதும் மழைமேகங்களாய்மாறி, சோணையாக

இரைந்து மழையைப் பெய்தன. தீங்கு மழையாய் மாறிப் பெய்ததால், மனிதர்கள் அதில் நின்று காக்கப்பட்டு, அந்த மழையால் அதிக பலனை அடைந்தார்கள். அன்று முதல் தீங்கின் குறி ஒரு சிறிதும் அங்கில்லை.

இன்னும், மன்ஸூறுற் றபாஇ யவர்கள் அல்லாகுத் தஆலா வின் முஹப்பத் திலும், இஷ்கி லும் நிரம்பினவர்கள். இவர்களைப்பற்றி அக்காலத்து ஒலி மாரெல்லாம் ஆச்சரியப் படுவார்கள். ஒருநாள் ஒரு மனிதர் இவர்களிடத்துப்போய் "நாயகமே, முஹப்பத்து என்பது யாது?" என்று ஒருகேள்வி கேட்டார். அக்கேள்விக்கு இவர்கள் "அல்லாகுத் தஆலா வுடைய முஹப்பத்து என்னும் சாராயத்தை நான் பருகினேனாயின், அவனையன்றி மற்ற எல்லாவற்றையும் அறவேமறந்து, அதனுடைய மஸ்திலேயே முழுகிக் கிடப்பேன். அந்த மஸ்தில் எனக்குப் பிரக்ஞையிராது. அதனை நான் அநுபவிக்கையில் மற்றொன்றிலும் திரும்ப மாட்டேன்" என்று சொல்லிவிட்டு, கீழ்வரும் பைத்துகளைச் சொன்னார்கள். அவை:—

1. إنّ البلاد وما فيها من الشجر
لو بالهوى عطشت لم ترو بالمطر

2. لو ذاقت الارض حب الله لا شتغلت
اشجارها بالهوى فيها عن الثمر

3. وعاد اغصانها فرداً بلا ورق
من حر نار الهوى ترمين با لشهر

4. ليس الحديد ولا صم الجبال إذا
اقوى علي الحب للباري من البشر

1. இன்னல் பிலாத வமா பீஹா மினஷ்ஷஜரி
லௌ பில் ஹவா அதஷத் லம் தர்வி பில் மத்ரி.

2\. லௌதாக்கத் தில் அர்லு ஹாப்பல்லாஹி லஷ்தக்லத்
அஷ்ஜாருஹா பில்ஹவா பீஹா அனித்தமரி.

3\. வ ஆத அக்ஸானுஹா பர்தன் பிலாவரகின்
மின்ஹர்ரி நாறில்ஹவா தர்மீன பிஷ்ஷஹரி.

4\. லைஸல் ஹதீத வலா மும்மல் ஜிபாலி இதா
அக்வா அலல்ஹாப்பி லில்பாரி மினல்பஷரி.

இவற்றின் பொருள்:—

[1. " பட்டணங்களும் அவற்றிலுள்ளவைகளும், விருக்ஷங்களும், அல்லா வுடைய இஷ்க்கில் வேட்கையாலும், வானம் மழை பெய்வதைக்கொண்டு அவ்வேட்கை தீராது."

2\. " பூமியானது அல்லா வுடைய இஷ்கை அநுபவித்ததாலும், விருக்ஷங்களெல்லாம் பழுத்துக் குலுங்குவதில் பாரக்கற்று, அந்த இஷ்கி லேயே பராக்காகும்."

3\. " அந்த விருக்ஷங்களின் கொப்புக்களெல்லாம் இலைகளின்றி வெறுமையாம்; அந்த இஷ்கு என்னும் அக்கினியின் காங்கையால், அந்தக் கொப்புக்களும் அக்கினிப் பொறியை எறியாநிற்கும்."

4\. " அல்லா வின் இஷ்கில் உயர்ந்தமலைகளும் இரும்பும் மனிதரைப்பார்க்கினும் மிகைக்குமானால், மலை மலையாயும், இரும்பு இரும்பாயும் இரா."]

இக்கவிதைகளைச் சொல்லிவிட்டு, அங்கே பசுமையாய் ஓங்கிவளர்ந்து நின்ற ஒருமரத்தை நோக்கி ஒரு மூச்சுவிட்டார்கள்; உடனே அந்தமரம் தீப்பற்றி எரிந்து சாம்பலாயிற்று. வந்து நின்று கேள்விகேட்டவர் திகைத்து நின்றார்.

இவ்வகைப்பட்ட பல மேம்பாடுகளும் பெற்ற சைகுல் ஆரிபு மன்ஸூறிபுனு அபூபக்கருற் றபாஇ றலியல்லாகு. அன்று அவர்கள் பதாயிகு நகரத்தில் அநேகம் பெரியோர்களுக்கு ஞானதேசிகராய் விளங்கி வாழ்ந்திருந்தார்கள். அக்காலத்தில்தான் இவர்களின் மருமகனார் சுல்தானுல் ஆ

ரிபீன் ஸையிது அகுமதுல் கபீரு றலியல்லாகு அன்கு அவர்க ளும் அவதரித்து, முன்னே சொன்ன மகிமைகள் அனைத் தும் வாய்ந்து, பதாயிகு நகரத்தில் வாழ்ந்து இருந்தார்கள்.

[மன்ஸூறுற் றபாஇ யவர்கள் இஷ்கைப் பற்றிக் கவிதைகள் சொன்னதும், பசியமர்த்தை எரிவித்ததுமான வரலாற்றை சுல் தானுல் ஆரிபீன வர்கள் தாமே றிவாயத்துச் செய்திருக்கின்றார் கள்.]

சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல் லாகு அன்கு அவர்கள் சகல இல்முகளிலும் நிரப்பமாய், விலாயத்துப்பெற்று, மேலான நன்மையுள்ளவர்களாயி ருப்பது அன்றி, முன் ஸைகு அலாவுத்தீன் அலிய்யுல் வாஸ் தி என்னும் தேசிகரிடத்து இறுஷாது பெற்றும் இருக்கின் றார்களே. அவ்வாறிருந்தும், தபற்றக்கு, இஜாஜத்து, கிலா பத்துக்களுடைய கிற்கா என்னும் போர்வைகள் பெற்றுக் கொண்டு, அப்போர்வை போர்த்த தேசிகரிடத்து பைஅத் துக்கொடுத்துத் தீரவில்லை. இக்கருமங்கள் பெரியோர்க ளுக்கு இன்றியமையாதன ஆதலால், இவற்றிற்கு அருக ரான தேசிகர் யார் என்று பல நாள் சிந்தனை பண்ணிக்கொ ண்டிருந்தார்கள். அக்காலத்துத் தங்கள் மாமனாராகிய முன்சொன்ன மன்ஸூறுற் றபாஇ யவர்களேயன்றி, வேறு ஒருவரும் அங்கில்லை. ஆதலால், இனி நாம் நம் மாமனார வர்களிடத்துத்தான் பைஅத்துக் கொடுத்து கிற்காக்கள் பெறல்வேண்டும் என்று நாயகமவர்கள் தீர்மானித்துக் கொண்டிருந்தார்கள்.

நாயகமவர்கள் ஒருநாள் தங்கள் மாமனாராகிய ஸை குல் ஆரிபு மன்ஸூறுற் றபாஇ யவர்கள்சமுகத்திற் போய்த் தாழ்ந்துநின்று: தேவரீர், தமியேன் இடத்து பைஅத்து வாங்கிக்கொண்டு, தமியேனுக்குத் தபற்றக்கு, இஜாஜத்து, கிலாபத்துக்களின் போர்வைகள் போர்த்துவிக்கவேண்டும்.

என்று கேட்டுக்கொண்டார்கள். இதற்கு அவர்கள்: மகனே, உம்மிடம் பைஅத்து வாங்கவும், உமக்கு கிற்கா க்கள் போர்த்தவும், நான் அருகன் அல்லன். ஆயினும், அவ்விதச் சடங்கு ஒன்று உமக்கு ஆகவேண்டியது உண்டுதான். அதனை இப்போது நீர் விரும்பியவண்ணம் நானே செய்விக்கின்றேன் என்று சொல்லி, நாயகமவர்களிடத்து பைஅத்து வாங்கினார்கள். இன்ன திக்றைப்பற்றிப்பிடித்து, இன்னவிதமாக முஷாஹதா, முறகபா க்களில் நிலைநிற்றல் வேண்டும்; அவற்றில் வழுவுதல்கூடாது என்று தேசிகர் இட்டகட்டளையை மீறாமல் ஒழுகி நிற்பேன் என்று கை தொட்டுக் கொடுக்கும் வார்த்தைப்பாடாகும் பைஅத்துக்கொடுத்தபின், மன்ஸூறுற் றபாஇயவர்கள் தங்கள் தரீக்காகிய றபாஇய்யா வில் நாயகமவர்களை முரீதாக்கி, அதன் திக்று பிக்று களையும், அவற்றின் ஆசாரங்களையும், வேறு சில ரகசியங்களையும் கற்பித்து, தபற்றுக்கு இஜாஜத்துக்களுடைய போர்வைகளையும் போர்த்தி, தங்கள் றபாஇத் தரீக்கிற்கு கலீபாவாக்கி, அந்த கிலாபத்து கிற்காவையும் போர்த்தினார்கள்.

தொன்றுதொட்டுப் பாரம்பரியமாய் வரும் குருத்துவம் பெறுவதற்கு அவ்வகைப்பட்ட தேசிகரால் பறக்கத்து என்னும் கருமாபிவிர்த்திக்குப் போர்த்தும் போர்வையான தபற்றுக்கு உடைய கிற்காவும், நான் உனக்குக் கற்பித்தவாறு நீ பிறர்க்குக் கற்பித்து, அவர்களைக் குருத்துவம் பெறச்செய் என்று தேசிகர் உத்தரவருளிப் போர்த்தும் போர்வையான இஜாஜத்து உடைய கிற்காவும், எல்லாவற்றிலும் நீ எனக்குப் பிரதியாயினையென்று, ஒரு தேசிகன் தன் மாணாக்கனைத் தன்னுடைய நிலையில் நிறுத்துவதற்குப் போர்த்தும் போர்வையான கிலாபத்து கிற்காவும், மன்ஸூ

றுற் றபாஇ யவர்கள் தங்கள் அருமையுள்ள மருகர் சுல்தானுல் ஆரிபீன் நாயகமவர்களுக்குப் போர்த்தி, தாங்கள் அறிந்து தெளிவாய்த் தெரிந்து கடைப்பிடித்துக்கொண்டமுடியும் இன்னதுதான் என்று உணர்த்தினார்கள். நாயகமவர்கள் தங்கள் மாமனாரிடத்து இவ்வகை அரியபெரிய விஷயங்கள் அனைத்தையும் பெற்றுக்கொண்டு, முன்னினும் பல மடங்கு சிறப்புற்று விளங்கினார்கள்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுற் றபாஇ றீலியல்லாகு அன்கு அவர்கள் ஒன்றிலும் குறைவுபட்டவர்களாயில்லை. அல்லாகுத் தஆலா அவர்களுக்குக் கொடுக்கவேண்டியவை அனைத்தையும் குறைவறக் கொடுத்துவிட்டான். இனி அவர்கள் வணக்கத்திற் பிரயாசைகொண்டு மேலும்மேலும் பதவியில் உயர்வடைவது ஒன்றேயன்றி, வேறில்லை. அதற்காகவே நாயகமவர்கள் எந்தநேரத்தும் அல்லாகுத் தஆலா வின் இஷ்கு என்னும் பெருவேட்கைமீறி, அவன்புறம் வாஸிலாவதில் விருப்புற்று இருந்தார்கள்.

கடைசியில் தங்கள் மாமனாரிடத்து நாயகமவர்கள் முரீதாய் பைஅத்துக்கொடுத்து கிற்காக்கள் பெற்றுக்கொண்டதால், நாயகமவர்கள் திக்று முதலான வணக்கத்தின் கிரியாசாதனங்களை நடத்தும் தரீக்கு றபாஇய்யா வயிறுவ. அந்தத் தரீக்கில்தான் நாயகமவர்கள் திரிபட்டிருந்து, தங்களிடத்து இறுஷாது பெறவருவோரை அந்த றபாஇத் தரீக்கில் முரீதாக்குவார்கள். நாயகமவர்கள் இன்னும் தங்கள் பெயராலே "அகுமதிய்யா" என்னும் தரீக்கைப் புதிதாக நியமகம் பண்ணும் வரையும் இந்தத் தரீக்கையே நடத்திவந்தார்கள். "அகுமதிய்யா" என்னும் தங்கள் சுய தரீக்கு நியமகமானபின் இரு தரீக்கையும் நடத்தினார்கள்.

[நாயகமவர்கள் மாமனாராகிய மன்ஸூறுற் றபாஇ யவர்களிடத்து கிற்காக்கள் பெற்றுக்கொண்டபின், அநேகம் காலஞ்சென்

று மன்ஸூறுற் றபாஇ யவர்கள் மருமகனாராகிய நாயகமவர்களிடத்து அவர்களின் அதும்த்ஃபா த் தறீக்கில் கிற்கா க்கள் பெற்றுக் கொண்டார்கள்.]

பைஅத்து

முற்றிற்று.

---

## 9-ம் அத்தியாயம்.

## தவசியல்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் இறக்குடைய வனத்திற்சென்று தவஞ்செய்து கொண்டிருந்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— சைகு அபுல் பத்ஹில் கஜுயமும், சைகு அபூமுகம்மது அலிய்யல் ஜன்ஜானியும், சைகு அப்துல்லாஹில் பகுதாதியும், சைகு இபுறாஹீமுல் அக்றபும்.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருக்குங் காலத்து, அவர்களின் மகிமை எட்டுத்திசைகளிலும் பரவிற்று. நாயகமவர்கள் இணையற்ற ஒரு சூரியனாகவும், அவர்களில் நின்று வெளியாகும் விலாயத்துகள் அச்சூரியன் எறிக்கும் கதிர்களாகவும், உலகம் எங்கும் பிரபலமும் பிரகாசமும் செறிந்து விளங்கின. பல வேறு வகைகளான விஷயங்களில் மாறி மாறிச் செல்கின்ற தங்கள் சிந்தனையைத் தடைசெய்து அடக்கி, அங்ஙனஞ் செல்லுதற்குக் காரணமாயுள்ள இந்திரியங்களை அடைத்து, ஒரு பொருளாகிய அல்லாகுத் தஆலாவின் புறத்திற்செலுத்தி நின்றார்கள். அதனால், உலக இச்சைக்கு நிமித்தமாயுள்ள பொறிபுலாதிகள் எல்லாம் ஒடுங்கின. உலகவாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள், மனை, ம

மனைவி, மக்கள் முதலான அனைத்தையும் அறவே வெறுத்து ஒழித்தார்கள். அவர்கள் சுகபோகத்தின வாழ்வையும் விரும்பியிருக்க இல்லை. வாய்க்கு இனிய பண்டங்களை உண்டு தின்றுகொண்டிருக்கும்போதும், மேனிக்கு அழகியவான உடைகளை உடுத்துக்கொண்டிருக்கும்போதும், அலங்காரமான சப்பிரமஞ்சத்தில் உடம்புக்கு இதமான மெல்லிய விரிப்புவிரித்துப் படுத்து உல்லாசமாய்த் தூங்கும்போதும், படைத்த நாயகனை வழிபட்டு வணங்கிக்கொண்டிருக்கும்போதும், தமக்கு உரிய அழகிய பெண்ணோடு புணர்ந்து இன்பம் நுகரும்போதும், மற்றுக்கருமங்கள் எதையுஞ் செய்துகொண்டிருக்கும்போதும் பிரிதற்கு உரியநேரம் வந்ததானால், இவ்வுடலைவிட்டுச் சீவன் பிரிந்தே போகும் என்பதை நாயகமவர்கள் அடிக்கடி கருதி, இனி நாம் போய்ச்சேர்தல் இன்ன இடத்துத்தான் என்பதைக் கடைப்பிடித்து அங்கேபோகுங் கருமத்தில் சிந்தையைவைத்தவர்களாயிருந்தார்கள். நாயகமவர்கள் உடுத்தும் ஆடையோ அந்தரங்கஸ்தானம் எம்மட்டோ அம்மட்டை மறைக்கக்கூடியதே அல்லாமல், அதற்கு அதிகமாகவும் அழகானதாகவும் இராது. உண்ணும் உணவோ விரும்பினால் யாதாயினும் துப்புரவாக ஹலாலான தாகக் கிடைக்கும் உணவுப்பொருளிற் சிறிதே அல்லாமல், வேறே நாவுக்கு இதமான பலவகைப்பட்ட உணவுகள் அல்ல. தரிபட்டிருக்கும் இடமோ இன்னதுதான் என்று நிலைபரம் இல்லை; நாடும் இடம் எதுவோ அது. நாட்கழிக்குதலோ அல்லாஹுத்தஆலாவை நெருங்கிப்போகுங் கருமம் ஒன்றில் அன்றி, வேறே ஒன்றிலும் அன்று. இவ்வாறு தங்கள் சீவியகாலத்தைக் கழித்துவந்தார்கள். அவர்கள் கருமங்களை அல்லாகுத் தஆலா மிக உவந்து ஒப்புக்கொண்டார்கள்.

இன்னும், நாயகமான சுல்தானுல் ஆரிபீன வா[illegible]ள்; அறியாமையால் நானே யென்னும் அகங்காரமாகிய ஆ[illegible]

வமும், ஒன்றும் புலப்படாது மறைந்துகிடத்தற்குக் காரணமான மூலமும், ஒன்றை இச்சிக்குங் காமியமுமாகிய இம்மூன்றுவகை மலங்களும் விளையும் இடமான சரீரம் சுத்தமாதற்கு நன்மையென்கின்ற நீராற் கழுவி, அம்மலங்கள் என்னும் இருள்கவிந்துள்ள இருதயத்தில் "இனி நாம் இல்லை" என்று நின்று எரியும் ஞானச்சுடரைக் கொளுத்திவிட்டார்கள். என்றும் அவியாது நின்று கதிர்வீசி யெரிகின்ற தீபமான அந்தச்சுடர், தோற்றப்படுபவை அனைத்தும் அநித்தியம்; நித்தியமானபொருள் ஒன்று உண்டு என்கின்ற தெளிவைக்கொடுத்து நின்றது. இவ்வாறு தெளிந்தபோது, நாமும் தோற்றப்படுபவற்றுள் ஒரு பொருளாய், அநித்தியமானதாய்த்தான் இருக்கின்றோம். அவ்வாறு இருந்தால், நாம் ஒன்று; நம்மை ஆக்கினவன் ஒன்று ஆக வஸ்து இரண்டாயிருத்தல் கூடாது. நாமும் இல்லையாக வேண்டும் என்று தீர்மானித்துத் தங்களையும் இன்மையாக்கி, அத்துவிதம் என்கின்ற வஹதத் தில் தரிபாடானார்கள்.

இவ்வாறாகத் தங்களை இன்மையாக்கி, அல்லாகுத் தஆலா வை உண்மையாக்கி நிற்கும் நிலைமையில் தரிப்பாடான நாயகமவர்கள், பின் அவ்வுண்மைப்பொருளில் ஒடுங்குதற்கும் பாடுபட்டு முயன்றார்கள். அக்காலத்து அல்லாகுத் தஆலா அடுத்தடுத்து அவர்களுக்குச் சொப்பனத்திலே தோற்றரவாயினான். நாயகமவர்கள் அல்லாகுத் தஆலா வைப் பல தடவைகளில் சொப்பனத்திற் கண்டார்கள். அப்படிக் காணுங்காலத்து ஒருதடவை கண்டபோது, நாயகமவர்கள் அவனை விளித்து "யா அல்லா, நான் உன்னிடம் எவ்விதம் வந்து சேருவேன்?" என்று கேட்டார்கள். இக்கேள்விக்கு அவன் "நீர் என்னிடம் வருவதற்கு விரும்பினீராயின், உம்மை ஒழித்துவிட்டு என்னிடம் வந்து சேரும்" என்று மறுமொழிசொன்னான்.

இவ்வாறு கண்ட சொப்பனத்தை நாயகமவர்கள் பலவாறு கவனித்தார்கள். நம்முடைய ஆண்டவன் நம்மை

விட்டொழித்துத் தன்னிடம் வரும்படி சொன்னானே, அஃதென்ன ? நம்மை விட்டொ[illegible] எப்படி ? நாம் என்கின்ற பறுவுடைய மு[illegible]த்தில் நபீ செய்[illegible] விடுதல் வேண்டும். நம்மை ஒழிக்குதல் என்பது இதுதான். இதற்கு நாம் அடர்ந்த காட்டிற்சென்று ஊண் உறக்கம் இன்றி அவனுடைய முஹப்பத்திலேயே இருப்பமாய், இச்சரீரத்தைப் பேணாது திரிதலே உத்தமம் என்று இவ்வாறு சிந்தனைபண்ணித் தீர்மானித்தார்கள்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் காடுகுடிபோகத் தீர்மானித்து பதாயித் நகரத்தைவிட்டுப் புறப்பட்டார்கள். புறப்பட்டு, உடலுக்கு இன்றியமையாத சாதனங்கள் அனைத்தையும் விலக்கி ஒழித்து அல்லாகுத் தஆலா ஒருவனையே இருதயத்தில் சிந்தித்தவர்களாய், தன்னந் தனியே நடந்தார்கள். பிரபஞ்சத்து இச்சைகளுள் ஒன்றேனும் அவர்கள் இருதயத்தில் ஊடாட இடங்கொடுக்கவில்லை. முன்னே சொன்னவாறு அந்தரங்கஸ்தானம் மாத்திரம் மறையக்கூடியதான ஆடையும், சிறப்பான சிரசில் பழைய ஒரு தொப்பியும் அன்றி, வேறொன்றும் அவர்கள் வசம் இல்லை. இவ்வாறு முற்றத்துறந்த அவதூதத் துறவியாய் அடர்ந்த வனத்தைத்தேடிச் சென்றார்கள்.

நாயகமவர்கள் வழிப்பயணத்தின் தொடக்கத்திலேயே சரீரம் என்னும் பாத்தியை ஒன்றுபடுதலாகிய தௌஹீதில் முயன்று நிற்கும் முயற்சியென்கின்ற ஏராலே உழுது, தெளிதல் என்னும் நீரைப்பாய்ச்சி, தவம் என்னும் வித்தை ஊன்றி, அவல நினைவுகளான களைகளை முளைத்தற்கு இடமாகும் ஐம்பொறிகளையும் அடைத்துக் காப்பாற்றிக் கொண்டார்கள். கைரியத்து என்கின்ற வேற்றுமையில் நின்று நீங்கி, துவிதம் என்கின்ற இரண்டுபடுதல் அற்று

ஒன்றுபட்டு நிற்கும் நிலைமையிற் சிறந்த நாயகமவர்கள் இவ்வாறாக நடந்து ஒரு பாலைநிலத்திற் சேர்ந்தார்கள்.

நாயகமவர்கள் போய்ச்சேர்ந்த அப் பாலைநிலக் கொடுமைகள் இன்னவகையின என்று சொல்லுந் தன்மையில் உள்ளவையல்ல. அந்நிலமுழுமையும் கானல் பரந்து செறிந்து தோற்றும். சித்திரலைச் சொரிந்து வைத்ததுபோலக் காங்கைவீசும் பள்ளங்களும், பரந்துகிடக்கும் பாறைகற்களும் அக்கினியாகவேயிருக்கும். முடிவாகச் சொல்லவேண்டுமானால், அப் பாலைநிலத்தை நினைக்கின்ற உள்ளமும் கருகிப்போம் என்றே சொல்லவேண்டும். இவ்விதக் கொடிய பாலையை நாயகமவர்கள் கடந்து, இருக்கு தேசத்துக் காடுகளில் மிகப்பெரியதான ஒரு காட்டிற் சேர்ந்தார்கள்.

தாங்கள் தரிபட்டு இருந்து தவஞ்செய்வதற்கென்று நாடிப்போய்ச் சேர்ந்த இந்தக் காடுதான், கிஸ்றா வுடைய பதினான்கு அடுக்கு நிலையுள்ள கொத்தளம் இடிந்துவிழுந்து பாழாய்க்கிடக்குங்காடு. இந்தக் காட்டிலுள்ள அந்தப் பாழ்ங் கொத்தளத்திலே தான், சுல்தானுல் ஒளலியா, குத்புல் அக்தாபு, கௌதுல் அஃலம், சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் இதற்கு முன்னே வந்திருந்து தவஞ்செய்தார்கள்.

அக்காடானது வெகுதூரம் அகன்று விரிந்து வானத்தை அளாவுகின்ற பருப்பமான விருக்ஷங்கள் அடர்ந்ததாய், துஷ்ட மிருகங்கள் சஞ்சரிப்பதாய், உயர்ந்த கொடுமுடிகளையுடைய மலைகள் நெருங்கினதாயுள்ளது. அங்கே, கருத்த எருமைகள் நெருங்கிநிற்பதுபோல் தெரிகின்ற பாறைக்கற்களில் புலிகள்போய்த் தாக்கும் சத்தமும், எதிரே அடிக்கும் காற்றை உட்கொண்டு வெளியிற் கக்குகின்ற மலைக்குகைகளில் நின்று வரும் சத்தமும், யானைகளை இரைக்கென்று தேடித்திரியும் சிங்கங்களின் சத்தமும்,

ஆகாயத்தே இடிக்கும் இடிச்சத்தமும், மரங்களின்மீது மோதுகின்ற காற்றுச் சத்தமுமே யல்லாமல், வேறுசத்தம் இல்லை. கரிய மேகங்கள் படிந்துகிடக்கும் விருக்ஷங்கள்நெருங்கிச் சூரியனின் கதிர் உள்ளே நுழையாமல் இருண்டு, மனிதர் செல்லாவண்ணம் பிரப்பங்கொடிகள் பின்னி, ஒலித்து விழுகின்ற மலையருவிகள் பக்கத்தும் பெருகிச்செல்லும் அக்காட்டினிடத்து, இருள் அடர்ந்து, தவறிவிழுந்த யானையையும் விழுங்கும் ஆழமுடையதாய் முதலைகள் சஞ்சரிக்கும் மடுக்களும், மலைப்பிளப்புக்களில் மலைப்பாம்புகள் மூச்செறிந்து முடங்கிக் கிடக்கும் பொந்துகளுள்ள மரங்களும், அங்கங்கே அதிகம் உண்டு. இடிந்து பாழ்பட்டுக் கிடக்கும் கிஸ்ரு வின் கொத்தளப் பக்கத்தில் அதிக ஆழமான நீண்ட நீரோடை ஒன்றும் ஓடிச்செல்கின்றது. தீனுக்கு உயிரருளிய நாயகமவர்களும், இம்மையிலேயே சுவர்க்கத்தை விலைக்குவிற்ற நாயகமவர்களும் பேரிருந்து தவஞ்செய்த காடாதலால், அதை வருணித்துச் சொல்லுதல் யாரால் முடியுங் காரியம்! இவ்விதமான அந்தக் காட்டில் நாயகமவர்கள் போய் நுழைந்தார்கள்.

உள்ளே நுழைவோர் வானத்தைக் காணக் கூடாததாய் மேலே கவிந்து விலங்கினங்கள் சஞ்சரிக்கும் விசாலமான அந்தக் காட்டினிடத்து சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் போய், அதனையே தங்கள் இருப்பிடமாக்கொண்டு, அங்கிருந்து தவஞ்செய்யத் தொடங்கினார்கள். தாங்கள் கொண்டுள்ள கோட்பாட்டிற் சிறிதும் வழுவுறாது மனத்தின்கண் ஊன்றிய கருமத்தை நிலைமைப் படுத்தி, களங்கம் அற்றுத் தெளிந்த சுத்தமான உள்ளத்தோடு ஆசாரம் தவறாமல் தவம்புரிந்தார்கள். சிலகாலம் அடர்ந்த வனத்தில் திரிந்தும், சிலகாலம் கிஸ்ரு வின் கொத்தளத்துமேல் தரிப்பட்டும், சிலகாலம் ஓடைக்கரையிலுமாகச் சஞ்சரித்தார்கள். இவ்வகைச்

சஞ்சாரத்தில் நான்கு கருமங்களை நாயகமவர்கள் கடைப் பிடித்து நின்றார்கள், அவற்றுள்:- ஒன்றாவது தொழுதல், இரண்டாவது முறுகபா செய்தல், மூன்றாவது திக்று செய்தல், நான்காவது குர்ஆன் ஓதுதல். இந்த நான்கு கருமங்களையும் இடைவிடாதவண்ணம் செய்துவந்தார்கள். இக் காலத்தில் நாயகமவர்களுக்கு ஊண் உறக்கம் சிறிதும் இல்லை. ஒவ்வொரு சமயத்துப் பசியுண்டானால், அக்காட்டுக்குள் உதிர்ந்து கிடக்கும் சருகுகளில் ஒன்றிரண்டு தின்பார்கள். அவ்வாறு தின்றால், அப்போதே உபவாசம் என்னும் நோன்புவைத்துக்கொண்டதாகத் தீர்மானித்துக் கொண்டு, நாற்பது நாள், அல்லது ஐம்பது நாள் வரையும் இராப்பகல் அவ்வுபவாசத்தோடேயிருப்பார்கள். அவ்வுபவாசத்தைப் பாரணஞ்செய்ய நாடினால், பின்னும் அச் சருகுகளில் ஒன்றிரண்டு தின்று, ஓடையிலாவது, சுனையிலாவது ஒரு சிறங்கை நீரை அள்ளிக் குடித்து, பின்னும் அவ்வுபவாசமாயேயிருந்துகொள்வார்கள். நித்திரை யென்பது இரவு பகலாகச் சிறிதும் அவர்களுக்கு இல்லை. சில சமயத்து முஷாஹதா வுடைய இருப்பில் அறிதுயில் சிறிது உண்டாகும். அதுவேயன்றி, வேறுவித நித்திரை இல்லை.

நாயகமவர்கள் இவ்விதமாய்த் தவஞ்செய்யும் காலத்து, உலகவாழ்க்கையை உவந்த மனிதரான விலங்குகள் சிக்குண்ணும்படி இன்பம் என்னும் வலையை வீசி அவர்களை அதனுள் அகப்படுத்தி, அவர்களுக்கு உரிய அறிவு அனைத்தையும் வழித்து எடுத்துக்கொண்டு, கொடிய நரகத்தில் தள்ளிவிழுத்தும் பாதகனான இபுலீசு பலதரம் அடுத்து, தன்னால் இயன்றவகையெல்லாம் பிரயாசைப்பட்டு நாயகமவர்களைக் கலைத்தான்; ஒருவகையிலும் அவன் சித்தியடைந்திலன், உருத்தோற்றத்தோடும், அஃது இன்றியும் பலவாறுவந்து போதித்தான்; வெகுஉபாயத்துடனுக்கமாகத் தாமினை

யுண்டாம் நல்லுணர்வுபோல இருதயத்தில் பலவிதக் குழப்பங்களை உண்டாக்கினன்; பலவகைச் சேஷ்டைகளைச் செய்தான். அறிவிற்சிறந்த நாயகமவர்கள் அவன் செய்கை ஒவ்வொன்றையும் தெரிந்து உடனுக்குடன் விலக்கிவிட்டார்கள். அவன் கலைக்கக் கொண்டுவரும் ஒவ்வொரு கருமமும் அக்கினிக்குண்டத்தில் விழும் நீர்த்துளிபோல அற்றுப்போயிற்று. தன் காரியம் கைகூடாததால், அக்கொடியபாதகன் நாயகமவர்களை அணுகாதுவிட்டு அகன்றான். பின்பு அவர்கள் அவனால் உண்டாகும் விக்கினம் ஒருசிறிதும் இன்றி, தாங்கள் புரியும் தவத்திற் பராக்காயிருந்தார்கள்.

காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் என அறுவகைப்பட்ட உட்பகைகளை நாசஞ்செய்து, சாத்துவிகம் ராசதம் தாமதம் என்னும் மூவகைக் குணங்களுள் ஞானம் அருள் தவம் பொறை வாய்மை மேன்மை மோனம் ஐம்பொறியடக்கல் என்கின்ற எண்வகை இயல்பும் அமைந்த சாத்துவிக குணமே மேம்பட்ட நாயகமவர்கள் அந்த வனத்திற் சஞ்சரித்துத் தவத்திற்பூண்டு நிற்கும் தன்மை இப்படிப்பட்டது என்பது யார்க்கும் அரிது. இரவு எனவும் பகல் எனவும், வேனில் எனவும் மாரி எனவும், விலங்கினம் எனவும் பறவைச்சாதி எனவும், இனிப்பு எனவும் கசப்பு எனவும், வானம் எனவும் பூமி எனவும் விவரம் தோற்றுதவாறு சிலகாலம் அங்கே திரிந்தார்கள். பின்பு, எல்லாம்வல்ல மெய்ப்பொருளாகிய அல்லாகுத் தஆலா வின் பேரருள் முதிர்ந்து, ஹக்கை அறிவதில் மறைப்புக்கு ஏதுவாய் அடுக்கடுக்காயுள்ள இருதயத்திரைகளெல்லாம் ஒன்றொன்றாகத் திறந்தன. திரைகள் அனைத்தும் திறந்தபின் முஆயினு வாகுதற்கு அகக்கண் திறக்கப்பட்டது. அதன்பின், அந்தர்முகம் பகிர்முகம் என்னும் இரண்டிலும் பலவாகக் காணப்படும் பிரபஞ்சவகைகள் முழுதும் இன்னவகையின என்று முடிவுபோகும்

அவையும் வெளியாயின. தன் உண்மையைப் பல்வகைப் பட்ட பாத்திரங்களிற் பலவாகக் காட்டும் சந்திரன் ஒன்றேயன்றிப் பலவல்ல; பாத்திரங்களிற் பலவாய்த் தோற்றப்படுபவை அனைத்தும் சாயாரூபமே என்று முடிவது போல, ஹக்கின் உண்மை ஒன்றேதான் என்று நிதானித்து, விரிந்து நிற்பனவைகளையெல்லாம் ஒடுக்கி, வஹதத்துல் உஜூதை த் தரிப்படுத்தினார்கள். அதனால், வேற்றுமையும், வெறும் பெயரும், அவைகொண்டு தோற்றும் தோற்றமும், கூடுதலும், பிரிதலும், மாறுதலுமாகிய எல்லாம் அழிந்து, தாமும் இல்லையாய் ஒரு பொருளோடு உலயில் ஆய்விட்டபடியால், நாயகமவர்கள் ஆநந்தமான கடலில் அமிழ்ந்தி மிதந்தார்கள். காலத்தையும், திசையையும், தோற்றப்பொருள்களையும் காணாமல், காண்பதற்கு அரிதான வஸ்துமயமான வெள்ளத்தில் மிதந்தபோது, நாயகமவர்களின் ஸிபத்துகள் அனைத்தும் நீங்கி, எல்லாம் அவனுடைய ஸிபத்துகளாய் மாறின. தோன்றல், திரிதல் கெடுதல் என்னும் முக்குணங்களைப்பற்றித் தொடர்ந்து வருகின்ற அடிமை யென்கின்ற விகாரத்தை மாய்த்து, தானே தன்னைக் காட்டுதல்போல், தம்மைத் தம்மில்தாமே சிறப்புற, அவனைக்கொண்டே அவனைக்கண்டு ஆநந்தம் ஆடி நின்றார்கள்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுற் றபாஇறலியல்லாகு அன்கு அவர்கள் இவ்வாறு காணக்கூடாத வஸ்துவைக்கண்டு நெருங்கி அநுபவித்த இன்பத்தில் களிகூர்ந்து, புனிதம் அடைந்து மேன்பதம்பெற்று நின்றார்கள். இவ்வளவில் இருபத்தொன்பது வருஷங்கள் சென்றன. இவ்விருபத்தொன்பது வருஷங்களும் இருக்குடைய காட்டில் சஞ்சாரஞ்செய்து பெறுதற்கு அரிய பெரும்பேறுகள் எல்லாம் பெற்றபின், காட்டைவிட்டு நீங்கித் தாங்கள் வேறு இடம் போகுதற்கு நாட்டங்கொண்டார்கள்.

நாயகமவர்களுக்கு இந்த நாட்டம் உண்டாகவே, அந்தக் காட்டைவிட்டு வெளிப்பட்டார்கள். அவர்கள் அங்கே குடியிருந்தகாலம் முழுதும், சிங்கமும் யானையும், புலியும் மானும், பகைமையின்றி ஒன்றித்து வாழ்ந்தன. நாயகமவர்கள் நீங்கிவிட்டபடியால் இவ்விதச் சமாதானம் இனித் தங்களுக்கு இல்லாமற்போகுமேயென்று அந்தக்காடு கருதி, கவலை அடைந்தது.

தவசியல்

முற்றிற்று.

---

## 10 - ம் அத்தியாயம்.

## காரண நாமம் பெற்றது.

[இது, சுல்தானுல் ஆரிபீன், சையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் "சுல்தானுல் ஆரிபீன்" என்னும் காரணப் பெயரை அல்லாகுத் தஆலா விடத்திற் பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றாவிகள்:—சைகு அலியுபுனு ஹைத்தியும், சைகு தக்யுத்தீன் அபீ உமறுல் கர்மானியும், சைகுல் மஷாயிகு அபூமத்யனுல் மக்றிபீயும்.]

நாயகமவர்களுக்கு இதுபரியந்தம் சுல்தானுல் ஆரிபீன் என்னும் பெயர் வழங்கவில்லை. எல்லாரும் அகுமதுல் கபீறு என்றே வழங்கினார்கள். இருபத்தொன்பது வருஷம் காட்டிற்சென்றபடியால், நாயகமவர்கள் அந்தக்காட்டை விட்டு வெளிப்பட்டார்கள். வெளிப்பட்டுத் தங்கள் சுயநகரமாகிய பதாயிஹுக்குப் போகவில்லை; நேரே ஹிஜாஜ் தேசத்தை நாடிச் சென்றார்கள்.

ஹிஜாஜின் பூமியிலுள்ள பல இடங்களையும் நாயகமவர்கள் கடந்து பரிசுத்தபட்டணமாகிய மக்காவை அடைந்து, அங்குள்ள மலைகளில் சிறப்பும் மகிமையும் கொண்ட

அறபா என்னும் மலைமேல் ஏறி அதன் சிகரத்திற்போய், வலது பாதத்தைத் தூக்கி மடக்கிவைத்து இடது பாதத்தைத்தரையில் ஊன்றிக்கொண்டு, தௌஹீதுடைய நிலையில் ஒரேபடியாய் நின்றுவிட்டார்கள். அவர்கள் கொண்ட தௌஹீது நிலை, வெண்ணிறம் உள்ள பளிங்குக் கூட்கோத்த செந்நிறநூல் வெளியே தெரிவதுபோல் தெளிவான இருதயத்தில் உண்டான தஜல்லி வெளியிற் காணும்படியானதாய், அவர்களுடைய ஸிபத்துகள் ஹக்குடைய ஸிபத்துகளாய் இருந்தன. ஆதியிலே உள்ளத்தில் மூட்டியிட்ட இஷ்கு என்னும் அக்கினியை அவியாவண்ணம் மேலும் மேலும் மூளும்படிச்செய்துகொண்டு அந்த நிலையிலேயே அநேகநாள்வரையும் நின்றார்கள்.

இவ்விதமாக நாயகமவர்கள் ஆசைக்கடலில் முழுகிக் கிடக்கும் நிலையில் நிற்குங்காலத்து; ஒருநாள் மகத்துவமுள்ள அல்லாகுத் தஆலா சிரித்தவனாக அவர்களுக்கு வெளியானான். தன்னுடைய ஜலால் ஜமால் என்னும் ஒளியைக் கொண்டு நாயகமவர்களின் அகக்கண்ணுக்கு வெளியான அல்லாகுத் தஆலா நேரில் "யா சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு" என்று இயற்பெயரோடு ஒரு சிறப்புப் பெயரையுஞ் சேர்த்து விளித்தான். இவ்வாறு விளித்தவன் மறுபடியும் "யா கௌதுல் அகுலம், நீர் என்னுடைய ஹபீபு; நான் உம்முடைய ஹபீபு. நீர் என்னுடைய மஉஷூக்கு; நான் உம்முடைய மஉஷூக்கு. நீர் என்னை நாடுகிறவர்; நான் உம்மை நாடுகிறவன். நீர் என்மீது பற்றுதலுள்ளவர்; நான் உம்மீது பற்றுதலுள்ளவன். என்மீது வைத்த இஷ்கிலும், முஹப்பத்திலும் மிகைத்து, என்னை அறிந்தவர்களுள் நீரே சிறந்தவர் ஆனீர். ஆதலால் நீர் "சுல்தானுல் ஆரிபீன்" ஆய்விட்டீர்" என்று கூறினான். அந்த நேரத்தில் நாயகமவர்கள் அல்லாகுத் தஆலாவைக் கண்டார்கள். ஔலியாக்கள் விஷயத்தில் "என் ஔலியாக்கள்

என்னைக்கொண்டே என்னைக் காண்பார்கள்; என்னைக் கொண்டே பேசுவார்கள்; என்னைக்கொண்டே கேட்பார்கள்" என்று அல்லாகுத் தஆலா சொன்னவாறே அவனைக் கண்டார்கள்.

[இந்த இடத்தில் நாயகமவர்கள் திருவாய்மலர்ந்து "அல்லாகுத் தஆலா சொன்னதுபோல, அவனை முஷாஹதா செய்வதில் அவனைக் காண்பதற்கு எனக்குப் பற்றுதல் உண்டாக்கினனே, அதனை நான் அநுபவித்துக் கொண்டேன். என்னைப்போல அநுபவிக்காதவன் இதன் ரகசியத்தை அறியமாட்டான்" என்று சொன்னார்கள்.]

இவ்வாறு நாயகமவர்கள் அல்லாகுத் தஆலாவைக் கண்டு, அவன் கொடுத்த காரணநாமமும் பெற்றுக்கொண்டு நின்றபோது, தங்களுக்கு முன்னே நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் அஸ்ஹாபுகள் பலர் சூழ வருவதைக் கண்டார்கள். கண்டவுடன் தூக்கிநின்ற இடதுபாதத்தையும் நிலத்தில் ஊன்றி, மூன்று அடிகள் முன் வைத்து எதிர்சென்று நடந்து "அஸ்ஸலாமு அலைக்கும் யா ஜத்தீ" என்று ஸலாம் கூறினார்கள். அதற்கு நபி நாயகமவர்கள் "வ அலைக்கும் ஸலாம் யா வலதீ; நீர் சுல்தானுல் ஆரிபீன் ஆனீர். அன்றியும், மஹ்பூபு றப்பில் ஆலமீனும் ஆனீர். நான் இனி அன்பியாக்கள், முறுஸலீன்கள், ஒளலியாக்கள் என்னும் இவர்கள் கூட்டத்தில் உம்மைக் குறித்துப் பெருமை பேசுவேன்" என்று திருவாய்மலர்ந்து சொல்லிவிட்டு, நாயகமவர்களின் அழகிய நெற்றியை முத்தம் இட்டுக்கொண்டு, தங்கள் வலதுகரத்தை நாயகமவர்களின் நெஞ்சுமேல் வைத்து "யா அல்லாஹ், என்னுடைய முஹப்பத்தையும், மஅரிபத்தையும் இந்த சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறுக்கு அதிகமாக்குவாயாக" என்று துஆ இரந்தார்கள்.

நபி நாயகமவர்கள் இவ்விதம் துஆ செய்து விட்டுத் தங்கள் அஸ்ஹாபுகள் புடைசூழ மதீனாவை முன்னோக்கிச் செல்வதை, நாயகமவர்கள் கண்டார்கள். அதன்பின் "றிஜா

லுல் கைபு" என்னும் மறைவான மனிதராகிய ஆகாசவாசிகளைக் கண்டார்கள். அவர்கள் இருவர், மூவர், நால்வராகக் கூடி வகுப்பு வகுப்பாய் நாயகமவர்களுக்கு எதிரே வந்து "நீர் சுல்தானுல் ஆரிபீன் என்னும் பட்டத்தைப்பெற்றுக்கொண்டீர்; அன்றியும் நீர் மஹ்பூபுறப்பில் ஆலமீனும் ஆய்விட்டீர்" என்றுகூறி வந்தபடியே மீண்டு சென்றார்கள்.

அதன்பின் நாயகமவர்கள் அறபா மலையில் நின்று இறங்கி அறபு தேசத்தைக்கடந்து, இருக்குக்கு வந்தார்கள். வரும் வழியில் ஒரு நகரத்தினுள்ளும் பிரவேசிக்க இல்லை. கடைசியாக பகுதாதுக்கும் பஸறாவுக்கும் இடையில் உள்ள வாஸ்து என்னும் நகரத்திற்குள் புகுந்தார்கள். அங்கே புகுந்தபோது, அவ்வூர் வீதிகளில் போவாரும் வருவாரும் நாயகமவர்களைக் கண்டு எதிரேவந்து, இருகரங்களையும் பிடித்துக் கண்களில் வைத்து முத்தம் இட்டுக்கொண்டு "யா சையிதீ, தாங்கள் சுல்தானுல் ஆரிபீனும், மஹ்பூபுறப்பில் ஆலமீனும் ஆய் விட்டீர்கள். தங்களுக்குக் கிடைத்த சுல்தானுல் ஆரிபீன் என்னும் காரணத் திருநாமம் உண்மையானது. அதை நாங்கள் பொருந்திக்கொண்டோம். சத்தியமாகத் தாங்கள் சுல்தானுல் ஆரிபீன் தாம்" என்று வியந்து கூறினார்கள். இப்படிக் கூறுவோர் எல்லாரும் ஒலியாக்களாயிருந்தார்கள்.

பிறகு நாயகமவர்கள் வாஸ்து நகரத்தை விட்டுநீங்கி, தங்கள் சுயநகரமாகிய பதாயிகு நோக்கி வந்தார்கள். வரும்வழியில் அவர்களுக்கு எதிர்படும் மலைகளும், காடுகளும், நதிகளும், விருக்ஷங்களும், மிருகங்களும், பறவைகளும், மற்றுமுள்ள சராசரங்கள் அனைத்தும் "அஸ்ஸலாமு அலைக்கும் யா கௌதுல் அகுலம், யா சுல்தானுல் ஆரிபீன், யா சையிது அகுமதுல் கபீறு" என்று கூப்பிட்டு ஸலாம் கூறின. இதை அறிந்து நாயகமவர்கள் வழிகளை நீங்கி பதாயிகு நக

ருஞ்சேர்ந்து, அதனுள் புகுந்தார்கள். முப்பது வருஷங்க ளுக்கு அதிகமான காலம்வரையும் அவ்வூரைவிட்டுப்பிரிந் திருந்த நாயகமவர்கள் உள்ளே புகுந்தபோது, அவர்களை அறிந்தோரும், அறியாதோரும் ஆகிய அங்குள்ளார் அ னைவரும் எதிர்கொண்டுவந்து "அஸ்ஸலாமு அலைக்கும் யா சுல்தானுல் ஆரிபீன்" என்று கூறிக் கையைப்பிடித்து முத் தம் இட்டார்கள்.

நாயகமவர்கள் பதாயிகு நகரத்திற் புகுந்தபோது இவ் வாறு நடப்பதைக்கண்டு, முந்திராம் கபுறுஸ்தானிற்போய் இறந்தோர்களை ஜியாறத்துச்செய்து கொள்ளலாம் என்று எண்ணி, அவ்வூர் கபுறுஸ்தானிற்போய்ப் புகுந்தார்கள். பு குந்த மாத்திரத்தில், மௌத்தாய் அங்கே அடங்கியிருக் கின்ற மையத்துகள் எல்லாம் கபுறுகளில் நின்று எழுந்து நின்றுகொண்டு "அஸ்ஸலாமு அலைக்கும் யா சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு" என்று சத்தம் இட்டன. அங்குள்ள கட்டிடங்களும், சுவர்களும், மேனாக்களை களும், மற்றப் பொருள்களும் அப்படியே சத்தம் இட்டு அழைத்தன. இவ்வாறாக நாயகமவர்கள் அங்கே ஜியாறத் தை முடித்துக்கொண்டு, தங்கள் மனையிற்போய்ச் சேர்ந் தார்கள்.

நாயகமவர்கள் வீடுவந்து சேர்ந்தபின், தரிசனைக்கு வருவோரும், வெளியில் எதிர்ப்படுவோருமே சுல்தானுல் ஆரிபீன் என்று அழைக்கின்றார்கள் அன்றி, தாங்கள் திரு வாய் திறந்து இப்பெயர் எனக்கு இன்னவிதம் கிடைத்த து என்று சொல்லவேயில்லை. இதற்குமுன் ஒருபோதும் ஒருவரும் சொல்லி அழைக்காத புதுநாமம் அப்போது தான் அங்கே வழங்கத் தொடங்கிற்று. அதனைப் பழைய பெயர்போலவே எல்லாரும் வழங்கினார்கள். தங்கள் திரு வாயினால் அந் நாமத்தை வெளிப்படுத்தாமல் இருப்ப தைப்பற்றி அல்லாகுத் தஆலா தன் சமுகத்தில் நின்று

"உம்மை காரண நாமத்தை வெளிப்படுத்தும்" என்று எழுபது தடவை கட்டளை பண்ணினன் அதற்குமேல் நாயகமவர்கள் சுல்தானுல் ஆரிபீன் என்னும் காரண நாமத்தைத் தங்கள் வாயால் வெளியாக்கினார்கள்.

ஒருநாள் நாயகமவர்கள் தங்கள் சமுகத்தில் வந்து கூடியிருக்கும் பெரியோர்களை நோக்கி "அறபா மலையில் எனக்கு சுல்தானுல் ஆரிபீன் என்னும் பெயர் கிடைக்குமுன் ஒருவரும் அப்படி என்னை அழைக்க வில்லை "என்று சொல்லிவிட்டு, குர்ஆன் ஆயத்து களிற் சிலவற்றை ஓதினார்கள். அவை:—

1. من كان في هذه أعمى

فهو في الآخرة أعمى

2. وفي أنفسكم أفلا تبصرون *

3. شهد الله أنه لا إله إلا هو *

இந்த ஆயத்து களின் பொருள்:—

[1 - துன்யா வில் ஹக்கை அறியாமல் அகக்கண் குருடாயிருப்பவன், ஆகிரத் திலும் முகக்கண் குருடா யிருப்பான்.

2 - உங்களில் ஹக்கை அறிகிற ஆயத்து கள் உண்டாயிருக்கின்றன. அவற்றை நீவிர் பார்க்க வில்லையா!

3 - அல்லாகுத் தஆலா தன்னையன்றி வேறே ஆண்டவன் ஒருவனும் இல்லை என்று சாக்ஷி சொல்கிறான்.]

இப்பொருள்களுள்ள மேற்குறித்த மூன்று ஆயத்து களையும் நாயகமவர்கள் ஓதிச் சிரித்துவிட்டு, எழுந்து தங்கள் வணக்க ஸ்தானத்திற் சென்றார்கள்.

காரண நாமம் பெற்றது

முற்றிற்று.

11 - ம் அத்தியாயம்.

## மிஃறாஜ்.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களுக்கு உண்டான மிஃறாஜின் வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு அலியிபுனு உதுமான்.]

நாயகம் சையிது அகுமதுல் கபீற் றிபாஇ றலியல்லாகு அன்கு அவர்களுக்கு அல்லாகுத் தஆலா வினால் கொடுக்கப்பட்ட சுல்தானுல் ஆரிபீன் என்னும் காரணநாமம் அன்று முதல் உலகம் எங்கும் பிரபலமாயிற்று; இத்திருநாமத்து மகிமையை உணர்ந்த ஒளலியாக்களெல்லாம் நாயகமவர்களுக்கு அஞ்சி வழிபட்டார்கள். பல தேசங்களிலும் உள்ள ஒலிமார் பலர் திரள் திரளாய் பதாயிகு நகரத்திற்கு வந்து நாயகமவர்களைத் தரிசித்து, அவர்களிடம் இறுஷாது பெற்றுக்கொண்டார்கள். தித்திப்பான தேன் சிந்தும் நறுமலர்செறிந்த விருக்ஷத்தைப் பல இடங்களிலும் உள்ள வண்டுகள் தேடிவருதல்போல், பலபாகங்களில் வசிக்கும் மனிதர் பலர் நாயகமவர்களைத்தேடி வந்து கொண்டிருந்தார்கள். அவ்வாறு வருபவர்களையெல்லாம் நாயகமவர்கள் உபதேசஞ்செய்து முரீதாக்கி, நேர்வழி காட்டாநின்றார்கள். இக்கருமம் நாட்குநாள் அதிகப்பட்டே வந்தது. நாயகமவர்களின் "அகுமதுல் கபீறு" என்னும் மந்திரம்போன்ற திருநாமத்தை வாயினால் சொல்லுதற்கு மனிதர்கள் அஞ்சியிருந்ததும் அன்றி, சுல்தானுல் ஆரிபீன் என்னும் காரணநாமத்தைச் சொல்லவும் வாய்கூசினார்கள். அதனால், சனங்கள் எல்லாரும் நாயகமவர்களை "சைகு றலியல்லாகு அன்கு" என்று வழங்கத்தொ

டங்கினார்கள். எவரும் அவர்களைக்குறித்துப் பேசும்போதெல்லாம் ஸைகு றலியல்லாகு அன்கு என்றே சொல்வார்கள். நாயகமவர்களின் நாமதேயம் இவ்வாறு உலகம் அஞ்சத்தக்க விதமாய் விளங்கிற்று.

நாயகமவர்கள் இவ்வித மகத்துவத்துடன் பதாயிது நகரத்தில் வாழ்ந்திருக்கும் காலத்து ஒரு வியாழக்கிழமைச் சாய்ங்காலமான மாலைப்பொழுதில், சூரியன் அஸ்தகிரியை நோக்கி விரைந்துசென்றது. அது விரைந்துசென்றதைக் கவனிக்கும்போது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் மிஃறாஜுக்குப் போக இருக்கின்றார்கள்; ஆதலால், நாம் விரைந்துபோய் அஸ்தகிரியில் அடைந்து, இரவை உண்டாக்குவோமென்று எண்ணிச் சென்றதுபோல் இருந்தது. அவ்வாறுகச் சூரியன்போய் அடையவே, தனக்கு இணையில்லாதவனாகிய அல்லாகுத் தஆலா தன்னுடைய மஉஷூக்கு ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களை வானங்களுக்குமேலே கடத்தித் தன்சமுகத்து அழைத்துத் தரிசிக்கும் இரவு நான் ஆதலால் எனக்கு நிகரான ஓரிரவு இனியில்லை என்று சொல்லிக்கொண்டு வந்தாற்போல வெள்ளிக்கிழமையிரவு வந்தது.

இரவானபோது, அங்கங்கே இரைமேய்ந்து நின்ற விலங்கினம் எல்லாம், நாயகமவர்கள் இப்போது மிஃறாஜுக்குச் செல்வார்கள்; அவர்கள் வெளிப்பட்டுச்செல்கையில் எதிர்ப்படுதற்கு நாம் தகுதியுள்ளோம் அல்லம் என்று எண்ணி, தம் தம் கன்றுகளையும் பிணைக்களையும் சத்தம் இட்டு அழைத்துக்கொண்டு, படுத்து உறங்கும் சேக்கைகளிற்போய் அடங்கின. பறவைகள் எல்லாம், இவ்விரவில் நாமும் அரவங்காட்டாது அடங்கியிருத்தல் வேண்டும் என்று தம் தம் குடம்பைகளிற்போய் அடைந்தன. நீர்நிலைகளிற்பூத்து இதழ்விரிந்து நின்ற தாமரைமலர்

கள் எல்லாம், இவ்விரவு நாயகமவர்கள் செல்லும் மிஅராஜ் இரவாதலால் தேன் உண்ணுதற்காக வண்டினங்கள் நம்மிடத்துவந்து இரையாதபடி குவிந்துகொள்ளல்வேண்டும் என்று எண்ணி, விரிந்த இதழ்களையெல்லாம் ஒடுக்கிக்கொண்டன. நாயகமவர்கள் மிஅராஜ்க்குச் செல்லும் இவ்விரா அதிக இருளாயிருத்தலால் நாம் தீபங்கள் சொருத்திப் பிடிப்போம் என்று தடாகங்களும், கால்வாய்களும், வயல்களும் நினைத்து, தம்மிடத்து உள்ள செவ்வல்லிப்பூக்களை அலர்த்தி ஏந்தினின்றன. அவ்விரவில் அலைகடல் அரவமே அன்றி, வேறு எவ்வித அரவமும் இல்லை. இவ்வரவம் அடங்காவண்ணம் ஒலித்துக்கொண்டிருந்ததன்றி, நாயகமவர்கள் மிஅராஜ் சென்று மீண்டுவருவார்கள். அதனை நாம் பார்ப்பதற்கு இவ்விராமுழுதும் உறங்காது இருத்தல்வேண்டும் என்று கடல் விழித்திருப்பது போல் இருந்தது. அவ்விரா எங்கும் காரிருட்படலம் கவிந்துகொண்டிருந்த தன்மையைக் கவனிக்கும்போது, நாயகமவர்கள் மிஅராஜ்க்குப்போய் வருதலை மற்றச் சராசரங்கள் காணாதபடி மறைத்துக்கொள்வோம் என்று உலகத்தை மூடிக்கொண்டதுபோல் இருந்தது. எங்கும் இருள் பரந்து இருப்ப வானத்து நக்ஷத்திரங்கள் விட்டுவிட்டுப் பிரகாசித்துக்கொண்டு தெரியும் தோற்றம், நாயகமவர்கள் இன்று நம்மிடத்து வருவார்கள் என்று வானம் களிகூர்ந்ததால் உண்டான உவகைப்புள்ளிகள் தெரிவதற்கு ஒப்பாயிருந்தது.

இவ்வாறான அவ்விரவில் அர்த்தசாமம் ஆயிற்று; ஊர்முழுதும் அரவம் அடங்கி அமைதியாயிருந்தது. அந்நேரத்தில் சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்களின் மகத்துவம் உள்ள வணக்கஸ்தானத்தில் படுத்து அறிதுயில் செய்தார்கள். இவ்விதமாக அறிதுயில் என்னும் யோகநித்திரையில் நாய

கமவர்கள் இருக்கும்போது, வானலோகத்து மலக்குகளுள் அழகும் வன்மையும் உள்ள ஸம்ஸாயீல் என்னும் ஒரு மலக்கு தம்முடன் இலக்ஷம் மலக்குகள்வரப் பூமியில் இறங்கி, நாயகமவர்கள் படுத்திருக்கும் சாலையிற்போய் அவர்களை நித்திரையில் நின்று எழுப்பினர். எழுப்பும்போது அந்த மலக்கு "யா சுல்தானுல் ஆரிபீன், யா மஹ்பூபு றப்பில் ஆலமீன், நித்திரையைவிட்டு எழுந்திரும். உம்முடைய ஹபீபு உம்மைத் தரிசிக்க ஆவலாயிருக்கின்றான். உம்மைத் தேடுகின்றான்" என்று சொல்லிக்கொண்டு எழுப்பினர். அப்போது நாயகமவர்கள் எழுந்து நின்றார்கள்.

எழுந்துநின்ற நாயகமவர்களை ஸம்ஸாயீல் நோக்கி "சிறப்பானவரே, இந்தச் சிறகின்மீது நீர் ஏறிக்கொள்ளும்" என்றுசொல்லி, தம்முடைய சிறகை விரித்தார். உடனே நாயகமவர்கள் அதன்மேல் ஏறி உட்கார்ந்தார்கள். உட்கார்ந்தபோது ஸம்ஸாயீல் தம்முடன் வந்த இலக்ஷம் மலக்குகளும் கூடவரும்படி, ஆகாயத்தில் எழும்பிப் பறந்து, நாயகமவர்களைக் கொண்டுபோய் மக்கா நகரத்துக் கஃபாவில் இறக்கினர். நாயகமவர்கள் கஃபாவின் ஹறத்தினுள் சென்று, இரண்டு றக்அத்துத் தொழுதார்கள். தொழுதுமுடித்து மலக்கின் சொற்படி மறுபடியும் அவருடைய சிறகில் ஏறி உட்கார்ந்தார்கள்.

அந்தநேரத்தில் வேறு ஒரு மலக்குத் தம் கைகளில் பாலும், தேனும், கள்ளும் நிரப்பின மூன்று ரத்தினக் கிண்ணங்களை ஏந்திக் கொண்டுவந்து நாயகமவர்களின் முன்னே வைத்து "சுல்தானுல் ஆரிபீனே, இந்தப்பானங்கள் மூன்றனுள் யாதாவது ஒன்றை நீர் உவந்துகொள்வீராக" என்று கூறினர். அதைக்கேட்ட நாயகமவர்கள் பாற்கிண்ணத்தை உவந்துகொண்டார்கள். அப்போது அந்த மலக்கு "அகுமதுல் கபீரே, சிறப்பான பானத்தை உவந்தீர்" என்று கூறினர். பிறகு அங்கே வேறுயாதொன்றும்

நிகழ இல்லை. இவ்வளவில் ஸம்ஸாயீல் நாயகமவர்களைத் தூக்கிக்கொண்டு அங்கிருந்து எழுந்து ஆகாயத்தில் பறந்தார். அவருடன் இருக்கும் இலக்ஷம் மலக்குகளும் "யா சுல்தானுல் ஆரிபீன், உம்முடைய ஹபீபு உம்மீது ஆசையோடு இருக்கின்றான்; விரைந்துவாரும்" என்று சொல்லிக்கொண்டு கூடவே பறந்துபோனார்கள்.

ஸம்ஸாயீல் நாயகமவர்களைச் சுமந்துகொண்டு பறந்து முன்வானத்து வாசலிற்போய், அதன் கதவைத் தட்டினார். உள்ளேயிருக்கும் வானவர்கள் "கதவு தட்டுகின்றவர் யார்?" என்று வினவினார்கள். அதற்கு இவர் "நான்தான் ஸம்ஸாயீல்; கதவைத் திறவுங்கள்" என்று பிரதி சொன்னார். அங்குள்ள மலக்குகள் "உம்மோடு வந்திருப்பவர் யார்?" என்று மறுபடியும் கேட்டார்கள். அதற்கு இவர் "சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு வந்திருக்கின்றார்" என்று மறுமொழி சொன்னார். உடனே கதவைத் திறந்தார்கள். ஸம்ஸாயீல் நாயகமவர்களை முதல்வானத்து உள்ளே கொண்டுசென்று சிறகில் நின்று இறக்கிவிட்டார். அம் முதல்வானத்து மலக்குகள் கூட்டங் கூட்டமாய் நாயகமவர்களுக்கு எதிரே வந்து "அஸ்ஸலாமு அலைக்கும் யா மஹ்பூபு றப்பில் ஆலமீன், உம்முடைய ஹபீபு உம்மைக்காணுதற்கு அதிக ஆவலோடு இருக்கின்றான்; நீர் விரைவாய்ச் செல்வீராக" என்று கூறினார்கள். நாயகமவர்கள் அம் மலக்குகளுக்குப் பிரதி ஸலாம் கூறிவிட்டு, அங்கே ஒருபக்கத்துத் திரும்பி நோக்கினார்கள். அவ்விடத்தில் நபி ஆதம் அலைகிஸ்ஸலாமவர்கள் ஒரு ஆசனத்தின்மீது உட்கார்ந்திருப்பது தெரிந்தது. உடனே அவர்கள் அருகிற்சென்று அவர்களின் இருகரங்களையும் பிடித்து முத்தம் இட்டுக்கொண்டு, அவர்களுக்கு ஸலாம் சொன்னார்கள். அதற்கு ஆதம் அலைகிஸ்ஸலாமவர்கள் பிரதி சொல்லிவிட்டு "ஸாலிஹான மகனே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம்

உண்டாவதாக" என்று சொல்லி, நன்மைவிருத்திக்காக துஆ செய்தார்கள். துஆ முடிந்தபின் தபற்றக்கு, இஜாஜத்து, கலீபத்து உடைய கிற்கா க்களையும் நாயகமவர்களுக்குப் போர்த்தினார்கள். அந்த கிற்காக்கள் சுவர்க்கலோகத்துப் பட்டினால் உண்டாயிருந்தன. அதன்பின், நாயகமவர்கள் நபீ ஆதம் அலைகிஸ்ஸலா மவர்களுக்கு முன்னே சைகுல் ஆரிபு அபுல்வபா அவர்களும், சைகுல் ஆரிபு அபுன் னஜீபு ஸஹ்ரவர்தீ யவர்களும் நிற்கக்கண்டு, அவ்விருவர் இடத்தும் நெருங்கினார்கள். நாயகமவர்கள் நெருங்கி வரக்கண்டு அவ்விரு பெரியோர்களும் முன்னோக்கி வந்து ஸலாம் சொன்னார்கள். நாயகமவர்கள் அதற்குப் பிரதி மொழிய வே, அவ்விருவரும் "ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம் உண்டாவதாக" என்று மகிழ்ந்து கூறினார்கள். பின்பு நாயகமவர்கள் வேறுபல பெரியோர்களை அங்கே கண்டார்கள். அவர்களெல்லாம் இவ்விருவர் சொன்னவண்ணமே ஸலாமும், சோபனமும் சொன்னார்கள். அதன்பின் நாயகமவர்கள் அந்தவானத்து அஜாயிபுகளிலும், அன்வாறுகளிலும், அஸ்றாறுகளிலும் அநேகமானவைகளைக் கண்டார்கள். மலாயிக்கத்துகளிலும் எண்ணிறந்தபேர்களைத் தரிசித்தார்கள்.

முதல் வானத்தின்கண் இவ்வளவும் நிகழ்ந்த பிறகு, ஸம்ஸாயீல் என்னும் மலக்கு நாயகமவர்களைத் தம் சிறகின் மீது வைத்துக்கொண்டு ஆகாயத்திற் பறந்து இரண்டாம் வானத்திற்போய், அதன் கதவைத் தட்டினார். அங்குள்ள மலக்குகளுக்கும் இவருக்கும் முதல் வானத்தில் நிகழ்ந்ததுபோல்ச் சம்பாஷணை நிகழ்ந்தபின் கதவு திறக்கப்பட்டது. நாயகமவர்களை ஸம்ஸாயீல் உள்ளே கொண்டுபோய் இறக்கிவிட்டார். அப்போது அங்குள்ள மலக்குகள் திரள் திரளாய் எதிர்கொண்டு வந்து "அஸ்ஸலாமு அலைக்கும் யா மஹ்பூபு றப்பில் ஆலமீன்; உம்முடைய ஹபீபு உம

மைக் காண்பதற்கு அதிக ஆவலோடிருக்கின்றான்; நீர் விரைந்து அவன் பாற்செல்வீராக" என்று சொன்னார்கள். நாயகமவர்கள் அதற்குப் பிரதிகூறி நின்றபோது, அங்கே நபி யஹ்யா அலைகிஸ்ஸலாமும், நபி ஈஸா அலைகிஸ்ஸலாமும் நிற்கக்கண்டு, அவர்களிடத்தே சென்று ஸலாம் பகர்ந்து, அவ்விருவர் கைகளையும் பிடித்து முத்தம் இட்டார்கள். அவ்விரு நபிமாரும் நாயகமவர்களுக்குப் பிரதிகூறி "ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம் உண்டாவதாக" என்று வாழ்த்தி, முன்னே சொன்ன கிற்கா க்களையும் போர்த்தினார்கள்; நன்மைவிர்த்தியாக் துஆவும் செய்தார்கள். பின்பு நாயகமவர்கள் சைகு ஆரிபு அபீ ஸஈதுல் முபாறக்கல் மகுஸூமி யவர்களும், சைகு அலி யிபுனு காரியல் வாஸ்தி யவர்களும் அங்கு ஒருபுறம் நிற்கக் கண்டார்கள். அவ்விரு பெரியோர்களும் நாயகமவர்களைக் கண்டு அவர்களுக்கு ஸலாம் சொல்லி "ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம்" என்று வாழ்த்தினார்கள். நாயகமவர்கள் பின்னும் அங்கே அநேக ஔலியா க்களைக் கண்டார்கள். அவர்களும் அவ்வாறே ஸலாமும், சோபனமும் சொன்னார்கள். பின்னர் நாயகமவர்கள் அங்குள்ள அஜாயிபு, அன்வாறு; அஸ்றாறு, மலாயிக்கத்து கள் எல்லாவற்றையும் கண்டார்கள்.

இவையெல்லாம் இரண்டாம் வானத்தில் நிகழ்ந்த பின்னர் ஸம்ஸாயீல் நாயகமவர்களைச் சிறகில் வைத்துக்கொண்டு அங்கிருந்து பறந்துபோய், மூன்றும் வானத்துக் கதவைத் தட்டினார். அங்குள்ளாரும் விசாரணை பண்ணிக்கொண்டு கதவைத் திறந்தார்கள். நாயகமவர்கள் உள்ளே கொண்டுபோய் விடப்பட்டார்கள். அப்போது அங்குள்ள மலாயிக்கத்து கள் நாயகமவர்களுக்கு முன்னேவந்து ஸலாம் கூறி "அல்லா வுடைய மஹ்பூபே, உம்முடைய ஹபீபு

உம்மைக் காணவேண்டி வழிபார்க்கின்ருன்; விரைந்துபோ விராக" என்ருர்கள். நாயகமவர்கள் அவர்களுக்குப் பிர திகூறிவிட்டு, நபி யூசுபு அலைகிஸ்ஸலா மவர்களைக்கண்டு அ வர்களுக்கு ஸலாம் சொல்லிக்கொண்டு அருகிற்போய், அ வர்கள் கையை முத்தம் இட்டார்கள். யூசுபு அலைகிஸ்ஸலா மவர்கள் சந்தோஷத்தோடு நோக்கி "ஸாலிஹான சகோ தரரே, ஆரிபான ஒலியே, உமக்குச்சோபனம்" என்று கூ றினுர்கள்; கிற்கா க்களும் போர்த்தினுர்கள்; துஆவும் செய் தார்கள். அதன் பின்னர் நாயகமவர்கள் சைகு தூஸில் கபீ று, சைகு அலிய்யுல் ஆரிபு, சைகு அபூ ஹப்சு உமறுஸ் ஸஹ்ரவர்தீ என்னும் இம்மூன்று பெரியோர்களும், வேறு பல ஒளலியா க்களும் அங்கே நிற்கக் கண்டார்கள். அம் மூன்று பெரியோர்களும் நாயகமவர்களை நெருங்கி, ஸலா மும், சோபனமும் கூறினுர்கள். மற்றவர்களும் அவ்வாறே வாழ்த்தினுர்கள். நாயகமவர்கள் அவர்களுக்கெல்லாம் ஸ லாம் சொல்லிவிட்டு, அங்கிருக்கும் அஜாயிபு, அன்வாறு, அஸ்றாறு, மலாயிக்கத்து அனைத்தையும் பார்த்தார்கள்.

பின்பு ஸம்ஸாயீல் அம் மூன்ரும்வானத்தில் நின்று நாயகமவர்களைத் தூக்கிக்கொண்டு நான்காம் வானத்திற்ப றந்துபோய்; அதன் கதவைத்தட்டினுர். அங்குள்ள மலக் கு களும் "யார்?" என்று விசாரித்துக்கொண்டு, கதவைத்தி றந்தார்கள். நாயகமவர்களை ஸம்ஸாயீல் உள்ளேகொண்டு போய் விட்டார். அங்குள்ள மலக்கு கள் பலர் எதிர்கொண் டுவந்து, முந்தின வானத்து மலக்கு கள் சொன்னதுபோ லச் சொன்னுர்கள். அங்கே நபி இதுரீசு அலைகிஸ்ஸலா மவர் கள் இருக்கக்கண்டு அருகிற்சென்று ஸலாம் பகர்ந்து, அ வர்கள் கையை முத்தம் இட்டார்கள். அவர்கள் "ஸாலி ஹா ன சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோப னம்" என்று வாழ்த்தி, கிற்கா க்களும் போர்த்தினுர்கள். அப்போது, அந்த இதுரீசு நபி யவர்களுக்கு முன்னே தங்

கள் தந்தையராகிய சையிது அபுல் ஹஸன் அலி யவர்கள் நிற்கக்கண்டு அவர்கள்முன் விரைந்துபோய் ஸலாம் சொல்லிக் கையைப்பிடித்து முத்தம் இட்டார்கள். அதற்கு அவர்கள் பிரதி ஸலாம் கூறிவிட்டு "என் ஸாலிஹான மகனே, ஆரிபான மகனே, உனக்குச்சோபனம் உண்டாவதாக" என்று வாழ்த்தினார்கள். அதன்பிறகு நாயகமவர்கள் ஒருபுறம் திரும்பி நோக்கினார்கள். அங்கே, சுல்தானுல் ஒளலியா, குத்புல் அக்தாபு, கௌதுல் அகுலம், மஹ்பூபு சுபுஹானி, மஉஷூக்கு றகுமானி, சையிது முகியித்தீன் அப்துல் காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்களும், சைகு உவைசுல் கர்னி யவர்களும், தங்கள் மாமனாரும் ஞானதேசிகருமாகிய சைகு மன்ஸூறுல் பதாயிகி யிபுனு அபூபக்கர் றபாஇ யவர்களும், வேறுசில பெரியோர்களும் நிற்பதைக்கண்டு, அங்கே நெருங்கினார்கள். நெருங்கினபோது அவர்களெல்லாம் எழுந்து நின்று ஸலாம் கூறி "மகத்துவமான மஃபூபே, உமக்கு மறுஹபா" என்று வாழ்த்தினார்கள். நாயகமவர்கள் அவர்களுக்குப் பிரதி பகர்ந்துவிட்டு, அங்கிருக்கும் அஜாயிபு, அன்வாறு, அஸ்றாறு களையும், மலாயிக்கத்து களையும் கண்டார்கள்.

பிறகு நான்காம் வானத்தில் நின்று நாயகமவர்கள் ஸம்ஸாயீல் என்பவரால் தூக்கிக்கொண்டு போகப்பட்டார்கள். ஐந்தாம் வானத்து வாசல்வந்தது. அதன் கதவைத் தட்டினபோது, யாரென்று அறிந்து கதவு திறக்கப்பட்டது. ஸம்ஸாயீல் நாயகமவர்களை அவ்வானத்து உள்ளே கொண்டுபோய் இறக்கினார். நாயகமவர்கள் அங்கே யிறங்கினவுடன் நபி ஹாறூன் அலைகிஸ்ஸலா மவர்களைக் கண்டு நெருங்கி ஸலாம் பகர்ந்து, கையைப்பிடித்து முத்தம் இட்டார்கள். அந்த நபி யவர்கள் பிரதிகூறி "ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம் உண்டாவதாக" என்று வாழ்த்தி துஆ செய்தது தபற்றக்கு; இ

ஜாஜுத்து, கிலாபத்து க்களின் கிறகா க்களைப் போர்த்தினர் கள். அங்கொருபக்கத்தில் தங்கள் பாட்டனாராகிய சையிது யஹ்யா அவர்கள் நிற்கக்கண்டு, அவர்களிடத்துப்போய் ஸலாம் சொல்லிக் கையைத்தொட்டு முத்தம் இட்டார்கள். அதற்கு அவர்கள் பிரதிகூறி "ஸாலிஹான மகனே, ஆரிபான பிள்ளையே, உமக்குச் சோபனம் என்று வாழ்த்தினர்கள். அதன் பின்னர், சைகு ஜுனைதுல் பகுதாதி, சைகுல் ஆரிபு அபா யஜீதுல் புஸ்தாமி, ஸிற்றியுஸ்ஸிக்தி, சைகு மஉறூபுல் கர்கீ, ஹபீபுல் அஜமி றலியல்லாகு அன்கும் இவர்களையும், இன்னும் அநேக ஔலியா க்களையும் நாயகமவர்கள் கண்டார்கள். அவர்களெல்லாம் நாயகமவர்களுக்கு ஸலாம் சொல்லி "மகத்துவம் உள்ள மஹ்பூபே, மறுஹபா" என்று வாழ்த்தினர்கள். நாயகமவர்கள் அவர்களுக்குப் பிரதி ஸலாம் சொல்லிவிட்டு, வேறு அஜாயிபு, அன்வாறு, அஸ்றாறு களையும், மலாயிக்கத்து களையும் கண்டார்கள்.

ஐந்தாம்வானத்தில் இவை நிகழ்ந்தபின், ஜிப்ராயீல் நாயகமவர்களைத் தூக்கிக்கொண்டு ஆறும்வானத்திற்குப் பறந்து போனர். போய் அதன் கதவைத்தட்டினபோது, அங்கிருக்கும் மலக்கு கள் இன்னர் வந்திருக்கின்றார்கள் என்பதைக் கேட்டுக்கொண்டு கதவைத்திறந்தார்கள். நாயகமவர்களை அவ்வானத்துள்ளே கொண்டுபோய் ஜிப்ராயீல் இறக்கினர். அங்குள்ள மலாயிக்கத்து கள் எதிரேவந்து ஸலாம் கூறி "யா மஹ்பூபல்லா, உம்மை உம்முடைய ஹபீபு தரிசிக்கநாடி வழிபார்க்கின்றான்; விரைந்து போவீராக" என்றார்கள். நாயகமவர்கள் அவர்கள் ஸலாத் திற்குப் பிரதிகூறிவிட்டு, அங்கே நபி மூஸா அலைகிஸ்ஸலா மவர்களைக் கண்டார்கள், கண்டு ஸலாம் சொல்லிக்கொண்டு நெருங்கி, அவர்கள் கையைப்பிடித்து முத்தம் இட்டார்கள். அவர்கள் நாயகமவர்களுக்குப் பிரதி ஸலாம் கூறி "ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலியே, உமக்குச் சோபனம்

உண்டாவதாக" என்று வாழ்த்தி, துஆவும்செய்து, தபற்றக்கு, இஜாஜத்து, கிலாபத்து உடைய கிற்கா க்களையும் போர்த்தினர்கள். பின்னர் நாயகமவர்கள் அங்கொருபுறத்தில் அமீறுல் மூமினீன் இமாம் ஹஸன், அமீறுல் மூமினீன் இமாம் ஹுஸைன், இமாம் ஜைனுல் ஆபிதீன், இமாம் முகம்மதுபாகிறு, இமாம் ஜஃபறு ஸாதிகு, இபுறுஹீமுல் முறுதலா, மூஸாக்காலிம், மூஸாதானி றலியல்லாகு அன்கும் என்கின்ற இந்த மகத்துவமுள்ள பெருமான்களும், இன்னுஞ் சில பெரியோர்களும் கூட்டமாய் நிற்கக்கண்டு, அவர்களை நெருங்கிப்போய் ஸலாம் கூறினர்கள். அவர்கள் எல்லாரும் நாயகமவர்களுக்குப் பிரதிகூறி "மஹ்பூபு றப்பில் ஆலமீனே, உமக்கு மறுஹபா" என்று வாழ்த்தினர்கள்.

அப்போது ஸம்ஸாயீல் நாயகமவர்களை அங்குநின்று அழைத்துச் சுவர்க்கலோகத்திற்கு உள்ளே கொண்டுபோய் விட்டார். நாயகமவர்கள் சுவர்க்கத்தைப் பார்த்தார்கள்.

சுவர்க்க லோகத்துள் பலபுறமும் உள்ள அரண்மதின் முழுதும் உயர்ந்த பசுந்தங்கத்தாலும், ரத்தினங்களாலுமே உண்டாயிருக்கின்றன. சுவர்க்கம் முழுவதையும் அவ்விதமான எழு அரண்கள் சூழ்ந்திருக்கின்றன. எட்டுவாசல்கள் இருக்கின்றன. அதன் நிலம் முழுமையும் கஸ்தூரியையும் கருப்பூரத்தையும் கலந்து செய்யப்பட்டிருக்கின்றது. அங்குள்ள திடர்களும், தவழுகுன்றுகளும், கஸ்தூரியாலும் கருப்பூரத்தாலுமே உண்டாயிருக்கின்றன. முத்தாலும், மாணிக்கத்தாலும், மரகதத்தாலும், வயிரத்தாலும், பசும்பொன்னாலும் பல நிறவேறுபாடுள்ள ஒவ்வொருமாளிகையாக எண்ணிறந்த மாளிகைகள் கட்டப்பட்டிருக்கின்றன. எழுடுக்குமாளிகைகள் பத்திபத்தியாய், ஒவ்வொருமாளிகையும் பல வாசல்களையுடையதாய், ரத்தினவருக்கத்தால் ஆன சப்பிரமஞ்சம், நாற்காலி, பீடம்

முதலான பலவகைச் சாமான்களோடு நெருங்கி யிருப்ப தும் அன்றி, அவ்வித மாளிகைகள் அநேகம் தரையிற்ப டாமல் ஆகாயத்தே கட்டப்பட்டுத் தொங்கிக்கொண்டு நிற் கின்றன. ஒவ்வொருமாளிகைப் பக்கத்தும் அடர்ந்த சோ லைகள் உண்டாயிருக்கின்றன. அவற்றுள்ள விருக்ஷங்க ளெல்லாம் ரத்தினவருக்கத்தால் ஆனவை. தளிர், இலை, அரும்பு, மலர், காய், கனி அனைத்தும் பல வேறு நிற மான ரத்தினங்களால் உண்டாய், மதுரமான தேன்க னிந்து ஒழுகி நறுமணம் கமழ்ந்துகொண்டிருக்கும். மரக்கிளைகளில் பல இனமான பக்ஷிகள் இருந்து ராகம் பாடாநிற்கும். அப்பக்ஷிகளும் இனத்திற்கு ஏற்க அவ் வவ் விரத்தினத்தாற் படைக்கப்பட்டவைகளே. அச்சோ லைகளில் காபூர், றஹ்மத்து, தஸ்னீம், றையான் என நான்கு நதிகள் பெருக்கெடுத்து ஓடிச்செல்கின்றன. அந் நதிக ளின் மணல் முழுதும் கஸ்தூரி; அங்கே கிடக்கும் பருக் கைக்கற்கள் முத்து; அவற்று நீரின் இனிமை தேனில் நின் றும் அதிகமானது; நிறம் பாலில் நின்றும் வெண்மையா னது; நறிய வாசனைமிக்கது. இந்நதிகள் அன்றி, அங்குள் ள மாளிகைகளில் மேன்மாடிதோறும் ஏறி வளைந்து நெ ளிந்து செல்கின்ற ஸல்ஸபீல் என்று வேறொரு நதியும் ஓ டுகின்றது. அதன் மதுரம்முதலான தன்மைகள் மற்ற ந திகளுக்கு உள்ளவைகளினும் அதிகமானவை. இவையெல் லாம் அன்றி ஹெளலுல் கௌதர் என்று ஒரு அகன்ற த டாகம் இருக்கின்றது. அதுதான் சுவர்க்கலோகத்திற்கு முன்புறம் உள்ளது. அந் நதிக்கரைகளிலும், தடாகக் க ரையிலும் எண்ணிறந்த விருக்ஷங்களும், குற்றுச்செடிக ளும் அடர்ந்து, காய் கனிகளையும் நறுமலர்களையும் சொ ரிந்துநிற்கும் குளிர்ந்த சோலைகள் அநேகம் இருக்கின்றன. அங்கே அழகியபெண்கள் இருக்கின்றார்கள். அவர்கள் தாம் ஹூறுலீன் என்பவர்கள். அவர்களின் ரூபலா

வண்யத்தை வருணிக்க யாராலும் இயலாது. அவர்களெல்லாம் அடிமுதல் முழந்தாள் வரையும் குங்குமத்தாலும், அதுமுதல் மார்புவரையும் கஸ்தூரியாலும், அது முதல் கழுத்துவரையும் அம்பராலும், அதுமுதல் சிரம்முழுதும் கருப்பூரத்தாலும் படைக்கப்பட்டிருக்கின்றார்கள். அவர்களின் மேனிநிறம் ஆணிமுத்துடைய வெண்ணிறத்தையும், மரகதத்துடைய பசுமை நிறத்தையும், மாணிக்கத்துடைய செந்நிறத்தையும், கோமேதகத்துடைய மஞ்சணிறத்தையும் ஒன்றாகக்கலந்தால் எந்திறமோ அந்த நிறமாயிருக்கும். அவர்களின் கை கால்களில் உள்ள எலும்புகளுக்கு உள்ளேயிருக்கும் மூளை, பளிங்கிற்குமேல் உள்ளுறை பொருள் தெரிவதுபோல் தெரியும். அவர்களுடைய கூந்தலும் கண்ணிற்கருவிழியும் எங்கும் இல்லாத இணையற்ற கருப்பு. கண்ணின் வெண்மையும் அவ்வாறே இணையற்றது. அவர்கள் வாயின் உமிழ்நீர் ஒருதுளி உவர்க்கடலில் துளிக்குமாயின், கடல்முழுமையும் தேவாமிர்தாய் விடும். அத்தனை இனிமையானது. அவர்கள்கேசாதிபாதமளவும் முத்துமாலையாதிப் பலவகை ரத்தினாபரணங்கள் பூண்டிருப்பார்கள்: எழுபதுவகை நிறவேறுபாடுள்ள பட்டாடைகள் உடுத்திருப்பார்கள். அழகிய அப்பெண்களெல்லாம் முன்சொன்ன மாளிகைகளிலும், மேன்மாடிகளிலும், பூஞ்சோலைகளிலும், உல்லாசமாய் ஆடிப்பாடிக் கொண் டிருப்பார்கள். இன்னும் அச்சுவர்க்கலோகத்து உள்ள பொருள் வகைகளையும், வளப்பங்களையும் விவரித்துச் சொல்வதாயின், எத்தனைப் புத்தகங்களாக எழுதினும் எழுதலாம். அவ்வாறு எழுதினும், அதன் வருணனைகளில் சிறிதும் முற்றுப்பெறாது. அவ்வகையான சுவர்க்கத்து அலங்காரங்களையும், அங்குள்ள இணையில்லாப் பண்டங்களையும், ஊண் தீன் குடிப்பு உடை முதலியவற்றின் மேம்பாடுகளையும், மற்றவைகளையும் நாயகமவர்கள் கண்டு,

அவற்றைத் தனக்கு வழிபட்ட அடியார்களுக்குக் கொடுக்கப் படைத்து வைத்திருக்கும் மகிமையுள்ள அல்லாகுத் தஆலா வைப் புகழ்ந்தார்கள்.

அப்போது ஸம்ஸாயீல் நாயகமவர்களைச் சுவர்க்கத்தில் நின்று அழைத்துக்கொண்டுபோய், நரகலோகத்தைக் காட்டினார். காட்டவே, நாயகமவர்கள் நரகத்தின் அருகிற் போய்நின்று அச்சத்துடன் அதனைப் பார்த்தார்கள்.

நரகத்து நிலம் என்றும் ஆறுது உருகிநிற்கும் ஈயத்தால் ஆனது. மதிள்கள் கந்தகக் கற்களாற் கட்டப்பட்டவை. மேன்கூரை உருகியபித்தளையால் வேய்ந்தது. அக்கினி மயமாய்க்காணும் இரும்பினால் ஏழுவாசல்கள் அதற்கு வைக்கப்பட் டிருக்கின்றன. அதன் அகலமும், நீளமும், மற்ற எதற்கும் இல்லாத பருப்பமானவை. அங்கே கொடிய அக்கினிமலைகள் அநந்தம் இருக்கின்றன. அம்மலைகளின் வெடிப்புக்களில் நின்று அக்கினிப் பிரவாகம் பெருக்கெடுத்துக் கணவாய்களில் வந்துவிழுந்து, ஆழமான ஓடைகளாய் ஓடிச்செல்லும். அவ் வக்கினியோடைகள் அன்றி, ஊனநீர் ஓடைகளும், கால்வாய்களும் அங்கங்கே கொதித்து நுரைத்துக் கொண்டிருக்கும். அக்கினியால் ஆன மலைச்சாரல்களிலும், ஓடைக் கரைகளிலும், அக்கினி மாளிகைகள் நிரை நிரையாகக் கட்டப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு மாளிகையிலும் எண்ணிறந்த அறைகள் உண்டு. அவ்வறைகளில், எழுபதினாயிரம் வகைப்பட இடைவிடாது வருத்தாநிற்கும் யாதனையுள்ள விஷசெந்துக்கள் பலவும் அக்கினியினாற் படைக்கப்பட்டுப் பல்கிக்கொண்டிருக்கின்றன. அங்கே பாவிகளை யாதனை புரிவித்தற்குரிய மிக்கப்பட்ட நிரயபாலர் என்னும் ஜபானியாக்கள் அளவற்றபேர் இருக்கின்றார்கள். அவர்களெல்லாம் வானத்து மின்னலும் இருளாகத் தக்க அக்கினிச் சுடருள்ள கண்களும், காளையாடுகளின் கொம்புபோன்ற பற்களும், கீழேதாழ்ந்து தொங்கும் உதடுகளுள்ள அக்கினி கக்கும் பேழ்வாயும்

உள்ளவர்கள். பாவிகளாய் நரகம் புகுதுவார்க்கு வேறுயாதனை வேண்டுவதில்லை; அந்த ஜபானியாக்களைப் பார்ப்பது ஒன்றே போதுமான யாதனையாகும். அவர்கள் கையாலும் காலாலும் நாற்பதினாயிரம் பாவிகளைச் சுழற்றி யெறியும் திறன் உள்ளவர்கள். அவர்கள்தாம் அங்கங்கே நின்று, எரிகின்ற அக்கினிக்குப் பாவிகளான மனிதரை விறகாகத் தள்ளிமூட்டி எரிப்பார்கள். பாவிகள் மேற்கூறிய அக்கினி மாளிகைகளில் அக்கினியறைக்குள் அக்கினிச் செந்துகளாற்படும் யாதனையும், ஜபானியாக்களாற் படும் யாதனையும் ஒருவர் சொல்லுந்தரம் உள்ளது அல்ல. அக்கினியால் ஆன ஒரு பாம்பாயினும் தேளாயினும், வேறு எந்த விஷ செந்தாயினும் கடித்ததானால், கடிபட்டவனுடைய உடல் முழுமையும் அதன் விஷம் பரவி ஆயிரம் வருஷமளவும் கொதித்துக் கொண்டேயிருந்து, பின் அவ்வுடல் இற்றிற்று விழுந்து, மறுபடியும் முன்போல் ஆய், யாதனை அடையும். அக்கினிப் பெட்டகத்திலும், அக்கினிக் கிணற்றிலும், அக்கினி யூற்றிலும் ஆயிரம் ஆயிரம் வருஷம்வரையும் பாவிகளைப்போட்டு யாதனை செய்யப்படும். அறக்கொடிதான அக்கினிச் சூட்டைக்கொண்டு யாதனை புரிவதும் அன்றி, அறக்கொடிதான கூதலிலும் போட்டுவருத்துவார்கள். கூதலிற் போடப்பட்டவன் அந்தக் கூதலைப் பார்க்கிலும் அக்கினிச்சூடு உத்தமம் என்று அறிவான். அங்குள்ள செந்துகள் கடிக்கும் கடியும், ஜபானியாக்கள் தடிகளால் அடிக்கும் அடியும், தின்னக்கொடுக்கும் தீனும், பருகக்கொடுக்கும் நீரும், தாங்கற்கு அரிய கொடிய யாதனையானவையாயிருக்கும். நினைத்தாலும் அச்சம்வருத்தும் நரகத்து யாதனைவகைகளையும், அவற்றுக் கொடுமைகளையும் அளவிட்டுக் கூறுதற்கு யாரும் திறன்பெறவில்லை.

இவ்விதக் கொடிய யாதனை உள்ள நரகம், அல்லாகுத் தஆலாவை வழிபடாத காபிர்களுக்கு என்றே ப

டைக்கப்பட்டது ஆயினும்; அவனுக்கு வழிபட்டு இருந்தும், அவன் இட்ட கட்டளைப்படி நடவாது விதியை விலக்குப் போலவும் விலக்கை விதிபோலவும் செய்கின்ற பாவிகளுக்கும் உரித்துள்ளதுதான். அல்லாகுத் தஆலா வும், அவனுடைய தூதர் என்னும் றசூல் நபி முகம்மது ஸல்லல்லாகு அலகிவஸல்ல் மவர்களும் சொன்னவண்ணம் அஞ்சி அடங்கி நடவாத பாவிகள் அனைவரும் அந்த நரகத்திற் புகுந்து கிடந்து யாதனை அநுபவிப்பது திண்ணம். இதைப்பற்றி அல்லாகுத் தஆலா சத்தியவேத மாகிய குர்ஆனில் "மனிதர்களையும் கற்களையும்போட்டு எரிக்கும் நரகத்தைப்பற்றி நீவிர் பயபக்தியா யிருப்பீர்களாக; அது, காபிர் களுக்குத் தயார்செய்யப்பட்டது" எனச் சொல்கின்றான்.

அவ்வகைப்பட்ட நரகத்தை நாயகமவர்கள் பார்க்கும்போது; இனி அதிற்போய் விழுந்து யாதனை அடைவோரையும், அவர்கள் செய்த இன்ன பாவத்திற்கு இன்ன யாதனை என்பதையும் அவர்கள் அறியும்படி விவரங்கள் தெரிவிக்கப்பட்டன. அவற்றைக்கண்டபோது நாயகமவர்கள் அஞ்சி வெருண்டு, பின்னும் அந்நரகத்து யாதனை அடைவோர்க்கு மனம் இரங்கி, அல்லாகுத் தஆலா இடத்தில் இனி மன்றுடவேண்டிக் கேட்டார்கள். அங்குள்ளாரில் மூன்றில் ஒருபங்கு மனிதர்களை நீர் மன்றுடலாம் என்று கட்டளைவந்தது. நாயகமவர்கள் அது போதாது என்று பின்னும் அதிகப்படக் கேட்டார்கள். மூன்றில் இரண்டு பங்குக்கு உத்தரவு வந்தது. இதுவும் போதாது என்று கேட்கக்கருதினார்கள்; அப்போது, தங்கள் பாட்டனார் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைசிவஸல்ல மவர்களையும் மற்றவர்களையும் நினைத்து வெட்கம் உற்று, பின்னிட்டு; விரைந்து வந்துவிட்டார்கள். நரகம் அவர்கள் பார்வையில் நின்று மறைந்துவிட்டது.

நாயகமவர்கள் அங்கிருந்து திரும்பினபோது, உயர்ந்த சாதிமாணிக்கத்தால் ஆன சிறப்புள்ள ஒரு மாளிகையைக்கண்டார்கள். அது, வெண்முத்தாலும் செம்பவளத்தாலும் அமைந்த நாற்பதினாயிரம் வாசல்களை யுடையதாய், இன்னநிறம் என்று சொல்ல இயலாத ஒரொளியால் மூடப்பட்டதாயிருந்தது. அந்த வாசல்களின் நீளத்தைப் படைத்தவன்தான் அறிவான். அகலம் நூறுவருஷக் குதிரைநடைத்தூரமானது. ஒவ்வொருவாசலிலும் இலக்ஷம் மேன்மாடிகள் இருக்கின்றன. மாடி ஒன்றுக்கு நாற்பதினாயிரம் சந்திரன்கள் நின்று சொலிக்கின்றன. அந்தச்சந்திரன்களின் நிலாவெளிச்சத்திற்கு இவ்வுலகத்து நிலாவெளிச்சமும் வெயில் வெளிச்சமும் ஒப்பாகா. ஒருமாடிக்கு நவரத்தினம் இழைத்த பொற்கட்டில் நாற்பதினாயிரமாக நிரைநிரையாப் போடப்பட்டிருக்கின்றன. கட்டில் ஒன்றுக்கு நாற்பதினாயிரம் பேராக அழகிய ஹூறுலீன் பெண்கள் உட்கார்ந்திருக்கின்றார்கள். அவர்கள் உடுத்திருக்கும் பட்டுடைகளும், பூண்டிருக்கும் ரத்தினாபரணங்களும் கண்ணைப் பறிக்கத் தக்கவையாயிருந்தன. அவர்கள்மீது கமழும் நறுமணம் நாசிகள் தாங்கத்தகாதது. அப்பெண்களின் அழகை அல்லாகுத் தஆலா தான் அறிவான். அவர்களின் பல்லொளி அர்ஷு வரையும் இலங்கா நிற்கின்றது. அந்தமாளிகைக்குள் தினம் ஒன்றுக்கு இலக்ஷம் மலாயிக்கத்துகள் பிரவேசித்துப் பத்திபத்தியாயிருந்து அல்லாகுத் தஆலாவை திக்று செய்கின்றார்கள். நாள்தோறும் உள்ளேபுகுதுகிற மலக்குகளில் ஒருவராவது என்றைக்கும் அங்கிருந்து வெளியில் மீண்டுவருவது இல்லை. அவர்கள்செய்யும் திக்று சத்தத்தை மனிதர் காதாற் கேட்பார்களானால், யுகம்முடியும் வரையும் பிரக்கினையற்றுக் கிடப்பார்கள். அவ்விதமான திக்று சத்தம் என்றைக்கும் அந்த மாளிகைக்குள் முழுங்கிக்கொண்டிருக்கின்றது.

நாயகமவர்கள் அந்த மாளிகையைக் கண்டவுடன் அதனுள் புகுதுகின்ற மலக்குகளோடுகூடித் தாங்களும் புகுந்தார்கள். அப்போது அங்கிருக்கும் மலக்குகள் நாயகமவர்களைக்கண்டு ஸலாம் சொன்னார்கள். அதற்கு நாயகமவர்கள் பிரதிசொல்லிவிட்டு, அங்கிருக்கும் மலக்குகளுடைய பத்தியில் தாங்களும் உட்கார்ந்து திக்று செய்தார்கள். சற்றுநேரம் திக்று செய்துவிட்டு, மாளிகையில் நின்று வெளிப்பட்டார்கள். வெளிப்பட்டு, அநேக அஜாயிபுகளையெல்லாம் கண்டார்கள். அதன்பின், ஸம்ஸாயீல் என்னும் மலக்கு வந்து நாயகமவர்களைத் தமது சிறகில் ஏற்றிக்கொண்டு, அங்குநின்று ஏழாம் வானத்திற்குப் பறந்து சென்றார்.

ஸம்ஸாயீல் ஏழாம்வானத்து வாசலிற்போய் அதன் கதவைத்தட்டினபோது, அங்கிருக்கும் மலாயிக்கத்துகள்: நீவிர் யார்? உம்முடன் இருப்பவர் யார்? என்று கேட்டு அறிந்துகொண்டு கதவைத்திறந்தார்கள். திறக்கவே, ஸம்ஸாயீல் உள்ளேபுகுந்து நாயகமவர்களைச் சிறகில் நின்று இறக்கினார். உடனே மலக்குகள் அநேகர் நாயகமவர்களுக்கு எதிரேவந்து "அஸ்ஸலாமு அலைக்கும் யா ஸையிது அகுமதுல் கபீறு, உம்முடைய ஹபீபு மஹ்பூபான உம்மைத் தரிசித்தற்கு எதிர்நோக்கியிருக்கின்றான்; நீர் விரைந்து போவீராக" என்று கூறினார்கள். நாயகமவர்கள் அவர்களுக்குப் பிரதிசொல்லிவிட்டு, சிறப்பும் மகிமையும்பெற்ற "பைத்துல் மஉமூறு" என்னும் திவ்விய ஆலயத்தைக் கண்டார்கள். அந்த ஆலயத்திற்குள் நாள் ஒன்றுக்கு எழுபதினாயிரம் மலாயிக்கத்துகள் போய்க்கொண்டிருக்கின்றார்கள். போகிறவர்களுள் ஒருவரும் வெளியில்வருவது இல்லை. அது, மிகப்பெரிய விசாலம் உள்ளதும், உயர்ந்ததும், பேரொளி இலங்குவதும், அழகியதுமாய் இருந்தது. அந்த ஆலயத்தின் வருணனைகள் சொல்லில் அடங்குவனவல்ல.

அந்தப்பெரிதும் அலங்காரமுமான பைத்துல் மஃமூறு ஆலயத்தின் முன்புற மதிட்சுவரில் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களும் நபி இபுறுஹீம் அலைகிஸ்ஸலாமவர்களும் சாய்ந்துகொண்டு உட்காந்திருந்தார்கள். அவர்களுக்குமுன் அவர்களுடைய அஸ்ஹாபுகளும் பெரிய குழுவாய்க் கூடியிருந்தார்கள். மற்ற நபிமார்களும் அநேகர் அங்கே பக்கத்தில் உட்காந்திருந்தார்கள்.

நாயகமவர்கள் அதைக்கண்டு விரைவாய் அங்கேசென்று "அஸ்ஸலாமு அலைக்க யாஜத்தீ முகம்மதுற் றசூலுல்லாஹி வாலிக்கத் தையிபீனத்தாஹிரீன, வயாஜத்தீ இபுறுஹீம் கலீலுல்லாஹி" என்று அவ்விரு நபிகள் பெருமான்களுக்கும் ஸலாம் சொல்லி, அவர்களின் கைகளைப்பிடித்து முகந்து முத்தம் இட்டார்கள். அப்போது அவ்விருபெருமான்களும் நாயகமவர்களுக்குப் பிரதிகூறி, "ஸாலிஹான மகனே, ஆரிபான பிள்ளையே, உமக்குச் சோபனம் உண்டாவதாக" என்று வாழ்த்தினார்கள்.

இது நிகழ்ந்தபின், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் எழுந்து நின்று. தொழுவதற்குத் தக்பீறு கட்டினார்கள்; கூடியிருந்த எல்லாரும் உடனெழுந்து, அவர்களுக்குப் பின்னே மௌழும் களாய்த் தக்பீறு கட்டினார்கள். பின் இரண்டு றக்அத்து எல்லாரும் தொழுதார்கள். நாயகமவர்களும் கூடவே நின்று தொழுதார்கள். தொழுது முடிந்தபின், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் தங்கள் திருக்கரங்களால் தபற்றக்கு, இஜாஜத்து, கலீபத்து உடைய கிற்காக் களை நாயகமவர்களுக்குப் போர்த்தி, நன்மையின் பொருட்டு துஆ செய்தார்கள்.

துஆ செய்துமுடித்து, நபி நாயகமவர்கள் அங்கேயிருக்கும் மற்ற நபிமார் எல்லார்க்கும் நாயகமவர்களைச் சுட்டிக்காட்டி "இவர் என்னுடைய மகன்; சையிது அகுமதுல்

கபீறு. இவருக்கு நீவிரும் கிற்கா க்கள்போர்த்துவீர்களாக" என்று அவர்களை ஏவினார்கள். அவ்வேவற் பிரகாரம் அங்கிருந்த எல்லா நபி மார்களும், றசூல் மார்களும் நாயகமவர்களுக்கு அந்நூவகை கிற்கா க்களையும் போர்த்தி, துஆ வும் செய்தார்கள். மறுபடியும் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் தங்கள் சிறப்பான இருகரங்களையும் ஏந்திநின்று இவ்வாறு துஆ செய்தார்கள். அந்த துஆ இது:—

اللهم زد محبتك و معرفتك لهذا ولدي سيد احمد الكبير ابن علي*

“ அல்லாஹும்மஜித் முஹப்பதிக வ மஅரிபதிக லிஹாதா வலதீ சையிது அகுமதுல் கபீறிபனு அலி ”

இதன் பொருள்:—

[ஆண்டவனே, அலி யுடைய மகனாகிய சையிது அகுமதுல் கபீறு என்னும் இந்த என்னுடைய பிள்ளைக்கு, உன்னுடைய உவப்பையும், ஞானத்தையும், அதிக மாக்குவாயாக] என்பதாம்.

இது நிகழ்ந்தபின் நாயகமவர்கள் அங்கே கூடியிருப்பவர்களுள் அமீறுல் மூமினீன் சையிதினா அபூபக்கர் ஸித்தீக்கு, அமீறுல் மூமினீன் சையிதினா உமறிபுனு கத்தாபு, அமீறுல் மூமினீன் சையிதினா உதுமா னிபுனு அப்பான், அமீறுல் மூமினீன் சையிதினா அலி யிபுனு அபீத்தாலிபு றலியல்லாகு அன்கும் ஆகிய இந்நான்கு குலபாவுற் றாஷிதீன் களையும் கண்டு, அவர்களுக்கு ஸலாம் சொன்னார்கள். அதற்கு அந்நால்வரும் பிரதிகூறி “ ஸாலிஹான சகோதரரே, ஆரிபான ஒலி யே, உமக்குச் சோபனம் உண்டாவதாக ” என்று வாழ்த்தினார்கள்.

அதன்பின்னர் நாயகமவர்கள் அங்கிருந்து கொஞ்சத்தூரம் சென்றார்கள். அங்கே “ விதுறத்துல் முந்தஹா ”

என்னும் மகத்துவவிருக்ஷம் நிற்பது அவர்கள் கண்ணுக்குத் தோற்றிற்று. அவ்விருக்ஷத்து அடி ஆணிமுத்தாலும், மேற்கிளைகள் மாணிக்கத்தாலும், இலைகள் மரகதத்தாலும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவ்விலைகளெல்லாம் பட்டுப்போல் மென்மையாய்ப் பிரகாசியா நிற்கும். அது, சுவர்க்கத்திற்கு மேலே குடைபோற் கவிந்து நிழல் இட்டு நிற்கின்றது. அதன் உயரம் அறுஷ௨ வரையும் இருக்கும். அவ்விருக்ஷ நிழற்கீழ் எழுபதுவருஷம் வரையும் குதிரைப் பிரயாணம் போகலாம்; அத்தனை விசாலமாயிருக்கும். அது இலந்தை மரமாயிருந்தும், உலகத்தில் தின்னத் தகுந்தவையான கனிகள் எத்தனை வகைகள் இருக்கின்றனவோ அத்தனைவகைக் கனிகளும் அதிற் பழுக்கும். ஒருவகைப்பட்ட கனி ஒன்றில் எழுபத்திரண்டுவகை மதுரம் உண்டாயிருக்கும். அக்கனிகளின் மதுரமும், நறிய வாசனையும், பிரபையும் மனிதர் சொல்லுந்தரம் உள்ளது அல்ல. அவ்விருக்ஷத்து வேரில் நின்றுதான் பால், தேன், நீர், கள் என்னும் இந்நான்குவகை நதிகளும் பெருகி ஓடிச்செல்கின்றன. மற்ற நதிகளும் அங்கிருந்தே பிரிகின்றன என்பதும் உண்டு. அவ்விருக்ஷத்தை எண்ணிறந்த மலாயிக்கத்துகளும், கண்களைக் கவரக்கூடிய பேரொளியும் கவிந்து மூடிநிற்பது, அல்லாகுத் தஆலா வின் மகிமையைக் காட்டும் அற்புதங்களில் ஒரு பேரற்புதமாகக் காணப்படும். இன்னும் அதனை வருணிப்பதற்கு யாரும் திறம்பெறவில்லை.

நாயகமவர்கள் அந்த விருக்ஷத்தைக் கண்டு ஆச்சரியம் உற்று, அல்லாகுத் தஆலா வைப் புகழ்ந்துகொண்டு சற்றுத் தூரம் முன் சென்றார்கள். அழைத்துவந்த ஜிப்ரயீல் அங்கே இறக்கிவிட்ட இடத்தில்தானே நின்றுவிட்டார். நாயகமவர்கள் தனிமையாயே இருக்கின்றார்கள். அவ்வாறு தனிமையாய்ச் சென்றபோது, அல்லாகுத் தஆலா வின் குறுஸி தெரிந்தது. அந்தக் குறுஸி யைப்பார்க்கி

லும் அகலமும் நீளமும் பிரகாசமும் உள்ள ஒன்றை இதுவரையும் அவர்கள் பார்க்க இல்லை. அதன் அழகையும், மகிமையையும் எழுதி முடிக்க இயலாது. அதன் ஒளிக்கு முன்னே இந்தப் பெரிய உலகம் முழுமையும் மறைந்து, இருக்கும் இடம் தெரியாமற் போகும்.

நாயகமவர்கள் குறுஸி யைக்கண்டு புதுமையடைந்து சற்றே ஏறிட்டுப் பார்த்தபோது, அல்லாகுத் தஆலா வின் ஆசனமாகிய மகத்துவமும் உள்ள அறுஷை அவர்களுக்கு எதிரே தெரிந்தது. அழகிலும், வடிவிலும், அகலத்திலும், நீளத்திலும், உயரத்திலும், பிரகாசத்திலும், மகத்துவத்திலும் மற்றொன்று இணையில்லாத அறுஷைக் கண்டபோது, நாயகமவர்கள் அதனை மறுதரம் பார்க்கவேயில்லை; தலையைக் குனிந்துகொண்டார்கள். அந்நேரத்தில் நாயகமவர்களுக்கு அல்லாகுத் தஆலா மீதுள்ள உவப்பும், ஆசையும் அதிகரித்தன. அவற்றை அவர்கள் வெளியிடாமல் மறைத்துக்கொண்டு நின்றார்கள். இருதயத்தில் உண்டான இஷ்கு பொங்கிக்கொண்டிருந்தது. அதனை நாயகமவர்கள் மறைத்து அடக்கி நின்றும், அவ் விஷ்கு என்னும் அக்கினியின் அணுவத்தனையுள்ள ஒரு சிறு பொறி இருதயத்தில்நின்று மீறி வெளிப்பட்டு, அல்லாகுத் தஆலா வைநோக்கிப் பறந்து போயிற்று. அது பறந்து அறுஷைநெருங்கின போது, அதன் சோதியால் அறுஷின் சோதி மழுங்கிப் போயிற்று. வெயிலொளி முன்னே நிலவொளி மழுங்கினாற்போல் நாயகமவர்களின் இருதயத்து இஷ்கு என்னும் ஒளிக்கு முன்னே அறுஷின் ஒளி மழுங்கினதும் அன்றி, அவ் வறுஷை கிடுகிடென்று அசைந்து நடுங்கிற்று. அவ்வாறு நடுங்கினதும் அன்றி, அல்லாகுத் தஆலா வை விளித்து "யா அல்லா, இப்போது எனக்கு நீ கிருபைசெய். உன் மஹ்பூப் டைய முஹப்பத்து என்னும் ஒளியைச் சுமக்க நான் திறன் பெறவில்லை. உன் லிகா வைத் தேடுகின்ற

மஉஷூக்குடைய இஷ்கு என்னும் அக்கினிப் பொறியின் அணுவளவுக்கும் நான் ஆற்றமாட்டேன்" என்று முறையிட்டது. அச்சம் உற்று இவ்வாறு அறுஷு முறையிட்டவுடன், அல்லாகுத் தஆலா இடத்திருந்து அசரீரியாக ஒரு சத்தம் வந்தது. அந்தச் சத்தம் இது:—

"யா சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு, கேட்பீராக. உம்மை நான் பொருந்திக் கொண்டேன். நீர் என்னுடைய அப்தும், மஹ்பூபும், மஉஷூக்கும், றஹ்மத்தின் ஒளியுமாயிருக்கின்றீர். இதோ உமக்கு முன்னே தெரிகின்ற அறுஷு என்னுடையது; நான்படைத்தது. இது உம்மையும், என்னையும் உவந்திருக்கின்றது. ஆதலால், நீர் அதன்மேல் இரக்கமாயிரும். நான் உம்மீது இரக்கமாயிருப்பவன்; கிருபை செய்பவன்"

இச்சத்தம் கேட்டவுடன் நாயகமவர்கள் புன்னகை செய்துகொண்டு அறுஷின் மீது இரக்கம் உள்ளவர்களாய், அதனைப்பாராமல் பின் இடைந்து திரும்பினார்கள். திரும்பிவரும் வழியில் மரகதத்தால் ஆன ஆசனம் ஒன்று அவர்களுக்கு முன்னே வந்துநின்றது. அதன் பிரகாசம் கண்ணை மழுக்கத்தக்கதாயிருந்தது. அந்த ஆசனத்தை நாயகமவர்கள் கண்டபோது "இந்த ஆசனத்தின்மேல் ஏறிக்கொள்வீராக" என்று ஒருசத்தம் கேட்டது. நாயகமவர்கள் அச்சத்தம் காதில் விழுந்தவுடன் தாமதிக்காமல் அதன்மீது ஏறி உட்கார்ந்தார்கள். பின் அவ்வாசனம் மேலேகிளம்பி ஆகாயமார்க்கத்திற் சென்றது.

அம்மரகதாசனம் உயர்ந்து செல்லும்போது, வழியில் ஆச்சரியமானதும், எங்கும் இணையில்லாததும், ஒருவரும் அறியாததும் ஆன நறுமணம் ஒன்று வீசிற்று. அந்த நறுமணம் நாயகமவர்களின் நாசியிற்புகுந்து கமழ்ந்தபோது அவர்களுக்கு ஒருவித மயக்கம் உண்டாயிற்று.

அந்த மயக்கத்தினுல் பிரக்கினை யற்றுப்போனுர்கள். சொற்பநேரமளவும் அம்மயக்கத்தில் முழுகியிருந்து, தெளிவுபெற்ருர்கள். மேலே போய்க்கொண்டிருந்த ஆசனம் ஓரிடத்திற்போய் நின்றது. அந்த இடம் இன்னதென்று அவர்களுக்குத் தெரியாது. இன்ன இடத்திற்குச் செல்கின்ருேம்; இன்ன இடத்தில் இருக்கின்ருேம் என்று அவர்களால் அறியக்கூடவில்லை.

["அல்லா மீது சத்தியமாக நான் அந்த இடத்தை அறியவில்லை" என்று நாயகமவர்கள் சத்தியம்பண்ணிச் சொல்லியிருக்கின்ருர்கள்.]

இவ்வாறு இருக்கையில், நாயகமவர்கள் திரைகளைக் கண்டார்கள். அவையெல்லாம் ஒளிகளால் உண்டாயிருந்தன. அவற்றின் அழகு, சிறப்பு, மகத்துவம் முதலியவற்றை வருணிக்க யாரும் சக்திபெற்றிருக்கவில்லை. அவ்விதத்திரைகளை நாயகமவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போது, அத்திரைகளுக்குப் பின்பக்கத்திருந்து ஒரு சத்தம் கேட்டது. அச்சத்தம் இது:—

السلام عليك يا عبدي و يا سلطان سيد احمد الكبير اني انا لله *

"அஸ்ஸலாமு அலைக்க யா அப்தீ, வயா சுல்தான் ஸையிது அஹமதுல் கபீறு, இன்னீ அனல்லா"

இதன் பொருள்:—

[அஸ்ஸலாமு அலைக்க என் அடிமையே, சுல்தான் ஸையிது அஹமதுல் கபீறே, திடனாக நான்தான் அல்லா] என்பதாம்.

இச்சத்தத்தை நாயகமவர்கள் கேட்டு, இதற்குப் பிரதி கூறினர்கள். அது:—

لا إله الا أنت و أنت محبوبي و مقصودي أنت رب
العالمين جل جلالك وعم نوالك*

"லாஇலாஹ இல்லா அன்த, வ அன்த மஃறூபீ, வ மக்ஸூதீ, அன்த றப்புல் ஆலமீன். ஜல்ல ஜலாலுக, வ அம்ம நவாலுக"

இதன் பொருள்:—

[உன்னையன்றி வேறே ஆண்டவன் இல்லை. உவக்கப்பட்டவனும், நாடப்பட்டவனும் நீயேதான். நீயே உலகத்தார்க்குக் கர்த்தன். உன்னுடைய வல்லமையே வல்லமையாயிற்று; உன் ஈகையே ஒருமிக்க வந்தது.] என்பதாம்.

இவ்வாறு நாயகமவர்கள் கூறி, பின்னும் "யா அல்லா, உன் அடியானுன என்னுடைய சொல்லாலும், செயலாலும், பொருளாலும் உண்டாகின்ற எல்லாவணக்கங்களையும் உனக்கு நான் காணிக்கை வைக்கின்றேன்" என்று சொன்னார்கள். இவ்வாறு சொன்னபின், மறுபடியும் அத்திரைகளுக்கு அப்பால் இருந்து நாயகமவர்களை விளித்து "சையிது அகுமதுல் கபீறே, நீர் கௌதுல் அதுலம்; நீர் சுல்தானுல் ஆரிபீன்; நீர் குத்பு; நீர் என் ஹபீபு; நீர் என் ஆஷிகு; நீர் என் அந்தரங்கமாகிய சிற்று; நீர் என் கலீபா. இன்னும் கேட்பீராக: என் அடியார் இடத்துத் தொண்ணூற்றொன்பது நாமங்கள் எனக்கு வழங்குகின்றன. அவ்வாறே உமக்கும் தொண்ணூற்றொன்பதூ நாமங்களை இப்போது நான் தருகின்றேன்; அவற்றை நீர் ஏற்பீராக. அவை:— அகுமது, முத்தகீ, ஹஸனைனி, றபாஇ, ஹாதி, மஹ்தி, ஷரீபு, சையிது, றஹ்மத்து, முஹிப்பு, மஹ்பூபு, ஸாதிகு, முஸத்திகு, ஆஷிகு, மஉஷூகு, சைபுல்லா, தையிபு, தாஹிறு, அபிப்தாஹஸ்ஸலீ, கறீம், ஸகீ, ஸிற்றுல்லா, ஜமீல், ஷபீஉ, லாஹூல்லா, மக்பூறு, மஸ்றூறு, கன்ஜுல்லா, ஸபீஉ, றபீஉ, ஆலீம், ஆரிபு, தகீ, நகீ, பஹ்றுல்லா, ஷாஹிது, மஷ்ஹூது, பாஸு, பாகி, முஷ்தாக்குல்லா, முபஷ்ஷிறு, வாஸிலு, காமில், ஆமிலு, வஸீலத்துல்லா, மூமின், ஸாலிகு, குத்புல் ஆலம், வலீ, முகற்றபு, கௌதுல் அதுலம், சுல்தானுல் ஆரிபீன்,

ஸாஹிபுல் அலம், தாஜுல் ஔலியா, ஹுஜ்ஜத்துல்லா, முதவக்கில், பஷீறு, ஸிறுத்துல்லா, முனீறு, றஊபு, றஹீம், அப்துல்லா, உபைதுல்லா, நூறுல்லா, ஹிஜாபுல்லா, பைலுல்லா, குத்றத்துல்லா, புர்ஹானுல்லா, முஸவி, பாத்திமி, ஹாஷிமி, குறைஷி, நபிது றசூலில்லா, ஜமாலுல்லா, ஜலாலுல்லா, முகீ முஸ்ஸுன்னத்தி, முதஹ்ஹிறு, முஸ்லிஹு, முதபஸ்ஸிம், நிஉமத்துல்லா, தா[illegible]அல்லா, முன்திறு, நதீறு, முஷப்பஉ, றஹீம், ஸலீம், முதவாலிஉ, [illegible]று, பகீறு, ஷாகிறு, கனீ, மஸ்ஊது, கைறுல் ஔலியா[illegible]பிக்கு, மிஸ்பாஹு, திக்றுல்லா, றசீ[illegible] பல்கின், ஸாஹிபுல் மிஅறுஜி, தாபிஉன்னபிய்யி, ஸல்லல்லாகு அலைகிவஸல்லம் என்பனவாம். இந்நாமங்களுள் ஒவ்வொன்றும் இம்மை மறுமைகளில் பெரும் பலன்பெற்றது. இந்நாமங்களைச் சொல்வாரும் இம்மை மறுமைகளில் பலன் அடைவார்கள்" என்று அல்லாகுத்ஆலாவின் சத்தம் கேட்டது. அன்றியும், இத் திருநாமங்களைக்கொண்டு அப்போதே அவன் அழைத்தான். அதன்பின், அத் திரைமறைவுக்கு அப்புறம் இருந்தே சில பைத்து கள் நாயகமவர்கள் செவியில் கேட்டன. அவை:—

1. هو القطب الذي لا قطب دهرا
هو الغوث الذي لا غوث عصرا

2. هو الاحمد الحسين الرفاعي
هو المعشوق لله الالهي*

3. سلام الله عليه و التحية
هو القطب الالهي في البرية

1. " ஹுவல் குத்புல்லதீ லாகுத்ப தஹ்றன்,
ஹுவல் கௌதுல் லதீ லாகௌத அஸ்றன் "
2. " ஹுவல் அஹ்மதுல் ஹுஸைனுர் றபாயி,
ஹுவல் மஉஷூக்கு லில்லாஹில் இலாஹி "

3. " ஸலா முல்லாஹி அலைஹி வதஹிய்யதி,
ஹுவல் குத்புல் இலாஹி பீ பறிய்யதி "

இவற்றின் பொருள்:—

1. [இவர் குத்பா யிருக்கும் காலத்தில் இவரைப்போல் ஒரு குத்பு இல்லை; இவர் கௌதா யிருக்கும்காலத்தில் இவரைப் போல் ஒரு கௌது இல்லை.]

2. [இவர் தந்தை வமிசத்தில் ஹஸனிய்யும், தாய் வமிசத்தில் ஹுஸைனிய்யுமாகிய அஹ்மதா யிருப்பார்.]

3. [அல்லாஹுத் தஆலா வுடைய ஸலாமும், தஹிய்யத்தும், இவர் மேல் உண்டாவதாக; இவர், படைக்கப்பட்டவர்களுக்கு அல்லாஹுத் தஆலா வுடைய குத்பா யிருப்பார்.] என்பனவாம்.

இந்த பைத்துகளை நாயகமவர்கள் கேட்டவுடன், மேற்கூறிய திரைகளெல்லாம் உயர்ந்து கடைசியாயிருந்த ஹிஜாபு என்னும் ஒரு திரையும் உயர்த்தப்பட்டது. உயரவே, அல்லாஹுத் தஆலா வுக்கும், நாயகமவர்களுக்கும் இடையில் மறைவு இல்லை. அல்லாஹுத் தஆலா தீன் தாத்தைக் கொண்டும், ஸிபத்தைக்கொண்டும், சிரித்தவனாக நாயகமவர்களுக்குத் தஜல்லி யானான். இவ்வாறு வெளியாய்த் தோற்றிய ஆண்டவன் "என் மஹ்பூபே, அகுமதுல் கபீறே, என் அருகில்வாரும்" என்று அழைத்தான். நாயகமவர்கள் அவனை நெருங்கி, அவனுடைய ஜலாலியத்து என்கின்ற முந்தானைக்குள் புகுந்தார்கள். உடனே அவன் தனது கிபுறியா என்னும் போர்வையால் நாயகமவர்களைப்போர்த்தி மூடினான். ஒரு ஆஷிகு தன் மஉஷூக்கு மீது ஆசையும் அன்பும் பாராட்டுதல்போலப் பாராட்டினான். அந்த நேரத்தில் நாயகமவர்கள் அவனுடைய முந்தானைத் தலைப்பைப் பெலபிடியாகப் பிடித்து நின்றார்கள். அப்போது அவன் நாயகமவர்களைநோக்கி "என்னுடைய மஹ்பூபே, என்னுடைய மஉஷூக்கே, என் முந்தானையை நீர் விட்டி

டுவீராக. நீர் இப்போது என்னசொல்கின்றீர்? என்ன கேட்கின்றீர்? நீர் என்னென்னவற்றை விரும்பிக் கேட்கின்றீரோ அவற்றையெல்லாம் உமக்கு நான் தருகின்றேன்; முந்தானையை விடும்" என்றுசொன்னான். நாயகமவர்கள் அந்த முந்தானையை விடவில்லை; பிடித்தே நின்றார்கள். ஓரேபிடியாய் நிற்பதால், அல்லாகுத் தஆலா மறுபடியும் "அகுமதுல் கபீறே, முந்தானையைவிடும்" என்றான். நாயகமவர்கள் "ஆண்டவனே, எனக்கும், என் சந்ததிகளுக்கும், என் ஸில்ஸிலா வில் அடங்கும் முரீதீன்களுக்கும் நீ ஒருபோதும் கபடம் செய்கின்றதில்லை என்று இப்போது வார்த்தைப்பாடு கொடு; அதன்பின் முந்தானையை விடுகின்றேன்" என்றார்கள். அவ்வாறே அவன் நாயகமவர்களுக்கு வார்த்தைப்பாடு கொடுத்தான். நூற்றிருபது தடவை அந்த வார்த்தைப்பாட்டைச் சொல்லச் சொல்லிப் பெற்றுக்கொண்டு, முந்தானைத்தலைப்பை விட்டார்கள். இவ்வாறு சம்பாஷிக்கும்போது, நாயகமவர்கள் அல்லாகுத் தஆலா வை முகக்கண்ணால் தெளிவாக் கண்டார்கள். கண்டு, பெறுதற்கு அரிய பேறுகளையெல்லாம் அவனிடத்துப் பெற்றுக் கொண்டு, அங்கிருந்து மீட்சி பெற்றார்கள்.

[இந்த மிஃறாஜைப் பற்றிப் புத்திமான்கள் கவனித்தல் அவசியம். நாயகமவர்களிடத்து: தங்களின் மிஃறாஜ் எவ்வாறு நிகழ்ந்தது? என்று கேட்டபோது, அவர்கள்: நான் நித்திரைசெய்தேன்; ஸம்ஸாயீல் என்னும் மலக்கு வந்தார்;—எழுப்பினார்;—சொன்னார்;—எழுந்தேன்;— ஏறினேன்;— சென்றேன்;—கண்டேன்;—பார்த்தேன்;—கேட்டேன்;—போனேன்;—இருந்தேன்;—சொன்னேன்;—பெற்றேன்;—மீண்டேன் என்று நிகழ்ந்தவைகளையெல்லாம் தன்மைவாய்பாட்டாற் சொன்னார்கள். சரித்திரம் எழுதும் நான் அவற்றைப் படர்க்கைவாய்பாட்டால் எழுதினேன். இம் மிஃறாஜ் அவர்களின் யோகநித்திரையில் உண்டான றூயா என்னும் சொப்பனத்தில் நிகழ்ந்தது அன்றி, விழித்திருக்கும் சாக்கிரத்தில் அன்று. அவர்களுக்கு உண்டான மிஃறாஜைப் பற்றிய இச்சொற்

களையெல்லாம், சொப்பனங்கண்ட ஒருவன் விழித்தெழுந்து தான் கண்ட சொப்பனத்தைப் பிறனிடத்துச் சொல்லிக்காட்டுகையில்; நான் தூங்கினேன்;—ஒருவர் வந்து எழுப்பினார்;—சொன்னார்;—பின்னே போனேன்;— அழைத்துச்சென்றார்;— கண்டேன்;—கேட்டேன்;— வாங்கினேன்;—திரும்பி வந்தேன்;— விழித்தேன் என்று தானே சொல்வான்? அவ்வாறே நாயகமவர்களும் சொன்னார்கள். இவ்வித மிஅறாஜு ஒளலியாக்களுக்கு உண்டு. அவர்களுக்கு உண்டாகும் மிஅறாஜு, நபி முகம்மது ஸல்லல்லாது அலைகிவஸல்லமவர்களுக்கு உண்டான மிஅறாஜு போல்வது அன்று. அது ரூஹுடனும், சடத்துடனும், விழித்திருக்கும் சாக்கிரத்தில் நிகழ்ந்தது. அவ்வாறு எந்த ஒலிக்கும் நிகழாது. ஆயினும், நாயகமவர்கள் தங்கள் மிஅறாஜைச் சொல்லிக்காட்டுமிடத்து "என் இந்தச் சடத்துடனும், ரூஹுடனும், விழிப்புடனுமாகவே மிஅறாஜை அல்லாதுத் தஆலா எனக்குத் தந்தான்" என்றும், "நான் சென்ற மிஅறாஜில் நான் அநுபவித்தாற்போல அந்த ஸிற்றை அநுபவித்தவர்கள் அன்றி, மற்றவர் அறியார்" என்றும், "நான் என் பாட்டனார் நபி முகம்மது ஸல்லல்லாது அலைகிவஸல்லமவர்களைப் பின்பற்றி நிற்பவன் ஆதலால், அவர்கள் பிள்ளையாகிய எனக்கும் அந்த விதமான மிஅறாஜு உண்டாயிற்று" என்றும் சொன்னார்கள். இன்னும் நபிகள் நாயகமவர்கள் தங்கள் மிஅறாஜைப் பற்றித் திருவாய் மலர்ந்து சொன்ன ஹதீதுடன் தாங்களும் சில சொற்களைச் சேர்த்துத் தங்கள் மிஅறாஜுக்குச் சொல்வார்கள். இவைகளும் அவர்கள்சரித்திரங்கூறும் முதல்நூலிற் கண்டவை. இம்மொழிகளையே நான் இயற்றியுள்ள ஆரிபு நாயகம் என்னும் புராணத்து, மிஅறஜ் படலத்து, 201, 202, 203, 204-ம் செய்யுட்களில் அமைத்திருக்கின்றேன். நாயகமவர்கள் "அல்லாதுத் தஆலாவைச் சொப்பனத்தில் முகக்கண்ணாலும், சாக்கிரத்தில் அகக் கண்ணாலும் நான் கண்டேன்" என்றுதான் பல இடத்தும் சொல்லியிருக்கின்றார்கள். ஹக்குடைய உஸூலை யெய்திய ஆரிபுகள் அநேகர் தங்கள் மிஅறஜில் எழு வானங்களாதியவைகளைக் கடந்துபோய் றப்பைச் சந்தித்ததாகக் கூறுகின்றார்கள். இக்கூற்றை இன்ஸான் காமில் முதலிய பல சிறந்த நூல்களிற் காணலாம். அவர்கள் சொல்லில் ரூஹுடனும், சடத்துடனும் மிஅறாஜுக்குச் சென்றதாக வருமாயின், அச்சொற்களோடு மாறுபடாத கருத்துக்கள் உண்டு. ரூஹு இன்னதெனவும், சடம் இன்னதெனவும், அவ்விரண்டின் சம்பந்தப்பேறு இன்னதெ

னவும் விளங்கி அறிதல் வேண்டும். அவை விளங்குமாயின், அவர்கள் சொற்களின் பொருளும் விளங்கும். இவற்றையும், மிஃறாஜு இன்னதென்பதையும் அறியும் ஆற்றல் இல்லாத மூழுமக்கள் பலவாறு பிதற்றுவர். அப்பிதற்றுகையெல்லாம் கல்வியறிவு இன்மையும், பொறாமை உண்மையுமாம் என்று உணர்தல் இதனை வாசிப்போர்க்குக் கடமை. நும் மிஃறாஜின் முடிவிடத்து, அங்கிருந்து மீட்சிபெற்றார்கள் என எழுதியிருக்கின்றேன். அதன் தாற்பரியத்தை நன்கு ஆராய்ந்து விளங்குவீர்களாக.]

மிஃறாஜு

முற்றிற்று.

---

## 12 - ம் அத்தியாயம்.

## கிலுறு நபிவாய்மொழி.

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அஹுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் மகத்துவத்தைப்பற்றி நபி கிலுறு அலைகிஸ்ஸலா மவர்கள் மொழிந்த திருவாய்மொழிதனைச் சொல்கின்றது. இதற்கு றவி:— ஸைகு ஹுஸைனிபுனு முகம்மதுல் இறகீ.]

குத்புல் ஆலம், கௌதுல் அகுலம், சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்கள் புகழ் உலகம் முழுதும்பரவி விளங்கும் வண்ணம் பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருக்கின்றார்கள். அவர்களுக்கு மிஃறாஜிலேயே குத்பு பட்டமும், கௌது பட்டமும் நிரப்பமாய் விட்டன. இன்னும் அவர்கள் ஆஷிகீன்களுக்கு நாயகமாயும், வாஸீலீன்களுக்குக் கிரீடமாயும் இருந்தார்கள். அவர்களை கௌது என்றும், குத்பு என்றும் உலகத்து ஒளலியாக்களெல்லாம் ஏற்றுக்கொண்டார்கள். திசைகள்தோறும் உள்ள அக்தாபுகளும், ஒளலியாக்களும் அடுத்தடுத்துவந்து நாயகமவர்களைத் தரிசித்துக்கொண்டு செல்வார்கள். அங்கங்கே உள்ள ஆரிபீன்களெல்லாம் நா

யகமவர்களைத் தங்களுக்கு சுல்தான் என்று வியந்து கொண்டாடினார்கள். நாயகமவர்கள் வீற்றிருக்கும் சபையில் நாள்தோறும் ஔலியாக்கள், அக்தாபுகள், அப்தால்கள், அப்ருதுகள், உப்பாதுகள், ஜஹ்ஹாதுகள், நுகபாக்கள், நுஜபாக்கள் ஆகிய இவர்கள்தாம் வந்து செறிந்திருப்பார்கள். இவர்கள் அன்றி, நபி இல்யாசு அலைகிஸ்ஸலாமவர்களும், நபி கிலுறு அலைகிஸ்ஸலாமவர்களும், நாயகமவர்கள் சமூகத்தில் எப்போதும் வந்திருப்பார்கள். நாயகமவர்கள் பொழியும் திருவாய்மொழிகளை விரும்பி மஷாயிகுமார்கள் திரள் திரளாய் வந்து காத்திருப்பார்கள்.

மகத்துவம்பொலிந்த அச்சபைக்கண் நாயகமவர்கள் நடுநாயகமாய் ஆசனத்தின்மீது வீற்றிருந்து; பிரசங்கமாரி பொழிவார்கள். அவர்கள் திருவாய்மலர்ந்து பொழிகின்ற உபதேசமாகிய அமிர்தத்தை அங்கிருப்பவர் அனைவரும் வாரியுண்டு, களிகூர்வார்கள். துன்யாவைப்பற்றியவும், தீனைப்பற்றியவும் ஆன விஷயங்களுக்கு உரிய அரும்பெரும் அறிவுகளையெல்லாம் நாயகமவர்கள் பொன் சொரிவதுபோலச் சொரிவார்கள். இடைக்கிடை மஃரிபா விஷயங்களையும் குறிப்பாக உணர்த்துவார்கள். கூடியிருந்து கேட்போர் ஆழமான அறிவிலும், ரகசியமான உணர்ச்சியிலும் தெளிவுற்று, மேம்பாடுபெற்றுக்கொள்வார்கள். முஷாஹதா, முருக்கபாக்களின் விவரங்களைக் குறித்தும், நபீ, இதுபாத்துகளைக்குறித்தும் போதிப்பார்கள். இவ்வரிய போதனையின் மகிமையால், அங்கங்கு உள்ள ஒலிமாரெல்லாம் நாயகமவர்களிடத்து வந்து முரீதாய், சீஷர்வகுப்பிற் சேர்வார்கள். அவர்களின் மாட்சிமைபொலிந்த சபையைக்காண்பவர் திடுக்கிட்டு அஞ்சி நிற்பார்கள். நாயகமவர்கள் அழகிலும், உருத்தோற்றத்திலும், ஒப்பற்றவர்களாய்க் காணப்படுவார்கள். அதனால், அவர்களைக்காண்பவர்க்கு இருதயம் துளும்பாமல் இராது. மனிதர்கள் அவர்

கள் சமுகத்தில் எவ்வாறு பேணியிருக்கின்றனரோ அவ்வாறே, தூரத்திலும் அஞ்சிப்பேணுதலோ டிருப்பார்கள்.

நாயகமவர்கள் இவ்விதம் பதாயிது நகரத்தில் வாழுங் காலத்து ஒருதினம், ஆரிபுபில்லா ஷஹாபுத்தீன் ஸஹ்ரவர்தீ என்னும் பெரியோர் நபி கிலுறு அலைகிஸ்ஸலா மவர்களைச் சந்தித்தார்கள். சந்தித்து இருவரும்சம்பாஷித்துக்கொண்டு இருக்கையில், அவர்கள் நபி கிலுறு அலைகிஸ்ஸலா மவர்களைநோக்கி "யா நபி யல்லா, இந்தக்காலத்தில் மஷ்ரிகு மக்ரிபு என்னும் இரண்டு எல்லைக்குள்ளும் முன்னிருந்த ஒளலியா க்களின் கர்ரியங்களையும், இப்போது உள்ள ஒளலியா க்களின் காரியங்களையும் அறிய நான் விரும்புகின்றேன். எனக்குத் தாங்கள் அவற்றைத்தெரிவித்தல் வேண்டும்" என்று வினவினார்கள். அதற்கு நபி யவர்கள் அவ்வௌலியா க்களின் தாரதன்மியங்களைப்பற்றி ஷஹாபுத்தீன் ஸஹ்ரவர்தீ யவர்களுக்குத் தெளிவுறச் சொல்லிக்காட்டினார்கள்,

அது முடிந்தபின், மறுபடியும் அவர்கள் நபி யவர்களைநோக்கி "யா நபி யல்லா, இப்போது நான் சையிது அகுமதுல் கபீறு டைய மேம்பாடுகள் எவ்வளவு என்பதை அறிய விரும்புகின்றேன். தாங்கள் அருள்கூர்ந்து அதனைத் தமியேனுக்குத் தெரிவிப்பீர்களாக" என்று கேட்டார்கள். இதனைக் கேட்டபோது நபி யவர்கள் சொல்கின்றார்கள்:— ஷஹாபுத்தீனே, கேட்பீராக. சையிது அகுமதுல் கபீறு எவ்விதமேம்பாட்டினர் என்றால்;— அவர், ஆரிபீன் களுக்கும், ஸித்திகீன் களுக்கும் இமாம் ஆனவர். முகற்றபீன் களுக்கு ஹுஜ்ஜத்து ஆனவர். இன்னும் அவர் அல்லாவுக்கு மஹ்பூபும் மஉஷூக்கும் ஆனவர். அவரைப்போல் ஒரு மஹ்பூபையும், மஉஷூக்கையும் நான் பார்க்க இல்லை. அவர் வாஸிலீன் களுக்கும், ஆஷிகீன் களுக்கும் மகுடமானவர். கௌது களுள் மேன்மையானவர். குத்பு களுள்

மாட்சிமைப்பட்டவர். அல்லாகுத் தஆலா நேரில் அவருக்கு சுல்தானுல் ஆரிபீன் என்று பட்டஞ்சூட்டினன்" என்று இவ்வளவும் சொல்லிவிட்டு வாய்மூடி யிருந்து, சற்று நேரத்திற்குப்பின் மறுபடியும் சொல்கின்றார்கள்.

"ஷஹாபுத்தீனே, இன்னும் கேட்பீராக. சையிது முகியித்தீன் அப்துல் காதிறு ஜைலானி யவர்களின் ஆட்சியும், சைகு அபாஇஸ்ஹாக்குல் காஜஜ்வானி யவர்களின் ஆட்சியும், தாஜுல் ஆரிபீன் அபுல்வபா அவர்களின் ஆட்சியுமே, சைகு மன்ஸூர்புனு அபூபக்கருற் றபாஇ யவர்களின் ஆட்சியும், சைகு மஉறூபுல் கர்கீ யவர்களின் ஆட்சியும், சையிது யஹ்யா மஉஷூக்குல்லா அவர்களின் ஆட்சியும், சையிது அகுமதுல்கபீறு அவர்களின் ஆட்சியும் இடையில் நடைபெறுமல் நிற்கமாட்டா; இனியுகம் முடியும் அளவும் இவர்களின் ஆட்சி நிலைத்திருக்கும். இவர்களைப்பின் பற்றினோர்க்கு இவர்களில் நின்று அருள் சுரந்துகொண்டிருக்கும். இதை நீர் நம்புவீராக" என்று கூறினார்கள்.

நபி கிலுறு அலைகிஸ்ஸலா மவர்கள் சொன்ன இவ்வருமைச்சொற்களை ஷஹாபுத்தீன் ஸஹ்ரவர்தி யவர்கள் கேட்டுக் களிகூர்ந்து, நாயகமவர்களை ஒப்பற்றவர்கள் என்று விசுவாசித்து, அவர்கள்மீது மிகவும் விருப்புள்ளவர்களா யிருந்தார்கள்.

கிலுறுநபி வாய்மொழி

[illegible]ற்றிற்று.

---

## 13-ம் அத்தியாயம்.

## சாதனை.

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் மறுபடி யொருதரம் இறக்கு டைய வேறொரு காட்டிற்சென்று வணக்கத்தில் பனிரண்டு வருஷம் ஒரே நிலையாய்ச் சாதித்து நின்ற சாதனையைச் சொல்கின்றது. இதற்கு றவி:— ஸைகு இபுறாஹீமுல் அதறபு.]

சுல்தானுல் ஆரிபீன் சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்தில் புகழ்பெருக வாழ்ந்திருக்குங்காலத்து, ஒருதினம் இரவு பிற்சாமத்தில் வீட்டைவிட்டுப் புறப்பட்டு பதாயிகைக் கடந்து அருகில் உள்ள அடவியை நோக்கிச்சென்றார்கள். அவர்கள் செல்வதைப்பார்த்து அவர்களின் முரீதாகிய மகுமூதுல் மீறுன் என்பவரும் அவர்களைக் கூடத்தொடர்ந்து போனார். விடிவெள்ளி கிளம்புதற்கு முன்னமே நாயகமவர்கள் அடவிக்குட்புகுந்து, அங்குள்ள ஹௌலுல் கபீறு என்னும் தடாகக் கரையிற்போய்த் தஹஜ்ஜத்துத் தொழுவதற்கு அத்தடாகத்தில் உலு செய்தார்கள்.

நாயகமவர்கள் உலு செய்துகொண்டு, தஹஜ்ஜத்துடைய தொழுகையை நிய்யத்துச் செய்து தக்பீறு கட்டினார்கள். கட்டின முதல் றக்அத்தில் தானே அல்லாகுத்தஆலா வுடை தஜல்லி அவர்களுக்கு உண்டாய், அகக்கண்ணுக்குத் தெளிவாய்த் தோற்றிற்று. பொறி புலாதிகள் அனைத்தும் தத்தம் தொழில்களில் நின்று ஒடுங்கி, நான் அது என்னும் வேற்றுமையை ஒழித்து, நாம் இல்லை என்கின்ற பனாமுஹாஷதா வுடைய கடலில் முழுகிவிட்டார்

கள். அவர்களின் உடலும், ரூஹும், அல்லாகுத்தஆலாவுடைய உஜூதின் காட்சியில் மருவி நின்றன. ஆயினும், தொழுதற்கு உரிய நேரம் வருந்தோறும் அதில்நின்று தெளிவுற்றுத் தொழுதுகொள்வார்கள். தொழுதுமுடிந்தால், மறுபடியும் அந்தக்காட்சியில் மருவி, மேற்சொன்ன அலைகடலில் அமிழ்ந்து நிற்பார்கள். இவ்வாறாக நாட்களும், வாரங்களும், மாதங்களுமாய்க் கழிந்து, வருஷக்கணக்கிலும் வந்தது. இடையில், ஊண் உறக்கம் என்பன ஒரு சிறிதும் இல்லை. உபவாசமாதமாகிய றம்லான் வந்தபோது தெளிவுற்று, உபவாசம் வைத்துக்கொள்வார்கள். தெளிவுபெறுவதும், செய்தற்குக் கடமையான கருமங்களைச் செய்வதும், உடனே அந்த பனாமுஷாஹதா வில் முழுகுவதுமாகவேயிருந்தார்கள். இவ்வாறு சில வருஷங்கள் சென்றன.

நாயகமவர்கள் ஒருதடவை தெளிவுபெற்றபோது, தங்களோடு தொடர்ந்துவந்த சீஷர் மகுமூதுல் மீறான் என்பவர் தங்களுக்குப் பின்னே நிற்கக்கண்டு அவரும் தங்களைப்போல பனா வுடைய நிலைமையில் நிற்பதை அறிந்து, அவர்க்குத் தெளிவுண்டாம்படி பகா வில்மீட்டி, அவரைப் பார்த்து "மகுமூதே, நீர் இங்கே நிற்கவேண்டாம்; ஊர்க்குப்போவீராக. போய், நீர் இங்கு வந்தநாள் முதலாய் இடையிட்டுப்போன தொழுகை நோன்பாதிக் கடமைகளையெல்லாம் கலா செய்து தீர்ப்பீராக" என்று கட்டளை பண்ணி, அங்கிருந்து அவரை ஊர்க்கு அநுப்பிவிட்டார்கள். அவர் அவர்கள் சொன்னவண்ணமே பதாயிக்கு வந்து, கழிந்துபோன நாட்களின் கணக்கைத் தெரிந்துகொண்டு, செய்யவேண்டிய பறுலான கருமங்களையெல்லாம் கலா வாகச் செய்து தீர்த்தார்.

நாயகமவர்கள் மகுமூதுல்மீறான் என்பவரை ஊர்க்கு அநுப்பிவிட்டு, முன்போலவே பனா வுடைய நிலைமையில்

நின்றார்கள். அவ்வாறு அவர்கள் நிற்கையில், வானம், பூமி, விலங்கு, பறவை, வேறுபொருள் ஒன்றையும் அறியார்கள். அவ்வடவிக்குள் அவர்கள் நிற்கும் இடத்தைச் சூழ்ந்து உள்ள விருக்ஷங்களெல்லாம் அவர்களை நோக்கித் தலைகள்சாய்த்து நிலத்தே வீழ்ந்து கிடந்தன. அவர்களின் சிரசிற்குமேல் ஆகாயத்தில் பறவைகள் வந்து வட்டம் இட்டு, வெயிலும் மழையும் விழாதபடி சிறகுகளை விரித்து ஒன்றோடு ஒன்று நெருங்கிப் பந்தலிட்டாற்போல நின்றன. அக்காட்டு விலங்குகள் வந்து நாயகமவர்களைச் சூழ வேலியிட்டாற்போலக் கூடிவளைந்து காத்துநின்றன. துஷ்ட விலங்குகளான சிங்கங்களும், வேங்கைகளும், கரடிகளும், ஓநாய்களும், யானைகளும் நாயகமவர்களுக்கு முன்னே வந்து, தலைகளைத் தரையிற் போட்டுக்கொண்டு குப்புற்றுக்கிடந்தன.

நாயகமவர்களின் இவ்வகையான நிலைமையில் பனிரண்டு வருஷங்கள் சென்றன. ஊண் உறக்கம் இன்றி வேறு நினைவற்று பளு வுடைய நிலைமையில் பனிரண்டு வருஷங்கள் சென்றபின், அல்லாகுத் தஆலா அவர்களுக்குத் தெளிவையும், உணர்ச்சியையும் உண்டாக்கினான். உணர்ச்சி பிறந்தநேரம், ஆரம்பத்தில் தஹஜ்ஜுத்துத் தொழுதற்கு நின்று தக்பீறு கட்டின நேரமாயிருந்தது. அவ்வுணர்ச்சி உண்டானவுடன் முன்போல உலு செய்துகொண்டு தஹஜ்ஜுத்துத் தொழுகையைத் தொழுதுமுடிந்தார்கள்.

நாயகமவர்கள் தொழுது முடித்தபின், தாங்கள் ஊரைவிட்டு அடவிக்கு வந்ததும் தடாகக்கரையில் உலு செய்துகொண்டு தொழுதற்குத் தக்பீறு கட்டினதும் ஆன ஆரம்பத்தையும், அப்போது தங்களுக்கு உண்டான முஷாஹதாவையும், அதனிடத்து உண்டான காட்சியையும், அக்காட்சியிலே[illegible]பட்டு நின்றதையும், இடைக்கிடைத் தெளிவுற்றுத் தொழுகைமுதலான நியதிகளைச் செய்து நி

றைவேற்றிவந்ததையும் சிந்தித்து, அல்லாகுத் தஆலா வைப் புகழ்ந்து, அவன்செய்யும் உபகாரத்திற்கு நன்றியறிவுள்ளவர்களாய், ஊர்விடுத்து வெளிப்பட்ட பனிரண்டுவருஷங்களுக்குப்பின் திருமபி பதாயிகு வந்து சேர்ந்தார்கள். நாயகமவர்கள் அவ்வாறுநின்ற பெருநிலை ஔலியாக்களுக்குள் பெரும் புகழாயிருந்தது.

சாதனை

முற்றிற்று.

---

### 14-ம் அத்தியாயம்.

## நாமமகிமை.

—()ః()—

[இது, சுல்தானுல்ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களுக்கு அல்லாகுத் தஆலா வினால், பின்னும் கிடைத்த இருபத்துநான்கு திருநாமங்களையும், அவற்றின் மகிமையையும் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— சைகு அபுல் பத்ஹி புனு கனுயமுல் வாஸ்கிதியும், சைகுல் அகுலம் முஇஜ்ஜித்தீ னிபுனு ஹூசைனுஷ் ஷீறாசியும்.]

உலகத்தை விலை கொள்ளத்தக்க மாசற்ற மாணிக்கமொன்று இருந்து சுடர்விட்டு எறிப்பதுபோல, சுல்தான் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்தில் இருந்து மனிதர்களின் மனக்கண்கள் மாசற்றுப் பிரகாசிக்கும்படி வாழ்ந்தார்கள். பெரியோர்கள் கூடியிருக்கும் சபைநடுவே அவர்கள் வீற்றிருக்கும் தன்மை, வெண்ணிறம் அமைந்த இனிமையான பாற்கடலிடத்து உதயமான புதியதோர் முழுமதி தோற்றுவது போல விளங்கா நிற்கும். அவர்களின் மதுரமான திருவாய் மொழிகள், படர்ந்த இருளை அறுத்து விலக்குவதுபோல உலகத்

தி அவலச் சிந்தனைகளை அறுத்து விலக்காநிற்கும். நாயகமவர்கள் இதனிடையில் "அகுமதிய்யா" எனத் தங்கள் திருநாமத்தால் ஒரு தறீக்கும் உண்டாக்கினார்கள். தாங்கள் முன்னமே முரீதாய் கிலாபத்துப் பெற்ற றபாஇய்யா என்கின்ற தறீக்கில் பிறரை முரீதாக்குவதும் அன்றி, புதிதாகநியமித்த அகுமதிய்யர் என்னும் தறீக்கினும் முரீதாக்கிவந்தார்கள். மஷாயிகு மார்களுள் அவர்களுக்கு நிகரான ஒருவர் அக்காலத்து இல்லை. நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் ஸ, من عرف نفسه فقد عرف ربه "மன் அறப நப்ஸஹு, பகத்அறப றப்பஹு" என்றருளிய திருவாய்மொழியின் [தன்னை உணர்ந்தவன், தன் ஆண்டவனை உணர்வான்] என்கின்ற பொருட்கு இணங்க, ஒவ்வொருவரும் தன்னையும் தன் ஆண்டவனையும் உணர்வதில் திறம்படச் செய்து, அவர்கள் எல்லாரையும் ஆரிபுகளாக்கி வந்தார்கள்.

குத்புல் ஆலம் ஸையிது அகுமதுல் கபீறுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்கள் இவ்வாறாகச் சிறந்துவாழும் காலத்து ஒரு நாள், மன உணர்ச்சி இன்றி அறிவின் முறைமை கெட்ட மூழுமக்கட்கூட்டத்தில் இருக்கின்ற பல நூல்களும் உணர்ந்து நுண்ணறிவு பெற்ற புலவன் முகம் வாடி ஒடுங்கினாற்போலத் தாமரைமலர்கள் ஒடுங்க மாலைப்பொழுது வந்தது. வரவே, ஞாயிறு தன் கதிர்களைச் சுருக்கி அஸ்தகிரியிற் சென்று அடங்கிற்று. வானத்தில் வெள்ளிகள் வாரி இறைத்ததுபோலப் பிரகாசித்தன. அவ்விரவு வெள்ளிக்கிழமையின் இரவாயிருந்தது. அன்று நாயகமவர்கள் இஷா தொழுத பின், முஷாஹதா என்னும் சுடரை இருதயத்துக் கொளுத்தி வைத்துப் பொறி புலாதிகளையெல்லாம் ஒடுக்கி, அல்லாகுத் தஆலா வின் தஜல்லியைக் காணும் விருப்பத்துடன் இருந்தார்கள். அவ்விருப்பத்தின்படி அவனுடைய தஜல்லி தோற்றாவாயிற்று.

அல்லாகுத் தஆலா நாயக மவர்களுக்கு வெளியாய் "யா சுல்தானுல் ஆரிபீன், வயா தாஜுல் வாஸிலீன், கேட்பீராக. முன் உம்முடைய மிஅறுஜிலே தொண்ணூற்றொன்பது நாமங்களை உமக்கு நான் தந்தேன் அன்றோ? அந்நாமங்களில் நின்றும் உயர்ந்த மேம்பாடும் தகுதியும் உள்ள வேறு இருபத்துநான்கு திருநாமங்களை இப்போது உமக்கு நான் தருகின்றேன். அவற்றைநீர் ஏற்றுக்கொள்வீராக" என்று சொன்னான். இவ்விதம் சொல்லிவிட்டு, அப்புதிய திருநாமங்களைக்கொண்டு அப்போதே நாயகமவர்களை அல்லாகுத் தஆலா அழைத்தான். எப்படி யெனில்:—

* 1-யா கௌதுல் அதுலம், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
2-யா தாஜுல்வாஸிலீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
3-யா நூறுல் அலமதீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
4-யா குத்பல் ஆலமீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
5-யா நூற றஹுமதீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
6-யா நூற மஹப்பதீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
7-யா சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
8-யா நூறு ஜமாலீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
9-யா சைக அஷ்லிஸ் ஸ்மாவாத்தி வல்...லீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
10-யா கன்ஜ அரிபதீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
11-யா நூறு ...லாலி, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
12-யா வலத ...ந்ரீமதீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
13-யா கபிற ...லி, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
14-யா பகீர், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.

* இந்நாமங்களுட் சில முன் மிஅறுஜில் கொடுக்கப்பட்டிருப்பினும் அவை ...னி நாமங்கள் ஆதலால், அடியார்கள் பலன் பெறத் தொடர்பாக ஓதுதல் வேண்டி வேறு இருபத்து நான்கு என்னும் தொகைப்படுத்திப் பின்னும் கொடுக்கப்பட்டன.

15-யா ஹபீபீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
16-யா சுல்தான்முகியியித்தீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
17-யா ஸிற்ற அஸ்றாறீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
18-யா மஉஷுகீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
19-யா நூற கிபுறியாயீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
20-யா அப்தீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
21-யா றூஹீ, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
22-யா மலிக்கல் மு[illegible]தகீன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
23-யாசைகல் இன்சி வல் ஜின்னி, சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.
24-யா கௌதந் தக்லைன், சுல்தான் சையிது அதுமதுல் கபீறு.

என்று இவ்வாறு அழைத்து, மறுபடியும் "சுல்தானுல் ஆரிபீன் சையிது அதுமதுல் கபீறே, இப்போது [illegible] உம்மை அழைத்த இவ் விருபத்துநான்கு நாமங்களையும் நீர் வெளிப்படையாக்கும். என் அடியார்களில் இந்நாமங்களைக்கொண்டு இவ்வாறு உம்மை அழைப்போர்க்கு அவர்கள் கொண்டுள்ள விருப்பங்களையெல்லாம் நான் நிறைவேற்றுவேன். இந்நாமங்களை உச்சரிப்போர் துன்யாவிலும் ஆகிறத்திலும் நல்ல பேறுகளைப் பெறுவார்கள். இன்னும், என்மீது சத்தியமாக நீர் என்றும் என்னை விரும்பி, என்மீது இச்சைகொண்டு இருக்கின்றீர். நானும் அவ்வாறே உமக்கு உள்ள காலம் முழுவதும் உம்மை விரும்பி, உம்மீது இச்சைவைத்து இருக்கின்றேன்" என்று சொன்னான்.

அல்லாகுத் தஆலா சொன்ன இச்சொற்களை நாயகமவர்கள் கேட்டு மகிழ் கூர்ந்து "சுப்ஹானல்லா!" "அல்ஹம்து லில்லா!" என்று திருவாய்மலர்ந்து சொல்லிவிட்டு, அவனை நோக்கி "உலகங்களைப் படைத்துவைத்து ஆள்கின்ற வல்லமையுள்ளவனே, ரகசியங்களையெல்லாம் அறி

கின்றவனே, நீ உன் அடியானாகிய என் இருதயத்தில் இருக்கின்ற விருப்பம் இன்னதென்று அறிந்திருக்கின்றனை. நான் என் இயக்கவொடுக்கம் முதலான எக்கருமமும் உன்னுடையனவாய்விட வேண்டியும், என் இருதயத்து உண்டாம் எல்லா எண்ணங்களும் உன்னுடையனவாய்விட வேண்டியுமே விருப்புற்று உன்னிடம் இரந்து நிற்கின்றேன். உன் நாட்டங்கொண்டு நான் உன்னை நாடவும், உன் அறிவுகொண்டு நான் உன்னை அறியவும், உன்பார்வைகொண்டு நான் உன்னைப் பார்க்கவும், உன் கேள்விகொண்டு நான் உன்னிற் கேட்கவும், உன்மொழிகொண்டு நான் உன்னோடு மொழியவுமே தேடுகின்றேன். நீ இன்ன தன்மையன் என்பதை நான் தெளிவாயுணர்ந்துகொள்ளுதற்கு உன்னுடைய ஹக்கீத்தின் சுடரை என் இருதயத்தின்கண் என்றும் நின்று எரியக் கொளுத்தியருள். நீ படைத்த படைப்புக்களின் அந்தரங்கங்களை எனக்குத் தெரிவி. உன் பொருத்தனை உள்ள கருமங்களை எனக்குத் தந்தருள். லா இலாஹ இல்லா அன்த மக்ஸூதி, வ அன்த முன்தஹீ, தலபீ, யா அல்லா! யா அல்லா! யா அல்லா!" என்று கூறினார்கள். இவ்வளவில் அல்லாகுத்தஆலா வின் தஜல்லீ மறைந்தது. பின்பு நாயகமவர்கள் தெளிவுபெற்றார்கள்.

இது நிகழ்ந்து சில நாட்களுக்குப் பின், நாயகமவர்கள் அலதாமம் ஆருமுன் றூயா என்னும் சொப்பனக் காட்சியில் ஹிம்மத்து விற்கும் கடைவீதியிடத்து அவர்களைக் கண்டார்களே கன்ஜுல் ஆரிபீன் ஜாஹிது அகுமது என்கின்ற பெரியோர், அவர்கள் இக்காலத்து வயது முதிர்ந்து விருத்தராயிருக்கின்றார்கள். அந்த முதியோர் ஒருதினம் பதாயிகு நகரத்திற்கு வெளிப்பக்கத்தில் ஓடிச் செல்லும் நதியின் கரையில் நின்றார்கள். அப்போது, பதாயிகுக்குத் தூரத்திலேயுள்ள ஒரூரிலிருந்து இஸ்மாயீல் என்பவரின் குமாரர் ஈசா என்பவர் அந்நதிக்கரையில் வந்

னு, ஜாஹிது அகுமது அவர்களைக்கண்டு ஸலாம் சொன்னார். அந்த ஸலாத்திற்கு அவர்கள் பிரதி சொல்லிவிட்டு, முகம் மலரச் சிரித்தார்கள். அதை ஈசா பார்த்து "நாயகமே, தாங்கள் சந்தோஷக் குறியுடன் சிரித்தகாரணம் என்ன?" என்று வினவினார். அதற்கு ஜாஹிது அகுமது அவர்கள் அவரைநோக்கி "நான் சிரித்தது வேறு ஒன்றைப்பற்றியும் அன்று. இன்று, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு உடைய சமுகத்தில் அவர்களைக் கண்ணாரப்பார்த்துக் கொண்டு உட்கார்ந்து இருந்தேன். அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த என்பார்வை என்னைப் பிரக்ஞை தப்பச் செய்தது. என்னை நான் மறந்துவிட்டேன். அவர்களுக்கு அல்லாகுத் தஆலா கொடுத்த சுல்தானுல் ஆரிபீன் என்னும் பட்டத்தை நான் தலைதாழ்த்திப் பொருந்தினேன். அல்லா மீது சத்தியமாக அவர்கள் ஆலத்திற்கு குத்பும், ஆரிபீன்களுக்கு சுல்தானும், வாஸிலீன்களுக்குத் தாஜுமாம் ஆனவர்கள். இதைப்பற்றிய ஆநந்த மகிழ்ச்சியே எனக்குச் சிரிப்பு உண்டாக்கிற்று" என்று பிரதி கூறினார்கள்.

இதைக்கேட்ட ஈசா மறுபடியும் அவர்களைநோக்கி "கன்ஜுல் ஆரிபீனே, அவ்வித மகத்துவம் உள்ளவர் யாருடைய மகனார்? அவருடைய வம்சாவழிகள் யாவை?" என்று கேட்டார். ஜாஹிது அகுமது "ஈசாவே, அவர்கள்:— சுல்தானுல் ஆரிபீன் சுல்தான் சையிது அகுமதுல் கபீறு ஹாஸைனுற் றபாஇ யிபுனு அபுல் ஹஸன் அலி யிபுனு சையிது யஹ்யா மஉஷூக்குல்லா" என்று பிரதிகூறி, பின்னும் சொல்கின்றார்கள்:—

"ஈசாவே, அந்த சையிது அகுமதுல் கபீறு அவர்களின் மகிமையிற் சிலவற்றைச் சொல்கின்றேன். யாரேனும் ஒருவன் தனக்கு உண்டான எவ்வித ஹாஜத்தையும் நிறைவேற்றுதற்கு நாடி, அகுமதுல் கபீறு என்கின்ற நாமத்துடன் அவர்களின் காரணநாமங்களுள் ஒன்றிரண்டைச்

சேர்த்து வாயால் உரைத்து, அந்நாமத்தை வஸீலா வாக்
கி அல்லாதுத் தஆலா இடத்து இரந்து கேட்டால், அது
உடனே நிறைவேறும். அல்லாதுத் தஆலா தன் மஹ்பூபா
கிய நாயகமவர்கள் பொருட்டு அதை நிறைவேற்றுவான்.
இது உண்மை. இன்னும் சொல்கின்றேன் ஈசாவே, கேட்
பீராக. ஒருமனிதன் துன்யா வுடைய, அல்லது தீனு டை
ய காரியங்களுள் ஒன்றை விரும்பிச் செய்தவிடத்து அது
நிறைவேறுமற் போகுமாயின், இரண்டு றக்அத்து த்தொழு
வதற்காக உலு செய்து தக்பீறு கட்டி, முதல் றக்அத் தில்
பாத்திஹா வுக்குப்பின் "இன்னு அன்ஜல்னு" என்கின்ற
சூறத் தைப் பனிரண்டுதரமும், இரண்டாம் றக்அத் தில்
பாத்திஹா வுக்குப்பின் "குல்ஹுவல்லாஹு" என்கின்ற
சூறத் தை மூன் றுதரமுமாக ஓதித் தொழுதுமுடித்து, நபி
முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்கள் திருநாமத்
தின்மீது மூன் றுதரம் ஸல்வாத்து ச் சொல்லிவிட்டு "நான்
தொழுத இத்தொழுகையின் நன்மையை சுல்தானுல் ஆரி
பீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்க
ளுடைய றூஹுக்கு ஹதியா வாக்கினேன்" என்று சொல்
லிமுடித்து எழுந்து, பகுதாயிது நகரத்திசைக்கு எதிரே
நின்று அடி ஒன்றுக்கு ஒருதரமாக "அஸ்ஸலாமு அலைக்க
யா சுல்தானல் ஆரிபீன் சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு
ஹுஸைனுற் றபாஇ" என்று மூன் றுதரம் ஸலாம் சொல்
லி மூன்று அடிகள் முன்னேக்கிச் சென்று, நாயகமவர்கள்
எதிரே யிருப்பதுபோலும் தோற்றப்படுவதுபோலும் இரு
தயத்தில் எண்ணம்வைத்து, ஒரு அரசன்முன்னே அவன்
குடிகளுள் ஒருவன் எவ்வாறு அஞ்சி யடங்கி நிற்பானே
அவ்வாறு அஞ்சி யடங்கி நின்றுகொண்டு, மறுபடியும் ஒ
ருதரம் ஸலாம் சொல்லி, தன் இருதயத்து எண்ணியிருக்
கும் விருப்பமான கருமத்தை அவர்கள்பால் முறையிட்டு,
மேற்சொல்லியுள்ள இருபத்துநான்கு திருநாமங்களையும்
ஓதி அழைத்து "என் விருப்பத்தை நிறைவேற்றல் வேண்

டும்" என்று வாயாற்கூறிவிட்டு, அதன்பின் அல்லாகுத்தஆலாவை முன்னோக்கி இந்த துஆவை ஓதல்வேண்டும். துஆ:—

يا إلهي اقض حاجتي بحرمة معشوقك الذي شرفته
بتشريف اربع وعشرين خطاباً من حضرتك *

"யா இலாஹீ இக்லி ஹாஜத்தீ பி ஹுர்மதி மஉஷூகி கல்லதீ ஷறபதஹூ பி தஷ்றீபி அறுபஅ வ இஷ்றீன கிதாபன் மின் ஹலறதிக."

இதன் தாற்பரியம்:—

[ஆண்டவனே, உன் மஉஷூகுக்கு உன்சமுகத்தில் நின்று கிடைத்த சிறந்த இருபத்துநான்கு காரணநாமங்களின் பொருட்டு என் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக] என்பதாம்.

இத் துஆவை ஓதி அவன் இடத்து இரந்துகேட்டு, மறுபடியும் நாயகமவர்கள் முன்னேயிருப்பதாகக் கருதி "அஸ்ஸலாமு அலைக்க யா சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு என்று ஸலாம் சொல்லிவிட்டு, பின் அந்நிலையில் நின்று மீளவேண்டும். இவ்வாறு செய்வானாயின், நிறைவேறுதற்கு அரிதானவையெல்லாம் நிறைவேறும். ஒருவன் இவ்விதம் செய்யுமிடத்து அவன் இருதயத்தில் நம்பிக்கையிருத்தல்வேண்டும். நம்பிக்கை ஒரு கடமையாம். சற்றேனும் சந்தேகப்படுதல் கூடாது. "நம் காரியம் இதனால் நிறைவேறி விட்டது" என்கின்ற விசுவாசத்தோடே செய்வானானால், அல்லா மீது சத்தியமாக அது கைகூடும்" என்று சொல்லிக்காட்டினார்கள்.

கன்ஜுல் ஆரிபீன் ஜாஹிது அகுமது அவர்கள் சொன்ன இந்த மகத்துவத்தை ஈசா கேட்டு ஆச்சரியம் அடைந்து, நாயகமவர்களின் மேம்பாடுகள் அளவு கடந்தவை என்றறிந்து, அவர்களைப் பெரிதும் புகழ்ந்து விசுவாசம் வைத்தார்கள்.

நாமமகிமை

முற்றிற்று.

―――

15 - ம் அத்தியாயம்.

## இபுறுஹீமுல் அதுறபு முரீதானது



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல்கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் தங்கள் மருமகனுர் இபுறஹீமுல் அதுறபு அவர்களை முரீதாக்கின வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு ஆவி:— சைகு அப்துல்லாஹில் மதற.]

மகத்துவம் உள்ள அல்லாகுத் தஆலா வின் அருள் நிறையப்பெற்ற நாயகம் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகும துல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், தங்கள் மகிமை வாய்ந்த காரணத் திருநாமங்கள் மனிதர்களால் தோத்திரிக்கப்படுமாறு பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருக்கும் காலத்து, விவாகம்செய்து இல்லறம் நடத்தல்வேண்டும் என்கின்ற எண்ணம் அவர்கள் இருதயத்தே உண்டாயிற்று. அதிக காலமெளவும் நாம் ஊண் உறக்கம் முதலிய சுகானுபவங்களை யெல்லாம் இழந்து வனத்தில்திரிந்து, இப்போது பட்டணத்துள்வந்து வாசஞ்செய்கின்றோம். அல்லாகுத் தஆலா நம் எண்ணத்தின்படி அவனிடத்து நம்மை உஸூல் ஆக்கி, நம்முடைய கருத்தை நிறைவேற்றினன். இனி, நம் பாட்டனராகிய நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் ஷரீஅத்தின்படி அவர்கள் செய்ததுபோல நாமும் விவாகஞ்செய்து, மனைவி மக்களோடு இருந்து இபாதத்துச்செய்து, அதனுல் வரும் பலன்களையும் பெறல்வேண்டும் என்று நாயகமவர்கள் கருதி, ஆரம்பமாக ஒரு விவாகம் செய்தார்கள். குலத்திலும், குணத்திலும், தவத்திலும், ஒழுக்கத்திலும், மற்ற யாவற்றிலும் தங்களுக்கு ஒப்பச்சிறந்த ஒரு பெண்ணை மணமுடித்து,

மேம்பாடான தீனுல் இஸ்லாம் என்னும் மார்க்க ஆசாரத்தில் குறைபாடு இன்றி, மிகச் சிறப்ப வாழ்ந்திருந்தார்கள். நாயகமவர்கள் மணமுடித்த சிலவருஷங்களுக்குள் இரண்டொரு ஆண்மக்களை அல்லாகுத் தஆலா அவர்களுக்குக் கொடுத்தான். மூத்த குமாரருக்கு சையிது முகம்மது என்றும், அடுத்த குமாரருக்கு சையிது ஸாலிகு என்றும் நாமகரணஞ்செய்து மகிழ்கூர்ந்தார்கள்.

நாயகமவர்கள் இவ்வாறு மனைவி மக்களோடு இல்லறத்து இருந்து வாழுங்காலத்தில் அல்லாகுத் தஆலா பலதடவைகளில் அவர்களுக்குக் கட்டளையிட்டுவந்தான். எவ்வாறெனில்;— “என் மஹ்பூபும், மஉஷூக்கும் ஆகிய சையிது அகுமதுல் கபீறே, நீர் வெகுகாலமளவும் ஊண் உடை உறக்கமாதிப் பலவகைப்பட்ட சுகங்களையெல்லாம் இழந்து, எளியோர்போல வனவாசியாய்த் திரிந்தீர். உம்முடைய உடை ஒளறத்தை மறைக்கத்தக்கதும், ஊண் ஒருபிடிச்சோறோ! சருகோ! கிடைத்ததும், இருப்பிடம் காடோ மேடோ நாடியதுமாகவே பழக்கிக் காலம்போக்கினீர். அவ்வாறுசெய்து, அதனால் நீர் நாடியது கிடைக்கப் பெற்றீர். எனக்காகவேண்டி என்மீது இச்சைவைத்துச் சுகானுபவங்களை நீர் இழந்திருந்தபடியால், இனி உமக்கு வேண்டுமான எல்லாவித சுகங்களையும் அநுபவிப்பீராக. இன்றுமுதலாக நீர் அணிந்துடுத்தும் பாவனையாக மேலான உடைகளை உடுத்திக்கொள்வீராக. அரசர் உண்பது போல மேலான அறுசுவைப் பதார்த்தங்கள் செய்வித்து உண்பீராக. துன்யாவில் நீர் எவ்வெச் சுகங்களைக்கொண்டாடக் கருதுகின்றீரோ அவற்றையெல்லாம் கொண்டாடுவீராக” என்பதாகவே.

இவ்விதக் கட்டளையை அல்லாகுத் தஆலா பலதரம் இட்டபடியால், நாயகமவர்கள் அக்கட்டளைப்படி செய்யத் தலைப்பட்டார்கள். அழகிய சிறந்த சிரசில் ரத்தினகிரீடம்

போதும் பிரபையிக்க சருவந்து அணிந்து, மிக மேலான பட்டினால் அங்கிகளும் பூண்பார்கள். உடை நடை பாவனைகளில் வையகம் ஆளும் முடிமன்னர் போலத் தோற்றப்படுவார்கள். அவர்களின் ஊண், தீன், குடிப்பு வகையெல்லாம் சாதாரண மனிதர்க்குக் கிடைக்கக்கூடாத உயர்ந்தவையாயிருக்கும். கண்ணுக்கு அலங்காரமான உடை உடுத்து, இனிமையான உணவுகள் உண்டு, அதிக சுகத்தோடே வாழ்ந்திருந்தார்கள். அல்லாகுத் தஆலா அவர்களுக்கு சுல்தான் என்ற நாமத்தையும் கொடுத்தபடியால், அந் நாமத்திற்கு ஏற்றவண்ணமே ஊண் உடையாதிகளையும் அவர்களுக்குக் கொடுத்து அநுபவிக்க ஏவினான்; அவ்வாறே அநுபவித்தார்கள். முந்தி மணமுடித்த முதல் மனைவியோடு இராமல், பின்னும் இரண்டு மூன்று பெண்களை மணமுடித்துக்கொண்டார்கள். நாயகமவர்கள் எல்லாவகையிலும் தீனுக்கு சுல்தானு யிருந்ததும் அன்றி, துன்யா வுக்கும் சுல்தானு யிருந்தார்கள்.

நாயகமவர்கள் இவ்வாறாக வாழ்ந்திருக்குங் காலத்து, அவர்களின் சகோதரி மக்களுள் இபுறாஹீமுல் அதுறபு என்போர்க்கு உபதேசஞ்சொல்லி அவரை முரீதாக்க நாட்டமுற்றார்கள். இந் நாட்டமுற்றபோது, அவர்களை அழைத்துத் தங்கள் முகத்தாவில் இருத்தி, முரீதாக்குமிடத்துச் செய்யும் முறைநடைகள் அனைத்தையும் செய்து, ஈமான், இஸ்லாம், தெள்ஹீது, மஃரிபா என்னும் நான்கு வகைப்பட்ட கல்விகளையும் புகட்டி, பின் ஷரீஅத்து, தரீகத்து, ஹகீகத்து, மஃரிபத்து விவரங்களையும் பிரித்து விளக்கி எல்லா நூல்களின் முடிபுகளையும் புணர்த்தி, தங்கள் தரீக்காகிய அகுமதிய்யா வின் திக்றைச் சொல்லிக்கொடுத்து அதன் பொருளையும் போதித்தார்கள்.

தங்கள் மருகர் இபுறாஹீமுல் அதுறபு அவர்களை நாயகமவர்கள் முரீதாக்கினபின், இன்னும் அவர்களுக்குக்

கற்பிக்க வேண்டுமான இல்மு களுள் எஞ்சியவற்றையும் கற்பித்து, மஅரிபா என்னும் ஞானபாகத்து முறைகளையும் தெரிவித்தார்கள். உலகத்தே சிருஷ்டிக்கப்பட்டுத் தோற்றுவன அனைத்துங் அழிபவை; அவையெல்லாம் கயிற்றில் அரவுபோலக் கற்பிதமேயாம் என்றுதெளிந்து மனத்தூய்மை கொண்டு, ஒன்றையும் விரும்பாது அனைத்தையும் அறவே வெறுத்துநிற்கும் நிலையாகிய முஸாஹதா வையும், ஊண் உறக்கமாதிய சுகாநுபவங்களையெல்லாம் ஒடுக்கி, திக்று பிக்று என்கின்ற தியான விசாரம் இரண்டிலும் மனதை ஒருப்படுத்தி, தனிவாசமும் மௌனமும் பெற்றுநிற்கும் தெண்டிப்பின் நிலையாகிய முஜாஹதா வையும், வலம் இடம் என்னும் இருபக்கத்து நிகழும் எவ்வகைக் கருமமும் தோற்றப்படாதவண்ணம் அகமுகப் பார்வைகளை மடக்கி, எதிரே அல்லாகுத் தஆலா நம்மைப் பார்த்தபடியிருக்கின்றான்; நாம் அவன்பார்வையின்றி இருக்கவில்லை; ஆதலால், நம்பார்வையும் அவன்புறத்தேதான் இருத்தல் வேண்டும் என்று கருதி, அவனைப் பார்த்தபடி யிருக்கும் நிலையாகிய முருகபா வையும், பொறி புலாதிகளான இந்திரியங்களை யெல்லாம் அழித்துப் பிரபஞ்சத் தோற்றத்தை இல்லாமையாக்கி, அல்லாகுத் தஆலா வின் சமுகத்தில் முகமுகமாயிருக்கும் நிலையாகிய முஹாலரு வையும், பல பொருட்களாய்த்தோற்றும் எல்லாம் இல்லையென்று அழித்து, என்றும் உள்ளதான பேரருள் அல்லாகுத் தஆலா வே என்று தாபித்து, அவனைத் தரிசிக்கும் நிலையாகிய முஷாஹதா வையும், ஒருபொருள் இருள்மறைவிற் காணப்படும்போது சூரியன் உதித்து வெயிலைவீச அவ்விருள் நீங்கி அப்பொருள் வெயிலொளியில் தெளிவுறக் காணப்படுவதுபோல, காண்போனுக்கும் காணப்படுவோனாகிய அல்லாகுத் தஆலா வுக்கும் இடையிற் கிடந்தமறைப்புநீங்கித் தெரிகின்ற நிலையாகிய முகாஷபா வையும், அகக்கண் முகக்கண் என்னும் இரண்டு கண்களும் திறந்து, நடுப்பகலில் வெள்

விடைமலீல் காண்பதுபோல அல்லாகுத் தஆலாவைக் காணும் நிலையாகிய முஆயினாவையும் நன்கு விளங்கத் தெரிவித்து, அந்நிலைமைகளிலும் கருமசாதனஞ் செய்வித்துப் பழக்கினார்கள். தபற்றக்கு, இஜாஜத்து, கலீபத்து என்னும் போர்வைகளையும் போர்த்தி, என்றைக்கும் தங்கள் பக்கத்தே யிருக்கும்படி வைத்துக்கொண்டார்கள். நாயகமவர்களின் முரீதீன்களுள் இபுறாஹீமுல் அகுறபு முதன்மையாளரா யிருந்தார்கள்.

[நாயகமவர்களின் மருகராகிய இபுறாஹீமுல் அகுறபு அவர்கள் தங்கள் மாமனாருடைய முதன்மையான கலீபாக்களுள் ஒருவராயும், சிறந்த ஒலியாயும் மேன்மை பெற்று விளங்கினார்கள். நாயகமவர்கள் உபாத்தானபின் தங்களுக்கு வேறு இணையில்லாத ஒலியாய், அநேக கறுமத்துக்களைச் செய்கின்றவர்களா யிருந்தார்கள். இவர்களின் அற்புத வரலாறுகள் இக்கிரந்தத்தின் கடைசியாகிய உபாத்து என்னும் அத்தியாயத்திற் சில சொல்லப்படுகின்றன.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்கள் மருகர் இபுறாஹீமுல் அகுறபு அவர்களை முரீதாக்கின பின், ஒருதினம் அவர்களை அழைத்துச் சமூகத்தில் இருத்திக்கொண்டு பின் வருமாறு சொல்கின்றார்கள்:—

“இபுறாஹீமே, கேளும். முந்தி நான் உண்ணவும் உடுக்கவும் வகையற்ற ஏழைக்கு ஒப்பாயிருந்தேன். நபுஸை ஒடுக்குதற்காக வேண்டி இனிமையான உணவுகளை வெறுத்து, எளியோர்போல உடையுடுத்தித் திரிந்தேன். பின்னர், அல்லாகுத் தஆலா என்னை விளித்து 'நீர் அரசர்கள்போல உடையுடுத்துவீராக' என்று சத்தியம் பண்ணிச் சொன்னான். அதனாலேதான் நான் இவ்வாறு அலங்காரமான ஆடைகளை அணிகின்றேன். அன்றியும் அவன் 'அகுமதுல் கபீறே, நீர் ஊண், தீன், குடிப்புக்களை அரசர்கள் அநுபவிப்பதுபோல் அநுபவிப்பீராக' என்று கட்டளையிட்டான். என் எஜமான் தன் அடிமையாகிய என்மீது இ

ரக்கி உயர்ந்த உடையுடுத்தவும், உயர்ந்த உணவுண்ணவும் சத்தியம் பண்ணிப் பல தடவைகளில் ஏவினபடியால், அவன் ஏவினவண்ணம் நான் செய்யத் தொடங்கினேன். ஒவ்வொரு சமயத்து நான் உடுத்தும்போதும், உண்ணும்போதும், தின்னும்போதும், குடிக்கும்போதும், அல்லாகுத்தஆலா என்னைவிளித்து 'என் மஹ்பூபே, என் மஉஷூக்கே, என்னுடைய வனுப்பமுள்ள ஜமால் ஜலால் மீது ஆணையாக இதை நீர் உடுத்துவீராக; இதை உண்பீராக; இதைத் தின்பீராக; இதைக் குடிப்பீராக' என்று கருணையோடு சொல்வான். நான் அவ்வாறே செய்வேன். மிகமேலான என் ஊண்தீன்களில் மறுநாட்டுக்கு என்று கொஞ்சமும் மிஞ்சவைக்கமாட்டேன்" என்று இம்மட்டுஞ்சொல்லிவிட்டு, ஒரு நாழிகைநேரம் வாய்மூடி யிருந்தார்கள். இருந்து; பின்னரும் தலை நிமிர்ந்து சொல்கின்றார்கள்:—

"இபுறாஹீமே, நான் ஏவப்பட்ட மனிதன்; ஏவினவன் ஏவற்படி செய்கின்றேன். நான் செய்வதைப் பார்த்து, இதுபோல நீர் செய்யாதீர். நான் ஆரம்பகாலத்து இருந்ததுபோலவே நீர் இருத்தல்வேண்டும். நான் அல்லாகுத்தஆலா வுடைய முஹப்பத்திலும், மஅரிபத்திலும், அலைகடலாயிருக்கின்றேன். அந்த முஹப்பத்து, மஅரிபத்துக் கடலில் அள்ளிப் பருகினவர்களுள் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களும்; அவர்களின் அஸ்ஹாபுகளும் அன்றி மற்ற எல்லாரும் ஒரு சிறங்கையளவு பருகினோரும், ஒரு துள்ளி நக்கினோருமா யிருப்பார்கள். அவரவர்க்குங் கிடைத்த அளவுதான் அவரவர் அநுபவித்தார்கள். நானோ அம் முஹப்பத்து மஅரிபத்துக்களின் பிரவாகமாயிருக்கின்றேன். ஆதலால்; இபுறாஹீமே, நான் செய்வதுபோல நீர் செய்யாதீர். நான்செய்யும் ஒரு கருமத்தை மேலானது என்று நீர் எண்ணி, அப்படிச் செய்யத்துணியாதீர். நான் ஆதியில் இருந்தவாறு நீர் இருப்பீராக" என்று திருவாய்மலர்ந்து சொன்னார்கள்.

நாயகமவர்கள் கருணைகூர்ந்து சொன்ன இச்சிறப்பான சொற்களையெல்லாம் இபுறாஹீமுல் அகுறபு அவர்கள் கேட்டுக் களிகூர்ந்து, அவர்கள் கட்டளைக்கு அமைந்து, அவர்களின் மகிமையான சகவாஸத்தில் அமர்ந்திருந்தார்கள்.

இபுறாஹீமுல் அகுறபு முரீதானது
முற்றிற்று.

---

16-ம் அத்தியாயம்.

## ஸைது அலிக்கு உபதேசஞ் செய்தது

—*—

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றபீயல்லாது அன்ஹு அவர்கள் ஸைது அலி என்னும் பெரியோர்க்கு மஃரிபாவின் முறைமைகளை உபதேசஞ்செய்த வரலாற்றைச் சொல்லுகின்றது. இதற்கு றவி:— அபூ வபீக்கு பெற்ற ஸைது அலி.]

பதாயிது நகரத்தில் உறுமானை உடைய குமாரர் ஸைது அலி என்று ஒரு பெரியவர் இருந்தனர். அவர், மேலான அறிவுகள் அனைத்தையும் கசடறக்கற்று, அல்லாகுத் தஆலாவுக்கு வழிபட்டு வணங்கும் வணக்கத்தில் என்றைக்கும் சிந்தைவைத்திருப்பவர். அவருக்கு முறுகபா முஷாஹதாக்களில் செய்வதில் அதிகமான விருப்பம் உண்டாயிருந்தது. அதனால் அவர் இடைவிடாது அவற்றிற் பழகிக்கொண்டு இருந்தார். முறுகபாவிலும், முஷாஹதாவிலும் ஸைது அலி இச்சைவைத்துப் பழக்கமுற்று வருங்காலத்தில் ஒரு நாள் சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாஹு அன்ஹு அவர்களின் மேலான மஜ்லிசுக்கு வந்தார்.

நாயகமவர்கள் சபையில் அன்று ஔலியாக்களும் மஷாயிகுகளுமான பெரியோர்கள் அநேகர் சூழ்ந்திருந்

தார்கள். அச்சபையிடத்து சைகு அலி வந்து உட்காந்து சற்றுநேரஞ்சென்று நாயகமவர்களை நோக்கி "யா சையிதீ, நம்முடைய மார்க்கத்தில் பெரியோர் பலரால் பல தறீக்குகள் பிரிக்கப்பட்டு இருக்கின்றனவே. அத் தறீக்குகளுள் ஒவ்வொரு தறீக்குக்கும் ஒவ்வொரு திக்று உண்டாயிருக்கின்றதன்றோ? அவ்வாறு பலவகைப்பட்ட திக்றுகள் எல்லாவற்றுள்ளும் நன்மையானதும், சிறந்ததும், உயர்தரம் உள்ளதும், யாரும் எளிதாக நடத்தத் தக்கதுமான திக்று யாது? அதனைத் தமியேனுக்குத் தெரிவித்தல் வேண்டும்" என்று கேட்டார்.

சைகு அலி இவ்வாறு கேட்டபோது, நாயகமவர்கள் அவரைநோக்கி "அலியே, திக்றுகளில் மேன்மையான திக்று, லாஇலாஹ இல்லல்லாஹு என்னும் கலிமா அன்றி வேறில்லை. இக்கலிமா வே மிக மேன்மையுள்ளது என்று நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் திருவாய்மலர்ந்து அநேக தடவைகளிற் சொல்லியிருக்கின்றார்கள்" என்று சொல்லிவிட்டு, சைகு அலியுடைய கையைப்பிடித்துத் தங்களின் வணக்கஸ்தானமாகிய அறைக்குள் அழைத்துச்சென்று, அவரை எதிரேயிருக்கச் செய்து தாங்களும் உட்காந்துகொண்டு, திக்றுகபியை இன்னபடியென்று அவர்க்குப் போதித்தார்கள். போதித்து, அதன் பொருளையும் உணர்த்தினார்கள். அப்பொருள், லாஇலாஹ இல்லல்லாஹு என்னும் கலிமாவின் பொருளாயிருந்தது.

பின்பு நாயகமவர்கள் சைகு அலியை நோக்கி "உதுமானுடைய மகனே, திக்றுகள் எல்லாவற்றிலும் மிக மேன்மையானது திக்றுகபியேயன்றி வேறில்லை. திக்றுகபியைக் குறித்து அல்லாகுத் தஆலா குர்ஆன் வேதத்திற் சொல்லியிருக்கின்றான். எப்படியென்றால்:—

واذكر ربك في نفسك تضرعاً و خيفتاً و دون الجهر
من القول بالغدو والاصال و لا تكن من الغافلين *

இதன் பொருள்:—

[முகம்மதே, உம்முடைய றப்பை உம்முடைய மனதில் விசனகரத்துடனும் பயங்கரத்துடனும், சொல்லில் நின்றும் வெளிப்படையாகாமல், காலையும் மாலையுமீ திக்று செய்வீராக. இடையிலும் மறந்திடாதீர்.] என்பதாம்.

அன்றியும், நபி முகம்மது ஸல்லலலாகு அலைகிவஸல்லமவர்களும் திக்று கபியைக் குறித்து ஹதீது சொல்லியிருக்கின்றார்கள். எப்படியென்றால்:—

يا ايهالناس اربعوعلى انفسكم فانكم لا تدعون
اصم و لا غائباً انه معكم سميع قريب *

"யா அய்யுஹன்னாசு இர்பஊ அலா அன்புஸிகும் பஇன்னகும் லாதத் ஊன அஸம்ம வ லாகாயிபன் இன்னஹூ மஅகும் ஸமீஉன் கறீபு" என்றும்.

இதன் பொருள்:—

[மனிதர்களே, உங்கள் நப்ஸில் இரக்கமாக்குங்கள்; நீவிர் செவிடனைக் கூப்பிடவில்லை; மறைவானவனைக் கூப்பிடவில்லை. அவன், கேட்பவனும் நெருங்கினவனுமாய் உங்களோடிருக்கின்றான்.] என்பதாம்.

இன்னும் ஒரு ஹதீது:— خير الذكر الخفي "கைறுல் திக்றி அல்கபிய்யு" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

இதன் பொருள்:—

[திக்றுகளில் கைறானது, திக்று கபி தான்.] என்பதாம்.

ஆதலால், ரகசியமாகச்செய்கின்ற திக்று கபியே எல்லா திக்றுகளினும் எற்றமானது. அரியபெரிய மஷாயிகுமார் எல்லாரும் திக்றுகளையெல்லாம் சோதனைப்பண்ணிப்

பார்த்து, திக்று கபி யைத்தான் உத்தமமானது என்று அ
டைசியாக் கண்டுபிடித்தார்கள். இதுதான் எந்தநேரத்
தும் இருதயத்தில் நடைபெறத்தக்கது. ஆதலால் அலி
யே, நீர் இதையே கடைப்பிடித்துக் கொள்வீராக"

என்று இம்மட்டுஞ் சொல்லி முடித்து, பின்னும்
நாயகமவர்கள் அவரை நோக்கிக் கீழ்வருமாறு சொல்
கின்றார்கள்:—

"அலியே, அல்லாகுத் தஆலா அல்லாத மற்ற எந்த
வஸ்துவும் உம்முடைய இருதயத்துள்ளே ஊடாடாத
வண்ணம் செய்துவாரும். இச்செயலை நித்தியகடமையாக்
கிக்கொள்வீராக. இன்மையாகிய பொருள்களையெல்லாம்
நபி செய்துவிட்டு, உண்மையாகிய ஒரேபொருளை இதுபாத்
து செய்வதைப் பழக்கமாக்கிக் கொள்வீராக. 'புகருக்க
ளுடைய இபாதத்து இருதய ஆடாட்டத்தை அறுத்து வி
லக்குவதுதான்' என்று மஷாயிகுமார்களெல்லாம் சொல்
லியிருக்கின்றார்கள். [illegible]லால், பிரபஞ்சப் பொருட்க
ளில் ஒன்றுயினும் உம்[illegible]ய இருத[illegible]த்து உ[illegible]
பழக்குவீராக. உதுமா[illegible]டைய மகனே, உம்முடைய இரு
தயக்கறைகள் நீங்கி[illegible]தளிவெய்துமாறு சுத்தப்படுத்து
வீராக. இருதயம் அழுக்கற்றுத் தெளிந்து பிரகாசிக்கு
மாயின், அல்லாகுத் தஆலா[illegible]வின் முஹப்பத்து மஅரிபத்து
கள் அனை[illegible]தும் கைகூடப் பெறும். இன்னும் கேட்பீரா
க. உலமாக்கள் எல்லாம் கற்ற கல்வியைக் கொண்டே க
ருமசாதனம் செய்கின்றார்கள். அதுகொண்டே அவர்க
ளுக்கு இருதயத்தெளிவு உண்டாகின்றது. ஸூபியாக்க
ளான ஒலி[illegible] ருடைய கருமசாதனம் அப்படிக்கன்று. அ
வர்கள் செய்யும் கருமசாதனம் எல்லாம் இருதயத்தைக்
கறைபோகச் சுத்தமாக்கிப் பளிங்குபோலத் தெளிவுறச்
செய்வதேயாம். முன் ஒரு காலத்துச் சீனதேசத்தாரும்
ரூம் ராச்சியத்தாரும் தத்தம் வேலைப்பாட்டின் திறத்

தைத் தாம்தாம் வியந்தவர்களாய் ஒருவரோடு ஒருவர் சபதம் பண்ணிக்கொண்டு அரசனிடத்துச் சென்று தெரிவிக்க, அவ்வரசன் அவ்விருதாரத்தார்க்கும் ஒரு தானத்தைக் காட்டி இங்கே உங்கள் வேலைப்பாட்டின் திறத்தை வெளிப்படுத்த வேண்டுமென்று கட்டளை பண்ணின்போது, இருதாரத்தாரும் ஒருவருக்கு ஒருவர் இடையில் திரையிட்டுக்கொண்டு பலநாள் வேலை செய்தார்கள். றூமி ராச்சியத்தார் ஒரு சுவர் எழுப்பி, அதிற் பலவிதை வண்ணங்களாற் சித்திரம் எழுதி, கட்புலனுக்கு வெகு அழகாய்த் தோற்றுமாறு முடித்தார்கள். சீனதேசத்தார் எதிரிகள் சித்திரம் எழுதும் சுவருக்கு எதிராக வெறுஞ்சுவர் மாத்திரம் ஒன்று உயர்த்தி, அதில் தெள்ளிய சீற்றால் மெழுகிப் பளிங்குபோல் துலங்கச்செய்து வைத்தார்கள். இருதாரத்தாரின் வேலைப்பாடும் முடிந்ததன் என்று அரசனுக்கு அறிவித்தபோது, அவ்வரசன் அவ்வேலைப்பாட்டின் திறத்தைக் காண்பதற்கு வந்து நடுவில் இட்டிருக்கும் திரையை உயர்த்தவே, றூமி ராச்சியத்தார் சித்திரித்து வைத்த அழகிய சித்திரம் சீனதேசத்தார் மெழுகிவைத்த சுவரிற்பதிந்து தோற்றுவதைக் கண்டு புதுமைபாய், சீனதேசத்தாரையே அரசன் மெச்சினன் என்று ஒருகதையும் உண்டன்றோ? அலியே, அவ்வாறாகவே, ஊலயாக்களுடைய அமல், றூமி ராச்சியத்தார் செய்த சித்திரம்போல இல்முடைய நுட்பங்களால் சிறந்து துலங்கும். ஒலிமாருடைய அமல், சீனதேசத்தார் செய்த சுவர்போல இருதயம் தெளிவடைந்து அல்லாகுத் தஆலாவின் தஜல்லி பிரதிவிம்பித்துத் துலங்குதற்கு இடமாக்கும். ஆகையால், நீ திக்று கபி என்னும் பரிசுத்தமான நீரைக்கொண்டு இருதயத்தை அழுக்கறக் கழுவிக் கண்ணாடிக்கு ஒப்பாகச் செய்துகொண்டு இரும். உம்முடைய இருதயம் தெள்ளிவுபெறுமாயின், அல்லாகுத் தஆலாவின் தஜல்லி அவ்விருதயத்திற் பதிவுறும். அலியே, "லாஇலாஹ இல்லல்லாஹு" என்

னும் கலிமா வில் நபி யும், இதுபாத் தும் உண்டு. திக்று நடை பெறும்போதெல்லாம் நபி இதுபாத்து களைச் சிந்தனை பண்ணிக் கொள்வீராக. இது பழகினால், இருமை என்னும் துவிதபாவனை அற்று, ஒருமை என்னும் அத்துவிதநிலையாகிய வஹதானியத்துத் தரிபடும். ஆதலால், இந்தப் பயிற்சியைக் கைவிடாதீர். இது உமக்கு அப்பியாசமாயிருந்தால், அல்லாகுத் தஆலா வுடைய அஸ்மா, ஸிபாத்து, அப்ஆல் அனைத்தும் உம்மிடத்து உண்டாய், அவன் குணங்கொண்டு குணங்கொள்வீர். அப்போது உம்முடைய சொல்லும் செயலும் அவனுடையனவாகும். ஆதலால், உதுமானு டைய மகனே, இப்போது நான் சொல்வதைக் கடைப்பிடித்து நிற்பீராக" என்று கூறினார்கள்.

நாயகமவர்கள் இவ்வளவும் சொல்லிமுடித்து, மறுபடியும் சைகு அலிக்கு தாத்துடைய முறுகபாவைக் கற்பித்தார்கள். அது தாத்துடைய இஸ்முகளுள் ஜாமிஆன ஒரு இஸ்மை முறுகபா செய்தல் என்றும், அதன் வகைவிவரம் இன்னவை யென்றும் தெளிவுபெறத் தெரிவித்தார்கள். இது தீர்ந்தபின், மறுத்தும் அவரை நோக்கி "உதுமானுடைய மகன் அலியே, இந்த முறுகபாவை நீர் இடைவிடாதீர். நித்தியகருமமாகச் செய்துவருவீராக. இந்த முறுகபா வானது அல்லாகுத் தஆலா வை முடுகுதற்குக் குறுக்கான வழியாயிருக்கும். நான்கூறும் இதனை நீர் உறுதி கொள்வீராக. முறுகபா செய்வதைக் கடமையாக்கிக் கொள்வீராக. இது அவனிடஞ் செல்லுதற்கு உள்ள வழிகள் பலவுள்ளும் மிக முடுகுதலான வழியாயிருக்கும். அலியே, மறந்திடாதீர்; விட்டிடாதீர்; என்று சொன்னார்கள். கடைசியாகச் சொல்லவேண்டிய சொல்லை மூன்றுதடவையாகச் சொல்லி, அவரைப்போகும்படி கட்டளையிட்டு அனுப்பினார்கள்.

ஷைகு அலி, இவ்வரிய உபதேசம் என்கின்ற அமிர்த்தத்தை அள்ளிப்பருகி இருதயத்துள் நிறைத்துவைத்து, என்றும்பெறாத களிப்பைப் பெற்றவராய் நாயகமவர்களுக்கு ஸலாம் பகர்ந்து தம் இடத்திற்கு மீண்டார். நாயகமவர்கள் உபதேசித்த அன்றுமுதல் அவர் காரியம் அனைத்தும் மிகத் தெளிவாய்த் துலங்கின. அவர்களின் கட்டளைப்படியே திக்று கபியை இடையீடுபடாமல் நடத்திக்கொண்டும், முறாக்பா செய்துகொண்டும் இருந்தார். அல்லாகுத் தஆலா அவருக்கு உயர்ந்தபதவியைக் கொடுத்து, தன்மீது உவப்புள்ள ஸூபியாக்களுள் ஒருவராக அவரை மேன்மைப்படுத்தினான். அதனால் ஷைகு அலி, அக்காலத்துச் சிறப்பான மஷாயிகு மார்களுள் ஒருவரா யிருந்து விளங்கினர்.

ஷைகு அலிக்கு உபதேசஞ்செய்தது

முற்றிற்று.

---

17 - ம் அத்தியாயம்.

## தோஷியை நிர்த்தோஷியாக்கியது.

---

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தோஷியான ஒருவரை நிர்த்தோஷியாக்கிவிட்ட வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— ஸைது அபுல் பத்ஹிப்னு கனியம்.]

குத்புல் ஆலம் சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் உலகத்தார் கீழ்ப்படிந்து அடங்கி நடக்கும் அதிகாரம் உள்ள சுல்தான் என்னும் ராஜாதி ராஜருக்கு ஒப்பாய், இணையில்லா ஆசிரியராய், பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருந்தார்கள். ஔலியா மார்களை அடித்

தொண்டு செய்தற்குக் காத்துநிற்பார்கள் என்றால், அவர்கள் மகத்துவம் சொல்லுந்தரமானது அன்று. அத்தனை சிறப்பும், மகிமையும் வாய்ந்து வாழ்ந்தார்கள். தங்கள் சமுகத்தில் எத்தனைபேர் கைகட்டி நின்றாலும், தங்களுக்கு ஆகவேண்டுமான ஒரு அற்ப அலுவலையும் ஒருவரையேவாமல் தாங்களே செய்துகொள்வார்கள். தண்ணீர்த்தாகம் உண்டானால், தாங்களே எழுந்துபோய்க் கரகத்தையெடுத்துப் பருகிவிட்டு வந்து வீற்றிருப்பார்கள். உலு செய்தற்குக்கூடத் தாங்களே எழுந்துபோய் நீர்தேடி உலு செய்து கொள்வார்கள். ஒரு அலுவலையும் ஒருவரைக்கொண்டு செய்துகொள்ளக் கருதுவதில்லை. ஒருநாள் அவர்கள் சபையில் உள்ள சிலர் "யா ஸையிதீ, பணிவிடை செய்தற்குத் தொண்டர் பலர் தங்கள் சமுகத்தே காத்து நிற்கும்போது, ஒரு சிறிய அலுவலையும் தாங்களே செய்து கொள்ளுதற்குக் காரணம் என்ன?" எனக் கேட்டார்கள். அதற்கு நாயகமவர்கள் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"சகோதரர்களே, நான் ஒரு எஜமானுக்கு அடிமை என்பதையும், அவனுக்குக் கீழ் அடங்கினவன் என்பதையும் என் மன உணர்ச்சியைவிட்டு நீங்காமல் தரிப்பிக்கும் பொருட்டு, என் அலுவலை நானே செய்கின்றேன். எவுங் கருமத்தைச் செய்தற்குத் தொண்டர்கள் வைத்து ஆட்சி செய்வதில் நீவிரும் அதிக நன்மைபயக்கும் காரியம் ஒன்று உண்டு. அதாவது:— நீவிர் அல்லாகுத் தஆலாவைத் தொழுதுமுடித்த நேரத்தும், இரவில் நித்திரைக்குப் படுக்கும் நேரத்தும், தஸ்பீஹை முப்பத்து மூன்று தரமும், தஹ்மீது முப்பத்து மூன்றுதரமும், தக்பீறு முப்பத்துநான்கு தரமுமாக ஓதுதல் ஆம். இது செய்வீர்களாயின், எண்ணிறந்த தொண்டர்களை வைத்து ஆள்வதிலும் அதிகமான மகத்துவம் இதனாற் பிறக்கும். பாத்திமா றலியல்லாகு அன்கா அவர்கள் ஒரு தினம் தங்கள் தந்தை நபி முகம்மது

ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களிடத்துச் சென்று: என் பிதாவே, ஒருநாளாவது இடையீடுபடாமல் யந்திரம் பிடித்து மா அரைப்பதில் என்கை காய்த்துப்போகின்றது. ஆதலால், எனக்கு ஒரு அடிமைவேண்டும் என முறையிட்டபோது, நபி நாயகமவர்கள் தங்கள் மகளாரை நோக்கி 'பாத்திமா, அடிமையைப் பார்க்கிலும் அதிகமான ஒன்றை உனக்குத் தருகின்றேன். அது:— நீ தொழுது முடிந்த நேரத்தும், படுக்கைக்குப்போகும் நேரத்தும், தஸ்பீஹு முப்பத்து மூன்றுதரமும், தஹ்மீது முப்பத்துமூன்றுதரமும், தக்பீறு முப்பத்துநான்கு தரமும் ஓதிவருவாயாக. இது அடிமையிலும் மிகமேலானது' எனத்திருவாய் மலர்ந்து சொன்னதாக அபூஹுறைறு றலியல்லாகு அன்கு சொல்கின்றார்கள். ஆதலால், நீவிர் அடிமைகளைக் கொண்டு அலுவல் முடிப்பதில் நின்றும் மேற்கூறிய வண்ணம் ஓதுவீர்களாக"

என இவ்வாறு நாயகமவர்கள் சொல்லி முடித்தார்கள். இவற்றைக்கேட்ட பெரியோரெல்லாம் மிகக்களிகூர்ந்தார்கள். இன்னும் நாயகமவர்கள், ஊரில் பலாய் முதலான எவ்வகை ஆபத்துவந்தாலும் அக்காலத்துத் தங்கள் முரீதின்கள் என்னும் சிஷர்களை அழைத்து: அல்லாகுத் தஆலா இறக்கின இவ்வாபத்துக்குப் பொறுமையாயிருப்பீர்களாக; அவ்வாறு இருந்து அல்லாகுத் தஆலா இடத்து "இவ்வாபத்தை நீக்கு" என்று இரந்து கேட்பீர்களாக என்று கட்டளை பண்ணுவார்கள். அவ்வாறே அவர்கள் ஆபத்துக்காலங்களிற் செய்து, நன்மை பெறுவார்கள்.

இன்னும் சிலபோது, நாயகமவர்கள் தங்கள் சமுகத்து இருப்போரை நோக்கி "எவன் ஒருவன் தோஷியென்று தீர்மானம் பெற்று இருக்கின்றானோ அவனை நான் அத்தோஷித் தன்மையில் நின்று நீக்கி, நிர்த்தோஷி ஆக்குவேன்" என்றும் சொல்வார்கள்.

நாயகமவர்கள் இவ்வாறு சிறப்புற்று வாழுங்காலத்து, சிறந்த வளங்கள் பொலிந்த ஷாம் தேசத்தில் உள்ள பட்டணங்களுள் ஒன்றாகிய திமஷ்கு நகரத்திற் குடியிருக்கும் ஒருவர், தமக்கு அல்லாகுத் தஆலாவைத் தெரிவிக்கும் ஞானதேசிகர் ஒருவர் வேண்டும் என்று கருதி, சிறந்ததேசிகர் ஒருவரைத்தேடி ஊரைவிட்டுப் புறப்பட்டு, பலநாள் வரையும் ஷாம் தேசம் முழுமையும் சுற்றித்திரிந்தார்; அவர் எண்ணம்போல ஒருவரும் அங்கே அவர்க்கு அகப்படவில்லை. பின்பு அவர் ஷாம் தேசத்தைவிட்டு இருக்கு தேசத்திற்குவந்து, இங்கேயும் பல நாள் தேடித்திரிந்தார்; நல்லாசிரியர் ஒருவரும் புலப்படவில்லை. கடைசியாக அவர், நாம் இவ்வாறு திரிவதிற் பலன்படாது. இங்குள்ள பகுதாது நகரத்திற்குப் போகலாம். அந்நகரத்தில் அனந்தம் ஔலியாக்கள் வசிக்கின்றார்கள். அவர்களுள் ஒருவரை நமக்குத் தேசிகராக அல்லாகுத் தஆலா அருள்புரிவான் என்று கருதி, பகுதாது நகரத்திற்கு வந்தார்.

அந்நகரத்துட் புகுந்தவர், நாம் வீதிவழியே செல்லும்போது எதிரே யாரைக் காண்கின்றோமோ அவரையே தேசிகராகவைத்து, அவரிடத்துச்சென்று பணிந்து நம் விஷயத்தைத் தெரிவித்தல் வேண்டும். நம் விதிப்படிக்கே காரியம் நிகழும் என்று கருத்துள் வைத்துக்கொண்டு நடந்தார். அப்போது, அங்குள்ள மஷாயிகு மார்களுள் ஒருவராகிய ஸைகு அதிய் என்னும் பெரியோர் எதிரே வருவது அவர் கண்ணுக்குத் தெரிந்தது. உடனே அவர்கள் இடஞ் சென்று ஸலாம் கூறி, அவர்கள் கையைப் பிடித்து முத்தம் இட்டுக்கொண்டு “நாயகமே, தமியேனைத் தௌபா சொல்வித்து முரீதாக்கி, தங்கள் சீஷருள் ஒருவனாகச் சேர்த்தருள வேண்டும்” என்று சொன்னார். ஸைகு அதிய் அவனை ஏறிட்டுப்பார்த்து “ஏ மனித, உன் நெற்றியிடத்து, நீ ஸகாவத்து என்னும் தோஷித்தன்மை யுள்ளவன்

என்று எழுதியிருக்கின்றது. அவ்வெழுத்தை அழிப்ப தற்கு நான் சக்தியுள்ளவன் அல்லன். ஆதலால், உன்னை நான் எவ்வாறு முரீதாக்குவேன்? அது கூடாது; நீ போவாயாக" என்று கண்டித்துச் சொன்னார்கள்.

வெறுப்புற்றுச்சொன்ன இச்சொல்லை அவர்கேட்டுக் கண்ணீர்விட்டு அழுது, மறுத்துரை பகராது அங்கிருந்து மீண்டு, அலியிபுனு ஹைத்தியவர்கள் சமுகஞ்சென்று பணிந்து "நாயகமே, தமியேனைத் தௌபா சொல்வித்து, முரீதாக்கவேண்டும்" என்றார். அலியிபுனு ஹைத்தியவர்கள் அவரைநோக்கி "மனிதனே, நீ தோஷியென்று உன் நெற்றியில் எழுதியிருக்கின்றதே, உன்னை நான் எவ்வாறு நிர்த்தோஷியாகும் வண்ணம் முரீதாக்குவேன்! அப்படி ஒருபோதும் ஆகாது போ" என்று சொல்லி அகற்றிவிட்டார்கள். இச்சொல்லையும் அவர்கேட்டு முன்போலக் கண்ணீர்சிந்த அழுதுகொண்டு, அங்கிருந்து ஷெசகு அப்துற்றஹீம் என்னும் பெரியோர்பாற் சென்று, முந்தின இருவரிடத்துஞ் சொன்னவண்ணம் சொல்லி வேண்டிநின்றார். அந்தப்பெரிய மஷாயிகு அவர்களும் அவருடைய நெற்றியைப் பார்த்துவிட்டு, மனவெறுப்புடன் "நீ தோஷியாயிருக்கின்றனை. உன்னை நான் முரீதாக்கமாட்டேன்" என்றுசொல்லி அநுப்பிவிட்டார்கள்.

நிர்ப்பாக்கியரான அவர் மூவர்மொழியும் ஒரு தன்மையவாயிருப்பதைக் கருதி மனம் நொந்து அழுதகண்ணோடே வெளிப்பட்டு, பகுதாது நகரத்தே உள்ள மற்ற ஒளலியாக்கள் மஷாயிகுகள் எல்லாரிடத்தும் தனித்தனிச்சென்று "என்னை முரீதாக்குங்கள்" என்று வேண்டிநின்றார். அவர்களுள் ஒருவராவது அவர் கருத்திற்கு இணங்க இல்லை. எல்லாரும் நெற்றியில் தோஷியென்று எழுதியிருப்பதைச் சொல்லித் துரத்திவிட்டார்கள்.

[அப்போது, குத்புல் அக்தாபு முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் அங்கில்லை போலும்.]

அவர் இனிச்சென்று வேண்டிக்கொள்ளுதற்கு பகுதாது நகரத்தில் வேறேயாரும் இல்லை. நம் விதி இங்ஙனம் ஆயிற்று! என்று அவர் எண்ணி ஆருத்துயரும் அழுத கண்ணுமாய் அவ்வூரைவிட்டு வெளிப்பட்டு, வாஸ்து என்னும் பட்டணம்போய்ச் சேர்ந்தார். அந்த வாஸ்து நகரத்தில் அப்போது சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதில் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் மாமனாராகிய சையிது மன்ஸூறுற் றபாஇ யவர்கள் இருக்கின்றார்கள். அவர்களிடத்து அவர் சென்று பணிந்து நின்று "யா சையிதீ, தமியேனை முரீதாக்குங்கள்" என்று அழுது வேண்டிக்கொண்டார்கள். அதற்கு அவர்கள் அவரைப்பார்த்து "ஏ மனிதனே, நீ தோஷியென்பதற்கு உன்னுடைய நெற்றிதானே சாக்ஷிபகர்கின்றது. அங்ஙனமாக, அதை நீக்குதற்கும், உன்னை முரீதாக்குதற்கும், என்னால் இயலாது. ஆதலால், நீ போய்விடு" என்று கூறி அநுப்பிவிட்டார்கள்.

பின்பு அவர் அவர்களிடத்திருந்து மீண்டு அங்குள்ள ஔலியாக்கள் இடமெல்லாஞ்சென்று, முரீதாக்கவேண்டினார். யார் யார் இடத்துச்சென்று எவ்வெவ்வகையாக மன்றாடினாலும் ஒவ்வொருவரும் முந்திய சைகு அதிய்யவர்கள்சொன்ன வாய்மொழிக்கு ஒப்பச் சொல்கின்றார்களே அன்றி, வேறுவகை சொல்வார் எவரும் இல்லை. பகுதாதிலும் வாஸ்திலும் அவர்போய்க் கேட்டுக்கொண்ட பெரியோர்களின் தொகை நூற்றிருபது ஆயிற்று. இந்நூற்றிருபதுபேர்கள் அல்லாமல், இனி அவர்போய் மன்றாடத்தக்கவர் ஒருவரும் இல்லை. அதனால் மனம் வருந்தி, இனி நமக்கு வேறுகதியில்லை. ஆயினும், பதாயிகு நகரம் ஒன்று [illegible]இருக்கின்றது. அங்கேபோய்ப் பார்ப்போம்

என்று எண்ணி, வாஸ்ஸை விட்டு பதாயிது க்கு வந்தார். அங்கேவந்தவர் மற்றெங்கும் போகாது, சுல்தானுல் ஆரிபீன் சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் மகத்துவம் மிக்க மஜ்லிசுக்கே போனார்.

நாயகமவர்களின் சபையிடத்துச்சென்ற அவர் அவர்கள் சமூகத்தில் நெருங்கிப்போய் ஸலாம் கூறிவிட்டு, அழுதகண்ணினராய் நின்று வாய்திறந்து "தவத்தில் அலைகடலாய், அக்கடலிடத்து நன்மையென்னும் கிரணங்களைவீசிப் பாவ இருளை அறுத்தற்குத் தோற்றிய இளைய ஞாயிறாய், அஞ்ஞாயிறு மறைதற்கு ஓங்கிய கொடுமுடியை உடைய மலையாய், அம்மலைமீது ஏற்றிய தீபமாய் விளங்கும் யா சுல்தானுல் ஆரிபீன், யா தாஜுல் வாஸிலீன், யா சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு, தங்கள் அடிமைக்கடிமையான தமியேன் வாய்மொழியை உள்ளம் இரங்கிக் கேட்டு அருள்புரிய வேண்டும். இப்போது தாங்கள் தமியேனுக்குத் தௌபா சொல்லித்தந்து, என்னை முரீதாக்கி, தங்கள் தொண்டர்களுள் ஒருவனாகச் சேர்ப்பீர்களாக" என்று உள்ளம் உருகச் சொல்லி, பின்னும் அழுது நின்றார்.

தம் உள்ளக்கவலை முகத்தே தோற்றுமாறு நெஞ்சுருகி அழுது நின்று பரிந்துசொன்ன சொல்லை நாயகமவர்கள்கேட்டு, சிறப்பான தலையை நிமிர்த்தி, கருணை ததும்பும் கண்களால் அவர் முகத்தைப் பார்த்தார்கள்; பார்த்தபோது, நெற்றியில் தீட்டியுள்ள தோஷியென்னும் வரி கண்களிற்பட்டது. நாயகமவர்கள் அவ்வரியைக் கண்டவுடன் தங்கள் பார்வையைத் திருப்பாமல், நெடுநேரம் அழுந்தின பார்வையாகப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். நாயகமவர்களின் கிருபாநோக்கம் தாக்கத்தாக்க அவர் நெற்றியில் எழுதியிருந்த தோஷியென்னும் பொருள் உள்ள ஸகாவத்து என்கின்ற வரி மாறி, நிர்த்தோஷியென்

னும் பொருள் உள்ள ஸஆதத்து என்கின்ற வரியாயிற்று. அப்படிமாறும் வரையும் நாயகமவர்கள் பார்த்திருந்து, மாறினபின் அவரைத் தங்கள் அருகே அழைத்து இருத்தி, இருதத்து என்னும் விளக்கை அவர் இருதயத்தில் கொளுத்தி முரீதாக்கி, திக்று பிக்று களையும் கற்பித்து, தங்கள் கையால் கிற்காவும் போர்த்தித் தங்களின் முரீதீன்களான சீஷர்வகுப்பிற் சேர்த்துவிட்டார்கள். அதனால் அவர் கவலையற்று ஆநந்தம் அடைந்தவரானார்.

பின்பு அவர் நாயகமவர்களின் சகவாசத்திலேயே பலநாள் இருந்து, தெளஹீது மஅரிபாக்களின் தீர்மானம் அனைத்தையும் தெளிவுறத்தெரிந்து, அவற்றின் முறைமைப்படி இபாதத்துச்செய்து வந்தார்.

இவ்வாறு நாயகமவர்களின் பாதசேவையில் இருந்த அவர் சிலதினங் கழித்து, முன் முரீதாக்க வேண்டிக்கொண்ட காலத்துக் குற்றங்காட்டி வெறுத்துப் போகவிட்ட ஒளலியாக்கள் இடத்து இப்போது நாம்போய் அவர்களைத் தரிசித்தல்வேண்டும் என்று கருதி, நாயகமவர்கள்பால் விடைபெற்று பதாயிகு நகரத்தைவிட்டு யாத்திரையாய் பகுதாதுக்குப்போனார். அவ்வூரில் முதலாவதாகத் தாம் தரிசித்த சைகு அதிய் யவர்களிடத்துச் சென்று கண்டுகொண்டார். அப்போது சைகு அதிய் அவரைநோக்கி, நெற்றியில் தோஷியென்று எழுதியிருந்த பழயவரிசைத்தோஷியென்று மாறியிருக்கக்கண்டு "இப்படிச்செய்தவர் சையிது அகுமதுல் கபீறு!" என்று புதுமை தோன்றச் சொன்னார்கள். பிறகு அவர் அலியிபுனுஹைத்தி யவர்களிடம் போனார். அவர்களும் அவரைநோக்கி அவ்வாறே சொன்னார்கள். பகுதாது நகரத்தில் முன்னர் யார்யார் இடத்துச்சென்றாரோ அவர்களையெல்லாம் ஒவ்வொருவராகப் போய்க் கண்டார். அவர்கள் எல்லாரும் "இவ்வா

றுசெய்தவர் ஸையிது அகுமதுல் கபீறு தாம்!" என வியப்புற்று மொழிந்தார்கள்.

பின்பு அவர் பகுதாதை விட்டு வாஸ்து நகரஞ்சென்று, அங்கிருக்கும் மன்ஸூறுற் றபாஇ யவர்களைப்போய்த் தரிசனைபண்ணினார். அவர்கள் அவரைப் பார்த்துவிட்டுத் தங்கள் சீஷர்களை நோக்கி "இவருடைய நெற்றியில் எழுதியிருந்த 'ஸகாவத்து' என்னும் வரியை 'ஸஆதத்து' என என் மருமகன் அகுமதுல் கபீறு மாற்றிவிட்டார். அவர் பொருட்டுத்தான் அது மாறிற்று. அது அவரால் இயலுங் காரியந்தான்" என்று வியந்து கூறி, சந்தோஷமுற்றார்கள். பின்னும் அவர் அவ் வாஸ்து நகரத்தில் யார்யார் இடஞ்சென்றாரோ அவர்களிடமெல்லாம் போனார்; அத்தனைபேரும்: இது ஸையிது அகுமதுல் கபீறு செய்த வேலை என்றே ஒன்றுபோலச் சொன்னார்கள்.

முங்கிப்போய் முரீதாக்குங்கள் எ[illegible] மன்றாடிநிற்க வெறுத்துவிட்ட நூற்றிருபது ஒளலியாக்களும் ஒருமொழியாகச்சொன்ன மகிமை வாக்கியத்தைச் செவிகுளிரக் கேட்ட அவர் களிப்புற்று, தமக்குக்கிடைத்த அரும்பேறுக்காக அல்லாதுத் தஆலா வைப்புகழ்ந்து ஷுக்று செய்தவராய்த் தமது இருப்பிடஞ் சேர்ந்தார். நாயகமவர்கள் மகத்துவம் நாட்கு நாள் மிக்குவந்தது.

தோஷியை நிர்த்தோஷி யாக்கியது

முற்றிற்று.

---

18 - ம் அத்தியாயம்.

## பார்வையால் முத்தியளித்தது.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் தங்களின் ஒரே பார்வைகொண்டு நூற் றிருபது பேர்களுக்கு ஒரே தன்மையில் மோக்ஷங்கொடுத்த வரலாற் றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு இஸ்மாயீலிபுனு அப் துல் முன்இம்.]

மனிதர்க்கு மெய்ப்பொருள் உணர்த்தி மோக்ஷத்திற் சேர்க்கும் பரமாசிரியர் கோழிபோல்வாரும், மீன்போல் வாரும், ஆமைபோல்வாரும் என மூன்று திறத்தாராவர். அவருள் கோழிபோல்வார், கோழி அது இட்ட முட்டை யை அறவணைத்து அடைகாத்துத் தன்னைப்போலக் குஞ் சை வெளிப்படுத்துவதுபோலத் தம் மாணுக்கனை அறவ ணைத்துப் பக்கத்தே வைத்துப் பல நாள் காத்துத் தம் மைப்போல் ஆக்குவர். மீன்போல்வார், மீன் தன் சினை யைக் கூர்த்துப்பார்த்துத் தன்னைப்போல் ஆக்குவதுபோ லத் தம் மாணுக்கனை முத்திபெய்துதற்கு ஏதுவான ஞானப்பார்வையாற் பார்த்துத் தம்மைப்போல் ஆக்குவர். ஆமைபோல்வார், ஆமை தான் இட்டுவைத்த முட்டை யைத் தூரத்தேசென்றும் நினைக்கும் நினைப்புக்கொண்டு தன்னைப்போல் ஆக்குவதுபோலத் தம் மாணுக்கன் தூரத் தேயிருப்ப அவனைத் தாம் நினைத்தலைக்கொண்டு தன்னைப் போல் ஆக்குவர்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல் லாகு அன்கு அவர்களுக்கு இம்மூவகைத் தன்மையும் உண்டாயிருந்தன. இம்மூவகையுள் நடுவினதான மீனின்

தன்மை என்னும் பார்வையால் தம்மைப்போல் ஆக்குந் தன்மையே அதிக வழக்கமாயிருந்தது. தோஷியென்று எழுதப்பட்டதை மாற்றி நிர்த்தோஷியென்று எழுதச் செய்தது, நாயகமவர்களின் பார்வைதானே? அன்று முதலாக அவ்வித வழக்கம் ஆரம்பிக்கவே, நாலா திக்கிலும் உள்ள பாமரசனங்கள் வந்து வந்து நாயகமவர்களின் திருநோக்கம் எய்தி முத்திபெறத் தொடங்கினார்கள். இது எங்கும் பரவவே, பல தேசத்தாரும் பதாயிகு நகரத்திற்கு வரத்துப்போக்காயிருப்பதால், அவ்வூர் சிறப்பான ஒரு திருவிழா நிகழும் இடத்திற்கு ஒப்பாயிருந்தது.

ஒருபோது நூற்றிருபதுபேர் ஒரு கூட்டமாய்த் திரண்டு பதாயிகு நகரத்திற்கு வந்து, நாயகமவர்களின் திருவடியிற்சென்று பணிந்துநின்று "யா சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு, எவ்விதப் பாவிகளானாலும் தங்கள் திருவடியிடத்து வந்தபோது, அவர்கள் தங்களின் ஒப்பற்ற பார்வையால் பாவக்கறைதீர்ந்து முத்திபெறுகின்றார்கள் என்று நாங்கள் கேள்வியுற்றோம். தங்கள் திருவடித் தொண்டர்களாகிய நாங்கள் அறிவற்ற ஏழைகள்; கல்வியென்பது இன்னது என்று எங்கட்குத் தெரியாது. கற்றவர்களின் சகவாசமும் எங்களுக்கு இல்லை. அவர்களைக் கண்டால் நாங்கள் இகழ்வோம். அதனால், அக்கல்விமான்கள் எங்களை என்றைக்கும் அறவெறுப்பார்கள். எங்கள் தன்மை விலங்கோடு ஒத்த தன்மையாயிருக்கின்றதே அன்றி, மனிதத் தன்மையாயில்லை. இங்ஙனமாதற்கு நாங்கள் எழுத வாசிக்கக் கல்லாமையே காரணம். இவ்வித முழு மூடத்துவம் உள்ள எங்கள் கதி யாதாய் முடியுமோ என நாங்கள் எண்ணினவர்களும் அல்லேம். இனி நாங்கள் என் செய்வோம். இவ்வளவுக்குமேல் நாங்கள் கற்றுக்கேட்டுக் கரைசேர்தல் எங்ஙனம் கூடும்! யா ஸையிதீ இப்போது தங்கள் திருவடிகளே தஞ்சம் என்று வந்துவிட்டோம். தாங்கள் எங்கள்மீது இரக்கம்வைத்துத் தங்

கள் கருணைக் கண்களால் எங்களை நோக்கி முக்தி யுய்க்க வேண்டும்" என்று முறையிட்டார்கள்.

இவ்வாறு சொல்லும்போது, அவர்கள் கண்களில் நின்று நீர் பெருக்கெடுத்து ஓட அலறி அழுதார்கள். நூற்றிருபது பேரும் வரிசையாய் நின்று அழுது, பாவக்கறை தீரப் பார்த்துப் பலன் தரல் வேண்டும் என மன்றாடின தன்மை எவர் மனதையும் உருக்காமல் இராது. அவர்கள் அழுது முறையிடுவதை நாயகமவர்கள் கேட்டு மறுமொழி ஒன்றும் அவர்களுக்குச் சொல்லவில்லை. சற்றுநேரம்வரையும் சிரங்குனிந்து இருந்தார்கள். இருக்கையில், நாயகமவர்களின் திருமேனி செந்நிறம் மாறி மஞ்சள் நிறம்கொண்டது. முழுமேனியும் மஞ்சள் நிறம் ஆனவுடன் நாயகமவர்கள் நிமிர்ந்தார்கள். நிமிரும்போதே தங்கள் திருக்கண்ணோக்கம் எதிரே நிற்கும் நூற்றிருபது பேர்கள் மீதும் படும்படி திவ்வியமான பார்வையாகப் பார்த்தார்கள். அப்பார்வை அக்கூட்டத்தாரின் மனத்துள் செறிந்து கிடந்த மல இருள் அறுக்கும் ஞாயிற்றின் கதிர்போலாயிற்று.

அஞ்ஞான இருளை அறுக்கும் ஞானதீபம் போன்ற நாயகமவர்களின் அருணோக்கம் எய்தியபோது, அந்நூற்றிருபது பேர்களின் மனங்களெல்லாம் களங்கம் அற்ற கண்ணாடிபோல் தெளிவுற்றுப் பிரகாசித்தன. அல்லாகுத் தஆலாவின் முஹப்பத்தும் மஅரிபத்தும் குடிகொண்டன. இல்முகள் எல்லாவற்றிலும் தேர்ச்சி பெற்றோராயினார்கள். நூற்றிருபது பேருள் ஒவ்வொருவரும் தம்மையும் தம்முடைய றப்பையும் அறிந்த ஆரிபாய் விட்டார்கள்.

மன அறிவு ஒருசிறிதும் இன்றி மிருகத் தன்மையாய்க் காலங்கழித்துத் திரிந்த அந் நூற்றிருபது பேரும் நாயகமவர்களின் ஒரே பார்வைகொண்டு அல்லாகுத் தஆலா இடத்து உஸ்லாய் விட்டபடியால், அந்த இஷ்கு அவர்களை மற்றொன்றில் நாட இடங்கொடுக்க இல்லை. அ

தனால் அவர்கள் எல்லாரும் தங்கள் சுயவூர்க்குச் செல்லாமல், நாயகமவர்களின் திருவடித் தொண்டர்களாய், பதாயிகு நகரத்திலேயே குடியிருந்து விட்டார்கள்.

இது நிகழ்ந்த சில நாட்களுக்குப் பின் ஒருநாள் நாயகமவர்கள் தங்கள் மருகர் இபுருஹீமுல் அகுறபு அவர்களை அழைத்து அருகே வைத்துக் கொண்டு, அவர்களை நோக்கி "இபுருஹீமே, இன்று முதலாக உமக்கு நான் ஒரு கட்டளை பண்ணுகின்றேன். அதாவது:— இனி நாள் ஒன்றுக்கு நூற்றிருபது பேராக அறிவில்லாரிற் சேர்த்து என்னிடம் கொண்டுவருவீராக. நான் அன்றைக்கு அன்று அவர்களை அல்லாகுத் தஆலா இடத்து உஸூலாக்கி விடுகின்றேன். 'உம்முடைய பார்வைகொண்டு ஒவ்வொரு நாளும் நூற்றிருபது பேர் கணக்காக என்னிடம் நீர் சேர்ப்பிக்கவேண்டும்' என்று அல்லாகுத் தஆலா எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றான். அவ்வாறே நான் செய்துவரவேண்டும். ஆதலால், நான் இவ்வுலக வாழ்க்கையை விட்டு மறைந்துபோகும் வரையும் நீர் அப்படிச் செய்வீராக. இதுதான் என் கட்டளை. இபுருஹீமே, மறந்திடாதீர்" என்று கூறினார்கள்.

நாயகமவர்கள் இட்ட கட்டளைப்படியே இபுருஹீமுல் அகுறபு அவர்கள் ஒவ்வொரு நாளும் தேடித்திரிந்து, கல்வியறிவில்லாப் பாமரர்களாக நூற்றிருபதுபேரைத் தொகுத்துக் கொண்டுவந்து நிறுத்துவார்கள். அப்போது நாயகமவர்கள் அவ்வளவு பேரையும் ஒரே பார்வையாகப் பார்ப்பார்கள்; உடனே அவர்கள் அறிவு தெளிந்து மஅரிபாவை உணர்ந்தவர்களாய், அல்லாகுத் தஆலா இடத்து உஸூலாய் விடுவார்கள்.

நாயகமவர்களின் அப்புரவான பார்வை அப் பாமரசனங்கள் மீது பாய்ந்தவுடன், அவர்களின் மன அழுக்கு அற்றுத் தெளிவுள்ள பளிங்குபோல் துலங்கும். இல்மு

கள் அனைத்தும் அம்மனக் கண்ணுக்கு மிகத்தெளிவாய்ப் புலப்படும். அப்போதே அவர்கள் தம்மையும் தம் றப்பை யும் தெரிந்து கொள்வார்கள்.

இது ஒவ்வொரு நாளும் நிகழ்ந்துவந்தது. நாள் ஒன்றுக்கு நூற்றிருபது பேராக வாஸிலீன் கள் ஆவது உலகம் எங்கும் பரந்தது. இதைக் கேட்கும் அதிக தூரதேசத்தாருங்கூடப் புறப்பட்டு நாயகமவர்களிடத்து வந்து, அவர்களின் பார்வையைப் பெற்று மோக்ஷம் அடைந்து வந்தார்கள்.

தேன் ஒழுகும் இனிய கனிகள் பழுத்துக் குலுங்கி நிற்கும் அரியதோர் விருக்ஷத்தைப் பல பக்கத்தும் உள்ள பக்ஷிகள் விரும்பி வருதல்போல, மனிதர்கள் அநேகர் நாள் தவறாது நாயகமவர்களிடத்து வந்து பார்வையால் முத்தி பெற்றுக் கொள்வார்கள். தங்கள் முன் முத்திபடைய வந்து நிற்போரைக் கருணைக் கண்ணால் நோக்கும்போது, நாயகமவர்களின் திருமேனி செந்நிறம் மாறி மஞ்சள்நிறம் பெறும்; அந்த நேரத்துத்தான் அவ்வித மகத்துவம் நடைபெறும். அதன்பின் மேனிநிறம் என்றும்போற் செம்மையாய்விடும். நாயகமவர்களின் மேனிநிறம் மாறுதலே அப்பார்வைக்குக் காரணமாயிருந்தது.

பார்வையால் முத்தி யளித்தது

முற்றிற்று.

---

19 - ம் அத்தியாயம்.

## குத்பு நாயகர் வாய்மொழி.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலீயல்லாகு அன்கு அவர்களின்[illegible]த்தைக் குறித்து குத்புல் அக்தாபு சையிது முகியித்தீன் அப்துல் காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் வியந்து கூறிய திருவாய்மொழியின் வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு அலீயிபுனு ஹைத்தீ.]

ஆரிபுகளுக்கு சுல்தானாகிய சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்தில் வாழ்ந்திருக்கின்ற இக்காலத்து, குத்புகளுக்கு நாயகமாகிய சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் பகுதாது நகரத்தில் வாழ்ந்திருக்கின்றார்கள். அக்காலத்து குத்புஜ்ஜமான் குத்பு நாயகமவர்கள்தாம். அப்போதுள்ள மற்ற எல்லா குத்புகளும் அவர்களுக்குக் கீழ்ப்பட்டே யிருந்தார்கள். ஆரிபு நாயகமவர்களும் அவர்களுக்குக் கீழ்ப்பட்டவர்களாயே யிருந்தார்கள். ஆரிபு நாயகமவர்களுக்கு மிஅறுஜி லேயே குத்பு பட்டமும் கௌது பட்டமும் கிடைத்திருந்தும், இக்கதை நிகழும் இப்போது குத்புல் அக்தாபும், கௌதுல் அகுலமு மாயிருக்கவில்லை. குத்பு நாயகமவர்கள் உபாத்தானபின்னரே ஆரிபு நாயகமவர்கள் குத்புஜ்ஜமானும், கௌதுல் அகுலமும் ஆனார்கள். இருவரும் ஒரேகாலத்தினராயினும், ஆரிபு நாயகமவர்களுக்கு குத்பு நாயகமவர்கள் இருபத்தெட்டு வயது மூத்தவர்கள். அவர்கள் ஹிஜ்றத்து * ஐஞ்ஞூற்றறுபத்திரண்டாம்

---

* ஐஞ்ஞூற் றறுபத்தோராம் வருஷம் என்பது "குத்பு நாயகர் நிரியாணமான்மியம்."

வருஷம் உபாத்தானார்கள். அவர்கள் உபாத்தானபின்னர் ஆரிபு நாயகமவர்கள் பதினாறு வருஷம் குத்புல் அக்தாபும், கௌதுல் அதுலமுமாய் வீற்றிருந்து உபாத்தாயிருக்கின்றார்கள். ஆரிபு நாயகமவர்களுக்கு மிஅருஜில் "இவர் குத்பாயிருந்தகாலத்தில் இவரைப்போல ஒரு குத்பு இல்லை; இவர் கௌதாயிருந்தகாலத்தில் இவரைப்போல ஒரு கௌது இல்லை" என்று பைத்துகள் சொல்லப்பட்டதெல்லாம், குத்பு நாயகமவர்களின் உபாத்துக்குப் பின்னர் உண்டாயிருந்த பதினாறு வருஷகாலத்தைக் குறிப்பிட்டதேயன்றி, ஆரிபு நாயகமவர்கள் குத்பு, கௌது என்னும் பட்டங்கள் பெற்ற அந்நாள் முதலாக என்பது அன்று. ஆரிபு நாயகமவர்களை குத்பு நாயகமவர்களுக்கு மருகர் என்றும் சொல்வார்கள்; இதற்கு நூலாதாரம் இல்லை. இருவரும் ஒரே குலத்தினராதலின், ஆரிபு நாயகமவர்களின் அன்னையாகிய ஆயிஷாவை குத்பு நாயகமவர்கள் தமக்கை முறைபாராட்டி வழங்கியதுமுண்டு. அதனால் மருமக முறை உண்டானதன்றி, வேறு காரணம் இல்லை. அவர்களின் சகவாசத்தில் சில காலமிருந்து ஆரிபு நாயகமவர்கள் பழகியிருக்கின்றார்கள்.

சுல்தானுல் ஔலியா குத்புல் அக்தாபு கௌதுல் அதுலம் சையிது முகியித்தீன் அப்துல் காதிறு ஜைலானி றலியல்லாது அன்கு அவர்கள் பகுதாது நகரத்தில் வெகு மேம்பாடான நிலைமையோடு வாழ்ந்திருக்கும் காலத்து, ஒரு நாள் தங்கள் சிறப்பான மனைவாசலில் பெரியோர் சிலரோடிருந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அவ்வூரில் உள்ள ஔலியாக்களுள்ளும், மஷாயிகுமாருள்ளும் சிறப்புப்பெற்ற சைகு ஹம்மாது அவர்கள் அங்கேவந்தார்கள். வந்தவர்கள் குத்பு நாயகமவர்களை நோக்கி "யாசையிதீ, இக்காலத்தில் பதாயிகிலேயுள்ள சையிது அகுமதுல் கபீறுடைய மகத்துவம் பெரிதும் பாராட்டப்படுகின்றதே? அவர்களின் மகிமை எப்படி? தயவுசெய்து சொல்வீர்களாக",

என்றுகேட்டார்கள். அதற்கு குத்பு நாயகமவர்கள் அவர்களைநோக்கிக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

“சைகு ஹம்மாதே, கேட்பீர்களாக. சையிது அகுமதுல் கபீறு என்பவர் ஷரீஅத்து, தரீகத்து, ஹகீகத்து, மஃரிபத்து என்கின்ற இத் துறைகள் நான்கிலும் நான்கு கடலாய், அந்நான்கு கடலுங் கலந்த ஓரலைகடலானவர். அவருடைய மகத்துவத்தைப் பற்றிப்பேசி முடிப்பதற்கு ஔலியாக்களும், மஷாயிகுமார்களும் சக்தியற்று, நாவடங்கினர். அவருடைய வல்லமையை அவர்கள் சைக்கினையாகக் குறிப்பிட்டு உரைப்பார்களேயன்றி, விரித்துரைக்க மாட்டார்கள். அதற்கு அவர்களெல்லாம் இயன்றவர்கள் அல்லர். அவர் அல்லாகுத் தஆலாவுடைய சிற்று ஆனவர். இன்னும் அவனுடைய வதுப்பமுள்ள மஹ்பூபு ஆனவர். இனி நான் இவ்வுலகத்தைவிட்டு மவுத் தானபின்னர், அவர் என்னைப்போல கௌதுல் அகுலம் ஆவார்”

என இதுவரையும் கூறி ஒரு கடிகைநேரமளவும் வாய்மூடிக் குனிந்திருந்து, பின் “ஹம்மாதே,” என்று நிமிர்ந்து கூறுகின்றார்கள்:—

“அல்லாகுத் தஆலா மீது ஆணையாக நான் மவுத் தானபின்னர், அகுமதுல் கபீறு என்னுடைய தறஜா என்னும் பதவியில் நின்று நாற்பதுபங்கு அதிகம் பெறுவார். அவருடைய கருமங்களும் நிலைமையும் மிக மேம்பாடு அடையும்”

எனக்கூறிவிட்டு, மறுபடியும் தலையைக் கவிழ்ந்துகொண்டு அதிகநேரம் ஒன்றும் பேசாது இருந்தார்கள். அதன்பின்னர், முன்போல “ஹம்மாதே,” என்று விளித்துக்கொண்டு நிமிர்ந்து:—

“அகுமதுல் கபீறைக் குறித்து நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் திருவாய்மலர்ந்து அருளிய ஹதீது ஒன்றுண்டு. அதனைத் தாங்கள் கேட்டிருக்கின்றீர்களா?” என வினவினார்கள். அதற்கு சைகு ஹம்மாது

அவர்கள் "ஆம்; கேட்டிருக்கின்றேன். ஆயினும், தங்கள் திருவாயினாலும் அதனைக் கேட்குதற்கு விரும்புகின்றேன்; சொல்லியருளவேண்டும்" என்றார்கள். குத்பு நாயகமவர்கள் சொல்கின்றார்கள்:—

"முன்னர் ஒருநாள் தாஜுல் ஆரிபீன் அபுல்வபா றலியல்லாகு அன்கு அவர்கள் இவ்வூர் ஆலயத்தின்கண் வீற்றிருந்தார்கள். நானும் அவ்விடத்துப் போயிருந்தேன். அப்போது அவர்கள் என்னை விளித்து 'நீர் அகுமதுல் கபீறைக் குறித்து நம்முடைய நபி கள் நாயகமவர்கள் சொன்ன ஹதீதை க் கேட்டிருக்கின்றீரா ?' எனக்கேட்டார்கள். அதற்கு நான் 'கேட்டிருக்கின்றேன்; தாங்களும் சொல்லவேண்டும்' என்றேன். அவர்கள் 'சொல்கின்றேன்; நீர் அதை மனப்பாடம் பண்ணிக் கொள்வீராக' என்று கூறிவிட்டு, இந்த ஹதீதை ச் சொன்னார்கள்:—

خير الأنبياء آخرهم وخير الأصحاب أولهم وخير الأولياء أوسطهم
والذي سيد أحمد الكبير بن أبي الحسن علي

"கைறுல் அன்பியாஇ ஆகிறுஹும், வ கைறுல் அஸ்ஹாபி அவ்வலுஹும்,வகைறுல் ஔலியாஇ ஔஸதுஹும்,, வலதீ சையிது அகுமதுல் கபீறிபுனு அபில் ஹஸன் அலிய்யி"

இதன் பொருள்:—

[* அன்பியாக்களுள் கைறானவர் கடைசியிலானவர்; அஸ்ஹாபுகளுள் கைறானவர் முதலிலானவர்; ஔலியாக்களுள்

* அன்பியாக்களுள் கைறானவர் கடைசியானவர் என்றது, ஆகிறு நபி யாகிய நபி நாயகமவர்களைக் குறித்தது. அஸ்ஹாபுகளுள் கைறானவர் முதலிலானவர் என்றது, ஆடவருள் முந்தி ஈமான்கொண்ட அபூபக்கர் ஸித்தீக்கு அவர்களைக்குறித்தது. ஔலியாக்களுள் கைறானவர் நடுவிலானவர் என்பதில் நடுவென்ற கருத்து, நாயகமவர்கள் அவதாரமான ஹிஜ்றத்து ஐஞ்நூறும் வருஷத்தை உணர்த்தும்.

ஹைறு ணவர் நடுவிலானவர்; இவர் என்சந்ததி; அபுல் ஹஸன் அலி உடைய மகன் சையிது அகுமதுல் கபீறு.] என்பதாம்.

இந்த ஹதீதை நபி நாயகமவர்கள் சொன்னதாக அமீறுல் முமினீன் சையிதினா † அபூபக்கர் ஸித்தீக்கு றலியல்லாகு அன்கு அவர்கள் கேட்டு, அவர்களில் நின்று வரன்முறையாகக் கேட்டோர் பெயர்களுடன் நான் கேட்டிருக்கின்றேன் என்று எனக்குச் சொன்னார்கள். ஆதலால் சைகு ஹம்மாதே, தாங்கள் இதை மனப்பாடம் பண்ணிக்கொண்டு, தங்கள் முரீதீன் களுக்கும் மனப்பாடமாக்கக் கட்டளை புரிவீர்களாக" என்று கூறி முடித்தார்கள். இதைக்கேட்ட சைகு ஹம்மாது அவர்களும், அங்கு நின்ற ஒலி மார்களும் மிக ஆச்சரியமுற்றுக் களிகூர்ந்தார்கள்.

பின்பு ஒருநாள் வாஸ்து என்னும் பட்டணத்தில் நின்று கனுய முடைய மகனார் அபுல்பத்ஹு என்னும் பெரியோர் குத்பு நாயகமவர்களைக் காண்பதற்காக பகுதாது நகரத்திற்கு வந்தார்கள். அப்போது குத்பு நாயகமவர்கள் பகுதாது நகரத்து ஆலயத்தின்கண் சுவரிற் சாய்ந்துகொண்டிருந்தார்கள். அநேக ஒலியாக்கள் அங்கே புடைசூழ்ந்து கூடிக்கொண்டு உட்காந்திருந்தார்கள். அபுல்

---

† அபூபக்கர் ஸித்தீக்கு உமறிபுனுல்ஆஜிபுக்குச்சொல்ல, அவர் அபூ ஸஈதிபுனு கலீலுக்குச்சொல்ல, அவர் ஸஹ்திபுனு அப்துல்கறீமுக்குச்சொல்ல, அவர் ஹாமிதிபுனு மூஸா றூமிக்குச்சொல்ல, அவர் மஹ்மூதிபுனு ஹுஸைனுக்குச்சொல்ல, அவர் அப்துற்றஹ்மானிஜ்ஜைதுக்குச்சொல்ல, அவர் அலியிபுனு ஹஸனுக்குச்சொல்ல, அவர் சைகு ஜமாலுத்தீனிபுனு அபீ அப்துல்லாஹி முகம்மதுக்குச் சொல்ல, அவர் தம் குமாரனாகிய எனக்குச்சொன்னார் என்று அப்துல்லாஹில் மத்றீயவர்களும் இந்த ஹதீதைக் குறித்து றிவாயத்துச்செய்யுமிடத்துச் சொல்கின்றார்கள். இவர்கள் தாம் நாயகமவர்களின் சரித்திர நூல்களுள் முதனூலாசிரியர். இவர்கள் றிவாயத்துச்செய்யும் விஷயங்களெல்லாம் நேரிற்கண்டறிந்தவையும், தக்க பெரியோர்கள் சொல்லக் கேட்டவையுமா யிருக்கின்றன.

பத்ஹு அங்கே சென்று எல்லாருக்கும் ஸலாம் பகர்ந்து, குத்பு நாயகமவர்களுக்குத் தாழ்ச்சிபண்ணி நின்றார்கள். பின் இருக்கும்படி உத்தரவாயிற்று; அவ்வுத்தரவின் வண்ணம் ஒலி மாருள் ஒருவராகிய அபுல் பத்ஹு அப்பெரியோர் கூட்டத்தில் ஒரு புறத்தே ஒழுக்கத்தோடே உட்கார்ந்தார்கள். அங்கே கூடியிருப்பவருள் ஒருவராவது வாய்திறந்து ஒருபேச்சும் பேசவில்லை. எல்லாம் அமைதியா யிருந்தன. குத்பு நாயகமவர்கள் சிரங்குனிந்தவர்களாயிருந்தார்கள்.

இவ்வாறிருக்கையில், சற்றுநேரஞ்சென்றபின் அபுல் பத்ஹு தங்கள் உள்ளத்தில்: நாம் இப்போது இங்கிருந்து பதாயிகு நகரம்போய், சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களிடத்து இருதத்தும் கிர்காவும் பெற்று முரீதாக வேண்டும் என்று தாமாகவே கருதினார்கள். அவர்கள் இப்படிக்கருதினவுடன் குனிந்துகொண்டிருந்த குத்பு நாயகமவர்கள் அபுல்பத்ஹு அவர்களைப் பார்க்க நிமிர்ந்து, கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"என்சகோதராகிய அபுல்பத்ஹே, நான் சொல்வதைக்கேட்பீராக. உம்முடைய ஞானாசிரியர் பதாயிகில் இருக்கும் சையிது அகுமதுல் கபீறு தாம். நீர் அவருடைய சிஷர் என்று உம்முடைய நெற்றியில் எழுதப்பட்டிருக்கின்றது. அஃதன்றி, அல்லாகுத் தஆலா குர்ஆன் வேதத்திற் சொன்னதாகிய,

[அந்தக்கூட்டத்தார் தம்முடைய றப்பி னுடைய நேர்வழியில் இருக்கின்றார்கள். இன்னும் அவர்கள் ஜெயம் பெற்றுக்கொண்டார்கள்] என்னும் பொருள் உள்ள.

اولئک علی هدي من ربهم واولئک هم المفلحون

என்கின்ற ஆயத்தும் உம்முடைய நெற்றியில் எழுதியிருக்கின்றது. அபுல்பத்ஹே, இவ்வெழுத்துக்கள் உம்

நெற்றியினிடத்துப் பிரகாசிக்க இப்போது நான் காண்கின்றேன். ஆதலால், சையிது அகுமதுல் கபீறுடைய முரீதுக்கு நான் இருதத்துச்செய்து கிற்கா போர்த்தமாட்டேன். அவர் அல்லாகுத் தஆலா வின் ரகசியமானவர்; அவனுடைய வதுப்பமான மஹ்பூபா னவர்; வாஸிலீன் களுக்குத் தாஜா னவர். அவர் என்னில் நின்றும் சிலவிஷயங்களில் அதிகப்பட்டவர். இக்காலத்தார் எல்லாரிலும் நானே சிறப்பும் தகுதியும் உள்ளவன். கௌதியத் திலே எனக்கு ஒப்பானவர் யாரும் இல்லை. நான் இவ்வுலகத்தைவிட்டுப் போனபின்னர் சையிது அகுமதுல் கபீறு தாம் கௌதுல் அகுலமா யிருப்பார். அவருடைய கனைசிக்காலத்தில் அவருடைய குத்பியத்து கௌத்தியத்து களுடைய நிலைமை மிக உன்னத நிலைமையாயிருக்கும். அன்றியும், நான் மவுத்தானபின்னர் அல்லாகுத் தஆலா வின் உத்தரவு பெற்றவராய், நான் சொன்னதுபோல,

قدمي على رقبة كل ولي الله تعالى

"கதமீ அலா றகபதி குல்லி வலியில்லாஹி தஆலா"

இதன் பொருள்.

[என்னுடை பாதம் அல்லாகுத் தஆலா வின் எல்லா ஒலி மாரின் புயங்கள் மீதும் உள்ளது.] என்பதாம்.

என்று சொல்வார். இன்னும் அவர் 'நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களின் அஸ்ஹாபு மார்கள் அல்லாத ஒளலியாக்கள் மஷாயிகு மார்கள் எல்லாரிலும் நானே மேன்மைபெற்றவன்' எனவுஞ் சொல்வார். இன்னும் அவர் தம்முடைய சபையினிடத்துக் கூடியிருக்கும் பெரியோரைநோக்கி 'ஒலிகளே, நான் கதிர் எறிக்கும் ஞாயிறும், அலைமோதுகின்ற விரிகடலும் போன்றவன். நீவிர் எல்லாரும் வானத்து நக்ஷத்திரங்களும், சிற்றாறுகளும் போல்வீர்கள். நக்ஷத்திரங்கள் தமக்கு ஒளிவேண்டுமிடத்து ஞாயிற்றையும், சிற்றாறுகள் தமக்கு நீர் வேண்டு

மிடத்துக் கடலையும் எதிர்பார்க்கும். அவ்வாறே நீவிர் என்னையே எதிர்பார்ப்பீர்கள். ஞாயிறு நக்ஷத்திரங்களிடத்தும், அலைகடல் சிற்றாறுகளிடத்தும் தேவைப்படா' என்று கூறுவார். இவ்வாறு அவர் சொல்லும்போது உலகத்தே அங்கங்கு உள்ள ஔலியா மார் எல்லாரும் செவி தொட்டுச் சிரஞ்சாய்த்து 'சையிது அகுமதுல் கபீறு நம்மில் நின்றும் அதிக மேம்பாடுள்ளவர் என்று ஏற்றுக் கொள்வார்கள். ஆதலால், அபுல்பத்ஹே, அவர் மிகச் சிறந்தவர். நீர் அவரிடத்தேசென்று முரீதா விராக" என்று கட்டுரை பகர்ந்தார்கள்.

கௌதுல் அதுலம் சையிது முகியித்தீன் அப்துல் காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் இவ்வாறு சொல்லும்போது, அச்சபையிடத்து இருந்த ஒலி மார் எல்லாரும் புதுமையுற்றுக் கேட்டுக்கொண் டிருந்தார்கள். அபுல் பத்ஹு அவர்கள் இத் திருவசனங்களைக்கேட்டு அஞ்சி ஆச்சரியம் உற்று, யாதும் பேசாதிருந்தார்கள். அதன் பின் கௌதுல் அகுலமவர்களே அபுல் பத்ஹுக்கு விடை அருளி, பதாயிகுக்கு அநுப்பினார்கள். அவர்கள் உத்தரவுபெற்று அபுல் பத்ஹு பதாயிகுக்கு வந்து, சைகு றலியல்லாகு அன்கு அவர்களைத் தரிசித்து, அவர்களிடத்து முரீதாய், கிற்காவும் பெற்று, அவர்கள் தொண்டருள் ஒருவராயிருந்து விளங்கினார்கள்.

[இந்த அபுல்பத்ஹு அவர்களுக்கு நிகழ்ந்த இவ்விஷயத்தை அவர்களே நேரிற் சொல்லக்கேட்ட சைகு ஜமாலுத்தீன் முகம்மதுல் வாஸ்தியும், சைகு அபுல் மஆலி முகம்மதிபுனு கியாதுத் தஹ்லவிய்யும், சைகு ஹுஸைனிபுனு முகம்மதுல் பதாயிகியும் சொன்னதாக, சைகுல் மகீயும், சைகு அபூமுகம்மது உதுமானுல் கர்மானியும், சைகு சுஹைலிபுனு தானியாலும், சைகு இதுரீசிபுனு அகுமதுல் பகுதாதியும் சொன்னார்கள்.]

குத்புநாயகர் வாய்மொழி

முற்றிற்று.

20 - ம் அத்தியாயம்.

## எரிந்துயிர்த்தது.

—— × ——

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அக்கினியில் எரிந்து சாம்பலாய்ப் பின் உயிர்த்தெழுந்த வரலாற்றைச் சொல்கிறது. இதற்கு றவி:— சைகு அப்துல்லாஹில் மத்றி.]

பகுதாது நகரத்தில் வாழ்ந்திருக்கும் சுல்தானுல் ஒளலியா சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒருநாள் தங்கள் அடிமையாட்களுள் ஒருவரை அழைத்து "சையிது அகுமதுல் கபீறு பதாயிகுக்கு வெளியேயுள்ள வனத்தில் ஒரு விருக்ஷத்தின் கீழ் இப்போது உட்கார்ந்திருக்கின்றார். நீ அவரிடத்துச் சென்று 'அல்லாஹுத் தஆலா வின் மீது வைக்கும் இஷ்கு என்பது என்ன?' எனக் கேட்டுவா" என்று கட்டளைபண்ணி அனுப்பினார்கள்.

அந்தத் தொண்டர் எஜமான் இட்ட கட்டளைப்படி பகுதாதை விட்டுப் புறப்பட்டுக் குறிப்பிட்ட வனத்திற்கு வந்தார். அங்கே ஒரு அடர்ந்த விருக்ஷ நிழலில் நாயகமவர்கள் தனித்து உட்கார்ந்திருந்தார்கள். அதை அவர்கண்டு சமீபித்துத் தம் கைகளைக்கட்டி அடிபணிந்து நின்று "யாசையிதீ, அல்லாஹுத் தஆலா வின் இஷ்கு எங்ஙனமிருக்கும்? தெரிவிக்கவேண்டும்" எனக் கேட்டார்.

அவர் இவ்வாறு கேட்டபோது, நாயகமவர்கள் அவரை ஏறிட்டுப் பார்த்து "அல்லாஹுத் தஆலா வின் இஷ்கு அவன் அல்லாத மற்றவை அனைத்தையும் எரித்துவிடும்;

அதுதான் அவனுடைய இஷ்கு. அதனை அவன்மீது பற்றுதல் உள்ளோரே அறிவர். நிச்சயமாக நீ அந்த இஷ்கை அறிய விரும்புகின்றாயா?" என்று சொல்லிவிட்டு, "அல்லாவின் இஷ்கா!" எனப் பேரேக்கமாக ஏங்கிப் பெருமூச்சுவிட்டார்கள். அப்போது அப்பெருமூச்சில் நின்று அக்கினி பறந்து, நாயகமவர்களையும் அவர்களிருந்த விருக்ஷத்தையும் சூழ்ந்து வளைந்து பற்றிக்கொண்டு சுவாலித்து எரிந்தது. அவ்வக்கினிக்குள் நாயகமவர்கள் அகப்பட்டு விருக்ஷத்தோடு எரிந்துபோனார்கள். நாயகமவர்களின் திருமேனிவெந்த சாம்பல் நடுவே ரசத்தால் ஆன மணிபோல ஒரு வஸ்துவிருந்து இலங்கிக்கொண்டிருந்தது.

கேட்டுவந்தவர் அஞ்சத்தக்க இக்காட்சியைக்கண்டு வெருண்டு, அங்கிருந்து விரைந்தோடிவந்து, குத்பு நாயகமவர்கள்பால் அங்கு நிகழ்ந்ததைச்சொன்னார். அவர்கள் அவரைநோக்கி, "ஸையிது அகுமதுல் கபீறு எரிந்து இறந்து போனார் என்று நீ அஞ்சாதே; கொஞ்சம் அத்தரும் பன்னீரும் எடுத்துக்கொண்டுபோய், சாம்பலிற்கண்ட ரசமணி மீது ஊற்றிவிட்டு நில்" என்று கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவர் அத்தரும் பன்னீரும் கொணர்ந்து தாம் கண்ட வஸ்துவின்மீது தெளித்தார். தெளித்த நிமிஷத்திலேயே நாயகமவர்கள் முன்போலப் பசிய விருக்ஷத்தின் கீழ் உட்காந்திருப்பது தெரிந்தது. அவர் கண்டவுடன் நெருங்கி நாயகமவர்களின் திருவடிகளைத்தொட்டு முத்தம் இட்டு, பணிந்து நின்றார். நாயகமவர்கள் அவரைநோக்கி "ஏ மனிதனே, அல்லா வுடைய இஷ்கைக் கண்டாயா? இது தான் அவனுடைய இஷ்கு. அது இப்படித்தான் அவன் அல்லாததை எரித்துவிடும். எங்கள் நாயகமவர்களுக்கு என் ஸலாம் சொல்வாயாக; போ" என்று கூறி அவரை அனுப்பினார்கள். அவர் அங்கிருந்து குத்பு நாயகமவர்களிடத்தில் வந்து, நிகழ்ந்ததைச் சொன்னார் அதற்கு அவர்கள்

" சுல்தானுல் ஆரிபீனை நீ தெரிந்துகொண்டாயா ! அவர் தாம் அந்த இஷ்கில் நிரம்பினவர் ; இனி கௌதுல் அதுலமும், குத்புல் அக்தாபும் அவர்தாம் " என்று கூறினார்கள்.

எரிந்துயிர்த்தது
முற்றிற்று.

---

21 - ம் அத்தியாயம்.

## குத்பு நாயகர் மகத்துவம்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீர் றலியல்லாகு அன்கு அவர்கள், குத்புல் அக்தாபு சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்களின் மகத்துவத்தைத் தமது திருவாய் மலர்ந்து சொன்ன வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— ஷைகு அப்துல்லாஹில் ...த்தி.]

இருக்கு என்னும் பரந்த வானத்தின்கண் பகுதாது என்னும் சூரியமண்டலத்தில் குத்பு நாயகம் என்கின்ற சூரியனும், பதாயிகு என்னும் சந்திரமண்டலத்தில் ஆரிபுநாயகம் என்கின்ற சந்திரனும் இருந்து ஒளிகான்று விளங்குங்காலத்து, குத்பு நாயகமவர்களின் முரீதீன்களான சீஷர்களுள் ஒருவர் ஆரிபு நாயகமவர்களைக் காண்பதற்காக பகுதாதை விட்டுப் புறப்பட்டு, பதாயிகுக்கு வந்தார். வந்தவர், நாயகமவர்கள் பெரிய ஔலியாக்களும் சிறந்த மஷாயிகுமார்களும் புடைசூழ வீற்றிருக்கும் மகத்துவம் பெற்ற சபையிடத்துச் சென்று ஸலாம சொல்லித் தாழ்த்துநின்றார்.

தங்கள்முன் வந்து தாழ்ந்து கைகட்டிநிற்கும் அந்தப்பெரியோரை நாயகமவர்கள் நோக்கிப் பிரதி ஸலாம் சொல்லிவிட்டு, பின் அவரை விளித்து "சகோதரமே, நீர்

எங்கள் நாயகமான ஸையிது அப்துல் காதிறு ஜைலானி றலி யல்லாகு அன்கு அவர்களின் மகத்துவம்பெற்ற முரீதீன் க ளுள் ஒருவரன்றோ! ஆதலால், அந்த நாயகமவர்களின் மான்மியங்களிற் சிலவற்றை நானும் என் சபையாரும் செ விகுளிரக் கேட்குமாறு இப்போது சொல்வீராக" என்று கேட்டுக்கொண்டார்கள். நாயகமவர்கள் இவ்வாறு கேட் டுக்கொண்டவுடன் அவர் அங்குநின்றபடியே வாய்திறந் து, குத்பு நாயகமவர்களின் மேம்பாடுகளையும், பதவியை யும், கருமாத்து களையும், மற்றுமுள்ள மகிமைகளையும் ஒவ்வொன்றாக விவரித்துப் பிரசங்கம் பண்ணினார். அவற் றை நாயகமவர்களும், சபையாரும், சிரந்தாழ்ந்தி உருக் கத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

இங்ஙனம் பிரசங்கம் நிகழும்போது, ஆரிபுநாயகம வர்களின் முரீதீன் களுள் ஒருவர் அச்சபையில் விசையா யெழுந்து அப்பிரசங்கம் செய்கின்ற பெரியோரை விளித் து "ஏ மனிதரே, இது எங்கள் நாயகம் சுல்தானுல் ஆரி பீன் சுல்தான் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் சபை என்பதை நீர் அறிய இல்லையா! அவர்க ளுடைய சபைதான் இது. இச்சபையின்கண் அந்த நாய கமவர்களின் மான்மியங்களைப்பற்றி யாரும் பிரசங்கிக்க லாமேயன்றி, வேறே அயலாருடைய மான்மியத்தைப் பேசப்படாது. நீர் வாய்மூடி உட்கார்ந்திருப்பீராக" என் று மிக்க சினத்துடன் சொன்னார். பிரசங்கித்து நின்றவர் இக்கோபமான சொல்லைக்கேட்டு அஞ்சி, வாயை மூடிக் கொண்டு பேசாது நின்றுவிட்டார்.

தாங்கள் கேட்டுக்கொண்டபடி குத்பு நாயகமவர்க ளின் மான்மியத்தைப் பிரசங்கித்த அவரைத் தங்கள் சீஷர் ஒருவர் எழுந்து வாயடக்கி, நிறுத்தச்செய்ததை நாயகம வர்கள் தெரிந்துகொண்டார்கள். உடனே அவர்களுக்குத்

தங்கள் சிஷர்மீது அடங்காத கடுஞ்சினம் பொங்கி மீறிற்று. அவ்வாறுச்சினத்துடன் கண்களில் நின்று அக்கினிப் பொறிகள் தெறிப்ப அவரை உருக்கிப்பார்த்தார்கள். இக் கொடுஞ்சினப் பார்வை தாக்கின மாத்திரத்தில், குத்பு நாயகமவர்களை அவமதித்தாற்போலத்தடுத்த அவர் பட்டமரம் சாய்வதுபோலத் தரையில் அடித்து விழுந்து மாண்டார்.

உலகத்தே தங்களுக்கு இணையின்றி அண்டாதி புவனங்கள் அனைத்தையும் அகங்கையில் அடக்கியாளும் அதிகார நாயகமவர்களைச் சற்றும் பேணாத தன்மையால், அவ்விதப் பேணுதல் அற்ற மனிதன் தங்கள் முரீதென்றும் பாராது கடுஞ்சினப் பார்வையாற் கொன்று விழுத்தின நாயகமவர்கள், அக்கோபத்தோடு சபை திடுக்கிட்டு அஞ்சி நடுங்க நோக்கிக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

“எங்கள் நாயகம் சையிது அப்துல் காதிறு ஜைலானி யவர்களின் மகத்துவத்தை எடுத்துரைப்பதற்குத் திறம் பெற்றவர் யார்? அப்படி ஒருவன் இருந்து அந்த எஜமானின் மகத்துவத்திற் சிலவற்றைச் சொன்னானாயினும், அவற்றைக் கேட்டற்குத் தகுதியுள்ளவன் ஒருவன் இவ்வுலகத்தின்கண் இருக்கின்றானோ! அவர்கள் மான்மியத்தை முழுதுந்தெரிந்து சொல்வானும் இல்லை; கேட்டுணர்ந்தானும் இல்லை. அவர்களுக்குச் சமானமான ஒருவர் இவ்வுலகத்தே எங்கே யார் உண்டு! ஒருவருமே இல்லை. இங்கும் இல்லை; இனி அங்கும் இல்லை. சொல்லியும் எழுதியும் முடித்தற்கு அரிய வரிசைபெற்ற நாயகமவர்களின் வலப் பக்கத்தே சரியை என்கின்ற கடலும், இடப்பக்கத்தே கிரியை என்கின்ற கடலும், பின்பக்கத்தே யோகம் என்கின்ற கடலும், முன்பக்கத்தே ஞானம் என்கின்ற கடலும் அலைமோதினவண்ணமாயிருக்கின்றன. எங்கள் எஜமான் நினைத்தபோது நினைத்த கடலில் முழுகிநிற்பார்கள். ஷரீஅத்து, தரீகத்து, ஹகீகத்து, மஅரிபத்து என்னும் அநநாந்த க

டனும் அவர்களேயாம். இம்மையின் கண்ணும், மறுமையின் கண்ணும், அவர்களைப்பற்றிக்கொண்டு நிற்கும் திருவடித் தொண்டர்களுக்குக் கருணைகூர்ந்து சகல சுகாநுபவங்களையும் கொடுத்து ரக்ஷிக்கும் கருணாகரர். ஔலியாக்களுக்கு சுல்தான். பூலோகத்திற்கும், வானலோகத்திற்கும் குத்பு. குத்புல் அக்தாபு. என்றைக்கும் அல்லாகுத் தஆலாவுடன் மருவியிருக்கும் மகிமைவாய்ந்தவர்கள். வானத்து மலக்குகளும், பூமியிலுள்ள மனிதர்களும், ஜின்களும் கூடி வருணித்தாலும், அவர்களின் வருணனை அடங்கமாட்டா. எங்கள்கண்களிலும், உள்ளங்களிலும், என்றைக்கும் இருந்து விளங்கும் இறைவர். சபையார்களே, அந்த நாயகமவர்களின் இயற்கை செயற்கைகளை எங்கள் இருதயத்தைத் [illegible]மாறுவிக்கும். இவற்றை நீவிர் கவனித்து உணர்ந்து கொள்வீர்களாக. என் நாவினால் அவர்களைப் புகழ்தற்கு நான் அருகன் அல்லன். ஆதலால், வாயைமூடுகின்றேன்"

என்றுஇங்ஙனம் சொன்னபோது, அச்சபை துளும்பிற்று. எல்லாரும் அஞ்சி விலவிலத்திட்டார்கள். பின்பு நாயகமவர்கள் அங்கு நிற்போரிற் சிலரைநோக்கி "எங்கள் நாயகத்தின் புகழைப் பேசவொட்டாமலும், நாங்கள் கேட்கவொட்டாமலும் தடுத்த இவனுடைய பிரேதம், எவர் கண்ணுக்கும்புலப்படாமல் மறைந்துவிடவேண்டும். ஆதலால், எடுத்துப் புதைத்துவிடுங்கள் என்று கட்டளையிட்டார்கள். அக்கட்டளைப்படி அவர் சரீரம் மண்ணினுள் புதைக்கப்பட்டது.

குத்பு நாயகர் மகத்துவம்

முற்றிற்று.

---

22 - ம் அத்தியாயம்.

## நரக விமோசனம்.

—()—

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் முரீதுகள் இருவர் துன்யாவிலேயே நரகத்தில் நின்றும் விமோசனம் பெற்றவர்கள் என்று சாசனம் பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றாவி:— ஸைது அப்துல்லாஹில் மத்றி.]

ஷைகு றலியல்லாகு அன்கு என்னும் சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு [illegible]கரத்தில் மிகச் சிறப்புற்று வாழ்ந்திருந்தார்கள். அவர்களால் மனிதர் அடையும் பலன் [illegible]ளவிறந்ததாயிருந்தது. முத்தி பெறுதற்கு மனிதர்கள் [illegible] திரள் திரளாய் வருதலும் அன்றி, நோயாளர், பேய்க்கோட் பட்டோர், தீராப் பகையுள்ளோர் என்னும் இவர்களும் வந்து சுகம் அடைவார்கள். பெரும்பான்[illegible] பலவித நோயாளரும், பிசாசுகளாற் பிடிப்புண்டோருமே நா[illegible]மவர்களிடத்து வந்து பணிந்து, அவர்கள் கையால் * ரக்ஷைகள் எழுதி வாங்கிக்கொண்டு போவார்கள். அவ்வித ரக்ஷைகளை அவர்கள் கட்டியிருக்குங் காலமெல்லாம் எவ்வித ஆபத்தும் அணுகுவது இல்லை. இது பெரும் வழக்கமாயிருந்தது. யார் யார் வந்து எது எதற்காக ரக்ஷைகேட்கின்றார்களோ அவர்களுக்கெல்லாம் நாயகமவர்கள் தங்கள் கையால் எழுதியே கொடுப்பார்கள். எழுதுவதற்கு

* ரக்ஷை - தஅவீது. அது நோய்க்கும் பேய்க்கும் ரக்ஷா பந்தனமாக எழுதிக் கட்டிக்கொள்வது.

மையில்லாத சமயங்களிற் சிலர் வந்து ரக்ஷை யெழுதிக் கேட்டால், ஒரு துண்டு வெள்ளைக் காகிதத்தை யெடுத்து அதில் மைதோயாத வெறும் தூரிகையால் எழுதிக் கொடுப்பார்கள். பார்வைக்கு அதில் எழுத்தொன்றுந் தோற்றாது. அதனை அவர்கள் வாங்கி உபயோகித்துக் கொள்வார்கள். இஃதும் வழக்கமாயிருந்தது.

ஒருநாள் ஒரு மனிதர் நாயகமவர்களிடத்து வந்து எனக்கொரு ரக்ஷை யெழுதித்தரல் வேண்டும் என்றுகேட்டார். அப்போது நாயகமவர்களிடத்து எழுதும் மையின்றிக் குடுவை வெறுமையாயிருந்தது. இருந்தும், அவர் கேள்வியை மறுக்காது, வழக்கப்படி ஒரு துண்டுக் காகிதத்தை யெடுத்துச் சாயந்தோயாத வெறும் எழுதுகோலால் எழுதி மடித்து அவர் கையிற்கொடுத்தார்கள். அவர் அதனை வாங்கிக்கொண்டு போய்ப் பல நாள் வைத்திருந்து, பின் நாயகமவர்களைச் சோதிக்கக் கருதி, முந்தி அக்ஷரந் தோற்றாது எழுதிக்கொடுத்த வெள்ளைக் காகிதத்தையே யெடுத்துக்கொண்டு வந்து நாயகமவர்களிடத்திற் கொடுத்து: யா சையிதீ, இக் காகிதத்தில் ரக்ஷை யெழுதிக்கொடுங்கள் என்று கேட்டார். நாயகமவர்கள் அக் காகிதத்தைக் கையில் வாங்கிப் பார்த்துவிட்டு, அவரை நோக்கி: மைந்த, இக் காகிதத்தில் முந்தியே யெழுதப்பட்டிருக்கின்றதே! இஃது வெறுங் காகிதம் அன்று எனச்சொல்லி, மனச்சடைவின்றி அவர் கையில் திருப்பிக் கொடுத்தார்கள். சோதிக்கவேண்டிவந்த அவர் அச்சமும் வெட்கமும் அடைந்தவராய், அதனை வாங்கிக்கொண்டு சென்றார். இவ்வித அற்புதங்கள் பல நாள்தோறும் நாயகமவர்களால் நிகழ்ந்துகொண்டிருந்தன. நாயகமவர்களால் ஆகும் அற்புதங்கள் உலகெங்கும் பரவுதலால், மனிதர்கள் அவர்கள் மீது அதிக விசுவாசமும், பக்தியும் உள்ளவர்களாய் நடந்தார்கள்.

நாயகமவர்களின் முரீதீன் களுள் மஆலிபுனு யூசுபு, அப்துல் முன்இம் என இருவர் பதாயிகு நகரத்தில் இருந் தார்கள். அவ்விருவரும் மஅரிபா வுடைய கல்வியில் மிகப் பழக்கமும், விருப்பமும் உள்ளவர்கள். ஒருவரை ஒருவர் பிரியாத சிநேகர். உண்ணும் வேளையும், உறங்கும் வேளை யும், வணக்கம்புரியும் வேளையும், மற்றெந்த வேளையும், இ ருவரும் ஒன்றாயே யிருப்பார்கள். எவ்வகைக் கருமத்தும் இருவரும் ஒருங்கொத்து நடப்பார்கள். அவர்கள் சகவீர சத்தில் பிரிவை யாருங்கண்டதில்லை. எந்த இடத்தும் இ ருவருமே யிருந்து அல்லாகுத் தஆலா வின் ரகசியங்களைப் பற்றிச் சம்பாஷிப்பார்கள். அவர்கள் மற்றவர்களோடு ப ழகுவதும் இல்லை. இவ்விதமாய் அவ்விருவரும் மனப்பூற் றுதலோடு ஒருமித்து வாழ்ந்தார்கள்.

மஆல், அப்துல் முன்இம் என்னும் அவ்விருவரும் ஒ ருநாள் பதாயிகை விட்டுப் புறப்பட்டுப் பக்கத்தேயுள்ள மலைச்சாரலிற்போய், ஒரு அடவிக்குள் உட்கார்ந்து, அல் லாகுத் தஆலாவை அறியும் இல்மில் நின்றும் சிலவற்றைப் பேசிக்கொண் டிருந்தார்கள். இடைக்கிடை தலீல், ஹதீது களும் அவர்கள் சம்பாஷணையில் வந்துகொண் டிருந்தன.

அங்ஙனம் இருவரும் சம்பாஷிக்கும்போது, அப்துல் முன்இம் என்பவர் மஆலை நோக்கி "நண்பரே, நாம் இரு வரும் இவ்வாறாகச் சம்பாஷணை செய்த வண்ணமாய் இன் னும் எவ்வளவு காலம்வரையும் இருப்போம்! நம் சைகு ற லியல்லாகு அன்கு அவர்கள் நமக்கு இருதத்து ச் செய்வித் த அந்நாள் முதல் இதுகாறும் நீர் செய்துவந்த கருமசா தனத்தினால் உமக்குச் சித்தியானது என்ன?" எனக் கேட்டார். அதற்கு மஆல் "சிநேகிதரே, கேட்பீராக. 'நீ விர் ஒரு கருமத்தை விரும்பினீராயின், அல்லாகுத் தஆலா இடத்து அதனைச் சாட்டுவீராக' என்று நமக்கு சைகு ற லியல்லாகு அன்கு அவர்கள் சொல்லித்தர இல்லையா! ஆ

தலால், நம்முடைய நாட்டம் அவன்பாலது. அவனே நம்முடைய நாட்டத்தை நிறைவேற்றித் தருபவன். நம்மால் இயன்றது யாது!" என வதில் கூறினார். இதைக்கேட்ட அப்துல் முன்இம் பின்னும் மஆலை நோக்கி "நண்பரே, இந்த நேரத்தில் நான் ஒரு கருமத்தை விரும்புகின்றேன். அதாவது:— நாம் இருவரும் நரகத்தில் நின்றும் விமோசனம் அடைந்தவர்கள் என்று எழுதிய ஒரு பத்திரம் வானத்தில் நின்று நம்மீது விழவேண்டும் என்பதுதான் என்று சொன்னார். அப்துல் முன்இம் இவ்வாறு சொன்னவுடன், மஆல் அவரை நோக்கி "சிநேகிதரே, அல்லாகுத் தஆலா வின் பேரருளும், பெருங்கொடையும், உபகாரகுணமும், சொல்லுக்குட் பட்டவையல்ல. அவை உலகத்தை ஒருமிக்க வளைந்திருக்கின்றன. அவ்வித வல்லவன், நீர்விரும்பியவாறு செய்யவுந் தக்கவன் காண்பீர்" எனப் பிரதி மொழிந்தார்.

இருவரும் இவ்வாறு சம்பாஷிக்கையில், அவர்கள் இருதயம் அல்லாகுத் தஆலா வின் இருநத்தில் முழுகியிருந்தன. அப்பேச்சு முடிந்த மாத்திரத்தில், வெண்ணிறமுள்ள துண்டுக்காகிதம் ஒன்று ஆகாயத்திலிருந்து பறந்துவந்து அவ்விருவர்க்கும் முன்னே விழுந்தது. காகிதம் விழக்கண்டவுடன், மஆல் அப்துல் முன்இமைப்பார்த்து: நண்பரே, நீர் விரும்பிய வண்ணம் கிடைத்தது; எடுத்துக்கொள்வீராக என்றார். அப்துல் முன்இம் அதிக ஆவலோடே அக்காகிதத்தை விரைந்து எடுத்து, தம் கண்களாற் கூர்க்கப் பார்த்தார். அதில் ஒரு அக்ஷரமாவது இல்லை. வெறுங்காகிதமாய், வெள்ளையாயிருந்தது. பின்னும் அதனை அவர் கையிற் பிடித்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தார்; அக்ஷரத்தின் அடையாளமும் அதில் இல்லை. முழுமையும் வெறுமையாயேயிருந்தது. அதனால் அவ்விருவரும் புதுமையுற்று, நாம் இக் காகிதத்தை நமது சைகு றலியல்லாகு அன்

கு அவர்களிடத்துக் கொண்டுபோய் நமக்குள் நிகழ்ந்தது ஒன்றையும் சொல்லாமல் காட்டுவோம் எனப் பேசித் தீர்மானித்து, அக்காகிதத்தை யெடுத்துக்கொண்டு அடவியை விட்டுப் புறப்பட்டார்கள்.

மஆலும், அப்துல் முன்இமும் பதாயிகுக்குள் வந்து நாயகமவர்கள் சமுகஞ் சென்றி ஸலாம் கூறித் தாழ்ந்து நின்று, அக் காகிதத்தை அவர்களிடம் கொடுத்தார்கள். நாயகமவர்கள் அதனைக் கையில் வாங்கிப் பார்த்தார்கள்; பார்த்தவுடன் யாதொன்றும் பேசாது கண்ணீர்வார அழுதுகொண்டு சுஜூதில் விழுந்தார்கள். சற்றுநேரம் சுஜூதில் விழுந்துகிடந்து பின் தலையை உயர்த்தி "புகழ் அனைத்தும் அல்லாகுத் தஆலா வுக்கே உரியன. அவன் எவ்விதந் தகுதி யுள்ளவன் எனிலோ, என்னைத் தொடர்ந்தவர்களான முஃமீன் களுள் இருவர் நரகவிமோசன முடையார் என்று இம்மைக் கண்ணே சாசனம் எழுதப்பட்டு, அதனை என்கையில் வாங்கி என் கண்ணாற் பார்க்கக் கிருபைசெய்தானே, இவ்விதத் தகுதி யுள்ளவன்!" என்று கூறி, அல்லாகுத் தஆலா வை வியந்து புகழ்ந்தார்கள்.

நாயகமவர்கள் அழுது சுஜூதில் விழுந்து நிமிர்ந்து இவ்வாறு கூறிப் புகழ்ந்தபோது, அவ்விருவரும் "யா ஸையிதீ, இஃதென்ன ஆச்சரியம்! அக்காகிதம் அக்ஷரம் ஒன்றும் இன்றி முழுதும் வெண்மையாயிருக்கின்றதே! தாங்கள் அதில் எழுதியிருப்பதாகச் சொல்கின்றீர்களே!" என நாயகமவர்களைக் கேட்டார்கள். அதற்கு நாயகமவர்கள் அவ்விருவரையும் நோக்கி "என் பிள்ளைகளே, கேட்பீர்களாக. மகத்துவம் உள்ள குதுறத்து என்கின்ற கை எழுதுமானால், அது ஒருபோதும் கருத்த மை கொண்டு எழுதாது. இதை நீவிர் அறிவீர்களாக. இக்காகிதத்தில் துப்புரவான ஒளியைக்கொண்டு நான் சொன்னவண்ணம் எழுதப்பட்டிருக்கின்றது" என்று வதிலுரைத்து, அக்கா

கிதத்தை அவர்களிடம் கொடுத்தார்கள். அவ்விருவரும் மிக ஆச்சரியமும் களிப்பும் அடைந்தவர்களாய் அதனை வாங்கிக்கொண்டு, அல்லாகுத் தஆலா வைப் பலவாறு புகழ்ந்து, தங்கள் வசத்தில் வைத்திருந்தார்கள்.

சிலகாலஞ் சென்றபின், அவ்விரு நேசர்களுள் நரக விமோசனப் பத்திரம் ஒன்று கிடைக்கவேண்டும் என விரும்பினவரான அப்துல் முன்இம் என்பவரே முந்தி இவ்வுலகவாழ்க்கையை விட்டு மேளத் தானர். அப்பத்திரத்தை விரும்பினவரும், முந்தி மேளத் தான வரும் அவரே யாதலால், அவ் வருமைப்பத்திரத்தை அவர்க்கு இட்டகபனுக்குள் வைத்து அவரை அடக்கினார்கள்.

நரக விமோசனம்

முற்றிற்று.

---

## 23-ம் அத்தியாயம்.

## பன்னீர்மாரி.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால் பன்னீர்மழை பெய்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— அபுல் பத்ஹிபுனு கனயம்.]

ஒருநாள் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் தங்கள் மாட்சிமைப்பட்ட சபையினிடத்து விசித்திரமான ஆசனத்தின்மீது சாய்ந்து கொண்டு, தௌஹீது மஅரிபாக்களைப்பற்றி மனிதர்களுக்குப் போதித்துக்கொண்டும், அறிவு சொல்லிக்கொண்டும் இருந்தார்கள். அப்போது அவர்கள் முரீதீன்களும், ஒளலியாக்களும் எண்ணிறந்தபேர் இருந்து தலைசாய்த்துக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அக்காலம் பஞ்சகாலமாயிருந்தது.

அன்று இருக்கு தேசத்து மேம்பாடுள்ள மனிதர்கள் நாற்பதுபேர் ஒரு குழுவாய்த் திரண்டு நாயகமவர்களின் சபையினிடத்து வந்து தாழ்ந்துநின்று, பின் வருமாறு சொல்கின்றார்கள்:—

"மனிதர்க்கு நேரிடும் எவ்வகைக் கொடிய துன்பங்களையும் ஒரு கிருபாநோக்கத்தாலும், திருவாய்மொழியாலும், பற்றறவிலக்கும் மகிமைவாய்ந்த நாயகமே, இப்போது தங்கள் மேன்மையுள்ள சமுகத்தில் தமியேங்கள் முறையிடும் விஷயத்தைக் கருணைகூர்ந்து கேட்டருளல் வேண்டும். எல்லா வளங்களும் பொலிந்த இந்த இருக்கு தேசம் இக்காலத்துப் பஞ்சத்தால் மிகவருந்தாநின்றது. உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாக் காரணமான மழை நின்றுபோய், செழிப்பான பயிர்களெல்லாம் உலர்ந்து கருகின. அதனால் விளைச்சல் இன்றி மனிதர் மிக வருந்துகின்றனர். இப்பஞ்சம் இருக்கு எங்கும் பரந்து நிற்கின்றது. மனிதர் ஓரிடத்து இருந்து வேறோரிடஞ் செல்லுதற்கு இடம்பாடில்லை. ஆகாயத்தில் கரியமேகம் கையத்தனையும் காண்பது அரிதாய்விட்டது. தெண்ணீர் நிரம்பிப் பக்கமெல்லாம் தண்ணென்றிருந்த ஏரி, குளம், கால்வாய், நதிகளாகிய நீர்நிலை முழுதும் வற்றிவறண்டு, பொருள் ஈட்டுதலே தம் கடமையென்று பலவழியும் திரவியந் தேடிக் குவித்துவைத்துத் தருமத்தின் பொருட்டுச் செலவுபண்ணாத லோபிகளின் செல்வம்போலப் போயின. கல்வியறிவு ஒரு சிறிதும் இன்றிக் கற்றோரையிகழ்ந்து திரியும் முழுமக்கள் ஆக்கம் தீய்வதுபோலப் பூம்பொழில்களெல்லாம் தீய்ந்தன. கொடுங்கோன் மன்னன் தன் குடிகளை இரக்கமின்றி அலைப்பதுபோல மனிதரைப் பஞ்சம் அலைக்கின்றது. நாட்குநாள் தானியவர்க்கம் எல்லாம் குன்றி, அவித்துத்தின்று பசி தீர்வதற்குப் பச்சிலைகிடைப்பதும் அரிதாயிற்று. மனிதரெல்லாம் பசியால்வருந்தி, உடும்பு உரித்தாற்போல என்பும் தோலுமாயினர். மனிதரின்

வாழ்க்கைக்கு வேண்டுமான ஆடுமாடுகளெல்லாம் உணவின்றி விழுந்துமடிந்தன. சன்மார்க்கமுறைமை தவறிப் பாவம் விளைக்கும் தீயோர் வாழும் இடங்களில் அவர்கட்கு உணர்ச்சியுண்டாதற்பொருட்டுச் சோதனையாக நேரிடும் ஆபத்துக்களுள் ஒன்றாகிய இப்பஞ்சம் ஆசாரந்தவறாத ஒளலியாக்கள் நிரம்பியுள்ள இந்த இருக்கு தேசத்தைப் பிடித்த காரணம், மகிமையுள்ள தங்களால் ஒரு அற்புதம் நிகழ்தலாயிருக்கும் என்று தோன்றுகின்றது. ஆதலால், இப்பஞ்சம் தீர்தற்குத் தங்கள் பேரருள் சுரத்தல் அவசியம். இதற்காகவே தமியேங்கள் தங்கள் திருவடி தேடி வந்தோம்"

என இவ்வாறுசொல்லி முறையிட்டார்கள். அவர்கள் இட்ட இம்முறைப்பாடு முழுவதையும் நாயகமவர்கள் கேட்டுக்கொண்டிருந்து, அது முடிந்தபின் தங்கள் சிரசைக் கவிழ்ந்தார்கள். சற்றுநேரம் அவ்வாறு சிரங்கவிழ்த்திருந்து பின் நிமிர்ந்து, அந் நாற்பதுபேர்களையும் நோக்கினார்கள்; மறுபடியும் அந் நாற்பதுபேரும் முன்சொன்ன வண்ணமே பஞ்சத்தின் கொடுமையை முறையிட்டார்கள். நாயகமவர்கள் அவர்களைநோக்கிக் குறுநகை புரிந்துகொண்டு சொல்கின்றார்கள்:—

"பஞ்சந் தீர்தற்கு மழையை விரும்பிநிற்கும் மனிதர்களே, உலகமுழுவதையும் ஆள்கின்ற வல்லமையுள்ள அல்லாதுத் தஆலா வின் அருளும், உதவியும், மிகப்பரந்து விரிந்தவை. அவை அளவினுள் அடங்கமாட்டா. அவை இவ்வகையினவென்று கூறுவாரும் இல்லை. அவ்விதப் பேரருளும் பேருதவியும் உள்ளவன் நாடினனாயின், நீராற்பெய்விக்கும் மழையை நறுமலர் கலந்த பன்னீரால் பெய்விக்கவும் தக்கவன். இது உண்மையென்று நீவிர் கொள்வீர்களாக" என்றார்கள்.

நாயகமவர்கள் பகர்ந்த இத்திருவசனங்கள் முற்றுப் பெறுவதற்குள் மிகக்கொடுமையாய் எறித்த வெயில் மங்குமாறு ஆகாயமெங்கும் மந்தாரம் வந்து கவிந்துகொண்டது. அண்டம் அதிர இடிமுழக்கம் உண்டாய், கண்களை மழுக்கும்வண்ணம் மின்னலும் வெட்டிற்று. இவை உண்டான சற்றுநேரத்திற்குள் மாரிபொழிய ஆரம்பித்தது. மழைத்துளிகளுக்கு இடையே நறுமணம் உள்ள மலர்களும் சொரிந்தன. மழைநீர் பன்னீராயிருந்தது. பன்னீரும் நறுமலரும் கலந்து சோனையாய்ப் பொழிவதால், எங்கும் நாசிகள் திமிர்கொள்ளத்தக்க இனியவாசனை பெருகிற்று. தெருக்களும், மற்றிடங்களும், பன்னீர்ப்பிரவாகத்தால் முழுகின. நறுமலர்கள் தரையைமூடிப் பரவிக்கிடந்தன.

இவ்வாறாக மழைபொழியும்வரையும் நாயகமவர்கள் சமுகத்தே முறைப்பாடு பண்ணின நாற்பதுபேரும் அப்படியே நிற்கின்றார்கள். அவர்களுக்கும், மற்றுமுள்ள மனிதர் எல்லார்க்கும், இப்பன்னீர்மாரி பொழிவது பேராச்சரியத்தை விளைத்தது. நாயகமவர்கள் திருவாய்மலர்ந்து சொன்னவாறே பன்னீரும் நறுமலரும் கலந்து மழைபெய்கின்றதே! என்று எல்லாரும் பரவசமுற்றார்கள். சிலர் இம்மழை சுவர்க்கலோகத்து நதியில் நின்று பெய்கின்றது என்று வியந்தார்கள். சைகு றலீயல்லாகு அன்கு அவர்கள் மழைபொழிய விரும்பினபோது அல்லாகுத் தஆலா சுவர்க்கலோகத்து நீரூற்றுக்களைப் பூலோகத்திற்குத் திருப்பிவிட்டான் என்று சிலர் சொன்னார்கள். முடிவாக எல்லாரும், மழையின்றிப் பஞ்சம் பிடித்து வருந்தினமனிதர் மீது நாயகம்வர்கள் மன இரக்கம் உற்றுப் பன்னீரையும் மலரையும் கலந்து மழைபெய்வித்தார்கள். இவர்கள் மகத்துவம் மிகச்சிறப்பானது என்று நாயகமவர்களைத் துதித்து, அல்லாகுத் தஆலா வை மிகப்புகழ்ந்தார்கள்.

நாயகம்வர்கள் பொருட்டினாற் பெய்த பன்னீர்மாரியின்வெள்ளம் இருக்கு தேசம் எங்கும் பரந்தது. அந்த

மாரி அத்தேசம் முழுவதையும் சூழவளைந்து பெய்தபடி யால், அங்கங்குள்ள நதிகளெல்லாம் பிரவாகித்தன. ஓடைகள் முழுதும் நிரம்பின. கால்வாய்களில் பன்னீர் நிறைந்தோடிச்சென்று வயல்களிற் பாய்ந்து ததும்பிற்று. மதகுதோறும் நீர்பாயும் ஓசை மத்தளம்போல ஒலித்தது. மயில்கள் நீலக்கலாபம் விரித்து நின்று ஆட, குயில்கள் மரக்கிளைகளிலிருந்து இனிய குரலுடன் கூவ, நறுமலர் செறிந்த சோலைகளெல்லாம் செழித்தன. அகன்று ஆழ்ந்த குளங்கள் நீர்தேங்கித் தாமரையும் அல்லியும் நீலோற்பலமும் படர்ந்து, கண்ணுக்கு இனிமையாய்த் தோன்றின. மழையின்றி மடியுந்தறுவாயில் நாங்கள் வருந்தாநிற்ப எங்களை உயிர்வாழ்விக்க மழைபெய்வித்த நாயகமவர்களின் சீரும் சிறப்பும் மேன்மேல் ஓங்குகவென்று பறவைகளெல்லாம் களிப்புற்று ஆர்த்தன. மேய்தற்குப் பசும்புல்லும் பருகுதற்குத் தண்ணீரும் அற்று நாங்கள் மடியக்கிடந்தோம்; நாயகமவர்கள் பேரருள்சுரந்து பெய்வித்த மழையால் இப்போது உயிர்பெற்றோமென்று விலங்கினங்களெல்லாம் களித்துநின்று விளையாடின. பூமியே களிகூர்ந்தவண்ணம் எங்கும் பசுமைநிறங் கொண்டு தோற்றிற்று.

தானியவர்க்கம் பயிரிடுவோர் தத்தம் வேலைகளில் முயன்றனர். காய்கறிகளாதிப் பலவகைப் பொருள்களும் விளைப்போர் அவ்வவ்வேலையை ஆரம்பித்துக் கொண்டனர். நாயகமவர்களின் அற்புத மகிமைகொண்டு பன்னீராய்ப்பெய்த நீராதலால், விளைச்சல் முன்னினும் அதிகப்பட்டது. விளைபொருள் முழுவதும் மிகச்செழிப்பாய் விளைந்தன.

வளம் குன்றாது என்றும் ஒரேதன்மையாயிருக்கும் செழிப்பான இருக்கு தேசம் சிலகாலம் செழிப்பற்றுப் பஞ்சத்தாற் கலக்குற்றிருந்து, பின் நாயகமவர்கள் பொருட்டுச் செழிப்புற்றுச்செல்வம் பொலிந்தது. வாடி வதங்

கின்ற விலங்கினங்கள் கொழுமதிகொண்டு பருத்தன. உணவின்றிக்கிடந்து வருந்தி உடலொடுங்கின மனிதர்கள் மதாளித்தார்கள். முன் வெறுமையுற்றுக் கிடந்த நிலங்களெல்லாம் பயிரிடப்பட்டு, நாடு செழித்தது. என்றும் இல்லாத இப்பெரும் வளமும், விளைச்சலும், செல்வமும், நாயகமவர்களின் பேரருளாற் கிடைத்தன என்றே எல்லாரும் வியந்து கொண்டாடினார்கள்.

பன்னீர்மாரி

முற்றிற்று.

---

24 - ம் அத்தியாயம்.

## பஹ்றுல் முஹீத்து.

———:o:———

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால் பஹ்றுல் முஹீத்து என்னும் தீவில் நிகழ்ந்த ஒரு வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றாவி:— சையிது அபுல் ஹஸன் அலி.]

சைகு றலியல்லாகு அன்கு அவர்கள் என்னும் நாயகம் சுல்தானுல் ஆரிபீன் அவர்களின் சகோதரிகுமாரராகிய சையிது அபுல் ஹஸன் அலி என்னும் ஒருவர் இருந்தார்கள். அவர்கள் மிகப் பாலியர். என்றைக்கும் தங்கள் மாமனாராகிய நாயகமவர்களின் பக்கத்தே யிருப்பவர்கள். தங்கள் தந்தையவர்களின் நாமம் இடப்பட்டிருக்கும் அம்மருகர்மீது நாயகமவர்கள் அதிகமான அன்புவைத்திருந்தார்கள்.

ஒருநாள் நாயகமவர்கள் தங்கள் வணக்க ஸ்தானத்திற்குள் தனித்து உட்காந்திருந்தார்கள். அந்த ஸ்தானம் மூன்றுபுறம் சுவருள்ளதும், மற்றொருபுறம் கபாடமிட்ட வாசல் உள்ளதுமான ஒரு தனிக்கட்டிடம். முன்புறம்

உள்ள வாசல் அன்றி, மனிதர் உள்ளே போக வர வேறுவழியில்லை. ஆனால், மூன்று புறத்தும் உள்ள சுவர்களில் பக்கத்திற்கு ஒன்றாக மூன்று சாளரங்கள் மாத்திரம் இருந்தன. அவை மனிதர் உள் நுழைதற்கு இடம்படாதனவாய், உயர்வில் உள்ளனவா யிருந்தன.

அவ்விதத் தனிக்கட்டிடத்துள் நங்கள் மாமனாராகிய நாயகமவர்கள் ஒன்றியாயிருப்பது அபுல் ஹஸன் அலிக்கு நன்றாய்த்தெரியும். தாங்கள் அதையறிந்து, அக்கட்டிடத்துச் சார்த்தப்பட்டிருந்த வாசற் கதவடியில் உட்காந்திருந்தார்கள்; உள்ளே மாமனாரவர்கள் மாத்திரம் இருப்பதால் அவர்கள் வெளியே வருமளவும் நாம் இங்கேயே யிருப்போம் என்று கருதி, வெகுநேரம்வரையும் இருந்தார்கள். அதுவரையும் எவ்வித அரவமும் உள்ளே உண்டாகவில்லை. வெகுநேரஞ் சென்றபின், வேற்றாள் ஒருவர் உள்ளேயிருப்பதாகப் புலப்பட்டது. காதுகொடுத்துக் கேட்டார்கள்; வேறுமனிதர் ஒருவர் நாயகமவர்களோடு இருந்து சம்பாஷிப்பதுபோல அரவங்கேட்டது. அபுல் ஹஸன் அலி எழுந்து கதவருகில் மெல்ல ஒதுங்கிநின்று, இருகதவுகளின் சந்துவெளியால் உள்ளேபார்த்தார்கள். என்றும் அறிமுகம் இல்லாத ஒரு புதியமனிதர் நாயகமவர்களோடு இருந்து சம்பாஷிப்பது தெரிந்தது. அப்போது அபுல் ஹஸன் அலி, நம் மாமனாரவர்கள் வெகுநேரம்வரையும் இக்கட்டிடத்துள் தனிமையாய்த்தானேயிருந்தார்கள்! இப்போது இப்புதியமனிதர் எங்கிருந்து எவ்வழியால் வந்தார்! நாம் இவர் வருதற்குமுந்தியே வாசலில் இருக்கின்றோமே! இவர் வந்தவகை யாது! எனச் சிந்தனைபண்ணிக்கொண்டு, பார்த்தவண்ணமாய் நின்றார்கள். இவர்கள் பார்த்து நிற்பது உள்ளிருப்போர்களுக்குத் தெரியாது. இருவரும் வெகு ரகசியமாக யாதோ ஒரு கருமத்தைப்பற்றிச் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

வெகுநேரம் அளவும் இருவரும் சம்பாஷித்துக் கொண்டிருந்து அச்சம்பாஷணை முடிந்தபின், புதிதாய்வந்துள்ள மனிதர் எழுந்து நாயகமவர்கள்பால் விடைபெற்றுக்கொண்டு, ஒருபுறத்துச் சுவரில் முட்டைவடிவில் ஒரே துவாரமாக இட்டிருக்கும் சாளரவழியே நுழைந்து மின்னல்வெட்டி மறைவதுபோல மறைந்துபோய்விட்டார். அதை அபுல் ஹஸன் அலி கண்டு ஆச்சரியமுற்று: இவர் யார்? மனிதர் போக்குவரத்திற்கு என்று வைத்திருக்கின்ற வாசல்வழியே வந்து செல்லாமல், காற்றிற்கும் வெளிச்சத்திற்கும் வைத்துள்ள சாளரவழியே வந்து செல்கின்றாரே! என எண்ணிக்கொண்டு உள்ளே புகுந்து, தங்கள் மாமனாகிய நாயகமவர்கள் சமுகத்துச்சென்று பணிந்துநின்று "தேவரீரே, இப்போது தங்கள்சமுகத்தே சம்பாஷித்துக் கொண்டிருந்து, பின் சாளரவழியே நுழைந்து பறந்துபோயினாரே, அவர் யார்?" எனக்கேட்டார்கள். நாயகமவர்கள் மருகரைநோக்கி "அவரை நீர் கண்ணுற்பார்த்தீரா?" என வினவினார்கள். இக்கேள்விக்கு "ஆம்; கதவின் சந்துவெளியாற் பார்த்தேன்" என மருகர் விடைகூறினார்கள். பின்பு நாயகமவர்கள் தங்கள் மருகர்க்குக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"என் அருமை மருகரே, கேட்பீராக. இங்கு வழுங்காவழியில் வந்து சென்ற அவர், அல்லாகுத் தஆலா வின் பிரதானமான பணிவிடைகாரர் நால்வருள் ஒருவர். சமுத்திரங்களில் உள்ள நீர் முழுமைக்கும் அதிகாரியானவர். ஒருதுளி நீரும் அவர்கட்டளையின்றி இடம் பெயராது. உலகத்திற்கு இன்றியமையாத நீரின் அதிகாரத்தை அவர்வசம் அல்லாகுத் தஆலா ஒப்புவித்து ஆட்சிபுரிகின்றான். அவர் பெயர் மீக்காயீல். இன்று அவர் என்னிடத்து வந்து பேசிக்கொண்டு இருந்த விஷயம் வேறொன்றும் அன்று; ஒரு ஒலி யின்மீது அல்லாகுத் தஆலா மூன்று தினமாகக் கோபமாய் வெறுப்புற்றிருக்கின்றானாம். அதை

என்னிடம் சொல்லிக்காட்டினர். அதுதான் சம்பாஷித்தது" என்று கூறினர்கள். இதனைக்கேட்ட மருச[illegible] பின்னும் நாயகமவர்களிடத்து "அந்த ஒலியின் மீது அல்லாகுத் தஆலா அங்ஙனம் வெறுப்புற்றுக் கோபமாயிருந்ததற்குக் காரணம் என்ன?" எனக் கேட்டார்கள். அதற்கு நாயகமவர்கள் சொல்கின்றார்கள்:—

"அலைகடல் அகத்து அங்கங்கே தனித்தனி உண்டாயிருக்கும் தீவுகள் பலவுள்ளும் மனிதர்கள் வாசம்பண்ணாத பஹறுல் முஹீத்து என்கின்ற தீவு ஒன்றுண்டு. அத்தீவில் முன்சொன்ன அந்த ஒலியேயன்றி வேறுமனிதர் யாரும் இல்லை. அத்தீவில் மூன்றுதினம் வரையும் வெயில் வெளிச்சம் தோற்றாது மந்தாரத்தால் வானம் மூடப்பட்டு, சோனாமாரியாய் மழைவருஷித்தது. அங்குள்ள நதிகள், ஓடைகள், கால்வாய்கள் எல்லாம் பெருக்கெடுத்தன. புது நீர்ப்பிரவாகத்தினால் அத்தீவு முழுதும் பசுமைகொண்டது. அதனை அந்த ஒலி கண்டு இம்மழை மனிதர்வசிக்கும் கண்டங்களில் பொழியவேண்டியதன்றோ! அவ்விடங்களிற் பெய்தால் எவ்வளவு பலன் உண்டாம்! இம் மனிதர் நடமாடாத வெறுந்தீவில் இப்பெருமழை வருஷிப்பதால் என்ன பலன்! என அல்லாகுத் தஆலாவின் திருவருட்டன்மையை மறந்துவிட்டு எண்ணினர். எண்ணினும் பின் அத்திருவருட்டன்மையை நினைவுகூர்ந்து, பாவமன்னிப்புக்காகத் தௌபா செய்துவிட்டார். செய்தும், அவ்வாறு கருதின நிமித்தம் அல்லாகுத் தஆலா அவர்மீது வெறுப்புற்றுக் கோபமாயிருக்கின்றான். அவருடைய ஒலித்துவம் ஆன விலாயத்தையும் கவர்ந்துகொண்டான்" என்று கூறினர்கள்.

மாமனாவர்கள் சொன்ன இவ்வரலாற்றை அபுல் ஹஸன் அலி கேட்டு "தம்மை அல்லாகுத் தஆலா வெறுத்திருப்பதை அவர் அறிவாரா?" எனக் கேட்டார்கள். அதற்கு நாயகமவர்கள் "அறியமாட்டார்; ஒருவர் அவர்க்கு

அறிவிக்க இல்லை" என விடை பகர்ந்தார்கள். அபுல் ஹஸன் அலியின்னும் மாமன்னரவர்களை நோக்கி "தேவரீர் தமியேனுக்குக் கட்டளை புரிவீர்களானால், தமியேன் அத்தீவிற் சென்று இச்சங்கதியை அவர்க்கு அறிவிப்பேன்" என்றார்கள். அப்போது நாயகமவர்கள் மருகரை நோக்கி "நீர் அங்கே சென்று அவர்க்கு இச்சமாசாரம் தெரிவிக்க விருப்பம் உள்ளவராயிருந்தால், அதற்கு ஏற்றதிறன் உம்மிடத்து உண்டா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "தேவரீர் ஏவுவீர்களானால், அவ்வாறு செய்வேன்; அவ்விதத்திறன் எனக்கு உண்டாகும்" என்று விடை பகர்ந்தார்கள்.

நாயகமவர்கள் அபுல் ஹஸன் அலியை நோக்கி "அப்படியானால், நீர் உமது தலையைக் குனியும்" என்று கட்டளை பண்ணினார்கள். மாமன்னராகிய நாயகமவர்கள் இவ்வாறு கட்டளை பண்ணினவுடன் அபுல் ஹஸன் அலி சிரங்குனிந்து, தம் பாதங்களைப் பார்த்து நின்றார்கள். பின்பு "தலைநிமிர்ந்து பாரும்" என்று ஒரு சத்தம் அவர்கள் காதிற் கேட்டது. உடனே தங்கள்சிரசை நிமிர்த்தினார்கள். தாங்கள் நிற்கும் இடம் முந்திநின்ற தனிக்கட்டிடம் அன்று; முன்னேயிருந்த மாமன்னரவர்களும் இல்லை; எல்லாம் மாறிப்போய், நிற்கும் இடம் கடல்சூழ்ந்த ஒரு தீவாயிருந்தது.

அபுல் ஹஸன் அலி பதாயிகு நகரத்தில் தனித்த ஒரு கட்டிடத்துள் மாமன்னரவர்களுக்கு முன்னே நின்றது போய் ஒரு தீவுநடுவில் தனியே நிற்பதை அறிந்து புதுமையுற்று, நான்கு பக்கமும் பார்த்தார்கள். எங்கும் மனதிற்கு ரம்மியமும், கண்ணுக்கு அலங்காரமுமாயிருந்தன. வெண்ணிறம் மிக்க ஆணிமுத்துக்கள் திரைகள் கொழித்து ஒதுக்குதலால் வானத்து விடிவெள்ளிக்கு ஒப்பாய்ப் பரந்து கிடந்து சொலிக்கின்ற கரைகளையுடைய நதிகள் பல

நெளிந்து வளைந்து ஓடுகின்றன. இருபக்கத்தும் அடர்ந்த தருக்கள் ஓங்கிவள்ர்ந்த நீரோடைகள் இ[illegible]செறிந்து தோற்றுகின்றன. அகில், சந்தனம், குங்குமம், சண்பகம், அசோகம், தேவதாரு, மகிழ் முதலிய உயர்சாதி விருக்ஷங்கள் பலபக்கத்தும் செறிந்து, வானத்தை அளாவி நிற்கின்றன. பலவகைப்பட்ட வண்ணவேற்றுபாடுள்ள மலர்களைப் பூத்துச்சொரியும் செடிகளும், இனிமையான பழவர்க்கங்கள் பழுத்துக்குலுங்கும் தருக்களும், அளவிறந்து வளர்ந்து நிற்கின்றன. நறுமலர்களும், தீங்கனிகளும் தேனொழுகச்சிந்தி, எங்கும் கிடக்கின்றன. மரக்கிளைதோறும் பலவகைப்பக்ஷிகள் இருந்து இனிமையான குரலுடன் சத்திக்கின்றன. கரியவண்டுகள் மலர்தோறுஞ் சென்று தித்திப்பான தேனைப்பருகி, இனிமையான கீதம்புரிகின்றன. பொரிவாரி யிறைத்தாற்போன்ற வெள்ளிய புள்ளியுள்ள மான்கள் கன்றுகளோடு நின்று துள்ளிவிளையாடுகின்றன. அழகிய தாமரைகளும், ஆம்பலும், குவளையும், அலர்ந்த கற்சுனைகள் பளிங்குபோல் தெளிந்த நீர்நிரம்பிக் குளிர்பரவ எங்கும் தோற்றுகின்றன. இன்னும் அத்தீவினிடத்துச்சொல்லுதற்கு அமையாதனவாய பல வளப்பங்கள் மலிந்திருந்தன.

அபுல் ஹஸன் அலி மேற்சொன்ன அலங்காரமான காக்ஷிகளைக் கண்டுகொண்டு, கொஞ்சம் முன்னேக்கி நடந்தார்கள். நடந்து செல்லும்போது, ஒருவர் எதிரேவருவது தெரிந்தது. அவரை இவர்கள்நோக்கி, இவர்தாம் நம் மாமனாரவர்கள் சொன்ன ஒலி எனத் தீர்மானித்து, அவர்க்கு முன்னேபோய் நின்று “அஸ்ஸலாமு- அலைக்கும். அல்லாகுத் தஆலா தங்கள்மீது வெறுப்புற்று, தங்களின் விலாயத்தைக் கவர்ந்துகொண்டான்; இதனைத் தாங்கள் அறியக்கடவீர்கள்” என்று கூறினார்கள்.

அபுல் ஹஸன் அலி இவ்வாறு சொன்னபோது, இதைக்கேட்ட அந்த மனிதர் இவர்களைநோக்கி "வ அலைக்குமுஸ்ஸலாம் வாலிபரே, இப்போது நீர், நான் சொல்வதுபோலச் செய்தல்வேண்டும்" என்றார். அபுல் ஹஸன் அலி அவரைநோக்கி "என்ன சொல்கின்றீர்கள்?" எனக் கேட்டார்கள். இக் கேள்விக்கு அவர் "வாலிபரே, நீர் உம்மேலே போட்டிருக்கின்ற புடவையை முறுக்கித்திரித்து என் கழுத்தில் மாட்டி என்னை முகங்குப்புறக் கீழேதள்ளிக் இ[illegible]சர்வ வல்லமையுள்ள அல்லாகுத் தஆலா வின் காரியத்தில் கணிசக்குறைவாகக் கருதுகின்றவனுக்குச் செய்யும் தண்டனை இதுதான்' என்று சொல்லிக்கொண்டு இத் தீவுமுழுதும் இழுப்பீராக" என்று பிரதிசொன்னார்.

அபுல் ஹஸன் அலி நல்லது என அதற்கு உடம்பட்டு, தம் கையாற புடவையை அறமுறுக்கித் திரித்து அவர் கழுத்தில் இறுகும்படி மாட்டிக் கையிற் பிடித்துக்கொண்டு, இனி அவரைக் கீழே குப்புறத்தள்ளி இழுக்க யத்தனப்பட்டார்கள், அந்த நேரத்தில் "ஓ! அபுல் ஹஸன் அலியே, நீர் துணிந்து செய்தற்கு யத்தனித்த கருமத்தை நிறுத்துவீராக. அவர்செய்த குற்றத்தைப் பொறுக்கும் வண்ணம் வானத்து மலக்குகளெல்லாம் அல்லாகுத் தஆலா இடம் பரிவுற்று மன்றாடுகின்றார்கள். அம் மன்றாட்டத்தை அவன் ஏற்று, அவர்பிழையைப் பொறுத்து, முன்போல அவரைப் பொருந்திக்கொண்டான்" என அசரீரியான ஒரு குரல் ஆகாயத்திற் கேட்டது.

இக் குரலோசை அபுல் ஹஸன் அலியின் செவிக்குள் நுழைந்தவுடன், அவர்களுக்குப் பிரக்கினை தப்பிற்று. உணர்வு சிறிதுமின்றித் தம்மைமறந்துபோனார்கள். சற்று நேரத்திற்குப்பின் உணர்வுவந்து கண்களைத் திறந்தார்கள். திறந்தபோது, தாங்கள் நிற்கும் இடம் தீவாயில்லை. அஃது, நாயகமவர்களின் தவச்சாலையாயிருந்தது.

அத் தனிக்கட்டிடத்துள் தங்கள் மாமனாராகிய நாயகமவர்களுக்கு முன்னே முந்தித் தாங்கள் தலைகுனிந்து நின்றது போல நிற்கின்றார்கள். அப்போது அவர்களுக்கு உண்டான ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. திகைப்புற்று நின்றார்கள். உடனே நாயகமவர்கள் தங்கள் மருகராகிய அபுல் ஹஸன் அலியை மனைக்குப் போகும்படி உத்தரவுசெய்து அனுப்பிவிட்டார்கள்.

அபுல் ஹஸன் அலி இவ் வரலாற்றைச் சொன்னபோது "அல்லா மீது சத்தியமாக என் மாமனாரவர்களுக்கு முன்னே நின்ற நான் தீவுக்குச்சென்றதும், அங்கிருந்து மீண்டதும்; இன்னபடியென்று அறியமாட்டேன்" என்று பிரமாணிக்கத்துடன் சொல்லியிருக்கின்றார்கள்.

[இவ்வரலாறு நான் எழுதிய இவ்வகை அன்றி, நாயகமவர்கள் வணக்கஸ்தானமாகிய தனிக்கட்டிடத்துள் ஒன்றியாயிருந்தபோது கூடவந்திருந்து சம்பாஷித்த புதியமனிதரைக் கண்ட அபுல் ஹஸன் அலி தங்கள் மாமனாரிடத்துச் சென்று அவர் யாரென்று கேட்டதற்கு நாயகமவர்கள்: அவர் மீக்காயீல் என்கின்ற மலக்கு; பஹ்றுல் முஹீத்து என்னும் தீவில் தரிபட்டிருக்கின்றார். நிர்மானுஷியமான அத்தீவில் மூன்றுநாள் சோனைமாரி வருஷிக்க, மனிதர் வசிக்காத இத்தீவில் வீணாக இம்மழை என் பெய்யவேண்டும்? மனிதருள்ள ஊர்களிற் பெய்யக்கூடாதா? என அவர் எண்ணினார்; அதற்காக அல்லாதந் தஆலா அவர்மீது கோபமாய் வெறுத்திருக்கின்றான் என்று சொன்னதாகவும், அபுல் ஹஸன் அலி: அப்படி வெறுத்திருப்பதைத் தாங்கள் அவர்க்குத் தெரிவித்தீர்களா? என்று மாமனாரவர்களைக் கேட்டதாகவும், அதற்கு அவர்கள்: அவர் வெட்கம் அடைவார் என நான் அவர்க்குத் தெரிவிக்கவில்லை என்று சொன்னதாகவும், அப்படியானால் நான் அத்தீவிற்குப்போய் அதனை அவர்க்குத் தெரிவிக்கட்டா? என அபுல் ஹஸன் அலி கேட்டதாகவும், நாயகமவர்கள் நல்லதென்று தலையைக் குனியச்சொன்னதாகவும், தலைகுனிந்து நின்றபின் தலையை நிமிரும் என்று ஒரு சத்தம் கேட்டு நிமிர்ந்துபார்க்கத் தீவில் நிற்கக் கண்டதாகவும், பின் கொஞ்சத்தூரம் நடந்துசென்றபோது முன் மாமனாரவர்களுடன்

பேசிக்கொண்டிருந்தவரையே கண்டதாகவும், பின் நடந்தவையெல்லாம் மேற்கூறியவாறே நிகழ்ந்ததாகவும், ஒரு நூலில் எழுதப்பட்டிருக்கின்றது.]

பஹாறுல் முஹீத்து

முற்றிற்று.

---

25-ம் அத்தியாயம்.

## ஜினு விலக்கியது.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், சம்பவிக்க விருந்த ஜினு என்னும் வியபிசாரவிஷயத்தை விலக்கிய வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றுவி:— முகம்மதிபுனு அப்துஸ்ஸலாம்.]

குத்புல் ஆலம், தாஜுல் வாஸிலீன், சுல்தானுல்-ஆரிபீன், சையிது அகுமதுல் கபீறு ஹுஸைனுற்றபாஇ றலியல்லாகு அன்கு அவர்கள் ஒருநாள் பதாயிகு நகரத்தைவிட்டு வெளிப்பட்டு, பக்கத்தேயுள்ள வனத்திற்குப்போனார்கள். அவர்கள் போகும்போது, ஸாதாத்து மார்களுள் ஒருவராகிய அப்துஸ்ஸலாம் என்போருடைய குமாரர் முகம்மது என்பவர் கூடத் தொடர்ந்துகொண்டு போனார். நாயகமவர்கள் அடவிக்குச்சென்று, மயில்கள் மரகதத் தோகைகளை விரித்துநின்று ஆடாநின்ற அழகிய மரநிழல் செறிந்த ஒரு தோப்பில் நறிய மலர்கள்செறிந்த ஒரு விருக்ஷத்தின் கீழ் உட்காந்து, அல்லாகுத் தஆலா வின் நாட்டத்துடன் சிரசைக் கவிழ்ந்துகொண்டு, வேறுபராக்கின்றித் தரையைப் பார்த்தபடி இருந்தார்கள். கூடச்சென்ற முகம்மது என்பவர் அவர்களுக்குப் பின் பக்கத்தில், சற்றுவிலகி வேறொரு தருநிழலில் உட்காந்திருந்தார்.

அந்நேரத்தில் இளம் பருவமும், அவயவ லக்ஷணங்களும் உள்ள அழகிய பெண் ஒருத்தி, கண்டவர் யாரும் மருளும்படியான வடிவுடன் சற்றுத் தூரத்தே போனாள். அவள், முகம் களங்கமின்றி விளங்கும் முழுமதிபோன்றும், கூந்தல் கன்னங்கரிய மேகம்போன்றும், நெற்றி இளம்பிறை போன்றும், புருவங்கள் வில்லுப் போன்றும், கண்கள் மாவடுப் போன்றும், நாசி எள்ளின்பூப் போன்றும், உதடுகள் பவளம் போன்றும், தந்தங்கள் முத்துப் போன்றும், வாய் செவ்வல்லிமலர் போன்றும், கன்னங்கள் கண்ணாடி போன்றும், கழுத்து வலம்புரிச் சங்குபோன்றும், தோட்கள் பசிய மூங்கில் போன்றும், முலைகள் அழகிய பந்து போன்றும், வயிறு ஆலிலை போன்றும், உந்தி நீர்ச்சுழி போன்றும், அல்குல் பாம்புப்படம் போன்றும், தொடைகள் வாழைத்தண்டு போன்றும், கணைக்கால்கள் வரால்போன்றும், கைகள் காந்தட்பூப் போன்றும், குரல் குயிற்குரல் போன்றும், மொழி கிளிமொழி போன்றும் சிறந்தவள். இவ்வித அழகமைந்த குமரி தனியேபோவதை முகம்மது கண்டார்.

இவ் அழகிய பெண்ணை முகம்மது என்பவர் கண்டபோது, அவருடைய கல்வியறிவின் கடல் கலங்கிக் குழம்பிற்று. அவர்க்கு உண்டான காமவேட்கை மீறி உச்சியிற்போய்த் தாக்கி, கண்களை மறைத்தது. அப்போது மீறிய காமவெறியால் அவர் உலகத்தையே மறந்தார். சமீபத்தில் நாயகமவர்கள் இருப்பதுகூட அவர் மனதிற்கும் கண்ணுக்கும் புலப்படாமல் மறைந்தது. காமம் அளவு கடந்து மீறிய அவர், எவ்வாறாயினும் இவளை நாம் புணரவேண்டும் என்று தீர்மானித்து எழுந்து, வலிதிற் பற்றியிழுத்துப் புணர்தற்காக அவளை நெருங்கினார். தனக்கு வரும் ஆபத்து இன்னதென்று உணராது விளக்கில் விழுந்து மடியப்போகின்ற விட்டில்போல அறிவுமயங்கிய முகம்மது, அவளை நெருங்

னவுடன், தலைகுனிந்து தரையை நோக்கினபடி யிருந்த நாயகமவர்கள் விரைவாய் நிமிர்ந்து, அவரைநோக்கிச் சத்தமிட்டு விளித்து, கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களுடைய சிறப்பான சந்தானத்திற் பிறந்து அவர்களின் திருநாமத்தையும் பூண்டிருக்கின்ற ஓ! முகம்மதே, பாவிகளோடு நீரும் ஒருவராய்ச் சேர்ந்து கொள்ளாது, அல்லாகுத் தஆலா வுக்கு அஞ்சுவீராக. உலகம் முழுவதையும் ஒருங்கே ஆள்கின்ற வல்லமையுள்ள அந்த ஆண்டவன் தன் அடியார்கள் எந்தச் செயலை எந்த விதமாக எந்த இடத்தில் எந்த நேரத்திற் செய்கின்றார்கள் என்பதைத் தெளிவாகப் பார்த்துக்கொண் டிருக்கின்றான். இவ்வுலகத்துப் பெண்ணாசையால் அறிவிழந்து, பரிசுத்தமான உமது குலத்தை வடுப்படுத்திவிடாதீர். தீமைவருத்தும் இச்சையும், அதற்கேற்கத் துணைசெய்தற்குக் காத்துநிற்கும் ஷைத்தானும், பாவக்கடலில் வீழ்த்தி நரகத்திற்கொண்டு சேர்க்கின்ற பகையாம் என்பதை நினைவுகூர்வீராக. அவ்விச்சையோடுகூடி அரவுந்தோற்றாமல் மனத்தே ஊசாடித் தீங்கு செய்விக்கவரும் கொடிய பகைவனான ஷைத்தான் உம்மை அண்டாத வண்ணம் நீர் அடித்து வெருட்டுவீராக. ஷைத்தான் ரத்தத்தோடுகலந்து நரம்புவழியேயோடிச் சென்று இருதயத்தில் தரிபட்டு இருந்து, தீமைகளை யெல்லாம் நன்மையென்று கருதும்படிக்கும் செய்யும்படிக்கும் உணர்ச்சியுண்டுபண்ணுவான் என்பதை நீர் கண்டறிவீராக. நீர் இப்போது செய்யத் துணிந்த கருமம், சரீர இச்சையால் உண்டான மனோபாவகம் அன்றி வேறன்று. இவ்வித மனோபாவகமான துராசை உமக்கு உண்டாவது தகாது. நீர் நபி நாயகமவர்களின் சந்ததிகளில் உள்ளவர். உம்முடைய மனையும், என்னுடைய மனையும், நுபுவ்வத்து ரிஸாலத்து களுடைய மனைகளாகும். நமது நாயகமான நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களுடைய வழி

சம் வாழ்வதாக. அந்த மேம்பாடான வமிசம் என்னும் அமிர்தகடலில் ஒரு துளி விஷம் துளித்தாற்போல நீர் இக்கருமத்தைச் செய்து அதனைக் கெடுத்து, நீரும் கேடடையாதீர். அல்லாகுத் தஆலா வுக்கு அஞ்சி உம்மைக் காப்பாற்றிக்கொள்வீராக."

என இவ்வாறு குரல் எழுப்பிக் கூறினார்கள். இந்த அமிர்தம் போன்ற திவ்வியோபதேச வசனங்கள் முகம்மது என்பவரின் செவிகளுள் நுழைந்தவுடன் அவர் கொண்ட காமவேட்கை அடங்கி, அறிவு தெளிந்தது. உணர்ச்சிக்கு முடுகினவர் அப்படியே மறந்து நின்றுவிட்டார். கண்களில் நின்று நீர் பெருகி ஓடிற்று. அப்பெண்ணைவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டு, நாயகமவர்களை நோக்கி "யாசையிதீ, பாவி கெடுவேன் இப்பெண்ணின் அழகில் மருண்டு இச்சைவசப்பட்டுக் கெடத்துணிந்தேன். தேவரீர் இப்போது எளியேனை ரக்ஷித்து நேர்வழியில் தரிபடுத்துவீர்களாக. தங்கள் திருவடிக்கீழ் தமியேனை அடைக்கலமாக்கிக்கொள்வீர்களாக. என் இருதயம் இனி எப்போதும் கெடாதவாறு காப்பீர்களாக" என அழுது புலம்பிக் கூறினார். நாயகமவர்கள் தங்கள்பால் அழுது அஞ்சி முறையிடுகின்ற முகம்மது என்பவரை நோக்கி, கையை ஆகாயத்தில் நீட்டி "முகம்மதே, அங்கே வானத்தி[illegible]ராக. இப்போது நீர் இச்சைகொண்ட பெண்ணில்நின்றும் அதிக அழகான ஹூறுல்லீன் களுள் உமக்கென்று நியமிக்கப்பட்டுள்ள பெண்ணைக் காண்பீர்" என்று கூறினார்கள். இதனைக் கேட்டவுடன் அவர் வானத்தை அண்ணாந்து பார்த்தார். பார்த்தபோது, சுவர்க்கலோகத்து ஹூறுல்லீன்களுள் ஒரு பெண் அவர்க்கு ஸலாம் சொல்லி எதிரே ஆகாயத்தில் நிற்பது அவர் கண்ணுக்குத் தோற்றிற்று.

முகம்மது ஆகாயத்தில் தோற்றுகின்ற பெண்ணைக் கண்கொட்டாவண்ணம் பார்த்துக்கொண்டே நின்றார். நாயக

மவர்கள் அவ்வடவியைவிட்டு எழுந்து ஊர்க்குள் வந்துவிட்டார்கள். வானத்தைப் பார்த்து நின்ற முகம்மது தாம் செய்யப்போன தீயசெயலைக் கருதி வெட்கமுற்று, பின் அங்கிருந்து ஊர்க்குவந்தார்.

அடவியை விட்டு ஊர்க்குவந்த அன்றுமுதலாக முகம்மதுக்கு ஆகாயத்தி[illegible] கண்ட பெண்மீது ஆசை உண்டாய்விட்டது. அந்தப் பெண்மீதே சிந்தனையாய் இராப்பகல் அழுதுகொண்டு வெறிகொண்டாற் போலத் திரிந்துகொ[illegible] ய ஆசை அல்லாகுத் தஆலா மீது திரும்பிற்று. அவனுடைய இஷ்கிலும், முஹப்பத்திலும் முகம்மது மூழ்கிவிட்டார். தாம் செய்த குற்றத்தைப் பொறுத்து ரக்ஷிக்குமாறு அவனிடத்துத் தௌபா செய்து இரந்துமன்றாடி, பின் உலக இச்சை அணுவளவாயினும் இருதயத்தில் ஊசாடா வண்ணம் இருந்து காலந்தள்ளினர்.

ஜினை விலக்கியது முற்றிற்று.

---

26-ம் அத்தியாயம்.

## மீன்களுயிர்த்தது.

—()—

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால், சுட்டுத்தின்று தீர்ந்த மீன்கள் உயிர் பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு ருவி:— சைகு உமறுல் பாறூக்கு.]

அற்புதம் என்கின்ற அரிய கிரணங்கள் விரிந்து பிரகாசிக்கும் குற்றமற்ற மாணிக்கம் போலும் சுல்தானுல் ஆரிபீன் நாயகமவர்கள் பதாயிகு நகரத்தில் இருந்து விளங்குங்காலம், ஒருநாள் தங்கள் சிஷர்களுள் பலர் புடைசூழ்ந்

து வர ஊரைவிட்டு வெளிப்பட்டு, பக்கத்தேயுள்ள அடவியை நோக்கி நடந்துபோய், அழகிய தருக்கள் நெருங்கிய ஒரு தோப்புக்குள் வளைந்தோடுகின்ற நதிக்கரையில் தங்கினார்கள். நடுவேயிருக்கும் முழுமதியை நக்ஷத்திரங்கள் சூழ்ந்திருப்பதுபோல, நாயகமவர்களைச் சூழ்ந்து சீஷர்கள் உட்காந்திருந்தார்கள். நாயகமவர்கள் நம்மிடத்து வந்திருப்பதால் இனி நமக்கு இடரில்லையென அங்குள்ள விருக்ஷங்கள் அவர்களுக்கும், அவர்களின் சீஷர்களுக்கும், குளிர்ச்சியான நிழலைக்கொடுத்து நின்றன; [illegible]ங்காற்று மரக்கொம்புகளில் அலர்ந்திருக்கும் பூங்கொத்துக்களிற் படிந்து வந்து கமழ்ந்து வீசிற்று; மலர்தோறுஞ்சென்று மதுரமான தேனையுண்ட வண்டினங்கள் இனிய கீதத்தைப்பாடின; மயில்கள் ஆநந்தங்கொண்டு தோகைகளை விரித்து நின்று ஆடின; குயில் முதலான பக்ஷிகள் மரக்கிளைகளில் இருந்து பலவேறு குரல்களோடு சத்தித்தன. இவ்வகைச் சிறப்புடன் நாயகமவர்கள் அவ்வாற்றங்கரையில் இருந்துகொண்டு, தங்கள் சீஷர்கள் என்னும் முரீதீன் களை நோக்கிப் பின்வருமாறு சொல்கின்றார்கள்:—

"என்னுடைய ஆணையாசக்கரம் மனிதர்மீதும், ஜின்கள்மீதும், மற்றுமுள்ள படைப்புக்கள் எல்லாவற்றின் மீதும் செல்லும்படி, சிறப்பும் வல்லமையுமுள்ள அல்லாகுத்தஆலா எனக்குத் தத்துவம் கொடுத்திருக்கின்றான். அவ்வாணையாசக்கரம் யுகமுடியுமளவும் நிலைபெற்றிருக்கும். இனி ஆகிறத்திலே அவன் எனக்கொரு வாழ்க்கையைத் தருவான். அவ் வாழ்க்கை வல்லமையுள்ள மஷாயிகுமார்கள் ஒலிமார்களுக்குக் கொடுத்த வாழ்க்கையில் நின்றும் அதிகமும் மேம்பாடும் உள்ளதாயிருக்கும். அதனை விவரித்து உரைப்பேனாயின் நீவிர் அறிந்துகொள்ளமாட்டீர்கள். உங்கள் இருதயங்கள் அதனைத் தாங்கமாட்டா. என்னுடைய ஸிபத்துகள் அனைத்தும் அல்லாகுத்தஆலாவுடைய ஸிபத்

துகளாயிருக்கின்றன. என்னுடைய நாமமும் அவனுடைய நாமங்களுள் உள்ளதேயாம். அவன் கட்டளையிட்டே நான் பேசுகின்றேன். அவன் கட்டளையிட்டே செய்கின்றேன். அவன் இடும் கட்டளையின்றி நான் ஒரு சொல்லையாயினும் சொல்லவில்லை; ஒரு செயலையாயினும் செய்யவில்லை. யாவனொருவன் என்னுடைய நாமத்தை சுல்தானுல் ஆரிபீன் என்னும் காரணநாமத்தோடு சேர்ந்து, உறுதியோடாயினும் அஃதின்றியாயினும் தன் நெஞ்சைநோக்கி இருபத்துநான்குதரம் ஓதுவானானால், அல்லாகுத் தஆலா தன்னுடைய முஹப்பத்தையும், மஅரிபத்தையும், அவனுக்குக் கொடுப்பான். ஒருவன் என்னுடைய நாமத்தை நாள்தோறும் வானத்தை நோக்கி மிருதியாக ஓதிவருவானானால், அவன் விரும்புவது நிறைவேறப்பெறும். அல்லாகுத் தஆலா அவன் நாடுவதைக் கைகூடுவித்து, அவனுடைய இரணத்து வாசலைத் திறப்பான். அவனுக்கு உண்டாகின்ற மனத்துயர் முழுதும் நீங்கும். சரீரநோய் தீரும். அவ்வாறு ஓதிவருபவன் எளியனாயிருந்தால், தனவந்தனாவான்; தனவந்தனாயிருந்தால், பின்னும் அவன் செல்வம் பெருகும்; நோயாளனாயிருந்தால், சுகம்பெறுவான். அக்கினிபற்றி எரிகின்றகாலத்தும், மும்முரமான சண்டமாருதம் சுழன்றுவீசுங் காலத்தும், கொடிதான பஞ்சகாலத்தும், பிரவாககாலத்தும், வாந்திபேதிமுதலான பயங்கரமுள்ள ஆபத்துக்காலத்தும் என்னுடைய நாமத்தை உச்சரித்தால், அல்லாகுத் தஆலா அதனைமாற்றி, அதற்குப்பிரதியான பலனை உண்டாக்குவான். இன்னும் என் சகோதரர்களே, நீவிர் உங்கள் காரியங்கள் கைகூடாது மனங்கலங்குவீர்களாயின், என்னுடைய நாமத்தைச் சொல்லி, என்னுடைய றப்பைக் கூப்பிடுவீர்களாக. இந்தத் துஆவை ஓதுவீர்களாக:—

يا إلهي بحرمة معشوقك سلطان سيد احمد الكبير إقضي حاجتنا*

'யா இலாஹீ பிஹுர்மத் மஃஷூகிக சுல்தான் சையி து அகுமதுல் கபீறு இக்ஸி ஹாஜதினு'

இதன் பொருள்:—

[ஆண்டவனே, உன் மஃஷூக்கான சுல்தான் சையிது அகுமதுல் கபீறுடைய ஹுர்மத்தைக்கொண்டு எங்கள் ஹாஜத்தை நிறைவேற்றியருள்] என்பதாம்.

என்னுடைய ஹபீபு உங்கள் ஹாஜத்தை நிறைவேற்று வான். ஒரு ஹபீபு தன்னுடைய மஹ்பூபுடைய நாமத்தைத் தட்டமாட்டான்"

என்று சொல்லிமுடித்து, பின்னும் பலவாறு சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது, அவ்வாற்றின் கரையோரம் பலவகையான மீன்கள் துள்ளி விழுந்து மேய்ந்துகொண்டு நின்றன. அம்மீன்களைச் சீஷர்கள் பார்த்து, இம்மீன்களைப் பிடித்துச் சுட்டுத்தின்ன வேண்டுமென்று மனதுள்ளே கருதினார்கள். அவர்கள் அவ்வாறு கருத, நாயகமவர்கள் பேசிக்கொண்டேயிருக்கின்றார்கள். அந்நேரத்தில் ஆற்றில் நீந்தித்திரிந்த மீன்கள் அநேகம் துள்ளித் துள்ளிக் கரைமீது வந்து விழுந்தன. பலவகை மீன்களும் அநேகமாய் வந்து கரையருகிற் குவிந்துவிட்டன.

இனம் இனமான மீன்கள் அளவற்றவை கரையருகே மணலின் மீது தாமாக வந்து விழுந்து குவிந்தவுடன், நாயகமவர்கள் தங்கள் சீஷர்களை நோக்கி "சகோதரர்களே, இந்த மீன்கள் தம்மை நாம் தின்னுமாறு அல்லாகுத்தஆலா இடத்து வேண்டுகின்றன" என்று பகர்ந்தார்கள். இச்சொல்லை அவர்கள்கேட்டு மிக்க ஆச்சரியமுற்று, அம்மீன்களையெடுத்துத் தீவளர்த்துச் சுடுதற்குத்தொடங்கினார்கள்.

பலவகையான பெரிய மீன்கள் அனைத்தையும் கழுவிச் சுத்தமாக்கி, கட்டைகளைப் பொறுக்கித் தீமூட்டிச் சுட்டார்கள். கொழுத்துப் பருத்த மீன்கள் சுடும் வாசனை

எங்கும் கமழ்ந்தது. எல்லா மீன்களையும் பக்குவமாகச் சுட்டுத் தாலங்களில் வைத்து, எல்லாரும் பந்தியிருந்து தின்றார்கள். மீன்களெல்லாம் தின்று தீர்ந்து, ஒவ்வொரு தாலத்திலும் ஒவ்வொரு மீனின் தலையும் வாலுமாய் மீந்திருந்தன. எல்லா மீன்களின் தலையும் வாலும் தவிர மற்றுவெல்லாம் தின்று தீர்ந்தன.

அந்நேரத்தில் அச்சீஷர்களுள் ஒருவர் எழுந்துநின்று நாயகமவர்களை நோக்கி "யா ஸையிதீ, * முதமக்கின் ஆகிய மனிதரின் ஸிபத்து என்ன?" எனக் கேட்டார். அதற்கு நாயகமவர்கள் "எல்லாப் படைப்புக்கள்மீதும் ஆணைசெலுத்தும் தத்துவம் உண்டாயிருப்பதுதான் முதமக்கின் ஆன மனிதருடைய ஸிபத்து" என்று மறுமொழிசொன்னார்கள். மறுபடியும் அவர் "அந்த மனிதர்க்கு அடையாளம் யாது?" என நாயகமவர்களைக் கேட்டார். "அந்த மனிதர்க்கு அடையாளம்: இந்தத் தாலங்களில் தின்று மீந்திருக்கும் மீன்களுடைய தலையையும் வாலையும் பார்த்து 'மீன்களாவீராக' என்று ஏவினால், எல்லாம் முன்போல மீன்களாய் விடும்" என்று நாயகமவர்கள் வதில் கூறிவிட்டு, தங்கள் மேன்மையுள்ள வலக்கரத்தை முன்னாலேயிருந்த தாலத்தில் வைத்து "ஓ! தின்று தீர்ந்த மீன்களே, அல்லாகுத் தஆலா வின் உத்தரவுகொண்டு நீவிர் முன்போல மீன்களாய், உங்கள் குடியிருப்பான நதியிற்போய்ச் சேர்வீர்களாக" என்று திருவாய்மலர்ந்து மொழிந்தார்கள். மொழிந்தவாய் மூடுதற்கு முன்னே, எல்லாத் தாலங்களிலும் மிஞ்சியிருந்த தலையும் வாலும் கூடிக்கூடி முன்போல மீன்களாய் உயிர் பெற்று, நதியில் துள்ளிப்பாய்ந்து விழுந்து நீந்திச் சென்றன.

---

* முதமக்கின்-- அல்லாகுத் தஆலா வின்பக்கத்து நிலைப்பாடானவர்.

தின்று மிஞ்சிய தலைகளும் வால்களும் மீன்களாய் உயிர்பெற்றுத் துள்ளி நதியிற் பாய்ந்துசென்றதைக் கண்கூடாய்ப் பார்த்திருந்த எல்லாரும் புதுமையுற்று, நாயகமவர்களின் அற்புதத்தையும் தகுதியையும் வியந்து கொண்டாடினார்கள். பின்பு நாயகமவர்கள் அந் நதிக்கரையிலிருந்து புறப்பட்டு, சிஷர்களுடன் ஊர்வந்து சேர்ந்தார்கள்.

மீன்களுயிர்த்தது
முற்றிற்று.

---

## 27 - ம் அந்தியாயம்.

## தாரா வுயிர்த்தது

(*)

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால், தின்று தீர்ந்த தாரா உயிர்பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— * அப்துற்றஹீம்.]

சைகு றலியல்லாகு அன்கு அவர்கள் ஒருநாள் தங்கள் சகோதரர் குமாரர் அப்துற்றஹீம் என்பவரோடு தனித்து உட்கார்ந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு மனிதர் ஆகாயத்தில் பறவைபோலப் பறந்து வந்து இறங்கி, நாயகமவர்கள் சமுகத்தில் உட்கார்ந்தார். நாயகமவர்கள் அவரை நோக்கி "குணதிசை யாகிய மஷ்ரிகு தேசத்திற்கு ஒரு முனை போன்றவரே, உமக்குச் சோபனம் உண்டாவதாக" என்று முகமலர்ந்து கூறினார்கள். அந்த மனிதர் இதைக்கேட்டு நாயகமவர்களை நோக்கி "யா சையிதீ, நான் இருபது தினமாக எவ்வித உணவும் புசிக்காமல் பட்டினிகிடக்கின்றேன். இதற்கிடையில் ஒரு சிறங்கைச் சோராயினும் குடித்தறியேன். இப்போது தாங்கள் எனக்கு விருப்பமானதை உணவாக்கித் தரல்வேண்டும்"

---

* அப்துற்றஹீம்-- நாயகமவர்களின் சகோதரர் குமாரர்.

என்றார். நாயகமவர்கள் அவரை நோக்கி "உமக்கு எதன் மீது விருப்பம்?" எனக் கேட்டார்கள். உடனே அவர் நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தார்; அப்போது, கொழுத்துப் பருத்த தாராக்கள் ஐந்து ஆகாயத்திற் பறந்து போய்க்கொண்டிருந்தன. அவற்றை அவ்வர் நாயகமவர்களுக்குக் காட்டி "இவ்வைந்து தாராக்களுள் ஒன்றைத் தின்ன விரும்புகின்றேன். அவ்வொரு தாராவைச் சுட்டு, அதனோடு இரண்டு ரொட்டிகளும், குளிர்ந்த நீரும் தரல் வேண்டும்" என்று சொன்னார்.

நாயகமவர்கள் ஆகாயத்திற் பறந்துபோகின்ற ஐந்து தாராக்களுள் ஒரு தாராவை விளித்து "ஏ, தாரா! நீ அங்கேயே அறுத்துச் சுத்தமாக்கிச் சுடப்பட்டு இங்கு இறங்கி, இவருடைய விருப்பத்தை நிறைவேற்று" எனக் கட்டளை யிட்டார்கள். இக்கட்டளை பிறந்தவுடனே அவ்வைந்து தாராக்களுள் ஒன்று அங்கேயே பக்குவமாகச் சுடப்பட்டு, கொழுப்புமணங் கமழ மிக்க சுவையோடு இறங்கிற்று. பின் நாயகமவர்கள் தங்கள் கையால் இரண்டு கற்களையெடுத்து அச் சுட்ட தாராக்கறியுடன் அவர்முன் வைத்தார்கள். அவ்விரு கற்களும் இவ்வுலகத்து இல்லாத சுவையும் மணமும் உள்ள இரண்டுரொட்டிகளா யிருந்தன. பின்னும் நாயகமவர்கள் தங்கள் வலக்கரத்தை ஆகாயத்தில் நீட்டிக் குளிர்ச்சியான சுத்தநீர் நிரம்பிய கரகம் ஒன்றையெடுத்து அவர் முன்னே வைத்து "சிறப்பானவரே, அவற்றைத் தின்று, இந்நீரைப் பருகுவீராக" என உத்தரவு செய்தார்கள்.

அந்தமனிதர் நாயகமவர்கள் உத்தரவு செய்தவுடன் சுட்டதாராவின் என்புதவிர மற்று இறைச்சி முழுமையையும், அவ்விரண்டு ரொட்டியையும் வயிறு நிரம்பத் தின்று அக்கரக நீர் அவ்வளவையும் குடித்துவிட்டு எழுந்து, முன் வந்தவாறே ஆகாயமார்க்கமாய்ப் பறவைபோலப் பறந்து போய்விட்டார்.

அவர் போனபின், அங்கே தின்று கழித்துக்கிடந்த தாராவின் என்புகள் அவ்வளவையும் நாயகமவர்கள் பொறுக்கி வலக்கரத்தில் வைத்துக்கொண்டு, அவற்றை நோக்கி "பிரிந்து உலைந்த உறுப்புக்களே, முரிந்து சிதைந்த முட்களே, முன்போல ஒன்ருய்ச்சேர்ந்து தாராவாய், بسم الله الرحمن الرحيم 'பிஸ்மில்லா ஹிற்றஹ்மா னிற்றஹீம்' ஆகாயத்தே பறந்து செல்க" என்று திருவாய்மலர்ந்து சொன்னார்கள். சொன்னவாய் மூடுதற்கு முன்னே கையிலிருந்த என்புகளெல்லாம் ஒன்ருய்க்கூடித் தோலும் உரோமங்களும் உண்டாய் இறகு முளைத்து உயிர்பெற்று, கையிலிருந்து பறந்து ஆகாயத்திற்சென்றது. இப்புதுமையைக் கேட்டவரெல்லாம் நாயகமவர்களின் மகிமைக்காக அல்லாகுத் தஆலா வுக்குத் துதிசெலுத்தினர்கள்.

தாராவுயிர்த்தது

முற்றிற்று.

---

## 28 - ம் அத்தியாயம்.

## * யாட்டினமுயிர்த்தது.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால், தின்று தீர்ந்த நானூறு ஆடுகள் உயிர்பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி கள்:— சைகு ஹமீதுத் தீனிபுனு இஸ்மாயீலுல் ஜபறாத்தியும், சைகு பஹாவுத்தீனுல் பதாயிகியும், சைகு யஉகூபிபுனு கற்றஹும், சைகு அபுல்பத்ஹிபுனு கனயமும்.]

---

* யாட்டினம்:— ஆட்டினம்.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீர றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்திலிருந்து பரதேச சஞ்சாரஞ்செய்ய நாடிப் புறப்பட்டார்கள். அவர்களுடன் அவர்களுடைய முரீதீன் களும், கலீபா க்களும், ஆஷிகீன் களும், புகறு க்களும் பதினாயிரம்பேர்கள் புறப்பட்டார்கள். நாயகமவர்கள் பதினாயிரம்பேர் சூழப் புறப்பட்டு இருக்கு தேசம் முழுமையும் சுற்றினார்கள். பெருஞ்சேனையொன்று செல்வதுபோல எங்குஞ்சென்று, கடைசியாய் இருக்கு தேசத்து அடவியிலுள்ள ஒரு ஓடைக் கரையில் கூடாரங்கள் இட்டுத் தங்கினார்கள்.

நாயகமவர்கள் பெருஞ்சேனையோடு அவ்வோடைக் கரையிற் கூடாரமிட்டு, ஐந்துதினங்கள்வரையும் தங்கியிருந்தார்கள். அவ் வைந்துதினங்களும் தின்னுதற்கு எவ்வகை ஆகாரமும் அவர்களுக்கு அகப்படவில்லை. எல்லாரும் பசிபொறுத்து இருக்க, அவர்களுள் புகறு க்கள் ஒரு கூட்டத்தார் ஆகாரந் தேடுதற்காகக் கூடார ஸ்தலத்தை விட்டு வெளிப்பட்டு, பக்கத்து உள்ள இடங்களிற் சுற்றித்திரிந்து பார்த்துக்கொண்டு வந்தார்கள். அருகினில், அங்கொரு பக்கத்தே இடையர்பலர் நின்று பெருந்திரளான ஆடுகளை மேய்ப்பது அவர்கள் கண்ணுக்குப் புலப்பட்டது.

ஆட்டுமந்தைகள் பரந்துநின்று மேய்வதைக் கண்டவுடன் புகறு க்கள் அனைவரும் போய்விழுந்து. ஆளுக்கொரு ஆடாகப் பிடித்து, நானூறு ஆடுகளை அறுத்து உரித்து, பலபக்கத்தும் தீமூட்டிச் சுட்டு, பசிதீரத் தின்றார்கள். பெருங்கூட்டத்தார் ஆடுகள்மீது வந்து விழுந்தபோதே இடையர்கள் அஞ்சி வெருக்கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். புகறு க்கள் கேட்பாரற்று ஆடுகளைச்சுட்டு வயிறு நிரம்பத் தின்றுவிட்டு, அந் நானூறு தலைகளையும் ஒரு பக்கத்தே குவித்துவைத்தார்கள். அவற்று என்புகளும்,

தோல்களும், தின்ற தின்ற இடத்துப் பரந்துகிடந்தன. தலைகள் மாத்திரம் நானூறும் ஒரு குவியலாய் ஓரேயிடத்தில் குவிக்கப்பட்டிருந்தன.

இவர்கள் இங்கே இவ்வாறு செய்துகொண்டிருக்கையில், அஞ்சி வெருண்டு ஓடிய இடையர்கள்: ஐயவோ! இஃதென்ன அநியாயம்! கேட்பார் இல்லையோ! ஆடுமேய்த்துச் சீவிக்கும் ஏழை இடையரான எங்கள் ஆடுகளையெல்லாம் இவர்கள் அக்கிரமித்துப்பிடித்து அறுத்துத் தின்கின்றார்களே! நாங்கள் யாதுசெய்வோம்! அமீர் இடத்தாயினுஞ் சென்று முறையிடுவோம் எனக் கூக்குரல் இட்டுக்கொண்டு, இருக்குடைய அமீரிடஞ் சென்று முறையிட்டார்கள்.

இடையர்கள் அமீரின் சமுகத்து நின்று: நாங்கள் ஆடுமேய்த்துச் சீவிக்கின்ற எளிய இடையர்கள், யாவரோ ஒரு கூட்டத்தார்வந்து எங்கள் ஆடுகளையெல்லாம் கவர்ந்து, நானூறு ஆடுகள்வரையும் அறுத்துத் தீமூட்டிச் சுட்டுத் தின்றுவிட்டார்கள். அவ்வாட்டுத் தலைகளை ஓரிடத்திற் குவித்து வைத்திருக்கின்றார்கள். நாங்கள் என்செய்வோம்! அஞ்சி வெருண்டு ஓடிவந்துவிட்டோம் என்று அழுது முறையிட்டபோது, இதனை அமீர் கேட்டுச் சினங்கொண்டு, தம் படைத்தலைவன் ஒருவனை நோக்கி: இவ்விடையர்களின் ஆடுகளை வலோற்காரமாய்ப் பிடித்து அறுத்துத் தின்றவர்யாவர்? அவர்கள் யாவராயிருப்பினும், அவர்களால் யாதுநேரிடினும் அஞ்சாது எதிர்சென்று அடர்ந்து தாக்கி, எல்லாரையும் சிறையாக்கி இங்கே கொண்டுவருக எனக்கட்டளையிட்டார்.

அமீரின் கட்டளை பிறந்தவுடன் அச் சேனைத்தலைவன் தன் சேனையை ஆயத்தம் பண்ணினன். சேனைவீரர் வாள், வேல், ஈட்டி, தண்டம், வில், அம்பு முதலிய அஸ்திர சஸ்திரங்களான ஆயுதங்கள் அணிந்து, போர்க்குதிரைகள்மீது எறிப் புறப்பட்டார்கள். கொடிகுடையாதி விருதுகள் பி

டித்துப் படைமுரசு முழங்க இடையர் காட்டும் அடவி நோக்கிச் சேனை சென்றது.

இருக்குடைய அமீரின் சேனை அடவிநோக்கிச்சென்று, நாயகமவர்களின் புகுரு க்கள் அங்கொருபக்கத்தே உல்லாசமாய் உலாத்திநிற்பதைக் கண்டது. கண்டவுடன் சேனைவீரர் எல்லாரும் புகுரு க்கள்மீது விழுந்து அடர்ந்து தாக்க எத்தனித்தார்கள். ஆயுதபாணிகளாயுள்ள குதிரைவீரர் ஒரு கூட்டத்தார் போர்த்தொழில் செய்தற்கு யீத்தனமாய்த் தங்கள்மீது வந்து விழுந்ததை புகுரு க்கள் கண்டு, தாங்கள் போர்ப்பயிற்சியும், ஆயுதங்களும் இல்லாதவர்களாதலால், அவர்களுக்கு அஞ்சி வெருண்டு சத்தம் இட்டார்கள்.

நாயகமவர்கள் வந்து தங்களைக் காப்பார்கள் என்னும் எண்ணத்தோடு அவர்கள் அடைக்கலங்கருதிப் பெரும் அமளியாக ஓலமிட்டபோது, தனிக் கூடாரத்தில் தவநிலைமையில் இருந்த நாயகமவர்கள் காதில் அவ்வோலமிட்ட அமளிகேட்டது. இது நம் புகுரு க்களின் சத்தம்; அவர்களுக்கு என்னவோ ஆபத்து நேர்ந்ததுபோலும்! என நாயகமவர்கள் எண்ணி, கூடாரத்தைவிட்டு விரைவாய் வெளிப்பட்டு, சத்தங் கேட்கும் திசைநோக்கிவந்து பார்த்தார்கள்; தங்கள் புகுரு க்களை ஒரு வகுப்புப்படைவீரர் வளைந்து நின்று தாக்குவதை அவர்கள் கண் கண்டது.

நாயகமவர்கள் அதனைக் கண்டவுடன் அவர்களைநெருங்கிப் போய் "சகோதரர்களே, என்னுடைய புகுரு க்களை நீவிர் என் இவ்வாறு தாக்குகின்றீர்கள்? இவ்விதத் தீங்கு செய்யாதீர்கள். அவர்களை விட்டுவிடுவீர்களாக. உங்கள் சினத்தைத் தணிப்பீர்களாக" என்று பரிந்துகூறினர்கள். இதனைச் சேனுபதிகேட்டு நாயகமவர்களை நோக்கி "இவ்வேழை இடையர்களின் நானூறு ஆடுகளை இவர்கள் கிரமமின்றிக் கவர்ந்து அறுத்துத் தின்றுவிட்டார்களே! அருமை

யாக வளர்த்துப் பாதுகாத்துவந்த இடையர்மனம் எரிய நானூறு தலைகளையும் அதோ குவித்திருக்கின்றார்கள் பாருங்கள். இவ்வாறு செய்யலாமா!" எனப் பிரதி கூறினான்.

அவன் சொன்னதை நாயகமவர்கள் கேட்டு அவ்வாட்டுத்தலைக் குவியலையும் பார்த்துக்கொண்டு, அச்சேனாபதியைப்பார்த்து "நீவிர் வருத்தமுறாதீர்கள். இவர்கள் அறுத்துத்தின்ற ஆடுகள் அத்தனையையும் இத் தலைக்கணக்குப்படி நான் தந்துவிடுகின்றேன்" என்று சொல்லிவிட்டு, அத் தலைக்குவைப் பக்கத்துப்போய் நின்று, அவற்றை நோக்கி "தலைகளே, உங்களைப் படைத்தவன் உத்தரவு கொண்டு ஆடுகளாய் உயிர்பெற்று எழும்பக்கடவீர்கள்" என அமிர்தஞ் சிந்தினதுபோல மொழிந்தார்கள். நாயகமவர்களின் திருவாய்மொழி பிறந்தவுடன், அங்குக் குவித்திருந்த நானூறு தலைகளும் ஒவ்வொருதலை ஒவ்வொரு பழைய ஆடாக உருப்பெற்று உயிர்த்து எழுந்து, முந்தி எவ்வெவ்வாடு எவ்வெவ்விடத்து எவ்வெவ்விதம் எவ்வெச் செடியில் மேய்ந்துநின்றனவோ அவ்விதமே சென்று மேய்ந்தது. தலைகளாய்க் குவிந்திருந்த நானூறும் ஆடுகளாய்ப் பண்டுபோல மேயக்கண்ட சேனைவீரர்கள் புதுமையுற்று அஞ்சி, நாயகமவர்களிடத்து மன்னிப்புக்கேட்டு நின்றார்கள். நாயகமவர்கள் அவர்களுக்கு அபயங்கொடுத்து அவர்களை அங்கிருந்து அநுப்பிவிட்டு, தங்கள் புகஹ்க்களை அழைத்துக்கொண்டு கூடாரத்திற்குச் சென்றார்கள்.

அஞ்சி வெருண்ட போர்வீரர்கள் ஊர்க்குட்சென்று, அடவியில் நிகழ்ந்த வரலாற்றை அமீரிடம் சொல்லிக்காட்டினார்கள். அறுத்துத் தின்று கழித்து வெறுமையாய்க் கிடந்த நானூறுதலைகளும் ஆடுகளாயின என்னும் அற்புதத்தைக்கேட்ட அமீர் ஆச்சரியமும் அச்சமும் அடைந்து, அந் நாயகமவர்களின் திருவடிகளை நரம் முடிமீது சுமக்கவேண்டும் என்று கருதினார். புகஹ்க்கள் ஆடுகளை அ

றுத்துத் தின்றது பசியால் என்பதை அறிந்தவராதலால், அவர்களுக்கு ஆகாரம் அநுப்பவேண்டும் எனவும் எண்ணினர். அன்றைத்தினம் உண்டான ஒரு விசேஷத்தால் அவர் மாளிகையில் ஆகாரங்கள் அதிகமாய் மிஞ்சியிருந்தன. எழுநூறு மணங்கு ஹல்வா வும் இருந்தது. உடனே அவ்வாகாரங்களையும் ஹல்வா வையும் தம் தொண்டர் பலர்தலைகள்மீது சுமத்தி உரிமையாளர் சிலரை உடன்சேர்த்து, நாயகமவர்கள் சமுகத்திற்கு வரிசையநுப்பினர்.

அமீர் அவற்றை முந்தி அநுப்பிவிட்டு, அதன்பின்னர்த் தம் பரிவாரத்தாரோடு தாமும் புறப்பட்டு நாயகமவர்கள் சமுகத்தில்வந்து, தாழ்ந்து ஸலாம் பகர்ந்து, தாம் செய்த குற்றத்தை நினைத்துத் தலைசாய்த்துக் கைகட்டிக் கண்ணீர் சிந்தி அழுதுகொண்டு அதிகநேரம் வரையும் நின்றார். அதுவரையும் அவரை நாயகமவர்கள் ஏறிட்டுப் பார்க்கவில்லை. நெடுநேரம் நின்ற அமீர் பின்பு வாய்திறந்து "யா சையிதீ, தமியேன் தங்கள் மகத்துவத்தை அறிந்திருந்தும், செய்யாத கருமத்தைச் செய்தற்கு உடம்பட்டேன். அதனைத் தாங்கள் பொறுத்துக்கொண்டு, எனக்குத் தௌபா சொல்லித் தந்து, முரீதா க்கல் வேண்டும்" என்று முறையிட்டு அழுதார்.

இருக்குடைய அமீர் தங்கள் சமுகத்தே அடிமைபோல நின்று அழக்கண்ட நாயகமவர்கள் நிமிர்ந்து அவரைக் கருணைக்கண்களாற் பார்த்து, அவர்க்கு நன்மொழிகொடுத்து இருக்கச் செய்து, முரீதா க்கி, அப்போது உணர்த்த வேண்டுமான ரகசியங்களையெல்லாம் உணர்த்தி, தங்கள் அகுமதிய்யா என்னும் தரீக்கிற் சேர்த்து முரீதீன் களுள் ஒருவரென ஆக்கினார்கள்.

பின்பு, அமீர் அநுப்பிய ஆகாரங்களைத் தங்கள் முன் கொணரும்படி நாயகமவர்கள் கட்டளையிட்டார்கள். எல்லா ஆகாரமும் ஹல்வாவும் கொணர்ந்து வைக்கப்பட்டன.

அவற்றை நாயகமவர்கள் கூறுசெய்து, தங்கள் முரீதீன்கள், கலீபாக்கள், புகரூக்கள் முதலாயுள்ள பதினாயிரம் பேர்களுக்கும், அநுப்பிய அமீருக்கும், அவரோடுவந்த பரிவாரத்தார்க்கும் பகிர்ந்து கொடுத்தார்கள். அவ்வாகாரம் பலர் புசிக்கப் போதுமானதே அன்றி ஆயிரக்கணக்கான பேர்கள் புசிக்கப் போதாததாயிருந்தும், நாயகமவர்களின் மகிமையின் பொருட்டால், பதினாயிரம் பேர்களும் பிறரும் வயிறாரப் புசிக்கும் அளவுக்குப் பெருகியிருந்தது. எல்லாரும் வயிறு நிரம்பப் புசித்துக் களிகூர்ந்தார்கள்.

அதன் பிறகு அமீர் ஊர் போவதற்கு உத்தரவு கேட்டார். நாயகமவர்கள் அவரைப் பரிவாரத்தோடு அநுப்பிவிட்டு, தாங்களும் தங்கள் கூட்டத்தாரோடு அடவியை விட்டு எழுந்து, பதாயிகு நகரம் வந்து சேர்ந்தார்கள்.

யாட்டின முயிர்த்தது
முற்றிற்று.

---

29-ம் அத்தியாயம்.

## அகுமதுயிர்த்தது.

—✳—

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபிறு றலியல்லாகு அன்கு அவர்களால், இறந்துபோன அகுமது என்னும் இறவர் உயிர்பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— இபுறஹீமுல் அகுறபு.]

சுல்தானுல் ஆரிபீன் நாயகமவர்கள் ஒரு தினம் தங்கள் சபையினிடத்து எண்ணிறந்த பெரியோர்கள் புடைசூழ வீற்றிருக்கும்போது, தங்கள் முரீதீன்களுள் இதுரீசு என்பவரை நோக்கி "நீர் உமது வீட்டிற்குப்போய், காய்ச்

சிய பால் இருந்தால் கொண்டுவாரும்'' என்று ஏவினர்கள். நாயகமவர்கள் பருகுவதற்குச் சில சமயங்களில் பால் கொணர்ந்து கொடுப்பது அவர்க்கு வழக்கம். அவ்வழக்கப்படி ஏவினவுடன் இதுரீசு சபையை விட்டு எழுந்து விரைவாகத் தம் வீடு நோக்கிச் சென்றார்.

இதுரீசு தம் வீட்டுவாசலிற் போகும்போது, அவர் வீட்டினுள் அழுகுரல் கேட்டது. அவர் விரைந்து உள்ளே போய்ப்பார்க்க, சற்றேறக்குறைய பத்துவயதுள்ள அகும்து என்னும் தம் மகன் மௌத்தா யிருக்கக்கண்டார். கண்டு மனக்கலக்கம் உற்று, அல்லாகுத் தஆலா வின் கற்பனைக்கு நாம் யாது செய்தல் கூடும்! அதனைப் பொருந்திக்கொள்வதே நம் கடமை என்று கலங்கியமனதைத் தேற்றிக்கொண்டு, அங்கு வந்திருப்பவர்களோடு நின்று மகனை அடக்கஞ் செய்ய ஆரம்பித்தார். மகன் மௌத்தா யிருக்கக்கணடபோதே தாம் பால்கொண்டு போகவந்தது மறந்துபோயிற்று. பின்பு மகனைக் குளிப்பாட்டிக் கபன் இட்டுச் செய்யவேண்டுவனவெல்லாம் செய்து முடித்து, மஞ்சிலுள் தூக்கிவைக்கப்போகும்போது தாம்வந்த காரியம் ஞாபகம் வந்தது.

பால் கொண்டுபோகவந்தது ஞாபகம் வரவே இதுரீசு திடுக்குற்று, நம் தேசிகர் இட்ட கட்டளை பிரதானமேயன்றி, இம் மையத்து அடக்குதல் நமக்குப் பிரதானம் அன்று. அக் கட்டளையை முடித்துவிட்டுப் பின்வந்து இதனைச் செய்வோம் என எண்ணி, ஜனஜா வை அப்படியேவைத்து வீட்டிலெல்லார்க்குந்தெரிவித்துக்கொண்டு, வீட்டில் இருந்த பாலை ஒரு பாத்திரத்தில் வார்த்து எடுத்துக் கொண்டு விரைவாய்வந்து, நாயகமவர்கள் சமுகத்தே வைத்துக் கைகட்டிநின்றார். அப்போது நாயகமவர்கள் அவரை நோக்கி "நீர்போய் அதிக நேரமாயிற்றே? தாமதப்பட்ட காரணம் என்ன?'' என்று கேட்டார்கள். இதுரீசு அழுதகண்ணினராய் நாயகமவர்களை நோக்கி "யா சையிதீ, தாங்கள் இட்

ட கட்டளைப்படி பால் கொண்டுவர வீட்டிற்கு நான் போனபோது, என்குமாரன் மௌத்தாய்க்கிடக்கக் கண்டேன். அத் துயரத்தால் தங்கள் ஏவலை மறந்து, அவனை அடக்குவதற்குச் செய்யும் சடங்குகளெல்லாம் செய்துமுடித்து, ஜனாஜாவை மஞ்சில் தூக்கிவைக்கப் போகும்போது தங்கள் பணிவிடை என்மனதில் உதித்தது. அவ்வேலையை அப்படியே நிறுத்திவிட்டுப் பாலையெடுத்துக்கொண்டு தங்கள் சமுகத்தே வந்துவிட்டேன். என் பாலகனுடைய ஜனாஜா குளிப்பாட்டிக் கபனிட்டபடியே வீட்டில் இருக்கின்றது. இதுதான் தாமதப்பட்ட காரணம்" என்று மறுமொழி சொன்னார்.

இதுரீசு சொன்ன இச் சங்கதியைக் கேட்டபோது, நாயகமவர்களுக்குக் கடுமையான கோபம் உண்டாயிற்று. கண்கள் இரண்டும் சிவந்தன. இக் கோபம் வேறே எவர் மீதும் உண்டானது அன்று; மலக்கல் மௌத்து என்னும் இஜ்றயீல் அலைகிஸ்ஸலாமவர்கள்மீதே உண்டாயிற்று. அக் கோபத்தோடே நாயகமவர்கள் அவர்களைக் கூப்பிட்டுச் சத்தம் இட்டுக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"ஓ! மலக்கல்மௌத்தே, நீர் என் முரீதீன்களின் சீவனை என்னுடைய அநுமதியின்றி வாங்குகின்றீரா! இஃதென்ன துணிகரம்! என்னுடைய ஆண்டவன் எனக்குத் தந்துள்ள வார்த்தைப்பாட்டை நீர் அறியீர்போலும்! அவன் தந்த அவ் வார்த்தைப்பாட்டைக் கேட்பீராக. 'யா கௌதுல் அகுலம் சுல்தானுல் ஆரிபீனே, அகுமதுல் [illegible]' உம்மிடத்தாயினும், உம்முடைய சந்தானத்தாரிடத்தாயினும், முரீதுகளிடத்தாயினும் ஒருவன் முரீதானானாயின், அவனுக்கு கியாம நாள் வரையும் என்னுடைய முஹப்பத்து மஅரிபத்துடைய வாசல்களை நான் திறந்துவைப்பேன். அவனுடைய இயல்பை மாற்றுதற்கு எவ்வகை ஒலிக்கும் இயலாது. இன்னும், உமக்கும், உம் சந்ததிகளுக்கும்,

உமது முரீதுகளுக்கும், நான் ஒருபோதும் கவடம் செய்யமாட்டேன். இவையன்றி, உம்முடைய முரீதுகளின் ஆவியை எமான் இல்லாமலும், உமது அநுமதியில்லாமலும் வாங்குவிக்க மாட்டேன்' என மிஅருஜுடைய இரவில் வார்த்தைப்பாடு தந்திருக்கின்றான். ஆதலால், மலக்கல் மௌத்தே, நீர் என் முரீதாகிய இதுரீசுடைய மகனுடைய சீவனை என் அநுமதியின்றி எவ்வாறு கைப்பற்றுவீர்!''

என இவ்வாறு அகங்காரத்தோடே பெருங்குரலிட்டுக் கூறி, பின் அல்லாகுத் தஆலாவைக் கூப்பிட்டுக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

“யா அல்லா! நான் சொன்ன இவ்வார்த்தைப்பாடுகள் எனக்கு நீ கொடுத்தவையா! அல்லவா! உன்னுடைய முஹிப்பீன்களுக்கு நீ கொடுத்த வார்த்தைப்பாட்டை முரிக்கப் பார்க்கின்றாயா? அப்படி நீ முரிப்பாயாயின், நாங்களும் உனக்கு வார்த்தைப்பாடு கொடுத்துத்தான் இருக்கின்றோம்!''

என இவ்வளவுஞ்சொல்லி வாயை மூடிக்கொண்டு, பின்னொன்றும் பேசாது தலைகுனிந்து இருந்தார்கள். அந்த நேரத்தில் மலக்கல் மௌத்து அலைகிஸ்ஸலாமவர்கள் மிக முதிர்ந்தவயதுள்ள மனித வடிவுடன் நாயகமவர்கள்முன் தோற்றரவாய்வந்து தாழ்மையோடுநின்று, பின்வருமாறு சொல்கின்றார்கள்:—

“யா சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு, நான் மலக்கல் மௌத்து. அல்லாகுத்த ஆலா இப்போது என்னைத் தங்கள் சமூகத்துக்கு வரும்படி அநுப்பினான். அவன் ‘மலக்கல் மௌத்தே, என்னுடைய சுல்தானுல் மஉஷூகு உம் மீது கோபமாயிருக்கின்றார். நீர் அவரிடஞ் சென்று மன்னிப்புப் பெற்றுக்கொள்வீராக. பின்னும் நீர் அவர்க்கு, என்னை உம்மிடத்து அல்லாகுத்தஆலா தான் அநுப்பினான் என்றும், உமது பிரியம்போலச் செய்துகொள்

ளச் சொன்னான் என்றும் சொல்வீராக. இன்னும், இப்போது மேளத்தான அகுமதிபுனு இதுரீசிபுனு முகம்மதிபுனு யஉகூபிபுனு அகுமது உடைய பொருட்டால், இனி இவ்வாறு செய்யப்படமாட்டாது என்றும் அவர்க்குச் சொல்வீராக. அன்றியும், இனி கியாம நாள்வரையும் உமக்கும் உம்முடைய சந்ததிகளுக்கும் உம்முடைய முரீதுகளுக்கும் நான் ஒரு வஞ்சகமும் செய்யமாட்டேன் என்றும், இது சத்தியம் என்றும், மிஅறுஜில் நான் தந்த வார்த்தைப்படி நிசந்தான் என்றும் சொன்னதாகச் சொல்வீராக. என் ஜலால் ஜமால் உடைய வல்லமையிற் சத்தியமாக அவரை என்னோடு பேசவும், சிரிக்கவும், என்னைப்பொருந்திக்கொள்ளவும் சொல்வீராக. அன்றியும், அவருடைய காலமளவும் அவரை நான் பொருந்தியிருக்கின்றேன் என்றும், அவர்மீது ஆசைவைத்திருக்கின்றேன் என்றும் அவர்க்குத் தெரிவிப்பீராக' என்று தங்களிடம் சொல்லச் சொல்லி என்னை ஏவினான். இதற்காகவே தங்கள் சமுகத்திற்கு நான் வந்தேன்"

என்று சொன்னபோது, நாயகமவர்கள் முகம் மலாச் சிரித்துக்கொண்டு நிமிர்ந்து, பணிந்த மொழியாக "யா அல்லா! உன்னுடைய ஜலால் ஜமால் கள் மீது சத்தியமாக உன்னை நான் எக்காலத்தும் பொருந்தியேயிருக்கின்றேன். நீயும் அவ்வாறு என்னைப் பொருந்திக்கொள்வாயாக" என்று சொல்லிவிட்டு; மலக்கல் மேளத்தை நோக்கி "இனி என் அநுமதியின்றி என்னைச் சேர்ந்தோருடைய சிவனைக் கைப்பற்றுதீர்" எனக் கட்டளையிட்டார்கள். அதற்கு அவர்கள் பொருத்தமாய் நிற்கவே, பின் அவர்களைப் போகுமாறு அநுப்பிவிட்டார்கள். மலக்கல்மேளத்து அலைகிஸ்ஸலா மவர்கள் மறைந்துபோனார்கள்.

இங்கு இவ்வாறு நிகழும்போது இதுரீசுடைய வீட்டில் இறந்த அகுமது என்பவரைப் பெற்ற தாய் தம் பிள்

ளையின் குளிப்பாட்டிக் கபனிட்டிருக்கும் ஜனாஜா வின் பக்கத்துவிழுந்து கீழ்வருமாறுபுலம்பி அழுகின்றார் :—

### கொச்சகக் கலிப்பாக்கள்.

53. * மின்னம் புயலுள் விளங்குந் தகவாகக்
கன்னங் கரிய கடியார் நெடுங்குழலும்
பொன்னம் பணியும் புரண்டு புரண்டசைய
அன்னம் பொரு நடையா ராய்மயில்போல் வீழ்ந்தழுதார்.

55. ஆளாய் வரும்விடலாயன்று யருமந்த
காளா யகுமதெனுங் கண்ணேயெங் கண்மணியே
தோளார் வரையுனது தந்தை துணையிழப்ப
மீளாத் துயரில் விடுத்தின் றகன்றனையே.

56. தேனே யமுதே தெவிட்டாத வெங்கள் குலக்
கோனே யிருவா னரிய குலக்கொழுந்தே
ஊனே யுருகி யுயிரோடு மென்புருகி
யானே யிருந்திடைவேன் செய்வதே யாமகனே.

57. தந்தையோ டன்னை தவிராத் துயருழப்ப
இந்தையே யன்று யிருந்தா யிருந்தகின்றாய்
எந்தையே யெந்தாயே யெங்கள் கலிதீர்ப்ப
வந்தையே வந்தும் மடிந்தாய் மனோமணியே.

63. முன்னோர் புலிகிடந்து போன முழைஞ்சனைய
என்னோர் வயிரங் கிடியும் விழுந்ததெனப்
பின்னோர் பொழுதும் பிரியாய் பிரிந்தனையால்
இன்னோர் தரமீள்வ தில்லையே யென்றழுதார்.

இவ்வாறு புலம்பி அழுது கொண்டிருக்கின்றார். இங்கே நாயகமவர்கள் தங்கள் சபையினிடத்து இருந்து மலக்குல் மௌத்து அலைகிஸ்ஸலா மவர்களை அநுப்பிவிட்டு, சற்றுநேரமளவும் தலைகுனிந்து இருந்தார்கள். இருந்து பின்நிமிர்ந்து, இதுரீசு டைய வீட்டுப்பக்கமாக முகந்திரும்பி இரண்டுகைகளையும் நீட்டிக்கொண்டு திருவாய்மலர்ந்து

* இச் செய்யுட்கள் ஐந்தும் ஆரிபு நாயகம் அகுமதுயிர்த்த படலத்துள்ளவை.

"ஓ! அகுமதே, உன் படுக்கையில் நின்று எழுந்திரு" எனப் பெருந் தொனியோடு சொன்னார்கள்.

நாயகமவர்கள் தங்கள் சபையிடத்தில் இருந்து இவ்வாறு கூறவே, அங்கே இதுரீசுடைய வீட்டில் பக்கத்தே தாய் இருந்து புலம்பி அழ மையத் தாய்க்கிடந்த அகுமது தூக்கந்தெளிந்து எழுந்திருப்பது போல உயிர்பெற்று இட்ட கபனோடே யெழுந்து, தாயைநோக்கிச் சில வார்த்தைகள் சொல்லிவிட்டு வீட்டில் நின்று வெளிப்பட்டு, நேரே நாயகமவர்களின் சபைக்குவந்து, அவர்களுக்கு அடிபணிந்து கைகட்டி நின்றார். இறந்த சிறுவர் இட்ட கபனோடு எழுந்துவந்து நிற்பதைக் கண்ட சபையார் எல்லாரும் நடுக்கமெய்தி, மிக வியப்படைந்தார்கள்.

நாயகமவர்கள் யாதும் பேசாது இதுரீசை நோக்கி "ஓ! இதுரீசே, இறந்துபோன உம்முடைய மகன் உயிரோடே எழுந்துவந்து நமக்கு முன்னே நிற்பதைப் பார்த்தீரா! இனி வருந்தாதீர். உமது மகனைக் கைபிடித்து அழைத்துக்கொண்டு மனைக்குப் போவீராக" என்று கூறிக் கட்டளை யிட்டார்கள். மகனை மாளக்கொடுத்து மறுகிநின்ற இதுரீசு ஆநந்தாச்சரியம் அடைந்து நாயகமவர்களைப் புகழ்ந்து பணிந்து, மகனை அழைத்துக்கொண்டு மனைக்குச் சென்றார்.

அப்போது மனையில் எல்லாரும் புதுமையில் திகைத்திருந்தார்கள். இதுரீசு தம் மனைவியை நோக்கி: இங்கே நிகழ்ந்த வரலாறு என்ன? என்று கேட்டார். மனைவி தம் மணவாளரை நோக்கி "நாயகீர், நம் புத்திரரைத் தாங்கள் கபனிட்டு வைத்துச் சென்றபின், நான் பக்கத்தே அழுது கொண்டிருந்தேன். அந்நேரத்தில் நமது நாயகம் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் சிறப்பான இரண்டு கரங்களும்வந்து நம் மகனுடைய இரண்டு கன்னங்களையும் தொட்டன. தொட்ட

போது 'அகுமதே, உன் படுக்கையில் நின்று எழுந்திரு' என ஒருசத்தம் என் காதிற்கேட்டது. உடனே நம் புத்திரர் உயிர்பெற்று எழுந்து, என்னை நோக்கி ஸலாம் சொல்லி 'அன்னுய், சுல்தானுல் ஆரிபீன் என்னைத் தேடிக்கொண்டு இருக்கின்றார்கள். நான் அங்கே செல்கின்றேன் என்று சொல்லிவிட்டு' இட்ட கபனோடே அங்குவந்தார். இது தான் இங்கு நிகழ்ந்தது " எனச் சொன்னார்.

இதுரீசு இதைக்கேட்டுத் தாமும் நாயகமவர்களின் சபையில் நிகழ்ந்தவைகளை மனைவிக்குச் சொல்லிக்காட்டினார். அதைக்கேட்ட அவர் மனைவி வியப்படைந்தார். பின் இருவரும் இறந்த மகன் எய்தப்பெற்றமைக்கு அல்லாகுத் தஆலா வைப் புகழ்ந்து, நாயகமவர்களையும் வாழ்த்திச் சந்தோஷம் உற்றிருந்தார்கள்.

அகுமது யிர்த்தது

முற்றிற்று.

---

30-ம் அத்தியாயம்.

## அபுல் பறக்காத் துயிர்த்தது.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களால், இறந்துபோன அபுல் பறக்காத்து என்பவர் உயிர்பெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:- அபுல் பத்ஹிபுனு கனுயமுல் வாஸ்தி.]

குத்புல் ஆலம் சையிது அகுமதுல் கபீறுற் றபாயி றலியல்லாகு அன்கு அவர்கள், ஒருநாள் தங்கள் வணக்கஸ்தானமாகிய தனி அறைக்குள் முஷாஹதா வின் இருப்பில் இருந்தார்கள். அப்போது அவர்கள் நிலைமை அல்லாகுத் தஆலா வின் குணங் கொண்டதாயிருந்தது. அவ்வாறு இ

ருக்கையில், அத்தனியறையான கட்டிடவாசலில் அபுல் பத்ஹில் கனுயபுல் வாஸ்தி உட்கார்ந்திருந்தார்.

அந்த நேரத்தில், குருஸான் பகுதியிலுள்ள கர்மான் என்னும் ஊராரும், சைகு உதுமான் என்பவரின் குமாரருமான அபுல் பறக்காத்து என்பவர், தமது சிநேகராகிய அபுல் பத்ஹை க்காண்பதற்காக அங்கே வந்தார். வந்தபோது, அபுல்பத்ஹு அவரை உபசரித்து அழைத்து இருத்தி, அவருடைய காரியங்களைப்பற்றி விசாரித்தார். பின்பு இருவரும் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். சம்பாஷிக்கும்போது, அபுல் பறக்காத்து என்பவர் அபுல் பத்ஹை நோக்கி "சகோதரீர், உம்முடைய காரியங்கள் என்ன? உமது தேசிகர் சையிது அகுமதுல் கபீறுடைய காரியம் யாது?" என்று உசாவினர். அதற்கு அபுல் பத்ஹு அவரைப் பார்த்து "சோதரீர், நீர் உம்முடைய காரியங்களை இன்னவென்பதாக முந்தி எனக்குச் சொல்வீராக. அதன் பின் என் காரியங்களை நான் சொல்கின்றேன்" எனப் பிரதி கூறினர்.

இதனைக்கேட்ட அபுல் பறக்காத்து அபுல் பத்ஹைப் பார்த்து "என்னுடைய காரியம் என்னவெனில்;-நான் திரைமறைவு சிறிதும் இன்றியே அல்லாகுத் தஆலாவை தரிசிக்கின்றேன். அவன் இரவில் ஆயிரந்தடவையும், பகலில் ஆயிரந்தடவையுமாக நாள்தோறும் எனக்குத் தஜல்லி யாகின்றான். இதுதான் என் காரியத்தின் தீர்மானம்" என்று சொன்னர். இதற்கு அபுல் பத்ஹு யாதொரு மறுபேச்சும் பேசவில்லை. பின் இருவரும் சற்றே சம்பாஷணைபண்ணி முடிந்தது. அபுல் பறக்காத்து அபுல் பத்ஹை நோக்கி: இரும்; நான் போய்வருகின்றேன் என்று சொல்லிவிட்டு எழுந்தார். அப்போது அபுல் பத்ஹு அவரைப்பார்த்து "சகோதரீர், போகலாம்; இரும். எங்கள் சைகுறலியல்லாது அன்கு அவர்கள் உள்ளே முஷாஹதா

வில் இருக்கின்றார்கள். வரும்வேளை ஆயிற்று. அவர்கள் வந்தபின் அவர்களின் திருவதனத்தைத் தரிசித்து, அவர்கள் மொழியும் திருவாய் மொழிகளையும் கேட்டுக்கொண்டு, பின்பு போவீராக" என்று கூறினார். அபுல் பத்ஹு சொன்ன இச்சொல்லைக் கேட்ட அபுல் பறக்காத்து அவரைநோக்கி "அபுல் பத்ஹே, நாள் ஒன்றுக்கு இரவும்பகலும் இரண்டாயிரந்தடவை அல்லாகுத் தஆலா வைத் தரிசிக்கும் நான், அகுமதுல் கபீறைத் தரிசிக்கவந்த அவசரம் என்ன? அவரிடத்து நான் தேவைப்பட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டியது யாது? ஒன்றும் இல்லை. இதனை நீர் அறிவீராக. இரும் போய்வருகின்றேன்" என்று கருவத்தோடே சொன்னார்.

அபுல் பறக்காத்து ச் சொன்ன இச்சொல் அபுல் பத்ஹுடைய இருதயத்தில் குத்தி, கோபத்தை எழுப்பிற்று. உடனே அபுல்பத்ஹு கண்கள் சிவக்க அவரை நோக்கி "அபுல் பறக்காத்தே, நீர் மருளாதீர். இரவுபகல் இரண்டாயிரந் தடவையாக ஆயிரம்வருஷம் வரையும் அல்லாகுத் தஆலா வை நீர் தரிசித்தாலும், எங்கள் சையிது அகுமதுல் கபீறு நாயகமவர்களை ஒருதடவை தரிசிப்பதற்கு ஈடாகாது. அதைப்பார்க்கிலும் இது மிகப் பிரயோசனமான[illegible]" என்று நிமிர்ந்து கூறினார். அபுல்பறகாத்து இம் மதப்[illegible] வார்த்தையைக்கேட்டு "அபுல் பத்ஹே, நீர் என் இவ்வாறு சொல்கின்றீர்?" என்று கேட்டார்.

அபுல் பத்ஹு அவரைப்பார்த்து "அபுல் பறக்காத்தே, கேட்பீராக. நீர் நாள் ஒன்றுக்கு இரண்டாயிரந்தடவையாக அல்லாகுத்தஆலா வைத் தரிசிப்பது பொய்யன்று. அவன் உமக்குத் தஜல்லி யாவதும், அவனை நீர் தரிசிப்பதும், உம்முடைய பதவியின் தரத்திற்குத்தக்க அளவாகத்தான் இருக்கும். அவன் முழுமையும் உமக்குத் தோற்றரவாய்க் காணப்படமாட்டான். எங்கள் சைகுறலியல்லாகு அந்த

அவர்கள்மீது அவன் முழுமையும் தஜல்லியாயிருப்பான். அப்போது அவர்களை நீர் பார்ப்பது அக்கினிமயமாயிருக்கும் இரும்பைப் பார்ப்பதுபோலாம். ஆதலால், நான் சொன்னது நியாயமான சொல்" என்று வதில்கூறினர்.

இதனைக்கேட்ட அபுல் பறக்காத்து: அப்படியானல், நான் அவரைப் பார்க்கத்தான்வேண்டும் என்று சொல்லி உட்காந்தார். சற்றுநேரஞ் சென்றபின், நாயகமவர்கள் முஷாஹதா வில் நின்று தெளிவுபெற்று, தங்கள் சிரசையும் முகத்தையும் கருப்புப்புடவை போர்த்து மூடிக்கொண்டு அறையைவிட்டு வாசலில் வந்தார்கள். வந்துநின்று, தங்கள் திருமுகத்து ஆடையை மெல்ல நீக்கினர்கள். உச்சிப்பொழுதில் கதிரெறித்து நின்ற சூரியனை மறைத்த கார்மேகம் விலகினபோது அச்சூரியன் சுடர்விட்டு எறிப்பதுபோல, நாயகமவர்களின் திவ்வியவதனம் பளீரென்று சோதிகான்றது. அந்நேரத்தில் அபுல் பத்ஹூ அபுல் பறக்காத்தை நோக்கி "இவர்தாம் எங்கள் சைகுறலியல்லாகு அன்கு" என்று சுட்டிக் காட்டினர். காட்டினபோது, அபுல் பறக்காத்து நாயகமவர்களை ஏறிட்டுப் பார்த்தார். நாயகமவர்களின் தரிசனம் அவர்மீது தாக்கிற்று.

நாயகமவர்கள் சுத்தமான பளிங்குபோன்று அல்லாகுத் தஆலா வின் தஜல்லி பிரதிவிம்பிக்க இயல்பான பார்வைகொண்டு பார்த்தபோது, அபுல் பறக்காத்துப் பம்பரம்போலச் சுழன்று கீழேவிழுந்து மரண மடைந்தார். நாள் ஒன்றுக்கு இரண்டாயிரந் தடவை அல்லாகுத் தஆலா வைக்காணும் அவர் நாயகமவர்களை ஒரேதடவை கண்டவுடன் விழுந்து மாண்டதை அபுல் பத்ஹூ தெரிந்து, நாயகமவர்களிடத்து அவர் சொன்னவற்றைச் சொல்லி, இறந்த காரணம் யாது? எனக் கேட்டார். நாயகமவர்கள் அவர்க்குச் சொல்கின்றார்கள்:—

"அபுல் பத்ஹே, அந்த விஷயத்தில் இவர் உண்மை சொன்னார். சுத்தமானவர். என்னை இவர் பார்த்தபோது, இவருடைய மனக்கண் சரியாய்த் திறந்து களங்கமற்று இருந்தது. அப்போது, அல்லாகுத் தஆலா தாத்தைக் கொண்டு என் இருதயத்தில் தஜல்லி யாயிருந்தான். அந்தப் பிரதிவிம்பம் நன்றாய் இவர்க்குத்தோற்றி இலங்கிற்று. அதனைக் கண்டு பொறுத்துக்கொள்ளும் திறன் இவரிடத்து இல்லை. அவ்விம்பம் இலங்கும்போது அதன் பிரப்பமும், வலிமையும் இவரை அச்சப்படுத்தின. அவ்வச்சத்தால்தான் விழுந்து மாண்டார். இவர் பலவீனமான முரீது"

எனச் சொல்லிவிட்டு, மறுபடியும் அத் தவச்சாலைக்குள்ளே போய்விட்டார்கள். அபுல் பத்ஹூ அங்கு மௌனத்தாய்க்கிடக்கும் அபுல் பறக்காத்தை அடக்கஞ்செய்ய ஆயத்தமானர். அதற்கான காரியங்களை அவர் சரிபண்ணிக்கொண்டு இருக்கும்போது, உள்ளேசென்ற நாயகமவர்கள் சற்றுநேரஞ்சென்று வெளியே வந்தார்கள். அந்நேரம் அபுல் பறக்காத்தை அடக்குவதற்கான கருமங்கள் நடந்துகொண் டிருந்தன.

அனாத நாயகமவர்கள் கண்டு மரணமாய்க் கிடக்கின்ற அபுல் பறக்காத் தின் தலைமாட்டிற்போய் நின்றுகொண்டு, தங்கள் மகத்துவமுள்ள வாய்மலர் திறந்து, தேன் சிந்தினாற்போல "அபுல் பறக்காத்தே, சர்வ வல்லமையுமுள்ள அல்லாகுத் தஆலா வின் உத்தரவுகொண்டு எழுந்திரும்" என்றார்கள்.

இச்சொல் சொல்லிமுடியமுன்னே இறந்துகிடந்த அபுல் பறகாத்து உயிர்பெற்று எழுந்து, நாயகமவர்களுக்கு முன்னே கைகட்டி நின்றுகொண்டு "யா தாஜுல் வாஸிலீன், யா சுல்தானுல் ஆரிபீன், யா சுல்தான் சையிது அகுமதுல் கபீறு, அடியேன் தங்களுடைய தொண்டனயிருத்தற்கும்

தங்களுடைய அன்பைப் பெறுதற்கும் மன்றாடுகின்றேன்" என்று பரிவுற்றுக் கூறினர்.

அபுல் பறக்காத்து இவ்வாறு சொன்னபோது, நாயகம வர்கள் அவரை நோக்கிக் குறுநகை செய்துகொண்டு "மன்னிப்புப் பெற்றவருடைய நேசத்தின் பொருட்டுச் சோபனம்!" என்று கூறி, அவரைத் தங்கள் சேவையில் அமர்த்திக்கொண்டார்கள்.

அபுல் பறக்காத்து அன்றுமுதல் அநேக காலமளவும் நாயகமவர்களுடைய பணிகள் செய்துகொண்டு, அவர் கள் சகவாசத்திலேயே யிருந்தார். அப்படி வெகுகாலம் இருந்த பின், நாயகமவர்கள் அவரைத் தங்கள் தறீக்கில் முரீதாக்கி, அவர்க்குச் சிறப்பான கிலாபத்து, இஜாஜத்து களின் கிற்காக்கள் போர்த்தி, தங்களின் ஹாலேயும் அரு ளினர்கள்.

அபுல் பறக்காத் துயிர்த்தது

முற்றிற்று.

---

31-ம் அத்தியாயம்.

## சுவர்க்கம் விற்றது.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் சுவர்க்கலோகத்து ஒரு மாளிகையையும் அதன் தோட்டத்தையும் விற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:—சைகு அஜிஜுத் தீனுல் பதுதாதி.]

பதாயிகு நகரத்திற்கு அருகே மிகச் சமீபத்தில் யூனியா என்று ஒரு சிற்றூர் உண்டு. அவ்வூர்க்கு கத்தீபு, ஜமாலுத்தீன் என்பவர். அவர் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களுடைய சிஷ்க

ளுள் பிரதானமானவர். இன்னும், அவ் யூனியாவில் ஸைகு இஸ்மாயீல் என ஒரு தனிகர் இருந்தார். இவர்க்கு அவ் வூரில் அலங்காரமான தோட்டம் ஒன்று இருந்தது. அத் தேசத்துத் தோட்டங்கள் எல்லாவற்றுள்ளும் இதுவே சிறந்தது. இத்தோட்டம்போல மற்றொரு தோட்டம் எங்கும் இன்று. பல தேசங்களிலும் உள்ள பலவகைக் கனிகளைத் தருகின்ற எல்லாச் சாதிமரங்களும், நானு தேசத்துப்புஷ்பங்களையும் புஷ்பிக்கின்ற எல்லாச்சாதிச் செடிகளும், தேசங்கள் தோறும் நூதனமாயுள்ள அநேகவித விருக்ஷங்களும் அங்குண்டு. பலவகைத் தானியங்களும் அதனுள் விளையும். உலகத்திற் பயிராகும் எந்தப்பொருளும் ஆங்குப் பயிராகும். இத் தோட்டத்தில் இன்னது இல்லை என்று ஒருவர் சொல்லமாட்டார். இவ்வகை மேம்பாடான அத் தோட்டத்தை மேலேசொன்ன ஸைகு இஸ்மாயீல் வெகு பக்குவத்துடன் பேணிக்காத்து அநுபவித்துக்கொண்டிருக்கின்றார்.

இத்தோட்டத்தை நாம் விலைக்கு வாங்கிக்கொள்ள வேண்டும் என்கின்ற எண்ணம் முன்னேசொன்ன கத்தீபு ஜமாலுத்தீனுக்கு உண்டாயிருந்தது. பலநாள் இவ்வெண்ணம்வைத்திருந்த அவர் ஒருநாள் புறப்பட்டு ஸைகு இஸ்மாயீல் வீட்டிற்குப்போய்ப் பல விஷயங்களையும்பற்றிப் பேசிக்கொண்டிருந்து, கடைசியாக "ஸைகே, தங்கள் தோட்டத்தை யார்க்காயினும் விற்பதாயிருந்தால், அதனை எனக்குக்கொடுங்கள். அதன் கிரயத்தை நான் தருகின்றேன்" என்று சொன்னர். இவர்சொன்ன இச்சொல்லை ஸைகு இஸ்மாயீல் கேட்டு "ஜமாலுத்தீனே, என்தோட்டம் அரும்பெரும் பலன்களையெல்லாம் எனக்குத் தாரநின்றது. ஆதலால், அதனை ஒருவர்க்குவிற்க நான் பிரியப்படமாட்டேன். அது விற்கப்படுவதும் அன்று" என மறுமொழிசொன்னர். இதனைக் கேட்டுக்கொண்டு ஜமாலுத்தீன் மனைக்குத்

திரும்பிவிட்டார். திரும்பினாலும், தோட்டத்துப்பிரியம் அவர்மனதைவிட்டுப் போகவில்லை.

ஜமாலுத்தீன் சிலதினங்களைப் போக்கி மறுபடியும் சைகு இஸ்மாயீல் இடஞ்சென்று "தங்கள் தோட்டத்தின்மீது எனக்கு விருப்பமா யிருக்கின்றது. தாங்கள் அதனை எனக்குக் கிரயமாக் கொடுங்கள். தங்கள் மனம்போல்க் கிரயந் தருகின்றேன்" எனக்கேட்டார். அப்போது சைகு இஸ்மாயீல் "ஜமாலுத்தீனே, தங்கள் பிரியத்தை விட்டுவிடுங்கள். அத் தோட்டம் என்னைவிட்டுப் போக என் மனம் உடம்படாது. ஒருபோதும் விற்கமாட்டேன்" என்று சொன்னார். ஜமாலுத்தீன் அதற்கு ஒன்றும் சொல்லாமல் வந்துவிட்டார். ஆயினும், தோட்டத்து எண்ணம் அவர்க்கு மறக்கக் கூடியதாயில்லை. அவர் தாம் விற்பதில்லையென்கின்றாரே, என் செய்யலாம் என்று பொறுத்திருந்து பார்த்தார்; மனம் கேட்கவில்லை. அடிக்கடி சைகு இஸ்மாயீலிடம் போய்ப்போய் "தோட்டத்தை எனக்குக் கொடுக்கத்தான் வேண்டும். என்ன விலை சொன்னாலும் தருகின்றேன்" எனக் கேட்டுவந்தார். இவர் கேட்குந்தோறும் அவர் "ஏன் வீணிற் கேட்கின்றீர்கள்? நான் அதனை விற்கவே மாட்டேன். இனிமேல் அதனைக் கேட்காதீர்கள்" என் முடிவாகச் சொல்லிவிட்டார்.

ஆசைகொண்ட ஜமாலுத்தீன் என் செய்வார்! இனி ஒருதரம் அவரிடம்போய்க் கேட்க முகமில்லை. தோட்டத்து ஆசையும் மீறுகின்றது அன்றி, மனதைவிட்டு அகலவில்லை. பலகால் இஃதே எண்ணமாயிருந்து, கடைசியாக ஒரு உபாயத்தைச் சிந்தனை பண்ணினார். அது:— நாம் ஏன் வீணில் வருந்தல் வேண்டும். நமது சைகு றலியல்லாகு அன்கு அவர்கள்தாம் நமக்கு இருக்கின்றார்களே. அவர்களிடத்து நம் பிரியத்தை முறையிட்டால், அவர்கள் சைகு இஸ்மாயீலை அழைத்துக் கேட்பார்கள். உலகம் தலைசாய்க்கத்தக்க அவர்கள் திருவாய்மொழியை அவர் மறுப்

பாரா! மறுக்கமாட்டார். ஆதலால், நாம் அவர்கள்பாற் சென்று சொல்லிக் கொள்வோம் என்பதே.

ஜமாலுத்தீன் இவ்வுபாயத்தைச் சிந்தனைப்பண்ணிக் கொண்டு யூனியா வை விட்டுப் புறப்பட்டு பதாயிகு க்குவந்து, நாயகமவர்கள் சமூகஞ்சென்று பணிந்து ஸலாம் சொல்லி நின்றார். நாயகமவர்கள் அயலூரில் இருந்து வந்த தங்கள் சீஷராகிய அவர்க்குப் பிரதி ஸலாம் சொல்லி இருக்கச்செய்து, அவருடைய சங்கதிகளைப்பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர் சொல்லவேண்டியவற்றைச் சொல்லி, கடைசியாகத் தாம் நாடிவந்ததைச் சொல்கின்றார்:—

"யா சையிதீ, பலநாளாகத் தமியேன் மனதில் ஒரு நாட்டம் இருக்கின்றது. அதனைத் தாங்கள் நிறைவேற்றித் தருவீர்கள் என்றே இப்போது இங்குவந்தேன். நான் இருக்கும் யூனியா வில் சைகு இஸ்மாயீலிபுனு முன்இம் என்று ஒரு தனிகர் இருக்கின்றார். அவரிடத்து வெகு அலங்காரமாய்ச் சிறந்த தோட்டம் ஒன்று இருக்கின்றது. அதன் அருமை பெருமைகள் சொல்லுந்தரமானவையல்ல. அத்தோட்டத்தின்மீது எனக்கு மிகப் பிரியம் உண்டாயிற்று. அவரிடம்போய் உமது தோட்டத்தை எனக்கு விலையாகத்தாரும்; என்ன விலையாயினும் தருகின்றேன் என்று பல தடவைகளிற் கேட்டேன். நான்சென்று கேட்குந்தோறும் அவர் அதனை விற்கமாட்டேன் என்று மறுத்துவிட்டார். இனி நான் கேட்பதில் காரியப்படாது. இதனைத் தங்கள் சமூகத்தில் சொல்லிக்கொள்ளலாம் என்று வந்தேன். தாங்கள் ஒரு ஆளனுப்பி அவரை இங்கு வரவழைத்து, அத்தோட்டத்தை எனக்கு விற்றுவிடும்படி சொல்லவேண்டும்" எனச்சொல்லி முடித்தார்.

தங்கள் சீஷர் ஜமாலுத்தீன் சொன்னவற்றைக் கேட்ட நாயகமவர்கள் அவரை நோக்கி 'இதுதானா! நானே அங்குவந்து அவரிடம் தோட்டத்தை விலைக்குவாங்கி உ

மக்குத் தருகின்றேன். இதற்காக அவரை இங்கு அழைக்
க ஆள்போக வேண்டியது இல்லை. நான் நேரே போய்விட்
டால், காரியம் இலகுவாய் முடிவுபெறும்" என்று சொல்
லிவிட்டு, உடனே புறப்பட்டார்கள். ஜமாலுத்தீனும் கூட
வே புறப்பட்டார்.

நாயகமவர்கள் ஜமாலுத்தீனைக் கூட அழைத்துக்
கொண்டு பதாயிங்க விட்டு வெளிப்பட்டு நடந்து யூனியா
வைச் சேர்ந்து, சைகு இஸ்மாயீல் இருக்கும் வீட்டு வாச
லிற் போனார்கள். அவர் நாயகமவர்கள் வருவதை அறிந்
து விரைந்துவந்து அடிபணிந்து ஸலாம் பகர்ந்து: யா சை
யிதீ, மனைக்குள் வந்தருள்வீர்களாக என்று பரிந்து அ
ழைத்துக்கொண்டுபோய்த் தகுந்த ஆசனத்தின்மீது இ
ருக்கச்செய்து, கைகட்டிநின்று "யா சையிதீ, தாங்கள் தமி
யேனுடைய வீடுதேடி வந்த காரணம் யாது? முக்கிய வி
ஷயம் ஏதும் இருந்தால், அருளிச் செய்வீர்களாக. அப்ப
டியேதும் ஒரு காரியம் இருப்பின், தமியேனுக்குத் தங்கள்
தொண்டருள் ஒருவரை அநுப்பித் தெரிவிப்பீர்களானல்,
நான் தங்கள் திருவடிகளில் வந்து சேர்வேனே. ஆயினும்,
தாங்கள் என் இல்விடத்திற்கு வந்தது, நான்செய்த புண்
ணியப் பேறேயாம்" என மிக்க பக்திபோடே சொன்னார்.

இவ்வாறு சொல்லிநிற்கும் அவரை நாயகமவர்கள்
நோக்கி "இஸ்மாயீலே, நீர் உமது தோட்டத்தை விற்கநா
டியிருந்தால், எனக்குக்கொடும். நான் தகுந்தவிலை தரு
கின்றேன்" என்றார்கள். இதனைக்கேட்ட அவர் "யா சை
யிதீ. தமியேன் அதனை விற்க நாடவில்லை" என்று மாறுமொ
ழிசொன்னார். பின்னும் நாயகமவர்கள் அவரைநோக்கி
"நீர் விற்க நாடியிராவிட்டாலும், எனக்கு விற்பீராக; அ
தன் கிரயத்திற்குமேல் ஒருபங்கு சேர்த்து இரட்டிப்பான
கிரயம் தருகின்றேன்" என்றார்கள். அதற்கு அவர் "யா

சையிதீ, எத்தனைபங்கு அதிகமான கிரயந்தரினும் நான் அதை விற்கமாட்டேன்" என்றார். மறுபடியும் நாயகமவர்கள் "அந்தோட்டத்தின்மீது அதிக விருப்பம் உண்டாயிருக்கின்றது, நீர் என்னகிரயம் சொன்னாலும்தருகின்றேன்; எனக்கு விற்பீராக" என்றார்கள். அதற்கும் அவர் "நான் ஒருபோதும் விற்கமாட்டேன்" என்றார். நாயகமவர்கள் "அப்படிக்கு அன்று; விற்கத்தான்வேண்டும்" என்றார்கள். கடைசியாக அவர் "யா சையிதீ, தங்கள் திருவாய்மொழியைத் தடுக்கின்றேன் எனத் தமியேன்மீது தேவரீர் கோபங்கொள்ளவேண்டாம். அத் தோட்டத்தை அதிக விருப்பத்தோடே அருமையாகவைத்து அநுபவிக்கின்றேன். அதனை விற்றுவிடுதற்கு என்மனம் பொருந்தாது. ஆதலால், தாங்கள் அடியேன்மீது மனம் இரங்கல்வேண்டும்" எனச் சொன்னார்.

இந் நிராகரிப்பான சொல்லை நாயகமவர்கள்கேட்டு, நாம் பலதடவை விருப்புற்றுக்கேட்டும் இவர் உடம்படும் விதமாயில்லை. ஜமாலுத்தீனுக்கு வாங்கித்தருவதாக வாக்களித்தோமே, இதற்கு யாதுசெய்வோம் என நினைந்து, சற்றுநேரம் தலைகுனிந்து இருந்தார்கள். நாயகமவர்கள் இவ்வாறு சிந்தனையாய்த் தலைகுனிந்து ஒன்றும் பேசாது இருப்பதை சைகு இஸ்மாயீல் பார்த்து, நாம் மறுத்துப்பேசுவதனாலன்றோ நாயகமவர்கள் இவ்வாறு இருக்கின்றார்கள் என எண்ணி, நாயகமவர்களைநோக்கி "யா சையிதீ, தங்களுக்கு என் தோட்டத்தின்மீது விருப்பம் உளதாயின், நான் சொல்லும்விலை தருகின்றீர்களா?" எனக் கேட்டார். அதற்கு நாயகமவர்கள் "நீர் என்ன சொன்னாலும் தருகின்றேன். உமது கேள்வி என்ன?" என அவரைக் கேட்டார்கள். கேட்கவே அவர் சொல்கின்றார்:—

"யா சையிதீ, என் தோட்டத்திற்குப் பிரதியாகச் சுவர்க்கலோகத்தில் உள்ள ஒரு அலங்கார மாளிகையையும்,

அதைச் சார்ந்த மதிள் சூழ்ந்த ஒரு தோட்டத்தையும் கிரயம்பண்ணித் தருவீர்களாயின், நான் என் தோட்டத்தைத்தந்து விடுகின்றேன்" என்றார். இதைக் கேட்டவுடன் நாயகமவர்கள் அவரை நோக்கி "இஸ்மாயீலே, பூலோகத்தில் உள்ளனவற்றுள் எதனையாயினும் நீர் கேளும்; அது என் கண்ணுக்குக் கண்ணாயினதா யிருந்தாலும் தருகின்றேன். வானலோகத்தில் உள்ளனவற்றுள் ஒன்றையும் விரும்பாதீர்" என்று மறுமொழி சொன்னார்கள். இப்படிச் சொன்னபோது சைகு இஸ்மாயீல், நாயகமவர்களை ஜமாலுத்தீன் அழைத்து வந்திருப்பது நமக்கு நன்கு தெரிகின்றது. "உமக்கு அத் தோட்டத்தை நான் வாங்கித் தருகின்றேன்" என்று வாக்களித்துத்தான் அவரையும் கூட்டி வந்திருக்கின்றார்கள். எவ்வாறாயினும் அவர்க்குச் சொன்ன வாக்குத் தவறாது வாங்கிக்கொடாமல் விடமாட்டார்கள். ஆதலால், நாம் இப்போது சுவர்க்கங்கேட்டதை விடக்கூடாது. பிடிவாதமாய் நின்றால்தான் நாம் நாடிக் கேட்டது கிடைக்கும் என மனதுள் எண்ணிக்கொண்டு "யா சையிதீ, சுவர்க்கத்துத் தோட்டம் ஒன்று தந்தால் அன்றி, என் தோட்டத்தைத் தரமாட்டேன். இது தீர்மானம்" என்று முடிபுரையாகச் சொல்லிவிட்டார்.

நாயகமவர்கள் இக் கண்டிப்பான சொல்லைக் கேட்டு, ஜமாலுத்தீனுக்குத் தாங்கள் சொன்ன வாக்கைக் கருதித் தலையைக் குனிந்தார்கள். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவர்கள் திருமேனி நிறம்மாறி மஞ்சள்நிறங்கொண்டது. அந் நிறத்தோடே நாயகமவர்கள் நிமிர்ந்து அவரைப் பார்த்து "இஸ்மாயீலே, நீர் விரும்பியவண்ணம் சுவர்க்கத்துத்தோட்டம் தந்தேன். உம்முடைய தோட்டத்தைக் கிரயம் பண்ணுவீராக" என்று ஜதுபு தோன்றச் சொன்னார்கள். சைகு இஸ்மாயீல் இம்மட்டோடு விடவில்லை. "யா சையிதீ, யார் சொல்லாயினும் அதற்கோர் உறுதிமுறி உண்

டானால்தான் திறப்படும். ஆதலால், சுவர்க்கத்துத் தோட்டத்தைத் தாங்கள் எனக்கு விற்றதாக ஒரு பத்திரம் எழுதித் தந்துவிடவேண்டும்" என்றார். நாயகமவர்கள் அவர் கேட்பதை மறுக்கவில்லை; எழுதுமையும், காகிதமும் கொண்டுவாரும் என்று அவர்க்குக் கட்டளை யிட்டார்கள். உடனே அவர் போய், மையும் காகிதமும் எழுதுகோலும் கொண்டுவந்து, நாயகமவர்கள் திருச்சமுகத்து வைத்து நின்றார். நாயகமவர்கள் தங்கள் மலர்க்கரத்தால் அடியிற்கண்டபடி கிரயசாசனம் எழுதினார்கள்.

பிஸ்மில்லா ஹிற்றஹ்மா னிற்றஹீம்.

அல்லாகுத் தஆலா வின் அடிமையும் அபுல் ஹஸன் அலி யின் எளிய மகனுமாகிய அகுமது என்பவன், அப்துல் முன்இம் உடைய மகன் இஸ்மாயீலுக்கு எழுதிக்கொடுத்த கிரயசாசனம் யாதெனில்:—

மேற்கண்ட இஸ்மாயீலுக்கு யூனியா வில் இருக்கும் தோட்டத்திற்குப் பிரதியாக அடியிற்கண்ட சுவர்க்கலோகத்துத் தோட்டத்தை அல்லாகுத் தஆலா வின் கொடையைக்கொண்டு கிரயம் பண்ணிக் கொடுக்கப்பட்டது. சொத்துவிவரம்:—

ஜன்னத்துல் அதன், ஜன்னத்துல் மவுவா, ஜன்னத்துல் குல்து, ஜன்னத்துல் பிர்தெளசு என்னும் இந் நான்கு எல்லைக்கும் உட்பட்ட தோட்டமும், அதன் நடுவேயுள்ள மாளிகையும், அங்குள்ள மலைகள், நதிகள், ஹூறுலீன்கள், * வில்தான் கள், மற்றுமான பொருள்கள் முழுவதுமாம்.

* வில்தான்-சுவர்க்கத்துப் பணிவிடைபுரியும் சிறுவர்.

இவற்றை இஸ்மாயீல் பெற்று, ஊழியூழி காலமும் ஆண்டு அநுபவிக்கக் கடவர். இதற்குச் சாக்ஷி, அல்லாகுத் தஆலா; பிணை, அடியிற் கையெழுத்திட்டிருப்பவன்.

இங்ஙனம்.

பத்திரம் எழுதிக் கொடுத்தவனும்,

பிணைகாரனுமாகிய

அகுமது.)

நாயகமவர்கள் இக்கிரயசாசனத்தை எழுதி மடித்து, சைகு இஸ்மாயீல் கையிற் கொடுத்தார்கள். கொடுத்தபின், கிரயமான சுவர்க்கத் தோட்டத்தை அவர்க்கு ஒப்படைக்கவேண்டி நாயகமவர்கள் ஆகாயத்தைப் பார்க்கும்படி அவரை ஏவினார்கள். உடனே ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தார்; சாசனத்தில் எழுதப்பட்டபடி சுவர்க்கத்துத் தோட்டமும், மாளிகை முதலானவைகளும், அவர் கண்ணுக்குப் படம் பார்ப்பதுபோலத் தோற்றின. அத்தோட்டத்து மாளிகையில் உள்ள ஹூறுலீன்கள் அவர்க்கு ஸலாம் சொல்லும் சத்தமும் கேட்டது. இப் புதுமையைக்கண்ட சைகு இஸ்மாயீல் வெகு ஆச்சரியமும் ஆநந்தமும் அடைந்து, அல்லாகுத் தஆலா வுக்கு சுஜூது செய்து எழுந்து, இச் சமாசாரத்தைத் தம்முடைய புத்திரர்களிடம் சொல்வதற்காக விரைவாய்ச்சென்றார். அப்போது அவர் குமாரர்கள் அத்தோட்டத்தில் நின்று சோலைக்கொல்லைக்கு நீர் பாய்ச்சிக்கொண் டிருந்தார்கள்.

சைகு இஸ்மாயீல் மக்களைநோக்கி: என் புத்திரர்களே, நமது தோட்டத்தை சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் விலைக்குவாங்கிக்கொண்டார்கள். நாம் இதனை அவர்களுக்கு ஒப்படைக்கவேண்டும். நீவிர் வேலையைநிறுத்தி வருவீர்களாக என்றார். தோட்டத்தைவிற்றுவிட்ட சங்கதியை அவர் மக்கள்

கேட்டவுடன் மனவருத்தமுற்று: தந்தையே, இஃதென்ன செய்கை? இத் தோட்டம் பலநாள் நம்மிடத்து இருந்தும் இதன் முழுப்பலனையும் நாம் அடையவில்லையே? அவ்வாறு இருக்க, தாங்கள் விற்றகாரணம் என்ன? எனக் கேட்டார்கள். அதற்கு அவர் நாயகமவர்களுக்கும் தமக்கும் நடந்த வரலாறுகளையெல்லாம் சொல்லிக்காட்டி, சுவர்க்கத்தை அதற்குப்பிரதியாக வாங்கிக்கொண்டதையும் சொல்லிக் கிரயசாசனத்தையும் காட்டினர்.

அம்மக்கள் இவ் வரலாற்றைக் கேட்டுப் பின்னும் தந்தையைநோக்கி: தந்தையே, எல்லாம் சரியே. இத் தோட்டம் தங்களின் சீவியகாலத்திற்குப்பின் எங்களால் அநுபவிக்கப்படும் சொத்தாயிருக்கின்றது. அப்படி இதனை நாங்கள் இனி அநுபவிக்க இடம்படாமல் தாங்களே விற்றுவிடுவதாயின், நாங்கள் அடையப்போகும் பலன் யாது? எங்கள் தாய்பாகம் போய்விட்டது அன்றோ! ஆனால், ஒன்று செய்யவேண்டும். இத் தோட்டத்திற்குப் பிரதியாகத் தாங்கள் பெற்றுக்கொண்ட சுவர்க்கத்தில் எங்களுக்கும் பங்குபிரித்துத் தருவீர்களாயின், நாங்கள் விற்றதற்கு ஒப்புவோம் என்றார்கள்.

தம் மக்கள்சொல்வது நியாயமான உரித்துப்பாராட்டுதல் என்று சைகு இஸ்மாயீல் எண்ணி: அவ்வாறே தருகின்றேன்; வருவீர்களாக எனக்கூறி அவர்களை அழைத்துக்கொண்டு நாயகமவர்கள் சமுகத்து வந்து, தமது தோட்டத்தை ஜமாலுத்தீன் பேரால் கிரயம்பண்ணிக் கொடுத்தார். ஜமாலுத்தீன் தம் விருப்பப்படி தோட்டத்தை ஒப்புக்கொண்டார். நாயகமவர்கள் இவ் வலுவலை முடித்துவிட்டு, பதாயிசு நகரம்வந்து சேர்ந்தார்கள்.

சிலகாலஞ்சென்றபின் சைகு இஸ்மாயீல் சுகவீனம் அடைந்து படுக்கையில் ஆனார். அப்போது, தாம் மௌத்தானால் நாயகமவர்கள் எழுதிக்கொடுத்திருக்கும் கிரய

சாசனத்தைத் தம்முடைய கபனுக்குள் வைத்துத் தம்மை அடக்கும்படி மக்களுக்கு வஸீயத்துச்சொன்னார். பின்பு அவர் மௌத்தானபோது, அக்கிரயசாசனத்தை அவருடைய கபனுள்வைத்து அடக்கினார்கள். அவரை அடக்கம்பண்ணின மறுதினம் அவருடைய கபுறு மீது,

فقد وجدنا ما وعدنا ربنا حقا

இதன் பொருள்:—

[நமக்கு நம்முடைய றப்பு வஅதா செய்த காரியத்தை உண்மையாக நாம் பெற்றுக்கொண்டோம்.]

என்னும் குர்ஆன் ஆயத்து எழுதியிருந்தது. இதனை எல்லாரும் பார்த்து ஆச்சரியம் அடைந்தார்கள்.

சுவர்க்கம் விற்றது

முற்றிற்று.

---

32 - ம் அத்தியாயம்.

சுல்தான்முகம்மது முரீதானது.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அதுமதுல் கபீறு றலீயல்லாது அன்கு அவர்களிடத்து றூமி ராச்சியத்து அமீர் சுல்தான் முகம்மது என்பவர் வந்து முரீதான வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு அலாவுத்தீனுல் வாஸ்தி.]

றூம் என்பது ஷாம் தேசத்திற்கு வடபாகத்தில் உள்ளது. அதனை "ஆசியாமைனர்" என்பார்கள். அக்காலத்தும் அது முஸ்லிம் கலீபா வால் ஆளப்பட்டது. ஸிமிர்ணு, கார்ஸ், எர்ஜிறூம் என்னும் பிரதான நகரங்களும் * அறறூட்மலையும் அங்கேதான் உண்டு. அர்மனிய ராச்சியம்

* ஜூடிமலை.

அதன் தென்கீழ்த்திசையில் இருக்கின்றது. அங்கிருந்து தெற்குநோக்கி வந்தால், இருக்கு க்கு வந்துவிடலாம்.

அத்தேசத்தை அக்காலத்து ஆண்ட கலீபா வால் நியமிக்கப்பட்ட அமீர் ஒருவர் அங்கிருந்தார். அவர் பெயர் சுல்தான் முகம்மது. ஹாஜிறஜபு என்று மறுபெயரும் அவர்க்கு உண்டு. அவர் இஸ்லாம் மார்க்கத்துப் பக்திமானும், நீதமுள்ளவரும், ஒழுங்கான அரசு முறைமையுள்ளவருமானவர். மார்க்க இல்முகளில் மகா நிபுணர். அவ்விராச்சியத்தை அவர் வெகு ஒழுங்குடன் ஆண்டுவந்தார்.

சுல்தான் முகம்மது அங்கிருந்து அரசுபுரியும் காலத்து சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் மகிமையும், பிரபலமும், அவர் செவிக்கு எட்டின. நாயகமவர்களின் மகிமைகள் அவர் செவியில் விழவிழ, நாம் அவர்கள் திருவடிகளைத் தரிசித்து அவர்களிடத்து முரீதாக வேண்டும் என்கின்ற எண்ணம் அவர்க்கு உண்டாயிற்று. இவ்வெண்ணம் அவர் உள்ளத்தில் முளைத்து நாளுக்கு நாள் வளர்வதால், அநித்தியமான இவ்வுலகவாழ்க்கையை விட்டொழித்து, நித்தியவாழ்வு பெறுதற்கான வழியைத் தேடிக்கொள்வதே புத்தி என்றும், அதற்கு நாம் நாயகமவர்களின் திருவடி காண்பதற்குப் புறப்படவேண்டும் என்றும், அவர்க்கு அவசரம் உண்டாயிற்று. நம்முடைய ஆன்மா உடலைவிட்டுப் பிரிவது என்றைக்கு என்பதை நாம் அறியமாட்டோம். ஆதலால், மிக்க விரைவில் நாயகமவர்கள்பாற் போய்ச்சேர வேண்டும் என்று தீர்மானித்து, தாம் புறப்படுவதற்காகச் சேனை ஆயத்தம் பண்ணுமாறு பிரதானிகளுக்குக் கட்டளை பண்ணினர். அக் கட்டளைப்படி பெருந்திரளான சேனையொன்று அவர் பயணத்திற்கு என்று ஆயத்தமாயிற்று.

மேம்பாடான திறமையுள்ள போர்வீரர்களும், தளபதிகளும், பிரதானிகளும், அமைச்சருமான பலர் அவ

ரோடு பயணப்பட்டார்கள். இவர்கள் பயணப்பட்டவுடன் சுல்தான் முகம்மது தமக்குப் பிரதியாய் ராச்சியபரிபாலனம் நடத்துதற்கு உரித்தாளர் ஒருவரை நியமித்து விட்டுப் பிரயாணமானார். அவரோடு அவர் பரிவாரத்தார் எண்ணிறந்த பேர்கள் புறப்பட்டார்கள். பெருந்தொகையான திரவியம் அமைந்த பொக்கிஷங்களும், திரளான குதிரைகளும், கணக்கற்ற வெள்ளாட்டிகளும், கூடக் கொண்டு வரப்பட்டன.

சுல்தான் முகம்மது இவ்வாறாகப் பிரயாணமாய்த் தம் சேனைமுதலான பரிவாரங்கள் புடைசூழ ஷாமி ராச்சியத்தைக்கடந்து, தென்றிசைநோக்கிப் பலநாள் நடந்து, இருக்கு தேசத்தில் வந்துசேர்ந்தார். நாயகமவர்களின் திருவடித் தேட்டம் அன்றி வேறொன்றும் அவர் இருதயத்து இல்லாமையால் அங்கங்கே தங்கிக் காலத்தை விருதாவிற் கழிக்காது நடந்து, பதாயிகு நகரத்தை நெருங்கி, அதன் பக்கத்து உள்ள வனத்தில்வந்து சேர்ந்தார். சேர்ந்தும், நகரத்தை நோக்கிச் சேனை நடந்துகொண்டிருந்தது.

அவர் சேனைவந்து சேர்ந்த அன்றைத்தினம் ஷைகு அலாவுத்தீன் வாஸ்தி என்னும் பெரியோர் அவ்வனத்துள் நின்று வேட்டையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்களுக்குப் பெருந்திரளான சேனையொன்று வருவது தெரிந்தது. தெரியவே, அவர்கள் வேட்டையாடுவதை நிறுத்தி அச்சேனையை முன்னோக்கிவந்து, இச்சேனையோடு வருபவர் யார் என விசாரித்தார்கள். ஷாமுடைய அமீர் ஹாஜிறஜபு சுல்தான் முகம்மது தம்மைச்சேர்ந்தார் பலருடன் சுல்தானுல் ஆரிபீன் நாயகமவர்களிடத்து முரீதாய் பைஅத்துக் கொடுப்பதற்காக வருகின்றார் என்று செய்தி தெரிந்தது. ஷைகு அலாவுத்தீன் இதனை அறிந்துகொண்டு அங்கேயே நின்றார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் சுல்தான் முகம்மது தம்து உரிமைச்சுற்றம் புடைசூழக் குதிரைமீது ஏறினவராய் அங்குவந்து, சைகு அலாவுத்தீனைக்கண்டு குதிரையைநிறுத்தி "சகோதரரே, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் சங்கதி யாதும் தங்களுக்குத் தெரியுமா?" எனக் கேட்டார். அதற்கு சைகு அலாவுத்தீன் "தெரியும்" என்று மறுமொழி சொன்னார்கள். பின் சுல்தான் முகம்மது "சகோதரரே, தாங்கள் தெரிந்தவற்றுள் கொஞ்சம் சொல்வீர்களாக" என மன்றாடினார். அதற்கு சைகு அலாவுத்தீன் "இன்றைத்தினம் நான் அவர்களைக் கண்டேன். அவர்கள் கூட நின்றுதான் ளுஹறு தொழுதேன். தொழுதபின் அவர்கள் தங்கள் இருப்பிடஞ்சென்று இருந்து, தங்களைச் சேர்ந்தவர்களுக்கு இதோபதேசஞ்செய்தார்கள். நானும் இருந்து கேட்டு, பின் வேட்டையாடுதற்கு இங்கு வந்தேன்" என அவர்க்குச் சொல்லிக்காட்டினார்கள்.

இவ்வளவு கேட்டவுடன் சுல்தான் முகம்மதுக்கு உண்டான மன ஆநந்தம் கொஞ்சமல்ல. சந்தோஷ சாகரத்துள் முழுகினவராய் சைகு அலாவுத்தீனவர்களின் கையைப்பற்றி முத்தம் இட்டுக்கொண்டு, அவர்களுக்கு இலக்ஷம் * தீனறுகள் கொடுக்கும்படி கட்டளைபிறப்பித்தார். பின்னும் அவர்க்கு ஆநந்தம் பொங்கித் ததும்பிற்று; பின்னும் இலக்ஷம் தீனறுகள் கொடுக்கக் கட்டளையிட்டார். நாயகமவர்களைக் கண்டவர்கள் என்னும் மரியாதைக்கும், அவர்களைத் தாம் கண்ட மகிழ்ச்சிக்குமாகப் பின்னும் ஒரு இலக்ஷம் தீனறுகளும், அதன்பின் ஒரு இலக்ஷம் தீனறுகளுமாகத் தடவை நான்கில் நான்கிலக்ஷம் தீனறுகள் கொடுக்கக் கட்டளை பண்ணினார்.

---

* தீனறு - ஒரு வராகன் எடைப் பொன்னாணயம்.

நாயகமவர்களின் சுக்கதி சொன்னதற்காகப் பின்னும் அவர்களுக்கு, தடவை ஒன்றுக்கு நூற்றுக்கணக்கில் பத்துத்தடவையில் ஆயிரங்குதிரைகள் கொடுக்கும்படியும் கட்டளையிட்டார். அதனால் ஷைகு அலாவுத்தீனவர்கள் பெரிதும் மகிழ்கூர்ந்தார்கள்.

பின்பு சுல்தான் முகம்மது தாம் ஏறியிருக்கும் குதிரையைவிட்டுக் கீழேயிறங்கிக் காலிற்பூண்டிருந்த செருப்பைக் கழற்றி வெறுங்காலோடே நின்று கைகட்டி பதாயிது நகரத்தை நோக்கி "அஸ்ஸலாமு அலைக்கும் யா சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு" என்று ஸலாம் கூறித் தலைசாய்த்துக்கொண்டு, அங்கிருந்து காலின் நடையாக நடந்தார். அவருடைய உரிமைச்சுற்றம் பின் தொடர்ந்து வந்தது. அதன்பின்னே அவர் சேனை திரண்டுவந்தது.

பகைவர் அடங்க அடக்கி ஆள்கின்ற கூரிய வாள் ஏந்தும் கையினையுடைய சுல்தான் முகம்மது வெகுதூரமளவும் கால்நடையாய் நடந்து, பதாயிது நகரத்திற்குள்ளே புகுந்தார்; அவர் சேனையும் பின்னே நுழைந்தது. அவர் தம் உரிமைச்சுற்றத்தோடே முன்போலக் கைகட்டித் தலைசாய்த்தவராய், நாயகமவர்கள் இருக்கும் மாளிகையைத் தேடிக்கொண்டு வந்தார். ஆசையென்கின்ற கடலில் விழுந்து மிதந்து ஊழ்வினையென்கின்ற அலைகள் அடித்து ஒதுக்க மோக்ஷமென்கின்ற கரையிடத்துவந்து ஒதுக்குண்டாற்போல சுல்தான் முகம்மது நாயகமவர்களின் மனைவாசலில்வந்து, தம்முடைய சிறந்த மணிமுடிபூண்ட சிரசை அவ் வாசற்படிமீது வைத்துக்கொண்டு, கண்ணீர் பெருகியோட அழுதவராய் விழுந்து கிடந்தார்.

பிறர் யார்க்கும் சாய்க்கப்படாத சிரசை நாயகமவர்களின் மாளிகை வாசற்படிமீது வைத்து அழுதுகொண்டு கிடந்தவர் வெகுநேரத்திற்குப்பின் எழுந்து, அவ் வாசற்காப்பாளரை நோக்கி "எங்களில் நின்றும் மிக மேம்பாடுள்

ளவர்களான நாயகமாரே! நீவிர் மனதிரங்கி நாயகமவர்கள்
சமூகத்திற்சென்று 'ஹாம் ராச்சியத்தை ஆளும் முகம்மது
என்கின்ற ஹாஜிறஜபு தங்கள் திருவடிகளைத் தரிசித்துத்
தலைமீது சுமந்துகொண்டு முரீதாவதற்காக வந்து, வாசற்
படியில் விழுந்து கிடக்கின்றான்' என ஓர்சொல் சொல்ல
வேண்டும்" என்று பணிந்தமொழியுடன் சொல்லிக் கெஞ்
சி மன்றாடினார். அவ் வாசற் காவலாளர்க்குத் தமது பொக்
கிஷங்களுள் ஒரு பொக்கிஷத் திரவியத்தில் அரைப்பங்
கு கொடுக்கும்படியும் கட்டளை பண்ணினார்.

அவ்வாசற் காப்பாளர் அவர் இரந்து கேட்டுக்கொண்
டவுடன் நாயகமவர்கள் சமூகஞ் சென்று, அவர் சொன்ன
படி தெரிவித்தார்கள். அதனைக்கேட்ட நாயகமவர்கள் அ
வரை உள்ளே வரவிடும்படி உத்தரவு செய்தார்கள். இவ்
வுத்தரவு பெற்றவர்கள் மீண்டுவந்து, உள்ளேபோகும்ப
டி சொன்னார்கள். உடனே சுல்தான் முகம்மது உரிமைச்
சுற்றத்தார் மாத்திரம் பின்வர மாளிகைக்குள் புகுந்து; நா
யகமவர்கள் எதிரே ஆசனத்தின்மீ திருக்கக் கண்டு மகிழ்ந்
து, தூரத்தே விலகி, சுல்தான் சமூகத்துக் குடிகள் நிற்ப
துபோல மிகத் தாழ்மையாய் நின்றுகொண்டு ஸலாம்
சொன்னார். நாயகமவர்கள் அவரை ஏறிட்டு நோக்கிப் பி
ரதி ஸலாம் பகர்ந்தார்கள்.

நாயகமவர்கள் பிரதிசொன்னவுடன் சுல்தான் முகம்
மது தாம் அழைத்துவந்த தாதிமார்களுள் ஆயிரம் பேர்க
ளை மாளிகைக்குள் அழைத்துவரும்படி கட்டளையிட்டார்.
உடனே அழகிற்சிறந்த வாலிபப்பெண்கள் ஆயிரம்பேர்
அம் மாளிகைக்குள் கொண்டுவரப் பட்டார்கள். அவர்க
ளெல்லாரையும் சுல்தான் முகம்மது நாயகமவர்களின் எதி
ரே நிறுத்தி "யா ஸையிதீ, இத்தாதிமார் அனைவரையும் தங்
கள் திருவடிகளுக்கு வெகுமதியாகக் கொண்டுவந்தேன்.
இவர்களைத் தொழும்பிகளாகத் தாங்கள் ஏற்றருளவேண்

டும். அன்றியும், தமியேன் தங்கள் திருக்கரம்பற்றி முரீதாய், தொண்டர்க்குத் தொண்டனாக நாடிவந்தேன். தேவரீர் உள்ளம் இரங்கித் தமியேனையும் ஆதரித்துக்கொள்ளல் வேண்டும்" எனப் பரிந்து கூறினார்.

சுல்தான் முகம்மது இவ்வாறு வேண்டிக்கொண்டபோது நாயகமவர்கள் கருணைகூர்ந்து அவரை அருகில் அழைத்து இருக்கச்செய்து, அவர்செய்த வெகுமதியை ஏற்று, அவர்க்கு பாத்தின் உடைய இல்முகளில் தீர்மானமான சிலவற்றைப் போதித்துத் திக்றை உணர்த்தி முரீதாக்கி, தங்கள் மகிமைபெற்ற கண்களால் கூர்த்த நோக்கமாக ஒருதரம் நோக்கினார்கள். உடனே அவர்க்கு அல்லாகுத் தஆலாவுடைய முஹப்பத்தும் மஅரிபத்தும் உண்டாய், உலக இச்சையெல்லாம் அற நீங்கி முத்திநிலைபெற்றார். அவர் இருதயம் துறவுநிலைமையில் தரிபாடாயிற்று. அப்போதே தம் மனைவி மக்கள் திரவியம் பிறபொருள் எல்லாவற்றையும் வெறுத்து, தம் சொத்துக்களையெல்லாம் எளியோர்க்குத் தானமாக்கொடுக்கக் கட்டளைபண்ணினார். அந்த நிமிஷத்திலேயே அவர் எல்லாவற்றையும் துறந்து [illegible]தால் நாயகமவர்கள் எழுந்து அவருடைய இருகைகளையும் பிடித்துக்கொண்டு "உம்முடைய றப்பைப் பாரும்" என்றார்கள்; உடனே அவருடைய மனக்கண்ணுக்கு அல்லாகுத் தஆலாவின் தஜல்லி வெளியாயிற்று. இதனை அச்சபைக்கண் உள்ள பெரியோர்கள் எல்லாரும் வியப்புடன் பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அதன் பின்னர் நாயகமவர்கள் தங்கள் முன்னே நிற்கின்ற தாதிமார் ஆயிரம்பேரையும் ஒரு பார்வை பார்த்தார்கள். அவர்களும் அப்போதே புடம் இட்ட பொன் போலச் சுத்தமாய்விட்டார்கள். அவர்களையும் நாயகமவர்கள் "உங்கள் றப்பைப் பாருங்கள்" என்று ஏவினார்கள். அவர்களுக்கும் அப்போதே அல்லாகுத் தஆலாவின் தஜல்

லி வெளியாயிற்று. ஆகவே அப் பெண்கள் எல்லாரும் உடனே துறவுபூண்டார்கள்.

பின் நாயகமவர்கள் ஹாஜி றஜபு என்னும் சுல்தான் முகம்மதுக்கு கிற்காக்கள் போர்த்து, தங்கள் சீஷர்களுள் ஒருவராக என்றைக்கும் நீங்காது பக்கத்தே யிருக்கும் வண்ணம் நியமித்தார்கள். அவரைப் போலவே அவரோடு வந்த சில மந்திரி பிரதானிகளும், இராசகுலத்தாரும், தனவந்தரும், இன்னிசைபாடும் பாணரும் நாயகமவர்களிடத்துத் தீக்ஷை பெற்றுத் துறவிகளாய், அவர்களின் திருவடித் தொண்டர்களாய் அமர்ந்தார்கள்.

இவ்வளவும் நிகழ்ந்தபின் சுல்தான் முகம்மது, வெகுமதிகொடுத்த தாதிகள் ராகம்பாட ஆரம்பித்தார்கள். நாயகமவர்களும், அவர்கள் சபையில் கூடியிருக்கும் ஔலியாக்களும், அல்லாகுத் தஆலா வின் இணையற்ற இஷ்கு என்னும் அலைகடலில் முழுகித் தம்மைமறந்து போகும்படியாய் அவர்கள் இசைபாடினார்கள். பெண்கள் பலர்கூடிப் பாடினும் ஒரே குரல் இசைப்பதுபோலக் கேட்போர் பேராநந்தம் அடைய அருமையான கீதங்கள் பாடப்பட்டன. அப்பெண்கள் பாடுவதெல்லாம் அடியில்வருமாறு சிறப்பான பொருள்கள் அமைந்த பைத்துகளாயிருந்தன. அவை:—

கொச்சகக்கலிப்பாக்கள்.

80.* ஆதார முமமையு மாதேய முமல்லா
தேதின்றி நாளு மிருப்பவன்றான் யாரே
எதின்றி நாளு மிருப்பவனைக் காணாதார்
மேதகு சீரொரு வீட்டுலகம் போகாரே.

81. முன்னாகிப் பின்னா முடியாது முற்றாக
எந்நாளுந் தானா யிருப்பவன்றான் யாரே

* இச்செய்யுட்கள் மூன்றும் ஆரிபுநாயகம் சுல்தான் முகம்மது முரீதானபடலத் துள்ளவை.

எந்நாளுந் தானா யிருப்பவனைக் காணாதார்
வின்னமில் லாதழிவொரு வீட்டிலகம் போகாரே.

82, போகனாய்ப் போகப் பொருள்க ளயக்கருளி
ஏகனாய் நாளு மிருப்பவன்றன் பாரே
ஏகனாய் நாளு மிருப்பவனைக் காணாதார்
வேகமாய்ப் போநுமொரு வீட்டிலகம் போகாரே.

என்று பலவகைப் பேரின்பப்பொருள் உள்ள இன்னிசைப் பாட்டிக்களை அப் பெண்கள் பாடும்போது, நாயகமவர்கள் அல்லாஹுத் தஆலா வின் வேட்கையில் மூழ்கிப் போனார்கள். இவ் வின்னிசைப்பாட்டு மகுரிபு நேரத்தின் பின்னர்த் தொடங்கி, இஷா நேரமளவும் பாடப்பட்டது. இஷா வானவுடன் நாயகமவர்கள் முதலான எல்லாரும் தெளிவுற்று அந்தத் தொழுகையைத் தொழுதுகொண்டு, பஜ்று நேரம் வருமளவும் இன்னிசை கேட்டார்கள். பஜ்று ஆனவுடன் அதன் தொழுகையைத் தொழுதுகொண்டு, லுகறு நேரம் அளவும் கேட்டார்கள். லுகறு வந்தவுடன் அத் தொழுகையைத் தொழுது முடித்து, அஸறு வேளைவரையும் கேட்டார்கள். அஸறு வரவே அதன் தொழுகையைத் தீர்த்துக்கொண்டு, மகுரிபு அளவும் கேட்டார்கள். மகுரிபு தொழுகையைத் தீர்த்துவிட்டு, இஷா வரையும் கேட்டார்கள். இவ்வாறு இரவுபகலாக ஊண் உறக்கம் இன்றி நாயகமவர்களும், அவர்களின் சபையில் உள்ள ஔலியாக்களும், வேறுபாராக்கு அற்று அல்லாஹுத் தஆலா வின் இஷ்கில் மூழ்கினவர்களாய், ஏழுமாதங்கள் வரையும் இன்னிசை கேட்டுக்கொண்டிருந்தார்கள். தொழும் வேளை ஆனவுடன் அத் தொழுகையைமாத்திரம் முடித்துக்கொண்டு இசை கேட்பார்கள். இவ்வாறாக ஏழுமாதங்கள் சென்றபின், அச் சபையில் இன்னிசை பாடுதல் நிறுத்தப்பட்டது.

றூமி ராச்சியத்து அமீரா கிய சுல்தான் முகம்மது என்பவர் நாயகமவர்களிடத்துவந்து முரீதாய் உலகவாழ்க்கை

யை விட்டுத் துறவுபூண்டு அவர்கள் திருவடித்தொண்டரா யிருக்கின்றூர் என்பதை ஷாம் தேசத்து அமீராய் திமஷ்கு நகரத்தில் இருந்த இஸ்மாயீல் என்பவர் அறிந்து, அவரும் புறப்பட்டு நாயகமவர்களிடம் வந்து முரீதாய்த் துறவுபூண்டார். இவ்விரு அரசர்கள் அன்றி, இருக்கு தேசத்து அரசராய் பகுதாது நகரத்தில் இருந்த * ஹாறூன் என்பவரும் அவ்வாறே அவர்கள்பால் முரீதாய், தொண்டருள் ஒருவராயிருந்தார்.

இவ்வரசர்கள் நாயகமவர்களுக்குத் தொண்டர்களாயிருந்ததும் அல்லாமல், பல பாகங்களிலும் உள்ள சிறந்த ஒலி மார்களும் எண்ணிறந்தபேர்கள் நாயகமவர்களிடத்து வந்து முரீதாய், அவர்களின் பாதசேவையில் அமர்ந்திருந்தார்கள். இவ்வித மகிமையுள்ள முரீதீன் கள் அநேக ஆயிரம்பேர் நாயகமவர்களுக்கு உண்டாயிருந்தார்கள். நாயகமவர்களின் மகத்துவம் வரவர மிக்குவந்தது. இதனிடையில், பகுதாது நகரத்தில் இணையற வீற்றிருந்த குத்புஜ் ஜமான் சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் உபாத்தாய் விட்டார்கள். அவர்கள் இருந்த பதவியில் நாயகமவர்கள் அமர்ந்து, குத்புஜ்ஜமானும், கௌதுல் அகுலமு மாய் வீற்றிருந்தார்கள். உலகத்து ஒலி மாரெல்லாம் நாயகமவர்களுக்குக் கீழ்ப்படிந்து, அவர்களின் ஆணையாசக்கரத்துள் அடங்கியிருந்தார்கள். உலகத்துச் சர்வாதிகாரத்தையும் நாயகமர்களுக்கே அல்லாஹ் தஆலா கொடுத்திருந்தான். மஷ்றிகு தொடுத்து மகுறிபுவரையும் நாயகமவர்களின் அதிகாரம் சென்று நடைபெற்றது. நாயகமவர்கள் தங்களுக்கு ஒரு ஒப்பும் உயர்வும் இன்றி வாழ்ந்திருந்தார்கள். அற்புதங்களும் அடுத்தடுத்து நிகழ்ந்துகொண்டிருந்தன.

சுல்தான் முகம்மது முரீதானது

முற்றிற்று

---

* இவர் பகுதாது நகரத்து இருந்த கலீபா சுல்தான் ஹாறூன் றஷீது அல்லர்.

33 - ம் அத்தியாயம்.

## உம்ழுல் கருமாத்து.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அதுமதுல் கபீறு றலீயல்லாகு அன்கு அவர்களால், உம்ழல் கறமாத்து என்று ஒரு பெண் நியமிக்கப்பட்ட வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:- சைகு இபுறஹீமுல் அதுறபு.]

சுல்தானுல் ஆரிபீன சையிது அகுமதுல்கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்தில் இணையில்லாத மகத்துவத்துடன் வாழ்ந்திருக்கும் காலத்தில் ஒருநாள், தங்கள் ஆசனத்தின்மீது வீற்றிருந்து சமுகத்தே கூடியிருக்கும் பெரியோர்களுக்கு அல்லாகுத் தஆலா வின் முஹப்பத்தையும் மஅரிபத்தையும்பற்றி விளக்கமாகப் பேசிக்கொண்டும் அவர்களுக்கு அறிவு கற்பித்துக்கொண்டும் இருந்தார்கள். அப்போது பகுதாது நகரத்திலிருந்து ஒரு எளியவர் நாயகமவர்கள்சமுகத்தில் வந்து அடிபணிந்து ஸலாம் சொல்லி நின்றார். நாயகமவர்கள் அவர்க்குப் பிரதி ஸலாம் பகர்ந்தார்கள். பின்பு அவ்வெளியவர் நாயகமவர்களை நோக்கி "யாசையிதீ, தமியேன் மிக்க எளியவன். உண்ணுதற்குக் கீழ்த்தரமான ஆகாரமும், உடுத்துதற்குப் பழமையான ஆடையும் எனக்குக் கிடைப்பது இன்றி வருந்துகின்றேன். ஆதலால், தமியேனுக்குத் திரவியம் உண்டாய் நாடியதை அநுபவித்துச் சுகத்தோடு இருக்கும்படி அல்லாகுத் தஆலா இடத்துக்கேட்டு அருளவேண்டும்" என்று முறையிட்டார்.

தம்முடைய இல்லாமைதீரப் பொருள் உண்டாய் வாழ்வுபெறவேண்டும் என்று அவர் கேட்டதற்கு நாயகமவர்

கள் யாதொரு பிரதியும் சொல்லாமல், அச்சபையினிடத்து இருந்த தங்கள் மருகர் ஸையிது அபுல்ஹஸன் அலியை நோக்கி: இப்போது நீர் கடைவீதியிற்போய் ஒரு வெள்ளாட்டியைக் கிரயத்திற்கு வாங்கிக்கொண்டு வாரும் என்று சொல்லி அநுப்பினார்கள். அவர்கள் உடனே கடைவீதியிற்சென்று அங்குள்ள ஓர் அடிமைவர்த்தகரிடத்து விலைகொடுத்து ஒரு பெண்ணை வாங்கிக்கொண்டுவந்து, நாயகமவர்கள் சமுகத்தில் விடுத்தார்கள். அவள் நடுவயதுள்ள அழகியா யிருந்தாள்.

நாயகமவர்கள் தங்கள் சமுகத்து விடப்பட்ட அப்பெண்ணை அருள்நிறைந்த கண்களாற் கூர்க்கப்பார்த்தார்கள். பார்த்தபோதே அவள் குற்றந்தீர்ந்த மாணிக்கம் போலும், களங்கம் அற்ற முழுமதிபோலும் சிறந்து, பரிசுத்தமாய் விளங்கினாள். அவள் மனமும் மிக்க தெளிவடைந்தது. அல்லாகுத் தஆலா வின் முஹப்பத்தும், மஅரிபத்தும் உண்டாய், கருமாத்துடைய வாசலும் அவளுக்குத் திறக்கப்பட்டது. பின்பு நாயகமவர்கள் திருவாய்மலர்ந்து "உம்மூல்கருமாத்து" என்று அவளுக்குப் பெயரிட்டார்கள்.

இவ்வரிய திருநாமம் அவளுக்கு இடப்பட்ட போதே அவளைக் கருமாத்துத் தாய் என்று உலகம் சொல்லும்படி யாயிற்று. உண்மையாகவே அவள் அற்புதங்களுக்கு மாதாவே யாயினாள். நாயகமவர்கள் அவளை நோக்கி "நீ இன்றுமுதல் உனக்கென்று ஏற்படும் மனைவாசலில் இருந்துகொண்டு, இவ்வுலகவாழ்வை விரும்பிவருபவர் அனைவர்க்கும் அவரவர் நாடிக்கேட்பதைக் கொடுத்து உதவி செய்வாயாக" எனக் கட்டளை பண்ணி, அவள் குடியிருப்பதற்கு ஒரு மனையும் நியமித்து அநுப்பினார்கள். நாயகமவர்கள் இட்ட கட்டளைப்படி அவள் அம்மனைக்குச் சென்றாள். பகுதாது நகரத்திலிருந்துவந்த அவ்வெளியவரை அவளிடம் போகும்படி அநுப்பினார்கள்.

உம்முல் கருமாத்து என்பவள் நாயகமவர்கள் கட்டளைப்படி தன் மனை வாசலில் உட்கார்ந்துகொண்டு, உலக வாழ்க்கையில் விருப்புற்று வருவோர்க்கு அவரவர் நாட்டத்தை நிறைவேற்றத் தொடங்கினாள். முதலாவதாக அவள் பகுதாதில் இருந்து வந்த எளியவரையே சீமான் ஆக்கினாள். அதிகமான வறுமையில் வருந்தின அவர் அவள் பொருட்டால் பெருந்திரவியவந்தராய், சகல சுகாநுபவத்தோடு வாழ்ந்திருந்தார். அன்று முதலாக நாயகமவர்கள் அல்லாகுத் தஆலாவை நாடி வருவோரைத் தங்களிடத்தும், உலகவாழ்க்கையை நாடி வருவோரை உம்முல் கருமாத்து என்னும் அவளிடத்தும் அநுப்பிவரும்படி மருமகனார்க்குக் கட்டளை பண்ணினார்கள். தங்கள் மாளிகையின் வாசற் காப்பாளர்க்கும் இவ்வாறே கட்டளையிட்டார்கள்.

உம்முல் கருமாத்து என்பவள் அன்றுமுதற்கொண்டு செய்துவரும் அற்புதமான கருமாத்துகளுக்கு அளவில்லை. இறந்தவர்களை உயிர்ப்பிக்கின்றதும், அஇயான் என்னும் ஊழை மாற்றுகின்றதும், ஒலி மாரும் திடுக்கிடக் கூடிய கருமங்களைச் செய்கின்றதுமாய் விளங்கினாள். நோயாளர், பேய்ப் பிடித்தோர், பின்னும் பலவாறு வருந்துவோர் எல்லாரும் அவளிடத்து வந்து சுகம் பெறுவார்கள். எளியவர் வந்தால், வந்தநிமிஷத்திலேயே சீமானாக்கி விடுவாள். கவலையாளர் வந்தால், அந்நிமிஷமே மகிழ்ச்சியடைவார்கள். இவ்வகை அற்புதங்கள் நாள் தோறும் நிகழ்ந்துகொண்டிருந்தன. சைகுறலியல்லாகு அன்கு அவர்களின் வெள்ளாட்டி ஒருத்தி உம்முல் கருமாத்து என்று பெயர் வாய்ந்து, அரிய பெரிய அற்புதங்களையெல்லாம் செய்கின்றாள் என்று எங்கும் பிரஸ்தாபமாயிற்று. பல தேசத்தாரும் திரள் திரளாய் அவளிடம் வரத் தலைப்பட்டார்கள். உலக இச்சையை நாடிவரும் எல்லார்க்கும் அவள் அவ்வந் நாட்டத்தை நிறைவேற்றி அநுப்புவாள்.

உம்முல் கருமாத்து இவ்வாறாக அற்புதங்கள் நிகழ்த்தும் காலத்து, ஒருமனிதர் அவளைச்சோதிக்கவேண்டும் என்று கருதி, ஒருநாள் அவளிடத்துவந்து பணிந்துநின்று "மகிமைபெற்ற அற்புதமாதாவே, நான் ஒரு எளியவன். இவ்வூர்க்கு அமீரா யிருக்கவேண்டும் என்று என்மனம் விருப்பமுறுகின்றது. ஆதலால், நீர் என்மன எண்ணம் நிறைவேறும்படி என்னை அமீராக்கிவிடவேண்டும்" என்று சொல்லி முறையிட்டார். இதைக்கேட்ட உம்முல் கருமாத்துச் சற்றுநேரம் தலைகவிழ்ந்திருந்து பின் சிரித்துக்கொண்டு நிமிர்ந்து, அங்கேகிடந்த சக்கல்குற்றி யொன்றை எடுத்து ஒரு சாணளவு ஒடித்து, அதனை அவர் தலைப்பாகையிற் செருகிவிட்டு, அவரைப்பார்த்து "நீர் இவ்வூரில் இராதீர். வெளியே புள்ள மைதானிற்போய் என் உத்தரவுவருமளவும் அங்கேயேயிரும். நான் அனுப்பும் ஆள்வந்து உம்மை அழைத்தால், நீர் அங்கிருந்து வரவேண்டும்" என்று கட்டளையிட்டு, அவ்வாறே அவரிடம் வார்த்தைப்பாடு வாங்கிக்கொண்டு அனுப்பினாள். அவள் கட்டளைப்படி அவர் ஊரைவிட்டுப் போய் மைதானில் தங்கியிருந்தார்.

அவர் அங்கேபோய்த் தங்கின சற்றுநேரத்திற்கெல்லாம் அவ்வூர் அமீருடைய மந்திரி பிரதானிகளும் சேனைவீரர்களும் குடிகளும் பெருங்கூட்டமாய்த் திரண்டு, முரசு முதலான விருதுகளோடே பொக்கிஷங்களையும் எடுத்துக்கொண்டு அந்த மைதானத்துக்குப்போய், அங்கிருக்கும் அம்மனிதரை அடுத்து நின்று, தாங்கள்தாம் எங்கள் அமீர் என்று அவர் கையைத்தொட்டு பைஅத்துக் கொடுத்தார்கள். கொடுத்தபின் எல்லாரும் அம்மைதானிலேயே கூடாரங்கள் இட்டுத் தங்கி, அம்மனிதரைக் குதிரைமீது ஏற்றி விருதுகள்பிடித்துப் பவனி சுற்றினார்கள். அப்போது அவரைக்கண்டவரெல்லாம் கைகொட்டு, தாங்கள் எங்கள் அரசர் என்று சொல்லி வாழ்த்தினார்கள். இச்சமாசாரம் எங்கும் பிரபலமாயிற்று.

இஃது இவ்வாறாக, அவ்வூர் அரசர் தம்முடைய அரசையிழந்து ஒரு எளியவரானார். தமக்குரிய அரசாங்கம் அனைத்தையும் நாயகமவர்களின் வெள்ளாட்டியாகிய உம்முல் கருமாத்து என்பவள் கவர்ந்து, ஒரு எளிய அயலானுக்குக் கொடுத்துவிட்டாள் என்பதை அவர் அறிந்து, நாம் இனி என் செய்வோம்! என மனக் கலக்கம் உற்று, அவளிடத்துச் சென்றுதான் முறையிட்டு அழுது இரந்து கேட்கவேண்டுமே என்று கருதி, தம் இருக்கையைவிட்டு எழுந்து கால்நடையாய்த் தனியே நடந்து உம்முல் கருமாத்து இருக்கும் மனைவாசலில் வந்து அழுதுநின்று "உம்முல் கருமாத்தே, நீர் நியாய விரோதமான கருமத்தைச் செய்தீர் என்று உலகம் சொல்லுமாறு என்னுடைய அரசைக் கவர்ந்து ஒரு எளியவனான அயலானுக்குக் கொடுத்துவிட்டீர். நான் அரசாண்டது போய் எளிபவனாய்விட்டேன். இனி நான் முன்போல் முடிபூண்டு அரசாள வேண்டும். என்மீது நீர் இரக்கமுற்று என்னை அரசனாக்குவீராக" என்று பரிதாபத்தோடே முறையிட்டார்.

அரசிழந்தவர் இட்ட முறைப்பாட்டைக்கேட்ட உம்முல் கருமாத்து கண்களில் அக்கினிப்பொறி தெறிப்பப் பெரும் கோபத்தோடு அவரை நோக்கி "ஏ, மதிகெட்ட மனிதனே, நேற்று உன் இருதயத்தில் என்ன நினைத்தாய்? எண்ணிப்பார். 'சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களை அவர்கள் முரீதீன்களெல்லாரும் வழிபட்டிருக்கின்றார்கள். எதுபோல வெனில்:— அந் நாயகமவர்களும், அவர்கள் முரீதீன்களும், அவர்கள் அல்லாத மற்றவர்களும் நமக்கு வழிபட்டிருப்பது போல்' என்று நீ நினைக்க இல்லையா! அவ்வெண்ணந்தான் உன் அரசைக் கவர்ந்தது" எனச் சொன்னாள்.

இச்சொல்லை அவ்வரசர்கேட்டு "ஆம்; நான் இவ்வாறு நினைத்தது மெய்தான். அம்மா! மதியற்ற தன்மையால்

இப்படி நினைத்தேன். அது குற்றமேயாம். நான் அறிவின்றிச் செய்த அக்குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று கூறி அழுதார். உம்முல் கருமாத்து அவர் அழுவதைப் பார்த்து மனம் இரங்கி, மறுதரம் அவரைநோக்கி "நீ செய்த குற்றத்திற்குத் தண்டனையாக மூன்றுதினம் வரையும் சுல்தானுல் ஆரிபீன் அவர்கள் மாளிகைவாசலிற் போயிரு. அதன்பின் முன்போல அரசனுவாய்" எனக் கட்டளை பண்ணினுள். இதைக்கேட்ட அவ்வரசர் அழுதுகொண்டு நாயகமவர்களின் மாளிகைவாசலிற் சென்று இருந்தார்.

உம்முல் கருமாத்து அவரை அனுப்பிவிட்டுத் தன் தொண்டருள் ஒருவனை அழைத்து: மைதானிலே புதிய அமீராக நியமிக்கப்பட்டிருக்கும் மனிதனை நான் அழைத்துவரச்சொன்னதாகச் சொல்லிக் கூட்டிவா என்று ஏவி அனுப்பினுள். அவன் ஊர்க்கு வெளிப்பக்கத்தேயுள்ள மைதானிற்போய் அப்புதிய அமீரை உம்முல் கருமாத்து அழைக்கின்றுள் எனச்சொல்லி அழைத்தவுடன் அவர் மந்திரிகள், பிரதானிகள், சேனைகள் சூழப் பொக்கிஷம் முதலானவைகள் அனைத்தும் பின்வரப் புறப்பட்டு மைதானைவிட்டு ஊர்க்குள்வந்து, உம்முல் கருமாத்துடைய சமுகஞ்சென்று ஸலாம் கூறிப் பணிந்துநின்றுர்.

அப்போது உம்முல் கருமாத்து அப் புதிய அமீரோடு வந்த மந்திரி முதலான கூட்டத்தார் அனைவரையும் நோக்கி "ஜனங்களே, இவர் உங்கள் அமீர் அல்லர்; உங்கள் அமீர் சைகு றலியல்லாகு அன்கு அவர்களின் மனைவாசலில் இருக்கின்றுர். இவர் இப்போது ஒரு காரணத்தினுல் அமீராக நியமிக்கப் பட்டார். ஆதலால், இவரை நீவிர் விட்டுவிட்டு, உங்கள் பழைய அமீரிடஞ் சென்று அவர்க்கு வைத்துக் கொடுத்து, என்றும்போல அவரையே அமீராக்கிக்கொள்வீர்களாக" என்று உத்தரவு செய்தாள். செய்துவிட்டு, பின் புதிதாய் அரசவேஷம் பூண்டிருப்போரை

நோக்கி "அல்லாகுத் தஆலா வின் இடத்திருந்து அதிகாரம் பெற்றுள்ள மனிதரைச் சோதிக்கநாடி விருதாவிற் புறப்பட்டு வந்தவரே, உமது தலைப்பாகையிற் செருகியிருக்கும் குற்றியை எடுத்து எறிந்துவிடும்" என்று சொன்னாள். இதைக்கேட்ட அவர் அச்சமும் வெட்கமும் அடைந்து அதனை யெடுத்து எறிந்து விட்டு "அம்மா, நான் குற்றஞ்செய்தேன்; மன்னித்தருளவேண்டும்" என்று மன்றாடி மன்னிப்புப் பெற்றுக்கொண்டார்.

அதன் பின் அங்கு நின்ற மந்திரிமுதலான கூட்டத்தாரனைவரும் அவள் கட்டளைப்படி நாயகமவர்களின் மாளிகை வாசலில் தண்டனை பெற்றிருக்கும் அரசரிடஞ் சென்று, அவர் கையைத்தொட்டு பைஅத்துக் கொடுத்தார்கள். பொக்கிஷம் முதலான எல்லாம் அவர் வசம் ஒப்புவிக்கப்பட்டன. அவர் எண்ணிய துரெண்ணத்தின் நிமித்தம் சில தினம் அரசிழந்து இருந்து, பின் பண்டு போல அரசரானார். மூன்று நாட்களுஞ் சென்றன. பின்பு அவ்வரசர் உம்முல் கருமாத்து இடம் உத்தரவு பெற்றுக்கொண்டு, தம்முடைய இராசசின்னங்களுடன் அங்கிருந்து தம் மாளிகை சேர்ந்து அரசாண்டு இருந்தார்.

நாயகமவர்களின் வெள்ளாட்டியாகிய உம்முல்கருமாத்து இவ்வகைப்பட்ட அற்புதங்களை நடத்திக்கொண்டு சில காலம் இருந்தாள். அவளால் அநேகர் உலகவாழ்வில் பலன் பெற்று வந்தார்கள். பின் அல்லாகுத் தஆலா அவளுக்கு நியமித்த நிரியாணகாலம் வந்தபோது, இவ்வுலக வாழ்வை விட்டு அவள் பிரிந்தாள். அவள் நிரியாணம் அடைந்த பின் மனிதர்கள் மிக வருந்தினார்கள். பழுத்துக் குலுங்கி நின்ற ஒரு விருக்ஷத்தை விரும்பிவந்து சூழ்ந்து கிடந்த பக்ஷிகள், அவ் விருக்ஷம் பழுத்து ஓய்ந்தபின் எவ்வண்ணம் மறுகுமோ அவ் வண்ணம் மறுகினார்கள்.

உம்மூல் கருமாத்து நிரியாணமானபின் மனிதர்கள் வருந்துவதை நாயகமவர்கள் அறிந்து, தங்கள் மருகரை அழைத்து: உலகவாழ்க்கையில் விருப்புறுவோரை உம்மூல் கருமாத்து இருந்த மனைவாசலிற்சென்று நின்று தம் தம் நாட்டத்தைச்சொல்லிக் கேட்கும்படி ஏவுவீராக எனக் கட்டளைபுண்ணினார்கள். அவ்வாறே அவர்கள் உலகவிருப்பத்தைநாடி வருவோரை அவள் இருந்த வீட்டுவாசலிற் சென்று கேட்கும்படி ஏவிவந்தார்கள். ஜனங்கள் அவ்வாறே கேட்டு, பல பலன்களையும் பெற்றுவந்தார்கள். உம்மூல் கருமாத்துடைய ஜீவியகாலத்து அற்புதங்கள் நிகழ்ந்த வண்ணமே நிரியாணத்தின் பின்னரும் நிகழ்ந்துவந்தன.

உம்மூல்கருமாத்து

முற்றிற்று.

---

34-ம் அத்தியாயம்.

## சங்கீத விசாரம்.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களிடத்தில் சங்கீதத்தைப் பற்றி விசாரித்ததும், அவர்கள் அதற்குச் சொன்னவைகளுமான வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— இபுறஷீமுல் அதுறபு.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுற் றபாஇறலியல்லாகு அன்கு அவர்கள் சங்கீதம் கேட்பதில் அதிக விருப்பமுள்ளவர்களா யிருந்தார்கள். அவர்கள் சபையினிடத்துச் சில சமயங்களில் சங்கிதம் பாடுதல் நடைபெறும். அதனைக் கேட்கும் எல்லாரும் அல்லாகுத் தஆலாவின் இஷ்கிலே முழுகிப்போவார்கள். அவ் விசைப்பாட்டு ஆரம்பிக்கும் போதே எல்லாரும் முஷாஹதா வுடைய நிலைமையில் ஆகித் தம்மை இல்லாமையாக்கி ஒன்றுபட்டுக்

கிடப்பார்கள். அப்போது அங்குள்ள சுவர்களும், நிலைகளும், மற்றவைகளும் ஆடி அசைந்து அழும். மனிதர் அழுத கண்ணீர்போல் அவற்றில் நின்று நீர் சுரந்து வழியும். நாயகமவர்கள் ஆசனத்தின் மீது வீற்றிருந்து இனிமையான ராகத்தைக் கேட்கும் போதும், இறுஷாது விஷயங்களைப் பிரசங்கிக்கும்போதும், அங்கே கூடியிருக்கும் ஆண் பெண் எல்லாரும் அல்லாகுத் தஆலாவின் இஷ்கிலே முழுகிநிற்பார்கள். ஆடவர்; பெண்களைப் பெண்களென்றும், பெண்கள்; ஆடவரை ஆடவரென்றும் அறியமாட்டார்கள். எல்லாரும் உணர்வற்று இருப்பார்கள். பிரசங்கங்கேட்டும் சுவர் முதலான அசேதனப் பொருள்களெல்லாம் கரைந்து அழாநிற்கும். அதுகேட்கின்ற விலங்கினங்களும், பறவைகளும் அவ்வாறே மனிதர்போல அழுது உருகாநிற்கும். இது என்றைக்கும் வழக்கமாயிருந்தது.

நாயகமவர்கள் ஒருநாள் பெரியோர் புடைசூழ ஆசனத்து வீற்றிருக்கையில் அச்சபையினிடத்து இன்னிசை பாடும் பாணன் ஒருவன் வந்து, தன்வீணையைமீட்டி வாசித்து இனிமையான்கீதங்களைப் பாடத் தொடங்கினான். இசைவிதி வழுவாது வீணையின் தொனியோடு ஒத்த குரலாக மிக மதுரமானவையும், கீழ்வருமாறு அத்துவிதப் பொருள் அமைந்தவையுமான சில பைத்துகளை அவன் பாடினான். அவை:—

கொச்சகக் கலிப்பாக்கள்.

1. * இருமையுந் தானா யிணைதீர்த்து நிற்கின்றான்
அருமையி னேமோ ரசைவற்று வாழ்நாதன்
அருமையி னேமோ ரசைவற்று வாழ்நாதன்
ஒருமையின் மாறு தலகிறந்தா னென்பவால்.

---

* இச்செய்யுட்கள் மூன்றும் ஆரிபுநாயகம் சங்கீதவிசாரப் படலத்துள்ளவை.

2. என்றுமொரு தானாகி யேகமாய் நிற்கின்றான்
பொன்றுத லின்றிப் பொருவற்று வாழ்நாதன்
பொன்றுத லின்றிப் பொருவற்று வாழ்நாதன்
ஒன்றினு மொன்று துலகிறந்தா னென்பவால்.

3. பெண்மையோ டாண்மை பிறபோகி நிற்கின்றான்
ஒண்மையி னுமோ ருருவற்று வாழ்நாதன்
ஒண்மையி னுமோ ருருவற்று வாழ்நாதன்
உண்மையி னென்று முலகிறந்தா னென்பவால்.

என இவ்வாறு பாடுகையில் நாயகமவர்களும், சபையிலுள்ள எல்லாரும், அல்லாகுத் தஆலா வின் இஷ்கி மே[illegible] முழுகிக் கேட்டுக்கொண் டிருந்தார்கள். அப்போது ளுஹறு வேளையாயிருந்தது. ளுஹறுடைய தொழுகையைத் தொழாமலேயே கேட்டுக்கொண்டிருந்தார்கள். பின் ளுஹறு பிந்தி அஸறு வேளை அடுத்தது. சபையில் உள்ள எல்லாரும் அதனை யறிந்து, நாயகமவர்கள் இன்னிசை கேட்டுக்கொண் டிருக்கின்றார்களே! இசைப்பாட்டை நிறுத்தித் தொழாமல் இருப்பதால், இனி அஸ்று வந்துவிடுமே என அஞ்சிக் கலக்கம் எய்தினார்கள்.

எல்லாரும் இவ்வாறு கருதி அஞ்சினதை நாயகமவர்கள் அறிந்து ஆகாயத்துச் செல்கின்ற சூரியனை விளித்து "நீ கடந்து சென்ற ளுஹறுவேளையின் அளவுக்குத் திரும்பி வருவாயாக" என்று கட்டளை யிட்டார்கள். உடனே சூரியன் திரும்பி ளுஹறு வேளைக்கு உரிய தானத்தில் வந்தது. உடனே எல்லாரும் எழுந்து ளுஹறு தொழுதார்கள். தொழுதுவிட்டு, பின்னும் இருந்து அஸறு வரையும் இராகங்கேட்டார்கள். அஸறு வேளையானவுடன் எழுந்து தொழுதுமுடித்து, மகுரிபு வரையும் கேட்டார்கள். மகுரிபு வேளையில் அத் தொழுகையை முடித்துக்கொண்டு இஷா வரையும் கேட்டுக்கொண்டிருந்து, இஷா தொழுத பின் நாயகமவர்கள் சபையைவிட்டு எழுந்து வணக்கஸ்தானத்திற்குச் சென்றார்கள்.

நாயகமவர்கள் இவ்வாறு வீணைகானங்கேட்டு ஆநந்த முறுவது வழக்கமாயிருந்தது. அக்காலத்தில் சிலர் நாயகமவர்கள் சங்கீதங் கேட்பதைக் குறித்து வெறுப்புற்று, இன்னிசை கேட்பது இஸ்லாம் மார்க்கத்தில் விலக்கான கருமமாயிருக்கின்றது. அப்படியிருக்க, அம் மார்க்கத்தில் நம்மை நடத்தி மோக்ஷத்திற் சேர்க்கும் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களின் பௌத்திரரான இந் நாயகமவர்கள் அவ் வின்னிசையை மிக்க விருப்புற்றுக் கேட்கின்ற காரணம் யாது! இதனை நாம் அவர்கள் சமுகத்திற்சென்று கேட்டால் என்ன? என ஒருவர்க்கு ஒருவர் ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். அவர்களுள் துணிகரமுள்ள ஒருவர்: நானே நாயகமவர்களிடஞ் சென்று தாங்கள் சங்கீதங்கேட்கின்றீர்களே, அஃது ஆகுமா? என விசாரிக்கின்றேன். அவர்கள் மறுமொழி சொல்லட்டும் என்று சொல்லிவிட்டு, நாயகமவர்கள் சமுகத்தில் வந்து பணிந்து ஸலாம் சொல்லி இருந்து "யா ஸையிதீ, பலவகைக் கருவிகளைக்கொண்டும் பாடுகின்ற சங்கீதம் கேட்பது நமக்கு ஆகுமா? தமியேன் அறியச் சொல்லல்வேண்டும் எனக்கேட்டார். நாயகமவர்கள் கீழ்வருமாறு அதற்கு மறுமொழி சொன்னார்கள்:—

"சகோதரரே, எனக்கும், முஜ்தஹிது ஆன மற்றப் பெரியோர்க்கும் சங்கீதங் கேட்பது ஆகும்; அச் சங்கீதம் பாடுவோர் ஆடவராயினும், பெண்களாயினும் சரியே. வீணை முதலான எந்தக் கருவியைக்கொண்டாவது யார் பாடினும் கேட்குதல் எங்களுக்கு ஆகும். இனிய ராகத்தை நாங்கள் கேட்போமாயின், அவ் விராகம் அல்லாகுத் தஆலா வின் முஹப்பத் தைப் பொருந்திக் கொள்ளுதற்கு இருதயத்துக் கறையை அறுத்துப் போக்குகின்ற ஒரு கருவியாகும். எங்கள் இருதயத்தை அவ் விராகம் அல்லாகுத் தஆலா வின் சமுகத்தே கொண்டு நிறுத்தும். எங்களைப்போல நீவிரும் இருப்பீராயின், அது உமக்கும் ஆ

கும். அங்ஙனம் இல்லையாயின், உமக்கு விலக்கான ஹறா மேயாம். இன்பமான சங்கீதங்கேட்பது எங்களுக்கு சுன்னத்துப்போலும். அஃதொரு வணக்கமும் ஆம். ஓ! என் சகோதரீர், சங்கீதங் கேட்பது எங்களுக்கு உண்டான வழிகளுள் முடுகுதலான வழியாம். அவ் விராகங் கேட்பதின் ரகசியத்தை ஆரிபீன் களும், முஹிப்பீன் களும் அன்றி, பிறர் அறியார். ஒரு மஹ்பூபுக்கும், ஒரு ஹபீபுக்கும் இடையில் உள்ள ரகசியங்களுள் ராகங் கேட்பதும் ஒன்று. அகப்பார்வை உடையோர்க்கும், இருதயளர்க்கும் சங்கீதங்கேட்பது ஷௌஹுதாகும். மஹ்பூபும உஷாக்குகளுக்குள் தஜல்லியை உண்டுபண்ணுதற்கு ராகமே காரணமாகும். ஒரு பரிசுத்தமான இருதயத்தோடு அல்லாகுத் தஆலாவின் மீது வேட்கைவைத்து ராகங் கேட்பானாயின், அவனை அவ்விராகம் பாவத்தில் நின்று நீட்டுறப்பிடத்திற் சேர்த்தற்குக் காரணமாகும். மஹ்பூபுகள், மஉஷூக்குகள், ஆரிபுகள், காமில்கள் என்னும் இவர்களின் காரியம்: ராகங் கேட்குமிடத்து அல்லாகுத் தஆலாவின் இன்பத்தை அநுபவிப்பதேயாம். இதனை நீர் உய்த்து உணர்ந்து அறிவீராக"

என இவ்வாறு சொல்லிவிட்டுச் சற்றுநேரம் வாய்மூடியிருந்து, மறுபடியும் நினைத்து "சகோதரரே, அஃது ஒரு சிறிய அதனை அநுபவித்தபேர் அன்றி, மற்றவர் அறியார். அஃது எங்களுக்கே ஆகும்; எங்களுக்கே தெரியும்" என்று கூறினார்கள். இவ்வளவையும் கேட்டு அவர் வாய் மூடியிருந்துவிட்டார்.

சங்கீத விசாரம்.

முற்றிற்று.

35 - ம் அத்தியாயம்.

## தாதி முத்திபெற்றது.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் வெள்ளாட்டி ஒருத்தி முத்திபெற்ற வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு மகுமூது.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் வெள்ளாட்டிகளுள் கல்வியறிவு ஒருசிறிதும் இன்றி மூடத்துவம் நிறைந்த மனதையுடையவள் ஒருத்தி இருந்தாள். அவளுக்கு இஸ்லாம் மார்க்கத்து விதிவிலக்குக்கள் இன்னவையென்று தெரியா. நாயகமவர்கள் ஒருநாள் தொழுதுமுடித்துத் திரும்பி அவளைப்பார்த்து: தாகம் அதிகமாயிருப்பதால், பருகுதற்குத் தண்ணீர்கொண்டுவா எனக் கட்டளையிட்டார்கள். அவள் தண்ணீர்க் கரகம் ஒன்றை எடுத்துக் கொணர்ந்து அவர்கள் கையிற் கொடுத்தாள். நாயகமவர்கள் அதனை வாங்கி அதில் இருந்த தண்ணீரைக் குடித்துவிட்டு, அக் கரகத்தை அவள் கையிற் கொடுத்தார்கள்.

தாதி அக் கரகத்தைப் பார்த்தாள்; அதிற்கொஞ்சந் தண்ணீர் மிஞ்சியிருந்தது. அத் தண்ணீரை அவள்குடித்துவிட்டு, கரகத்தைக் கொண்டுபோய் வைத்திட்டாள்.

நாயகமவர்கள் குடித்துமிஞ்சிய தண்ணீரைத் தாதி குடித்தமாத்திரத்தில் அவளுடைய இயல்புமாறி, அல்லாகுத் தஆலா புறம் வாஸிலா வதற்குப் பக்குவமானாள். அவளுடைய முஹப்பத்து அவள்மீது பெருகிற்று. இருதயம் பரிசுத்தமாய், அவனுடைய தஜல்லி வெளியாய்த் துலங்

ஜிற்று. மஅரிபா வின் அறிவு முழுமையும் அவள் உள்ளத்திற் குடிகொண்டன. இருதயம் இல்மு கள் நிரப்பமாய்க் கடல்போல்விரிய, அடிக்கடி அல்லாகுத் தஆலா வைத் தரிசிக்கத் தலைப்பட்டாள்.

நாயகமவர்களின் தாதியாகிய அவள் இவ்வாறாய், நாட்குநாள் ஊண் உறக்கம் அற்றுப் பிரமைகொண்டாள். தொழுதல் முதலிய கடமையான கருமங்களை மாத்திரம் உணர்வுடன் முடித்துக்கொண்டு, மற்றவையெல்லாம் பிரமைபிடித்தவண்ணமா யிருப்பாள். நாயகமவர்கள் குடித்து மிஞ்சிய தண்ணீரைக் குடித்தநிமித்தம் அவள் முத்தியடைதற்கான வழிபெற்றும், உத்தரவின்றிக் குடித்தமையால், பிரமைகொண்டு இருக்க நேர்ந்தது. இவ்வாறாய் அத்தாதி நாற்பது வருஷங்கள் வரையும் ஜீவனோடிருந்து கியாணமுற்று, முடிவில் முத்தியடைந்தாள்.

தாதி முத்திபெற்றது

முற்றிற்று.

---

36-ம் அத்தியாயம்.

நீர்மயம்.

---

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் நீர்மயமாய்த் தோற்றிய வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றாவி:— சைகு அபூ ஸ்ஊது முகம்மதுல்பதாயிகி.]

ஒரு நாள் இரவு சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு ஹஸைனுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்கள் பதாயிகு நகரத்து ஆலயத்திலிருந்து எழுந்து, தங்கள் மாளிகை நோக்கிச் சென்றார்கள். அப்போது, சைகு அபூ

ஸாது என்பவர் அவர்களைப்பின் தொடர்ந்து கூடப்போனார். நாயகமவர்கள் தங்கள் மாளிகை வாசலிற்போய் அதன் கதவு சார்த்தப்பட்டிருக்கக் கண்டு, திறக்குமாறு கையினால் சைக்கினை பண்ணினார்கள்; கதவுதிறந்துகொண்டது. திறந்தபோது நாயகமவர்கள் மாளிகைக்குள் புகுந்தார்கள். கூடச்சென்ற அபூஸாதும் புகுந்தார்.

இருவரும் உள்ளே புகுந்தபோது, அம்மாளிகை மாளிகையாயில்லை; இருக்கு டைய வனத்தில் உள்ள பாழடைந்த ஒரு தோட்டமாயிருந்தது. அதன் மதில்களெல்லாம் இடிந்து தகர்ந்து கிடந்தன. எங்கும் காரிருள் அடர்ந்திருந்தது. நாயகமவர்கள் அத்தோட்டத்திற்குள்ளே புகுந்தார்கள். அபூஸாது கூடப்போகாது வாசலுக்குள்ளேயே நின்றுகொண்டார். அவர் கண்ணைவிட்டு நாயகமவர்கள் மறைந்துபோனார்கள்.

அபூஸாது வெகுநேரம் வரையும் இருந்தார். உள்ளே சென்ற நாயகமவர்கள் திரும்பிவரவில்லை. அதிகநேரம் காத்திருந்தும் அவர்கள் திரும்பிவராமையால், நாம் அங்கேசென்று பார்ப்போம் என்று அவர்கருதி, தாமும் எழுந்து அத்தோட்டத்துள் புகுந்து, நாயகமவர்கள் சென்றவழியே போனார்.

அபூஸாது கொஞ்சத்தூரஞ் சென்றுநின்று பார்த்தார். அங்கே ஒரு சுவர் இடிந்து பழுதுபட்டதாயிருந்தது. அச்சுவர்மீது நாயகமவர்களின் தலைப்பாகையும், குப்பாயமும், உத்தரீயமும் வைக்கப்பட்டிருந்தன. அதன் அத்திவாரத்து அருகே ஒரு சிறு குழி உண்டாயிருந்தது. அக்குழி நிறையத் தெண்ணீர் கட்டியிருந்தது. அந்நீரில் நின்று மிக்க பிரகாசமான பேரொளி ஒன்று எழுந்து வானங்களுக்குமேலே அறுஷுவரையும் சொலித்துக்கொண்டிருந்தது.

இவ்வரிய காட்சியை அபூஸஈது கண்டு, கண்கள்மழுக்குற்று மருண்டு அஞ்சி, அங்கு நில்லாமல் வெருண்டு ஓடி, முன் இருந்த தானத்திற்கு வந்தார். வந்தபோது அவர்க்குச் சுயவுணர்ச்சி இல்லை. அவரை அப்போது பார்ப்பவர் பித்தர் என்பார்கள். அவ்விதமாய் அறிவுகலங்கிப் போயிருந்தார்.

அதன்பின், சற்றுநேரஞ்சென்று நாயகமவர்கள் திரும்பிவந்தார்கள். வந்து, கலக்கமுற்று இருக்கும் அபூஸஈதைப்பார்த்து "ஏன் ஒருவிதமாக நீர் காணப்படுகின்றீர்? எழுந்திருப்பீராக" என்று சொன்னார்கள். அதற்கு அவர் மறுமொழிசொல்ல இயலாதவராய், தாழ்ந்த குரலுடன் "யா ஸையிதீ, என்னால் எழவியலாது; தங்களோடு பேசுதற்குச் சக்தியில்லை" என்றார். உடனே தங்கள் சிறப்பான வலக்கரத்தை அவர் நெஞ்சில் வைத்து "இப்போது எழுந்திரும்" என்றார்கள். உடனே அவர் உணர்வும் மனத்தெளிவும் பெற்று எழுந்தார். பின்பு இருவரும் அங்கிருந்து வெளிப்பட்டார்கள்.

வெளிப்பட்டு வரும்போது, அவர் நாயகமவர்களை நோக்கி "யா ஸையிதீ, தாங்கள் தோட்டத்துள் மறைந்துபோன பின், தமியேன் அங்கு சூழ்ந்துபார்த்தேன். இடிந்த சுவரடியில் சிறுகுழி ஒன்றில் தெண்ணீர் நிரம்பி, அதினின்றும் பேரொளி யொன்று விண்ணங்களுக்குமேலே சொலித்துநின்றதே, அவை என்ன?" எனக்கேட்டார். அதற்கு நாயகமவர்கள் அவரைப்பார்த்துக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"ஸஈதுடைய தந்தையாகிய முகம்மதே, கேட்பீராக. நீர் சிறுகுழியிற் கண்ட தெண்ணீர் நான்றான். நான் அத்தோட்டத்துள் நுழைந்தபோது, அல்லாகுத் தஆலா வுடைய ஜலால் ஜமால் இரண்டும் என் இருதயத்திலும் உடலிலும் தஜல்லி யாயின. அப்போது, ஜலாலுடைய தஜல்லி

மேம்பட்டது. ஆதலால், என் உடல் உருகித் தெண்ணீராயிற்று. அதன் பின் அல்லாகுத்தஆலா தன்னுடைய றுபூபியத்தை க் கொண்டும், லுத்பு ஜமாலை க் கொண்டும் தஜல்லியானான். அப்போது, அவனுடைய ஜமால் மேம்பட்டது. உடனே முன்போல உருப் பெற்றேன். அவன் எனக்குத் தம்கீன் உடைய தன்மையைக் கொடுத்து, சகல அறிவுகளிலும் உறுதிப்பாட்டையும், ஹகாயிகை யும், இறுபானையும் உங்களுக்குக் கற்பித்து உங்களை அவற்றில் அழைக்க அநுப்பியிருக்கின்றான்" என்று கூறினார்கள். இவற்றைக் கேட்ட அவர் மிகப் புதுமை அடைந்தார்.

நீர்மயம்

முற்றிற்று.

---

## 37-ம் அத்தியாயம்.

## மகத்துவம்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அதுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் மகத்துவத்தைப்பற்றிச் சொல்கின்றது. இதற்கு றவிகள்:— ஸைகு தாஜுத்தீனிபுனு மூஸல் பதாயிகியும், ஸைகு றலியுத்தீனுல் கர்மானியும், ஸைகு நாலிறுல் பைஹகீயும்.]

இக்காலம் பகுதாது நகரத்தில் குத்பு நாயகம் ஸையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்கள் உபாத்தாய் விட்ட காலமாதலால், ஸையிது அகுமதுல் கபீறுற் றபாஇ றலியல்லாகு அன்கு அவர்களே குத்புஜ் ஜமானும், கௌதுல்லகுலமும், ஸைகுல் ஆலமுமாயிருந்தார்கள். அவர்களுக்குக் கிடைத்துள்ள காரணநாமங்கள் அனைத்தினுடைய பொருளமைதிகளெல்லாம் பொருந்தி விளங்கினார்கள். அவர்களுக்கு ஒப்பான வொருவர் உலகத்தில் இல்லை. இத்தகுதியோடு நாயகமவர்கள் வாழ்ந்திருந்தார்கள்.

ஒரு தினம் பதாயிகு நகரத்துப் பெரிய பள்ளியில் ஒரு கூட்டம் கூடிற்று. அக் கூட்டத்தார் எல்லாரும் அக்தாபு களும், அப்தால் களும், உப்பாது களும், ஜ ஹ்றஹாது களும், ஒளத்தாது களுமா யிருந்தார்கள். அங்குவந்து கூடிய அப் பெரியோர்களின் தொகை இவ்வளவென்று இல்லை. ஆயினும், அப் பள்ளியுள் அவர்கள் நூற்றிருபது பத்தியாய் உட்காந்திருந்தார்கள். அவர்களுள், ஸைகு ஷஹாபுத்தீன் ஸஹ்ரவர்தியும், ஸைகு இபுறுஹீமுல் வாஸ்தியும், ஸைகு உதுமானுல் ஹாறூனுல் ஹபஷியும், ஸைகு அபுல் மத்யனுல் மகுறபி யும், ஸைகு அபுல் பத்ஹிபுனு கனுயமும், ஸைகு றபீஉத்தீன் அகுமதுல் கர்மானி யும், ஸைகு அலியிபுனு உதுமானும், ஸைகு இபுறுஹீமுல் அகுறபும், ஸைகு அபூபக்கருல் ஹம்தானி யும், இவர்களின் சீஷர்களும் இருந்தார்கள். இக் கூட்டம் அன்று கூடினது நாயகமவர்களின் மகத்துவத்தைப் பற்றிப் பேசுதற்குஅன்றி, வேறொன்றுக்கும் அன்று.

இவர்கள் எல்லாரும் கூடிச் சிலர் சிலருடைய பதவிகளையும், தன்மைகளையும் குறித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது அங்கிருந்த அபூகைறுல் ஜன்ஜானி என்னும் பெரியோர் "ஸையிது அகுமதுல் கபீறுடைய தன்மையும், நிலைமையும், பதவியும், எவ்வகைப்பட்டவை?" என்று அபூபக்கருல் ஹம்தானி யைப் பார்த்துக் கேட்டார்கள். அதற்கு அவர்கள் சற்றுநேரம் தலை கவிழ்ந்திருந்து, பின் நிமிர்ந்து "வல்லமையுள்ள அல்லாகுத்தஆலா மீது சத்தியமாக ஸையிது அகுமதுல் கபீறு இவ்வகைப்பட்டவரென்று நான் அறிந்துகொள்ள இல்லை. அந்தத்திறனும் எனக்கு இல்லை. அவர் அல்லா வுடைய சிற்றிலும் சிற்றுனவர்" என்று வதில் சொல்லிவிட்டு வாய்மூடியிருந்து, மறுபடியும் "மனிதர்களே, நபி மார்களுடைய மகத்துவத்திலும், தன்மையிலும், வரிசையிலும், எவருடைய எதனையாவது பேசுதற்கு நீவிர் விரும்புவீர்களாயின், பேசுவீர்க

ளாக; முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் வி
ஷயத்தில் யாதொன்றும் பேசாதீர்கள். வாய்களை மூடிக்
கொள்வீர்களாக. ஏனெனில்;— அவர்களுடைய மகத்து
வம், பதவி, புகழ், இயல்பு, சிறப்பு முதலிய எத்தன்மைக்
கும் அளவு இல்லை. அவைகள் ஒருவருடைய வருணிப்
புக்குள் அடங்கா. ஆதலால், அவ் விஷயத்தில் வாயை மூ
டிக்கொள்வதுதான் அவர்களை வியந்து புகழ்வதாகும்.
அதுபோல, ஒளலியாக்களுடைய மகத்துவத்திலும், தன்
மையிலும், வரிசையிலும், எவருடைய ஏதனையாவது பே
சுதற்கு நீவிர் விரும்புவீர்களாயின், பேசுவீர்களாக; சை
யிது அகுமதுல் கபீறுடைய விஷயத்தில் யாதொன்றும் பே
சாதீர்கள். வாய்களை மூடிக்கொள்வீர்களாக. ஏனெ
னில்:— அவருடைய மகத்துவமும், பதவியும், புகழும், இ
யல்பும், சிறப்பும் ஒருவருடைய வருணிப்புக்குள் அடங்
காதவை. அவைகளுக்கு அளவு இல்லை. அவரைக் கனப்
படுத்துவதும், புகழ்வதும், சங்கை பண்ணுவதும், வாயை
மூடிக்கொள்வதுதான். அவருடைய கறுமாத்துகள் மிக
மகத்துவமுள்ளவை. முன் பின் எந்த ஒலிக்கும் அவர்க்
குக் கொடுத்ததுபோல அல்லாகுத்தஆலா ஒன்றையும்
கொடுக்கவில்லை. முன் இருந்த ஒளலியாக்களுக்கும்,
பின்வரும் ஒளலியாக்களுக்கும் கொடுத்தவை அனைத்தை
யும் அவர்க்குக் கொடுத்துவிட்டான். அவருடைய மறுத்
தபாவும், கறுமாத்தும் போல வேறே யார்க்கும் உண்டா
யிருக்கவில்லை," என்று சத்தம் இட்டுக் கூறினார்கள்.

அதன் பின், மேற்கேட்ட அபூகைறுல் ஜன்ஜானி ய
வர்களே ஷஹாபுத்தீன் ஸஹ்ரவர்தியவர்களை நோக்கி "ஷ
ஹாபுத்தீனே, சையிது அகுமதுல் கபீறுடைய காரியம் எப்ப
டி?" எனக் கேட்டார்கள். அதற்கு அவர்கள் "சையிது அ
குமதுல் கபீறு இன்ன வஸ்துவென்று நான் அறியமாட்
டேன். அவர் அல்லாவுடைய மறைவான ரகசியப் பொரு
ளாயிருப்பார். வல்லமையுள்ள அல்லா மீது சத்தியமாக

அவரைப்போல் ஒருவர் உண்டாகவில்லையென்றே நான் சொல்கின்றேன். இனிமேலும் ஒருவர் உண்டாகார். மஃறூபியத்து, மஉஷூக்கியத்து களிலே அவர்க்கு ஒப்பானவர் யாரும் இல்லை" என்று பிரதி கூறினார்கள். இதனைக்கேட்ட அபூகைறுல் ஜன்ஜானி "நானும் அப்படியே சொல்கின்றேன்" என்றார்கள். பின்பு, அக் கூட்டத்துள்ள ஒவ்வொருவரும் "அல்லா மீது சத்தியமாக சையிது அகுமதுல் கபீரைப் போல ஒருவரும் பிறக்கவில்லை; இனியொருவர் பிறக்கவுமாட்டார்" என்று சொன்னார்கள். ஒருவர் சொல்லும்போது மற்றவர்களெல்லாம் தலைசாய்ப்பார்கள்.

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது, நபி கிலுறு அலைகிஸ்ஸலாம வர்கள் அச் சபையினிடத்து வந்து எல்லார்க்கும் ஸலாம் பகர்ந்து "ஒளலியாக்களே, உங்களை சையிது அகுமதுல் கபீறு அழைக்கின்றார்கள். நீவிர் எல்லாரும் அவர்கள் சமுகத்திற்கு வருவீர்களாக" என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன் அங்கே கூடியிருந்த எல்லாரும் எழுந்து, பள்ளியைவிட்டு நாயகமவர்கள் சமுகத்திற்கு வந்தார்கள்.

அந்நேரம் நாயகமவர்கள் தங்கள் சபையினிடத்து இட்ட ஆசனத்தின்மீது சாய்ந்துகொண்டிருந்தார்கள். அக்தாபுகள், அப்தால் கள், அப்றாதுகள், உப்பாதுகள், ஜாஹ்ஹாதுகள், நுகபாக்கள், நுஜபாக்கள் எல்லாரும் அவர்கள் சமுகத்தில் ஹாலிரு யிருந்தார்கள். அவர்களோடே பள்ளியிலிருந்து வந்த பெருந்திரளான பெரியோர்களும் போய் ஸலாம் கூறி உட்கார்ந்தார்கள். பின்னர் நாயகமவர்கள் எல்லார்க்கும் அல்லாகுத் தஆலாவின் முஹப்பத்து மஅரிபத்தின் விஷயங்களைக் குறித்துப் பிரசங்கமாரி பொழிந்துகொண்டிருப்ப, எல்லாரும் செவிதாழ்த்திக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். சூரியன் கிரணங்களை ஒடுக்கி அஸ்தகிரி நோக்கிச் சென்றான். பொழுதுபட்டு மகுரிபு வேளை ஆயிற்று.

மகுறிபா கவே நாயகமவர்கள் பிரசங்கத்தைநிறுத்தி, தொழுவதற்காகப் பள்ளிக்குப் போக எழுந்தார்கள். உடனே அங்கிருந்த எல்லாரும் கூட எழுந்தார்கள். நாயகமவர்கள் எல்லாரோடும் பள்ளியிற் சென்று எல்லார்க்கும் இமாமாய் நின்று மகுறிபு தொழுகையைத் தொழுது முடித்து, அனைவர்க்கும் சொல்லிக்கொண்டு தங்கள் தவச்சாலைக்குச் சென்றார்கள். மற்ற எல்லாரும் அவரவர் இருப்பிடங்களுக்குப் போய்விட்டார்கள்.

மகத்துவம்

முற்றிற்று.

---

38-ம் அத்தியாயம்.

## கெறுவிகுறைசம்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் பொருட்டுக் கருவங்கொண்ட அப்தால்கள் நால்வர் நாசம் அடைந்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு நஜ்முத்தீன் பதாயிகி.]

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள் ஒரு நாள் தங்கள் மாளிகைக்குள் ஔலியாக்கள் அநேகர் தலைசாய்த்திருப்ப ஆசனத்தின் மீது சாய்ந்துகொண்டிருந்தார்கள். அப்போது, அவர்கள் மருகர் சைகு இபுறாஹீமுல் அகுறபும், வேறு சில பெரியோர்களும்; அம் மாளிகைக்கு வெளியே வாசலில் பேசிக்கொண்டு நின்றார்கள்.

அந்நேரம் அப்தால்கள் நாற்பதுபேர் ஆகாயத்தில் பறந்து போனார்கள். போகும்போது, அந் நாற்பது பேர்களும் நாயகமவர்களின் மாளிகைக்கு நேரே வந்தவுடன்

அவர்களுக்கு அஞ்சி மரியாதையாகக் கீழே இறங்கினர்கள். இறங்குகையில், அவர்களுள் நான்குபேர் இறங்கவில்லை. அந் நால்வரும் நாயகமவர்களின் மாளிகைக்கு நேரே ஆகாயத்தில் நின்றுகொண்டார்கள்.

கீழ் இறங்கின மற்றவர்களில் தலைவரானவர் ஆகாயத்தே நிற்கின்ற நால்வரையும் விளித்து "நீவிரும் இறங்குவீர்களாக. இம் மாளிகைக்குள் இருப்பவர் கௌதுத்தக்லைன்; மஉஷூஉக்துல்லா; சையிது அகுமதுல் கபீறு. இவர் நம்மில் நின்றும் பலவகை மேம்பட்டவர். ஆதலால், நீவிர் இறங்கி இவர்க்குத் தாழ்ந்து நிற்குதல் வேண்டும். அங்கே மேலே நிற்காதீர்கள். பறக்கும் போகாதீர்கள். இவர்க்குத் தாழ்ந்து நிற்காதவர் யாவராயினும் அவருடைய பதவி முதலிய எல்லாம் பறிபடும்" என்று கூறினர்கள்.

அவர் சொன்ன இந் நன்மை பயக்கும் சொல்லைக் கருவங் கொண்ட அந் நால்வரும் கேட்டு, அங்கிருந்து கொண்டே சொல்கின்றார்கள்:— "நீவிர் நன்கறிவீராக. நாங்களும் அப்தால் கள் தாம்; எங்களில் ஒவ்வொருவரும் அவரைப்போன்ற ஒலி தான். அல்லாகுத் தஆலா தன்னுடைய மஹ்பூபான சிநேகரின் பதவியைப் பறிக்கமாட்டான் காண்மின்" என்று மதப்பாக மறுமொழிகொடுத்தார்கள்.

இம் மதிகேடான கருவ வார்த்தையை அத் தலைவர் [illegible]டு, பின்னும் அவர்களை நோக்கி "அப்படிச்சொல்லா[illegible]ர். இச்சொல் மிகத் தீங்கான சொல். இச்சொல் [illegible] நீவிர் மன்னிப்புக் கேட்கவேண்டும். இந் நாயகம் [illegible]ன் களுக்குத் தாஜானவர். மஉஷூஉக்துல்லா வான [illegible]பூபீன் களுக்கு நாயகர். ஆரிபீன் களுக்கு சுல் [illegible]ற இவரிடத்து நீவிர் பெருமை பாராட்டிக் க

இச் சொல் நிகழ்ந்துகொண்டிருக்கும் போதே ஆகாயத்தில் பளீர் என்று ஒரு மின் வெட்டிற்று. அம்மின் அங்கு நிற்கின்ற அந் நால்வர் மீதும் வந்து பிடித்தது. பிடித்து, அவர்களின் உடல்கள் தவிரத் தலைகளை மாத்திரம் தீய்த்துக் கருக்கிச் சாம்பலாக்கி விட்டு மறைந்தது. அவ் வுடல்கள் நான்கும் முண்டமாய்த் தரையில் விழுந்தன. அதனோடே; ஆகாயத்தில் அசரீரியான இரண்டு சத்தங்கள் கேட்டன. அவை;—

1 - “என் மஉஷூக்குடைய சமூகத்தில் மரியாதையாய்த் தாழ்ந்து நில்லாத அப்தால்களை நான் எரித்து விட்டேன். அந்த மஉஷூக்குடைய பொருத்தத்தை நான் தேடுகின்றேன். அவர் மீது என்றைக்கும் நான் இச்சை வைத்திருக்கின்றேன்.”

2 - “ஓ! ஔலியாக்களே, நீவிர் எல்லாரும் என்மீது இச்சைகொண்டிருக்கின்றீர்கள். என்னை உவந்திருக்கின்றீர்கள். நானோ! ஸையிது அகுமதுல் கபீறு மீது இச்சைகொண்டிருக்கின்றேன். அவரை உவந்திருக்கின்றேன்.”

என்னும் இவ்விரு சத்தங்களும் ஆகாயத்திற் கேட்டபோது, அனைவரும் நடுக்கம் எய்தி விலவிலப்புற்றார்கள். பறந்துவந்து கீழ் இறங்கின மற்ற அப்தால்கள் நாயகமவர்களுக்கு மிக அஞ்சினவர்களாய் ஆகாயத்தே பறந்து சென்றார்கள்.

கெறுவிகளுச்சம்

முற்றிற்று.

---

39 - ம் அத்தியாயம்.

## * நெடுமொழி.



[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்கள் தங்கள் மகிமைகளைப்பற்றிப் பிரசங்கித்த வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு இபுறஹீமுல் பாறூகி.]

குத்புல் ஆலம், கௌதுல் அகுலம், சுல்தானுல்ஆரிபீன், சுல்தான் சையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்கள், குத்புல் அக்தாபு சையிது முகியித்தீன் அப்துல்காதிறு ஜைலானி றலியல்லாகு அன்கு அவர்களின் உபாத்துக்குப் பின் குத்புல் அக்தாபும் கௌதுல் அகுலமுமாய், உலகமுழுவதையும் அகங்கை நெல்லிக்கனிபோல வைத்து ஆட்சி செய்தார்கள். குணதிசைமுதல் குடதிசைவரையும் உள்ள அக்தாபுகள் ஔலியாக்கள், மஷாயிகுகள் எல்லாரும் நாயகமவர்களின் திருவடிக்கீழ் அடங்கி ஏவல்புரிந்து வந்தார்கள். குத்பியத்து, கௌதியத்துகளின் பதவித்துவமும், விலாயத்தின் அதிகாரமும் அவர்கள் கைவசத்தில் அடங்கியிருந்தன. நாயகமவர்களின் பெருந்தகைமை அளவில் அடங்காததாயிருந்தது.

ஒருநாள் நாயகமவர்கள் பதாயிகு நகரத்துச் சிறப்பான ஆலயத்தின்கண் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் சமுகத்தில் அக்தாபுகளும், அவுத்தாதுகளும், அப்தால்களும்;

---

* நெடுமொழி - தன்மேம்பாட்டுரை. தன்மேம்பாட்டுரை என்பது; ஒருவன் தன்னை மேம்படப்பேசுவது; "தான்றற்புகழ்வது தன்மேம்பாட்டுரை" என்பது இலக்கணம்.

அப்ருது களும், உப்பாது களும், ஜஉஹ்ஹாது களும், நுக பாக்களும், நுஜபாக்களும், ஒளலியாக்களுள் சிறியாரும் பெரியாருமாய்ப் பதினுயிரம்பேர் வரையும் கூடியிருந்தார்கள். நாயகமவர்கள் அவர்கள் எல்லாரையும் நோக்கித் தங்கள் மேம்பாட்டைப் பற்றிக் கீழ்வருமாறு சொல்கின்றூர்கள்:—

"அல்லாகுத் தஆலாவின் ஒளலியாமார்களே, நான் அலைமோதுகின்ற கடலுக்கும், ஒளி வீசுகின்ற சூரியனுக்கும் ஒப்பானவன். நீவிர் எல்லாரும், இவ்வுலகத்தில் முன் இருந்து இறந்துபோன ஒலி களும், இனிப் பிறக்கும் ஒலி களும், சிற்றூறுகளுக்கும் நக்ஷத்திரங்களுக்கும் ஒப்பானவர்கள். சிற்றூறுகள் வற்றுமாயின், நீர்கொள்ளுதற்குக் கடலையே விரும்பிநிற்கும். நக்ஷத்திரங்கள் மழுங்குமாயின், ஒளி பெறுதற்குச் சூரியனையே விரும்பிநிற்கும். இச் சொல்லை நான் என் சுயேச்சையாய்ச் சொல்லவில்லை. இப்படிச் சொல்லுக என்று அல்லாகுத் தஆலா என்னை வ வினுன்; அவ்வேவற்படி சொல்கின்றேன். இவ்வுலகத்தே முன் இருந்து இறந்துபோனவர்களும், இனிப் பிறப்போரும், இக்காலத்துச் சீவந்தரா யிருப்பவர்களுமான ஒளலியாக்களுள் யாவராயினும் என்னுடைய தகுதியை மனதார ஏற்றுக் கொள்ளாவிடில், அவர்களின் பதவிமுதலாயினவற்றை அல்லாகுத் தஆலா பறித்துக்கொள்வான். அவன்மீது சத்தியமாக நான் சொல்கின்றேன். நீவிர் நம்புவீர்களாக. இப்படியே தான் செய்வதாக நூற்றிருபதுதடவை எனக்கு அவன் வார்த்தைப்பாடு கொடுத்திருக்கின்றுன். ஆதலால், எனக்கு ஒப்பான ஒருவர் இக்காலத்து இல்லை"

என இவ்வாறு சொல்லும்போது அங்கே கடல்போலப்பரவியிருந்த ஒளலியாக்களெல்லாம் மனம் வாக்குக் காயம் என்னும் மூன்று பொறிகளும் ஒருப்படச் செவி தொட்டுத் தலைசாய்த்தார்கள். அன்று சமுகத்தேயிருந்து

இவர்கள் அன்றி, மற்றும் அங்கங்கே உலகமுழுமையும் இருக்கும் ஒளலியாக்களும் இச்சொற் சொல்லும்போது செவிதொட்டுத் தலைகுனிந்து ஏற்றார்கள். அன்றியும், முன்னிருந்து இறந்தவர்களும், இனிப்பிறந்து வருபவர்களுமான ஒளலியாக்களும், அறுவாகுகளான தோற்றப்படா நிலைமையில் இவ்வாறே ஏற்றுக்கொண்டார்கள். நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களின் அஸ்ஹாபுகள் அல்லாத மனிதரிற் சிறப்பான மற்றெல்லாரும் நாயகமவர்கள் சொன்ன சொல்லை மனம் உவந்து ஏற்றுக்கொண்டார்கள். பின்பு அங்குக்கூடிய சபை அன்று கலைந்[illegible]

அதன்பின் ஒருநாள் நாயகமவர்கள் தங்கள் மாளிகையில் பெரியோர் அநேகர் சமுகத்து இருப்ப அழகிய கட்டிலின்மீது சாய்ந்துகொண்டிருந்தார்கள். அப்போது, அபுல்மதியன் என்பவர் நாயகமவர்களை மனவிருப்பத்துடன் உற்று நோக்கிக்கொண்டு இருந்தார். அவர் இவ்வாறே அவர்களைத் தாழ்மையுடனும்; விருப்பத்துடனும் பார்த்துக்கொண்டிருப்பது வழக்கம். அவ்வழக்கப்படி இப்போதும் பார்த்த அவரை நாயகமவர்கள் நோக்கிக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"அபுல்மதியனே, கேட்பீராக. அல்லா விறேணை யாவனாயினும் ஒருவன் என்னையாவது என் தந்தையையாவது என்சந்ததிகளுள் ஒருவரை யாவது தாழ்மையோடும் உவப்போடும் சுத்தமான பார்வையாகப் பார்ப்பானாயின், அவன் கியாமத்து நாளில் கேள்விக்குள் அகப்படமாட்டான்; நரகத்தையும் காணமாட்டான். தவறாது சுவர்க்கம் புகுவான். இவ்வாறாக அல்லாகுத் தஆலா எனக்கு உண்டான மற்றொரு மிஅறாஜிலே வார்த்தைப்பாடு தந்திருக்கின்றான். அபுல்மதியனே, எனக்கு எட்டுத்தடவை மிஅறாஜு உண்டாயிற்று. மூன்றுதடவை குருவாரத்து இரவுகளிலும், ஐந்துதடவை அதன் அடுத்த சுக்கிரவாரத்து இரவுகளிலு

மாம். இவ்வெட்டுத்தடவைகளிலும் அல்லாகுத் தஆலாவை என் அகக்கண்ணாற் கண்டேன். இம்மையில் அப்படி அவனைக்காணாதவன் மறுமையிலும் குருடனாகவே யிருப்பான். இன்னும் கேட்பீர்; என்னைகையயேனும் என் சந்ததியார் கையையேனும் என்சீஷர் கையையேனும் ஒருவன் பற்றிப்பிடிப்பானாயின், அவன் ஒரு காலத்தும் பழுதடையமாட்டான். கேள்வியின்றிச் சுவர்க்கம் புகுவான். இத்தகுதி யுகமுடியும் வரையும் எனக்கு உண்டு"

என்று இவ்வாறு சொல்லிவிட்டு எழுந்து தவச்சாலைக்குச் சென்றார்கள். இதனைக்கேட்ட அபுல் மதியனும், மற்றவர்களும் பெரிய மகிழ்ச்சியும், வியப்பும் அடைந்தார்கள்.

மற்றொருநாள், நாயகமவர்கள் தங்களை சபையிற் செறிந்து இருப்பவர்களை நோக்கி "சகோதரர்களே, ஒலிமாருள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நபியின் இருதயத்தை இருப்பிடமாகப்பெற்று இருக்கின்றார்கள். நானோ, என் பாட்டனார் நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்களின் இருதயத்தை இருப்பிடமாகப் பெற்றுக்கொண்டு அதில் இருக்கின்றேன். இன்னும், அல்லாகுத் தஆலா என்னை நோக்கி 'யா சுல்தானுல் ஆரிபீன், யா கௌதுல் அகுலம், யா சுல்தான் சையிது அகுமதுல் கபீறு, கேட்பீராக. உம்முடைய, அல்லது உமது சந்ததிகளுடைய, அல்லது உமது சிஷர்களுடைய ஸில்ஸிலா வில் ஒருவன் அகப்படுவானாயின், அவனுடைய தௌபா வை நான் ஏற்று, பிழைகளைப்பொறுத்து, கியாம நாளில் கேள்வியின்றிச் சுவர்க்கஞ் சேர்ப்பேன்' என எழுபது தடவை எனக்கு வார்த்தைப்பாடு தந்திருக்கின்றான்" என்றுசொன்னார்கள். இச்சொல் முடிந்தபின் மறுபடியும் நாயகமவர்கள் அவர்களை நோக்கி "என்னது: சகோதரர்களே, அல்லாகுத் தஆலா 'மனிதரெல்லாம் என்மீது விருப்பம்வைத் திருக்கின்றார்கள்.

நான் ஸையிது அகுமதுல் கபீறு மீது விருப்பம்வைத் திருக்கின்றேன். அவர் எனக்கு மஹ்பூபும், மஉஷூக்கு மானவர்' எனச்சொன்னேன்'' என்று சொன்னார்கள்.

இச்சொற்களை நாயகமவர்கள் சொல்லுந்தோறும் அல்லாகுத் தஆலா மீது சத்தியம்பண்ணியே சொல்வார்கள். இவ் வொவ்வொரு சொல்லையும் எல்லோரும் தலைசாய்த்து ஏற்றுக்கொண்டார்கள்.

நெடுமொழி

முற்றிற்று.

---

40-ம் அத்தியாயம்.

## முரீதீன் மகத்துவம்.

[இது, சுல்தானுல் ஆரிபீன் ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களின் சிஷர்களுடைய மகத்துவத்தைப்பற்றிச் சொல்கின்றது. இதற்கு றவி :— ஆஜாமிபுனு கல்த்தா.]

குத்புல் ஆலம், கௌதுத்தக்லைன், ஸையிது அகுமதுல் கபீறு றலியல்லாகு அன்கு அவர்களுக்கு முரீதீன் என்னும் சிஷர்கள் இவ்வளவினர் எனக் கணக்கு இல்லை. அருமை பெருமைகள் பெற்ற சிஷர்கள் எண்ணிறந்தபேர்கள் இருந்தார்கள். அவ்வளவு/பேர்களும் ஆரிபீன் களும், வாஸிலீன் களும், ஆஷிகீன் களும், ஆபிதீன் களுமாயிருந்தார்கள். அவர்களுள் உலகவாழ்வினை அறவெறுத்து நிராசையாளரான ஜாஹிதீன் கள் இருபதினாயிரம்பேர் நாயகமவர்களின் சகவாசத்தில் திருவடித்தொண்டரா யிருந்தார்கள். நாயகமவர்களிடத்து அகுமதிய்யா றபாஇய்யா என்னும் இருவகைத் தறீக்கிலும் கிலாபத்துப்பெற்ற கலீபாக்கள் பனிரண்டாயிரம்பேர். இவர்கள் நாயகமவர்கள்

கூடவே என்றும் பிரியாது இருப்பவர்கள். இவர்களுள் குத்பு களும், அப்தால் களும், ஔத்தாது களும், அப்றாது களும், உப்பாது களும், ஜுஹ்ஹாது களும், நுகபா க்களும், நுஜபா க்களும் உண்டு. இவர்களுள் ஒவ்வொருவரும் தீங்கான மனிதனை உற்றுநோக்கினால், அவன் தீங்குதவிர்ந்து அல்லாகுத் தஆலா இடத்து வாஸிலாவான். இக்கலீபா மாருட்சிலர் அடவிகளிடத்தும், சிலர் மலைக்கெபிகளிடத்தும், சிலர் ஓடைகளிடத்தும் உலர்ந்தசருகு காய் கனி இவைகளைத்தின்றுகொண்டு வாசம்பண்ணினார்கள்.

நாயகமவர்களின் சிஷர்களுட் சிலர் மலைகளுக்கு எதிரே நின்று அவற்றைப் பார்ப்பார்களாயின், அம்மலைகள் உயர்ந்தவெள்ளியாயும், பசும்பொன்னாயும் சொலிக்கும். சிலர் மலைகளை நோக்கி வாவென்று கையால் சைக்கினைபுரிவார்களாயின், அம்மலைகள் நகர்ந்துவரும். அவர்கள் நின்றால், நிற்கும்; அவர்கள் ஓடினால், பின்னேயோடும். பமூயதானத்திற் செல் என்று அவர்கள் ஏவினால், சென்றுதரிபடும். இன்னுஞ் சிலர் கதுபாவைப் பிரதக்கணஞ்செய்யவேண்டுமெனக் கருதுவார்களாயின், அக்கதுபாவே அவர்களை எதிர்கொண்டுவந்து சந்திக்கும்.

இன்னும், அவர்களுட் சிலபேர் ஆகாயத்திலே நடப்பார்கள்; சிலபேர் தண்ணீர்மேல் நடப்பார்கள்; சிலபேர் பூமியைப் பாய்போலச் சுருட்டுவார்கள்; சிலபேர் பாதாளமட்டும்போய் மீள்வார்கள். இன்னும் சிலர் பிரேதத்தைப் பார்த்து “அல்லா வுடைய உத்தரவுகொண்டு எழுந்திரு” என்றால், அது உடனே எழுந்து நின்று “அஸ்ஸலாமு அலைக்கும் யா ஒலியல்லா!” என்று அவர்களோடு பேசும்.

சிலருடைய முகங்கள் கண்ணை மழுக்குங்கிரணங்களை வீசிப் பிரகாசிக்கும். அதனால், சூரியன் அவர்கள் முகங்களுக்கு எதிர்ப்படாமல் விலகும். அதற்காக அவர்கள் தங்கள் முகங்களைக் காட்டாது மலைக் குகைகளுக்

குள் மறைந்திருப்பார்கள். வெளியேவர நாடினால், முகத்தில் கருப்புப் போர்வைபோட்டு மூடிக்கொண்டு வருவார்கள். வந்தாலும், அம் முகங்களுக்கு முற்படுவனவெல்லாம் எரிந்து கரிந்துபோகும். உடனே மறுபடியும் குகைகளில் நுழைந்துகொள்வார்கள். இன்னும் சிலர் வானத்தில் நடந்துகொண்டிருக்கும் சூரியனையும் சந்திரனையும் நோக்கி "நில்" என்பார்கள்; மறுகட்டளை வருமளவும் அப்படியே அவை நிற்கும். இவ்வாறே மற்றச் சிருஷ்டிகளெல்லாம் அவர்கள் ஆணைக்குக் கீழ்ப்பட்டு நடக்கும்..

நாயகமவர்களின் முரீதீன் களுள் பகீர் களும் உண்டு. இவர்கள் "பதாயிகிய்யா" "றபாஇய்யா" என இருபிரிவாயிருந்தார்கள். * இவ் விருபிரிவாரும் கொடிய விஷமுள்ள பாம்புகளைப்பிடித்து அவற்றோடு விளையாடுவார்கள்; நெருப்பு அடுப்பிலே இறங்கி நிற்பார்கள்; புலிகளைப்பிடித்து வந்து மேலேறி நடத்துவார்கள்; அக்கினிப் பந்துகளை எடுத்து எறிந்து ஒருவரை ஒருவர் அடித்து விளையாடுவார்கள். இந்த பகீர் கள் நாயகமவர்கள்மீது வைத்துள்ள விசுவாசத்தினாலும், வேட்கையினாலும், பித்தர்களைப்போல் இருப்பார்கள். நாயகமவர்கள்மீது பித்துக்கொண்டவர்களாய் இருக்கு தேசம் முழுதும் திரிவார்கள்.

இந்த பகீர் கள் சென்ற இடத்தெல்லாம் "நாங்கள் சைகுல் வாஸிலீன் சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறுடைய முரீதீன் களுள் நடுவீட்டுக்காரர்; அவர்கள்மீது இஷ்கு கொண்டவர்கள்" என்று கூறுவார்கள். இதைக் கேட்போர்: நீவிர் சொல்வது உண்மையாயின், இந்தப் பாம்பைப் பிடிப்பீர்களாக; இந்தப் புலிமீது ஏறுவீர்களாக; இந்த நெருப்பில் இறங்கி விளையாடுவீர்களாக என்று சொல்லிச் சோதனை கேட்பார்கள்.

---

* பிற்காலத்தில் "ஹைதருலிய்யா" முதலான வேறு சில தரீக்து களும் உண்டாக்கி, அந்தத் தரீக்து களிலும் பகீர் கள் இருக்கின்றார்கள்.

இவ்வாறு சொன்னால், உடனே இவர்கள் "யா சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீர்" என்று சொல்லிக் கொண்டு எழுந்து, பாம்புகளைப்பிடித்து மேலே போட்டுக்கொள்வார்கள்; புலிகளின்மீது எறி அடித்து நடத்துவார்கள்; அக்கினியடுப்பிலே இறங்கி நின்று விளையாடுவார்கள். அக்கினிப் பந்தினால் அடித்துக்கொள்வார்கள். அதனால் சர்வித விக்கினமும் அவர்களுக்கு உண்டாகாது. இவற்றைக் கண்டவுடன் சோதனைகேட்டவர்கள் அவர்களுக்கு அஞ்சி, வியந்து ஏற்று உபசரிப்பார்கள்.

இவையன்றி, இன்னும் இவர்கள் மனிதரை உறுப்புறுப்பாகத் தறித்துப் பிரித்துப் பின் கூட்டுவார்கள்; இரண்டாகப்பிளந்து பின் சேர்ப்பார்கள். இவ்வகையான காண்பதற்கு அரிய அற்புதக் காட்சிகளைக்காட்டித் தங்கள் மகிமையை விளக்குவிப்பார்கள். இவ்வாறாக அற்புதங்கள் புரியும் மேற்சொன்ன தரீக்குகளிலுள்ள பகீர்களை இன்றைக்கும் எங்குங்காணலாம். நாயகமவர்களின் திருவடி மகிமையே இவர்கள்பால் என்றும் மாறாது உளது.

நாயகமவர்களின் கலீபாக்கள் பன்னீராயிரம் பேர்களுள் அவர்கள் மூத்த குமாரர் சையிது முகம்மது, சையிது அலி, [illegible]ஜபு என்னும் * சுல்தான் முகம்மது, இபுறாஹீமுல் பாறூக்கு, § சைகு இஸ்மாயீல், சைகுல் ஆஷிக்கு அப்துற்றஹீம், கத்தீபுத்தீன், ¶ சைகு ஹாறூன், சைகு இபுறாஹீமுல் அதுறபு என்னும் மருகர் ஆகிய இவர்கள் தாம் மிக மேம்பாடு பெற்றவர்கள். இவர்களுள்ளும் சிறந்தவர்கள், சைகு இபுறாஹீமுல் அதுறபு ஒருவரே. இவர்களின் மகத்துவம் பின் சொல்லப்படும்.

முரீதீன் மகத்துவம்

முற்றிற்று.

---

* ரூமுடைய அமீர். § ஷாமுடைய அமீர். ¶ இறாக்குடைய அமீர்.

## 41-ம் அத்தியாயம்.

## உபாத்து

—*—

[இது, சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலி யல்லாகு அன்கு அவர்களின் உபாத்து வரலாற்றைச் சொல்கின்றது. இதற்கு றவி:— சைகு அலி.]

குத்புல் அக்தாபு, கௌதுல் அகுலம், தாஜுல் வாஸிலீன், மஹ்பூபு றப்பில் ஆலமீன், சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் சையிது அகுமதுல் கபீறு ஹுஸைனுற்றபாஇ மஉஷூக்குல்லாஹுறலியல்லாகு அன்கு அவர்களின் சீவியகாலத்துக் கடைசி ஆயிற்று. அக்காலத்து அவர்கள் ஆலம் அனைத்திற்கும் ரக்ஷகர் என்கின்ற கௌதாயும், ஙவ்ஸுபீன்கள் எல்லார்க்கும் இமாமாயும், குத்புகளுக்கு எஜமானாயும் இருந்தார்கள். இல்முகள் பதினான்குவகையிலும் கடல்போல விரிந்த மனதையுடையவர்களாயும், லாஹிறு பாத்தின் என்னும் பயிரங்க அந்தரங்க அறிவுகளில் முஜ்தஹிதாயும் இருந்தார்கள். ஷரீஅத்து முதலான நான்குவகைப் பாகுபாடுகளிலும் மனிதர்கள் நாயகமவர்களைத் தொடர்ந்து நடப்பது ஆகும் என்று நிரூபணஞ்செய்யப்பட்டிருந்தது. அவர்கள் தொடக்கத்தில் ஷாபிஇ மதுஹபில் இருந்து, அம் மதுஹபின் படி நடந்தார்கள். பிற்காலத்தில் அல்லாகுத் தஆலா வுடைய குர்ஆனைக்கொண்டும், நபி முகம்மது ஸல்லலல்லாகு அலைகிவஸல்லமவர்களுடைய ஹதீது சுன்னத்தைக்கொண்டும், இவ்விரண்டிற்கும் ஒத்த தங்கள் உத்தேசத்தைக்கொண்டும் அமல் செய்துகொண்டு, முஜ்தஹிது என்னும் அதிகாரதத்துவம் பெற்றிருந்தார்கள். நாயகமவர்களை வழிபட்டாருட் சிலரும் முஜ்தஹிதா யிருந்தார்கள்.

நாயகமவர்கள் விவாகத்தில் விருப்புள்ளவர்களாய், பலமனைவிகளை மணம்புரிந் திருந்தார்கள். அவர்களுக்கு ஆண்மக்கள் பனிரண்டுபேர் உண்டு. அவர்களுள் 1 - சையிது முகம்மது, 2 - சையிது ஸாலிஹூ, 3 - சையிது மஹ்மூது, 4 - சையிது ஹூஸைன், 5 - சையிது அலி, 6 - சையிது அபுல்பத்தாஹூ, 7 - சையிது அபுல் ஹாமீது, 8 - சையிது ஹஸன் ஆகிய இவ்வெட்டுப் பேர்களும் குத்புகளாயிருந்தார்கள். மற்ற நால்வரின் பெயர்கள் அறியப்படவில்லை. அந்நால்வரும் அப்ருது களாயிருந்தார்கள்.

நாயகமவர்களுக்கு மஷ்ரிகு முதல் மக்ரிபு வரையும் உள்ள குத்பு முதலான எல்லாரும் கிதுமத்து செய்பவர்களாயிருந்தார்கள். மஹ்பூபு மஉஷூக்கு களில் அவர்களுக்கு நிகராக யாரும் இல்லை. அகிலாண்ட புவனங்கள் அனைத்தும் அவர்களின் ஆணையாசக்கரத்தில் அடங்கியிருந்தன. நபி கிலுறு அலைகிஸ்ஸலா மவர்களும், நபி இல்யாசு அலைகிஸ்ஸலா மவர்களும், எப்போதும் நாயகமவர்களுடைய சமூகத்தில் வீற்திருப்பார்கள்.

அக்காலத்தில் நாயகமவர்களுக்கு வயது எழுபத்தெட்டு நிரப்பமாயிற்று. நாயகமவர்கள் ஒருநாள் நமக்குள்[illegible]காலம் முற்றுப்பெற்றது; இனிநாம் நம்மை அநுப்பினவன் இடத்துச் செல்லுதற்கு ஆயத்தப்படவேண்டும் என்று கருதி, அவ்வாயத்தத்தோடே வேளையை எதிர்நோக்கிக்கொண்டு, இதனை நம்மைச் சேர்ந்தவர்களுக்குத் தெரிவிக்கலாமென்று எல்லாரையும் அழைத்துச் சமூகத்தேவைத்து, அவர்களை நோக்கி "என் அன்புள்ளவர்களே, என்னுடைய சீவியகாலம் முடிந்தது. இனி உங்களுக்கு என்னிடத்து ஆகவேண்டியவற்றைக் கேட்டுப் பெற்றுக் கொள்வீர்களாக" எனச் சொன்னார்கள். இதனைக்கேட்ட மக்கள், மருமக்கள், சுற்றத்தினர், கலீபா க்கள், சீஷர்கள், வேறு ஔலியா மார்கள், சாமானியர் எல்லாரும் மனங் கலங்கினவர்களாய் நா

யகமவர்கள் சமுகத்தே அறிவுகேட்க அன்றுவந்து நிறைந்திருந்தார்கள்.

நாயகமவர்கள் அன்றைத்தினம் அவர்களெல்லார்க்கும் உலகம் இன்னதன்மையானது என்றும்; அவற்றில் உள்ள பொருள்கள் இவ்வகைப்பட்டவை என்றும், உலகத்தால் உண்டாகின்ற குழப்பங்கள் இன்னவை என்றும், அக்குழப்பத்திற்குள் அகப்பட்டவர் அடையும் கதி இன்னது என்றும், அவ்வகைக் குழப்பங்களைவிட்டு விலகும்வகை இது என்றும் விரிவாகச்சொன்னார்கள். அன்றியும், தெய்வத்துவம், ஞானநெறியை அடையும்வகை, நான்குவகைப் பூதமூலம், சேதனாசேதனங்களில் அப்பூதங்கள் பொதிந்துள்ளவகை, அவற்றைச் சார்ந்தவை என்னும் அனைத்தையும், தலீலையும் ஹதீதையும் மேற்கோளாகக் காட்டிக்காட்டிப் போதித்தார்கள். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும், ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐம்புலன்களும் இவ்வகைப்பட்டவை என்றும் விவரப்படச் சொன்னார்கள். அதன்பின், அப்பொறிபுலாதிகளை அடக்கி ஒருமைப்பாடு பூண்டு சுலூக்கு நிலையில் நின்று செல்லும்வழியும், அவ்வழியின் பிரிவுகளும், உண்மையான ஒரு பொருளின் நாட்டத்தே குறிக்கொள்ளுதலும், அக் கொள்கைக்கு வருந் தன்மைகளும் மற்றவும் தெளிவுபடுமாறு தெரிவித்தார்கள். அன்றியும், காலம், கருவி, கோலம், குணம், குணி என்னும் இவற்றின் கூறுபாடுகளும், ஸ்தூல சூக்குமவகையும் விளங்கத் தாட்டாந்த திருட்டாந்தங்களுடன் எடுத்துக் காட்டி உணர்த்தினார்கள். இன்னும், அல்லாகுத் தஆலாவை உவக்கின்ற தன்மையும், அதனை நிறைவேற்றி முடிக்குந் தன்மையும், அவனுடைய பொருத்தத்தைப் பெறுந் தன்மையும், பொருந்தும்வழியில் நிற்குந் தன்மையும், அவனைக் காண்கின்ற தன்மையும், தோற்றப்படும் பொருள்களை இல்லாமையாக்குந் தன்மையும், மறுமைப் பலனை நி

லைமைபெறச்செய்யுந் தன்மையும், இன்ன தின்னதெனத்
தெளிவுறக் கற்பித்தார்கள். மஆரிபா வும், அதனால் அ
டையும் ஷுஹூது தும், மவுஜூசாரமும், அவ்வவ்வற்றின்
நிலைமையும், அந் நிலைமையில் தரிபடுதலும், இவைபோன்ற
வைகளும் இஃதிஃது என்று தேனும் பாலும் கலந்து சொ
ரிவதுபோலச் சொரிந்தார்கள்.

நாயகமவர்கள் இவ்வளவுஞ்சொல்லிப் பின்னர், அ
வின்றி விரிந்த கடலினிடத்து அதில்நின்று அலை உண்
டாய்ப் பின் அவ்வலை அக்கடலினிடத்தே ஒடுங்குவது
போல, ஹக்கு என்னும் அழியாத * பொருளில்நின்று நாம்
உண்டாய்ப் பின் அதனிடத்தே ஒடுங்காநிற்கும் இயல்
முழுவதையும் விளக்கமுறப் போதித்து, மறுபடியும் தா
கள் சமுகத்துக் கூடியிருப்போரை நோக்கிக் கீழ்வருமா
சொல்கின்றார்கள்:—

"மனிதர்களே, நான் இவ் வுலகத்திற்கு வந்தேன்
வந்தவன், இதுவரையும் சீவித்து இருந்தேன். என்கால
து முற்பாகத்தில் வனசஞ்சாரியாய்த் திரிந்தும், பிற்பாக
தில் எல்லாச் சுகங்களையும் அநுபவித்துக்கொண்டு ஒ
அரசனைப்போல் வாழ்ந்தேன். இக்காலத்தில் என்னை
யொத்த ஒருவர் இவ்வுலகத்து இல்லை. இவ்வாறு எல்
மேம்பாடுகளும் வாய்த்து இருந்தும், இவ் வுலகவாழ்க்கை
யில் ஒன்றேனும் எனக்குச் சொந்தமானது அன்று. இ
வெல்லாவற்றையும் கைவிட்டுப்போதலே தீர்மானம். ஆ
லால், நீவிர் இவ் வுலகவாழ்க்கையில் பற்றுவிட்டு இரு
பீர்களாக. அவ்வாறு இருப்பதே மனித இயற்கை. எ
வருடம் வரையும் என் மனதினிடத்து அல்லாகுத்தஆ

---

* பொருளில் நின்று நாம் உண்டாய் என்பதில் நின்று
னும் அவதிக்காரகத்தில் வந்த ஐந்தாம்வேற்றுமைச் சொல்லு
நிலைத்திணை இயங்குதிணையின் கண் நில்லாது புறப்பாட்டெ
யென்னும் வெகிர்சீமைக்கண் நின்றது.

அல்லாத மற்ற எந்தப்பொருளும் ஊசாடாதபடி நான் இருந்தேன். இன்னும் ஏழுவருடம் ஊண்விருப்பின்றிக் காலம் போக்கினேன். பின்னும் ஏழுவருடம் இஷா விற் செய்யும் உலு வோடே பஜ்று தொழுதேன். இக்காலத்தில் பகற்பொழுதிலும் தூங்கியறியேன். அல்லாகுத் தஆலா வின் இன்பம் என் உடலிற் பொதிந்திருந்ததனால் இவ்வாறு எனக்கு நேர்ந்தது; இது சத்தியம். நீவிரும் அவ்வாறுபேணிச் செய்வீர்களாக. என்னுடைய முகாஷபா வில் பலவகைப்பட்ட அற்புதக் காட்சிகளையெல்லாம் அல்லாகுத் தஆலா எனக்கு உண்டாக்கினான். அவற்றை நான் கண்டேன். அவற்றின் வகைகளை உங்களுக்குச் சொல்வேனாயின், உங்கள் மனங்கள் அவற்றைத் தாங்கிக்கொள்ளமாட்டா. நான் அல்லாகுத் தஆலா வின் பேரருள்நிறைந்தவன். ஆதலால், அவற்றையெல்லாம் காணப்பெற்றேன்"

என்று இவ்வாறு பொதுப்படச்சொல்லி முடித்தார்கள். இவற்றை எல்லாரும் கேட்டு வாய்கள் மூடினவர்களாயிருந்தார்கள். அன்றுபோய்ப் பொழுதுபட்டு இராத்திரியாய்ப் பின் சூரியன் உதித்து, நாயகமவர்களுக்குச் சீவியகாலத்து நாட்களில் இனி ஒரு நாள் இல்லை என்னும்படியான இறுதிநாள் வந்தது. அந்நாள்: ஹிஜ்றத்து ஐந்நூற்றெழுபத்தெட்டாம்வருடத்து, ஜமாத்துல் அவ்வல் மாதத்து, இருபத்திரண்டாந் திகதியாகிய வியாழக்கிழமை. அன்று அதிகாலையில் நாயகமவர்கள் முன்சொன்ன அனைவரையும் அழைத்துச் சமுகத்தே வைத்துக்கொண்டு: "இந்நாள் நான் உங்களைவிட்டுப் பிரிந்துபோய்விடக் குறிப்பிட்ட பிரயாணநாளாகும்". என்று கூறினார்கள். இச்சொல்லைக்கேட்ட எல்லாரும் மனங்கலங்கி இனி நாம் என்செய்வோம்! என்று உடல்சோர்ந்து இருந்து வருந்தினார்கள். முகம் வாடினவர்களாய்க் கண்ணீர் சிந்திக் கலக்கமுற்று இருக்கும் மக்களையும், மருமக்களையும், சீஷர்க

ளையும், மற்றவர்களையும் நாயகமவர்கள் நோக்கிக் கீழ்வருமாறு சொல்கின்றார்கள்:—

"என்மீது மன அன்பு நிறைந்துள்ளவர்களே, இவ்வுலகம் அனைத்தும் சிருஷ்டிக்கப்படுவதற்கு முன்னே ஆதிசிருஷ்டியும் உலகம் சிருஷ்டியாதற்குக் காரணமுமாய் விளங்கும் என்பாட்டனார் நபி முகம்மது ஸல்லல்லாது அலைகிவஸல்லமவர்களே மௌத்து என்கின்ற கருமத்தில் இயற்கையாளராய் அதனைப் பெற்றுக்கொண்டார்கள் என்றால், வேறே யார்தாம் மௌத்தாகமாட்டார்! சிருஷ்டிகனான முதற்பொருள் ஒன்று ஒழிய மற்றவையெல்லாம் அழிந்துபோவதில்நின்று தவறா. வானத்தைப்பிளந்து ஏறிச்செல்வோரும், பூமியைப்பிளந்து இறங்கிச்செல்வோரும், எதிர்ப்பாரின் தசைகளைக் கீறியெறியும் திறன் உடையோரும், பரகாயகமனஞ்செய்து உலாவுவோரும், கடைசியாகத் தம் உடலைப்போட்டுவிட்டுத் தாம் போகவேண்டிய இடத்திற்குப் போகுதல் கடைமையாம். சீவித்திருந்தவன் தன் தூலதேகத்தை விட்டுப்போதலைக் காணவருபவன்பார்க்குதல் நீவிர் கண்டறிந்ததுதானே. என்னவகையான பற்றுதலையுடையோராயினும் மௌத்தின்பானத்தைப் பருகினவரேயன்றி, சாகாமையென்னும் பானமொன்று இருந்து அதனைப்பருகினவர் அல்லர். ஆதலால், எவரும் இவ்வுலகத்தே தரிபட்டு இரார். சிறப்புற்றவையெல்லாம் அச் சிறப்புக்குலையப்பெறும்; சொலித்தவையெல்லாம் இருளடையும்; மேலேபறந்தவை கீழேயிறங்கும்; தோற்றப்பட்டவை மறைவுபெறும்; விளக்கமாயிருந்தவைமழுங்கும்; எழுந்துநின்றவை விழுந்துகிடக்கும். ஆதலால், பிறந்தவை இறக்கும் என்று ஒருவர் சொல்லவும் வேண்டுமோ? பெற்றமக்களையும், சுகமநுபவிக்கின்ற மனையாளையும், இருந்து ஆளும் மாளிகையையும், தேடிச்சேர்த்த திரவியத்தையும், விருப்புற்றுத் திரட்டிவைத்த பலபண்டங்களையும் விட்டுவிட்டுப் போகுதல் இன்னநேரத்து என்

று அறியமாட்டாத மனிதர் பெற்றிருக்கும் வாழ்நாள், நீ
ரிற் குமிழியோதான்! மின்னலோதான்! யாதென்று நான்
சொல்வேன்! மரணம் என்பது பிறந்தவற்றுக்கு அன்றி,
வேறே எதற்கு உடையது என்று ஆராய்ந்து அறிவோர்
அம்மரணத்தை மறப்பரா? உணர்வீராக. ஆதலால், நீவிர்
இம்மண்ணுலகத்தை உவந்திராதீர். சிறந்தோராதற்கு நீவிர்
விருப்புள்ளவர்களாயின், இவ்வுலக இச்சையின் எண்ணத்
தை ஒழிப்பீர்களாக. இவ்வுலகத்திற்குவந்த ஒவ்வொருவனு
ம் தான்வந்த காரியம் என்னவென்று சிந்தனைபண்ணி, அ
தனைச் செய்துமுடிப்பதே புத்தியாகும். நாம் இங்குவந்த
கடமை இன்னதென்று உணராது, உண்டு உடுத்துப் பொ
ருள் ஈட்டி அநுபவித்துச் சுகிப்பதே கடமையெனக்
கொண்டு வாழுவோர் வீணிற்போக்குவோர், பின்பு பெரிதும்
வருந்தித் துக்கிப்பர். ஆதலால், என்மீது விருப்பமுள்ள
வர்களே, இப்பூலோகமானது போகும்வழியில் இருக்கின்
ற ஒரு தங்குசத்திரம் போலும். வழிப்பயணக்காரன் இ
டைவழிக்கண் உள்ள சத்திரத்தில் தங்குவானாயின், என்
றும் அச்சத்திரத்திலேயே தரிபட்டு இரான்; தான் போக
வேண்டிய இடத்திற்கு அதனைவிட்டுப்புறப்பட்டுப் போ
யேவிடுவான். அதுபோல இவ்வுலகசத்திரத்துவந்து தங்
கின நாம் இதனைவிட்டுப் போயேவிடல்வேண்டும். ஆயி
னும் இங்குவந்து தங்கினதற்குக் காரணம் ஒன்றுண்டு.
அஃது யாதெனில்;—மனிதனானவன் சிருஷ்டியாகிய தன்
னையும், சிருஷ்டிகனாகிய கர்த்தாவையும் விவரமாக உணர்ந்
து அறிந்து, அவ்வறிவினுக்கு ஏற்ற கருமங்களைப் புரிவது
தான். ஒருவன், பன்மைப்பாட்டைக் கெடுத்து உள்ளபொ
ருள்களை ஒருமைப்படுத்தி நான் என்பதனையும் நசீ செய்
வானாயின், அவன் அவ்வொருமைப்பாட்டுற சேர்ந்து, முந்
தியிருந்த நாதக்கிருத்தியகாரர் பெற்ற முத்தியைப் பெறு
வான். இவைகூடிபெற்றுக் கிருந்துவோரின் எவனுக்கும் இது
கடமையாம். முத்திபெற்ற நாதக்கிருத்தியகாரன்தான்

நாடியதைச்செய்வான். சிருஷ்டிவர்க்கம் அனைத்திலும் நடைபெறத் தான் எண்ணியவற்றை நடத்துவான். இப்படிச் செய்வதற்குக் கர்த்தாவாகிய ஒருவனே தத்துவம் அருள்வான், ஒருவன் தனக்குள்ள தத்துவங்களையெல்லாம் ஒழித்து இல்லாமையாக்குவானுயின், அவன் செய்வனவெல்லாம் கர்த்தாவின் செயல்களாகும். அவன் ஏவுவனவெல்லாம் கர்த்தா ஏவுவனவாகும். இஃது என்றும் நிலைபெற்று நிற்கும். அவன் ஆணைக்கு இறந்துபோயினவை உயிர்பெற்று எழும்; உயிர்பெற்றுள்ளவை இறக்கும்; மேலே பறந்துபோயினவை கீழேவிழும்; கீழேவிழுந்தவை எழுந்து பறக்கும்; சிறந்தவை குலையும்; குலைந்தவை சிறக்கும். சிருஷ்டியுள் உள்ள ஒருவன் இவ்வாறு செய்வானுயின், அவனைச் சிருஷ்டிகனோடு ஒப்பிட்டுரைத்தல் கூடாது. அங்ஙனம் உரைத்தல் குபிர் என்றும் மகாதோஷமாகும். ஏனெனில்;— சிருஷ்டிக்கப்பட்டவன் ஒருபோதும் சிருஷ்டிகனுகான். நீவிர் இச்சொல்லை உணர்ந்து கடைப்பிடித்து நிற்பீராக. ஆனல், ஒரு சிருஷ்டியானவன் சிருஷ்டிகன் போலக் கருமங்களைச்செய்தல் எவ்வாறும் எனில்;— பனுவையும் பகாவையும் அறிந்து தன்னை பனுவாக்கி அமல் செய்வானுயின், அது முதிர்ச்சிபெற்று, அதன்பின் சிருஷ்டிகனுக்கு உரிய அஸ்மா, [பெயர்கள்] ஸிபாத்து, [இயல்கள்] அப்ஆல் [செயல்கள்] ஆகிய இம்மூன்றும் சிருஷ்டியானவனிடத்துத் தரிபடும். எங்ஙனமெனில்;— இரும்பினிடத்து அக்கினிதரிபடுதல் போலாம். அங்ஙனமாயின், அவ்விரும்பு அக்கினிசெய்வன வெல்லாம் செய்வதுபோல, சிருஷ்டியானவன் சிருஷ்டிகன் செய்வனவெல்லாம் செய்வான். சிருஷ்டியான ஒரு கல்கு சிருஷ்டிகனுன ஹக்குடைய அஸ்மா, ஸிபாத்து அபுஆல் களைத் தன்னிடத்துத் தரிபடுத்தி, தன்னுடையவைகளை அழித்திட்டபோது, ஹக்கு தன் உலாஹுபத்தான பார்வையாக இவனைப் பார்ப்பான். அப்பார்வை பெற்றபோது, இவன் அவன்செய்வதையெல்

லாஞ்செய்வான். இவையேயன்றி, கல்காகிய இவன் ஹக்
காகிய அவன் ஆவான் என்பது, எப்போதும் இல்லை.
அறிவீர்களாக. இன்னும் ஹக்கின் குணங்கொண்ட ஒரு
கல்கு என்றும் அப்படியேயிரான். அக்கினியின் குணங்
கொண்டு அவ்வக்கினிமயமாய் நிற்கும் இரும்பு அக்குணத்
தோடு இருக்குங்காலத்து, அக்கினிசெய்வதுபோல்ச் சுட்
டுக் கருக்கும். அவ்வக்கினி ஆறி முன்போல வெற்றிரும்
பானபின் அவ்வாறு செய்யாது. அதுபோல, ஒரு கல்கு
ஹக்கின் குணங்கொண்டிருக்கையில் ஹக்கு செய்வது
போலச் செய்வான். அக்குணம் மாறினபின் அவ்வாறு
செய்யான். இதனை நீவிர் நன்குணரக்கடவீர்களாக. இன்
னும் என் பிரியமுள்ளவர்களே, உங்கள் இல்முகளைத்
தெளிவாக்கிவேதகட்டளைக்கு ஒழுகி செய்துள்ள பாவத்
தைக் கருதி அழுது தௌபா செய்து தீர்த்து, பின் அது
செய்யாது காத்து, பொறுமையில் தரிபடுவீர்களாக. இ
வை அளவிறந்த பலன்களைத்தரும். வேற்றுமையென்னும்
துவிதபாவனையை அழித்து ஒருமையிய உணர்த்தி அதன்
வழியினிடத்தே நிறுத்துகின்ற ஞானதேசிகரான உஸ்தா
துடைய சொல்லுக்கு வழிபடுவீர்களாக. அங்ஙனம் வழி
பட்டவர்களே அருமையானவர்கள். நாள்தோறும் ஐந்து
வேளையும் இடைவிடாது தொழுவீர்களாக. அவ்வேளை
யல்லாத வேறுவேளை களிலும் நியமமான தொழுகைக
ளையும் விடாதீர்கள். வருஷந்தோறும் வரும் றமலான்
மாதத்து நோன்பு என்னும் உபவாசவிரதத்தை விடாதீர்
கள். பொருள் உண்டாயின் வேதகட்டளைப்படி கொடுக்க
வேண்டிய ஜகாத்தைக் கொடுப்பீர்களாக. இயலுமாயின்
மக்காவுக்குச் செல்வீர்களாக. இவைதாம் இஸ்லாம் மார்க்
கக்கடமைகள். அல்லாகுத் தஆலா உங்களுக்குக் கொடுக்
கும் கொடைக்கு நன்றியறிதலோடு இருப்பீர்களாக. அ
வன் உங்களைச் சோதனைபுரிதற்குவிடுகின்ற தீங்கைப் பொ
றுத்துக்கொள்வீர்களாக. அவனுடைய கற்பனை வந்துவிடத்

துப் பொருந்திக்கொள்வீர்களாக. அவனேயன்றி வேறொ ருவர் நமக்கு இல்லையே. ஆதலால், இம்மூவகைக் கருமத் தையும் நாம் செய்யோமாயின், இனிநாம் சேர்ந்துகொள் ளுதற்கு வேறு புகலிடம் யாது! இல்லையன்றோ!"

எனவும் இவைபோன்ற பிறவுமான நன்மை தீமைக ளை யெல்லாம் சொல்லத்தக்கவாறு நாயகமவர்கள் சொல் லிக்கொண்டிருந்தார்கள். பின்பு அவர்கள் இவ்வுலகத்தில் நின்று பிரியும் வேளை அடுத்தது. அடுக்கவே, கடைசியா கிய தங்கள் திருவாய்மொழியை வெளிப்படுத்திவிட்டு வாயை மூடிக்கொண்டு, அல்லாகுத் தஆலா வின் பக்கத்தே முகத்தைத் திருப்பினார்கள். அவர்களுடைய அகம் முகம் என்னும் இருபார்வைகளும் அவன்புறத்தே இருந்தன. இந்நிலைமையைக்கண்டு எல்லோரும் மனங்கலங்கி, கண் ணீர் சிந்திக்கொண்டிருந்தார்கள். அவ்வேளையில், நாயக அவர்களின் மாளிகை முழுமையும் அல்லாகுத்தஆலா வின் பேரருளாகிய ஒளியும், சுவர்க்கத்து நறுமணமும் வந்து நிரம்பிக்கொண்டிருந்தன.

ஹிஜ்றத்து ஐஞ்ஞூற் றெழுபத்தெட்டாம் வருடம், ஜமாத்துல் அவ்வல் மாதம், இருபத்திரண்டாந் திகதி, வி யாழக்கிழமைப் பகல், குத்புல் ஆலம், கௌதுல் அகுலம், கைறுல் ஔலியா, தாஜுல்வாஸிலீன், மஃபூபு றப்பல் ஆ லமீன், சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் சையிது அகுமதுல் க பீறு மஉஷூக்குல்லா ஹுசைனுற்றபாஇ றலியல்லாகு அன்கு நாயகமவர்கள் எழுபத்தெட்டாம் வயதில் இப்பூ லோக வாழ்க்கையைவிட்டு, அல்லாகுத் தஆலா இடத்தைச் சேர்தற்கு உபாத்தானார்கள். அப்போது அவர்களின், மருவாதவரும் மருவுமாறு ததும்பிவழியும் கருணைத்தேன் நிறைந்த அழகிய கண்களாகிய மலர்களும், இறந்த உயர் திணை அஃறிணைகள் உயிர்பெற்று எழுமாறு சொரிந்த

ருமொழித் தேன்நிறைந்த சிறப்பான வாயாகிய மலரும் குவிந்து மூடின.

நாயகமவர்கள் உபாத்தான வுடன், வானத்தில் சூரியன் தோற்றியிருக்கும்போது இதழ்கள்விரிந்து அலர்ந்திருந்த அழகிய தாமரைமலர்கள் அச் சூரியன் அஸ்தகிரியில் மறைந்தபோது இதழ்கள் குவிந்து ஒடுங்குவதுபோல எல்லார் முகங்களும் ஒடுங்கின. புதல்வர்கள், மருமக்கள் மார், சுற்றத்தார், கலீபா மார், முரீதீன் கள், மற்றவர்களு ஆகிய எல்லாரும் உணர்விழந்து கண்ணீர்பெருக அழுது சஞ்சலப்பட்டு உருகினார்கள். பதாயிகு நகரம் முழுதும் ஓலமிட்டு அழுதது. எல்லாரும் ஒன்றும் தோற்றாதவர்களாய் வெகுநேரமளவும் துயரக்கடலில் மூழ்கிப்போயிருந்தார்கள்.

அதன்பின் எல்லார்க்கும் தெளிவுபிறந்து, அவரவர் இருதயத்தில் மௌத்தை க்குறித்து அல்லாகுத் தஆலா அருளிய வேதவாக்கியங்களும், நபி முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் மொழிந்த திருவாய் மொழிகளும் உதித்துத் தேறுதல் அடைந்து, நாயகமவர்களை அடக்கஞ் செய்வதற்கு ஆகும் கருமங்களைச்செய்யத் தொடங்கினார்கள்.

நாயகமவர்களின் அழகுவாய்ந்த திவ்விய திருமேனியை அவர்கள் குமாரர்கள் முதலான உரிமையாளர் நின்று குளிப்பாட்டி, உயர்ந்த ஆடையால் கபன் இட்டு, நறுமணங்கள் திமிர்ந்து, பலன்பெற்ற பலகையாற்செய்த மஞ்சினிடத்துக் கலிமா முழக்கத்துடன் தூக்கிவைத்தார்கள். அந்நேரம் மஷ்றிகு முதல் மகுறிபு வரையும் உள்ள அக்தாபு கள், அப்தால் கள், அப்றாது கள், ஔத்தாது கள், உப்பாது கள், ஜுஹ்ஹாது கள், நுகபா க்கள், நுஜபா க்கள், இன்னுமுள்ள ஔலியா க்கள் எல்லாரும் பதாயீகு நகரத்தில் வந்து எள்ளிட இடமின்றிக் கணக்கற்று நெருங்கிக் கூடியி

ருந்தார்கள். பதாயிகு நகரமுழுதும் சனத்திரளால் முழு
கியிருந்தது. அவ்வூரார்க்குரிய சஞ்சலம் இவ்வளவினது
எனச் சொல்லுதல் அரிது.

இணையற்ற ஒளலியாக்கள் கூட்டத்தில் நாயகமவர்க
ளின் பேரழகுவாய்ந்த திருமேனி அமைந்திருக்கும் சிறப்
பான மஞ்சு சுமக்கப்பட்டுச் சென்றது. அந்தநேரம் உல
கமுழுதும் அழுதது. மனிதர்களும், வனவிலங்குகளும்,
பறவையினங்களும், ஜின்களும், மற்று அசேதனப் பொ
ருட்களும் அழுதுபுலம்ப, வானத்து மலக்குகள் சோ
ணங்கூறி மலர்மாரிபெய்ய நாயகமவர்களைக்கொண்டு சென்
று ஆலயத்துள் வைத்து மேற்கூறிய எல்லோரும் நின்று
தொழுவித்து, அதன்பின், பதாயிகு நகரத்துநடுவே நாய
கமவர்களுக்கு என்று ஆயத்தம்பண்ணியிருக்கும் கட்டி
டத்தில் அகழ்ந்த சுவர்க்கம்போன்ற கபுறின் கண் அடக்
கிமுடித்து, துஆ இரந்தார்கள். அவ்விடத்தே குர்ஆன்
வேதம் பலராலும் ஓதப்பட்டுக்கொண்டிருந்தது.

நாயகமவர்களை அடக்கஞ்செய்தபின் புதியராய்வந்த
எல்லோரும் அவரவர் இடங்களுக்குச் சென்றார்கள். நாயக
மவர்களைச் சேர்ந்தவர்களெல்லாம் அவர்கள் மாளிகையில்
வந்து கூடியிருந்தார்கள். பதாயிகு நகரம் அன்று முழு
தும் புல்லென்று அமைதியுற்று இருந்தது. நாயகமவர்
கள் உபாத்தான சங்கதியைத் தூரத்தொலைகளிலுள்ள சா
மானிய மனிதர்கள் கேட்டுக்கேட்டுவந்து, மக்கள் முதலா
ன சுற்றத்தாரோடு தஅஜியத்துச்செய்துகொண்டு போ
னார்கள்.

நாயகமவர்கள் உபாத்தான பின் அவர்களை எண்ணி
வருந்துவோர்க்கு அவர்கள் குமாரர்களும், கலீபாக்களும்,
அறிவுணர்த்தித் தேற்றிவந்தார்கள். நாயகமவர்கள் அடக்
கமான நாள்முதல் கியாம நாள் வரையுமாக அவர்கள் ஆல
யத்தினிடத்து மகத்துவம் பொலிந்து விளங்கிக்கொண்டி
ருக்கின்றது.

நாயகமவர்கள் உபாத்தான அடுத்தநாள், அவர்கள் மருகர் சைகு இபுறுஹீமுல் அகுறபும், வேறு அக்றாபுகளும், ஒளலியாக்களுமாகத் தொண்ணூற்றென்பதுபேர்கள் நாயகமவர்களின் றௌலாவினுள் மகிமைவாய்ந்த கபுறின் கால்மாட்டில் பத்தியாக உட்கார்ந்து, கைகளைக் கட்டித் தலைகள்சாய்த்து, அதிக ஒழுக்கத்துடனும் பக்தியுடனும் வாய் மூடிக்கொண்டிருந்தார்கள். அங்கே எவ்வித அரவமும் இன்றி, எல்லாம் அமைதியாயிருந்தன. அப்போது, குணதிசைக்கண் உள்ள குத்புகள் நால்வரும், தொண்ணூற்றென்பது ஒளலியாக்களும் அங்குவந்து நாயகமவர்களின் பள்ளியுள் நுழைந்து, அங்கு வரிசையாய் உட்கார்ந்து இருப்பவர்களோடு இவர்களும் தாழ்மையும் ஒழுக்கமுமாக உட்கார்ந்தார்கள். இத் தொண்ணூற்றென்பது பேர்களுள் பத்துப்பேர்கள் மாத்திரம் அவ்வாறு தாழ்மையும் ஒழுங்கும் இன்றி, நாயகமவர்களின் சிறப்பான கபுறைப் பாராமலும், தாழ்ச்சிசெய்யாமலும், புறக்கணித்தவர்களா யிருந்தார்கள். இவ்வாறு இறுமாப்புற்று இருக்கும் அப் பதின்மரையும் சைகு இபுறுஹீமுல் அகுறபு அவர்கள் நோக்கிச் சொல்கின்றார்கள்:—

"அல்லாகுத் தஆலா வுடைய அருள்பெற்ற ஒளலியாக்களே, எங்கள் பெருந்தகைமையுள்ள சைகு றலியல்லாகு அன்கு அவர்கள் குணதிசை முதற் குடதிசையளவும் திருவடிக்கீழ் அடங்க ஆட்சிபுரியும் சுல்தானுல் ஆரிபீனும், தாஜுல்வாஸிலீனும், மஉஷூக்குல்லாவும், மஹ்பூபுல்லாவும் ஆனவர்கள்; கைறுல் ஒளலியா எனப்படுவார்கள்; கௌதுல் அகுலம் என்னும் மகத்துவம் வாய்ந்தவர்கள்; சையிது அகுமதுல் கபீறு என்னும் திருநாமமுள்ளவர்கள். இவர்கள் சீவியகாலத்துத் தங்கள் திருவாய் மலர்ந்து 'நான் என் பாட்டனார் முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்ல மவர்களுடைய இருதயத்தில் இருக்கின்றவன். ஒலிகளே, நீவிரும், உங்களுக்கு முன்னேயிருந்த

ஒலிமாரும், இனிப் பிறந்துவரும் ஒலிமாரும், சிற்றூறு போன்றவர்கள்; நானோ அலைகடலை ஒத்தவன். எல்லாரும் என்னைத் தொடர்ந்தவர்கள்; நான் தொடரப்பட்டவன்' என்றும், இன்னும் தங்கள் பலவகை மகிமைகளையும் சொல்லியிருக்கின்றார்கள். ஆதலால், நீவிர் இவர்கள் சமுகத்தில் ஒழுக்கமாயிருங்கள்" என்றார்கள். இவ்வாறு சொல்லவே, அப் பதின்பரும் திரும்பிப்பார்த்து "இபுறாஹீமே, என்ன சொன்னீர்? உம்முடைய ஸெய்யிதைக் குறித்து எங்களுக்கு நீர் அச்சங் காட்டுகின்றீரோ! எங்களுடைய பதவியை நீர் அறியீர். அவ்விதப் பதவிபெற்ற நாங்கள் நீர் சொன்ன இவரைப் பொருந்திக்கொண்டு, இவர்க்குத் தாழ்ச்சி செய்யமாட்டோம்" என்றார்கள். பின்னும் அப்பதின்மருட் சிலர் நாயகமவர்களின் மகத்துவமான கபுறுக்கு நேரே கால்களை நீட்டிக்கொண்டு ஒழுக்கக்கேடாயும், சிலர் அவர்கள் இருந்த இடத்தை நோக்கிக் கால்களை நீட்டி முறைமைதவறியும் இறுமாந்து இருந்தார்கள்.

இவர்கள் இவ்வாறு இருக்கும்போது, நாயகமவர்களின் கபுறுறில் இருந்து உறையில் நின்று உருவியதுபோல கூர்மையுள்ள வாள் ஒன்று வெளிப்பட்டு, வெறுப்புற்று மதத்தோடு இருக்கும் பத்துப்பேர்களின் கால்களிலும் கழுத்துக்களிலும் தாக்கித் துண்டாய்த் தறிபடச்செய்துவிட்டு, வந்தபடி போயிற்று. அதன்பின், அவ்வாறே வல்லயம் ஒன்று வெளியேவந்து அவர்களின் மார்புகளிற் குத்திப் பின்புறம் உருவிப்போயிற்று. உடனே ஆகாயத்தில் ஒரு மின்னல் தோன்றிவந்து அவர்கள் நாவுகளிற் பிடித்துச் சுட்டுக் கரித்துவிட்டுச் சென்றது. இவ்வாறு நிகழும்போது அப்புதின்மரும் "நாங்கள் அல்லாவுக்கு மாறுசெய்தோம். விக்கிரகங்களை வணங்கினோம். விக்கிரகந்தான் எங்கள் தெய்வம். அதற்குத்தான் நாங்கள் ஈமான் கொண்டிருக்கின்றோம்" என்றார்கள். இத்தீங்கான சொல்லை இபுறாஹீமுல் அகுறபு அவர்கள் கேட்டு "நீவிர் இவ்வா

று சொல்லாதீர்கள். அல்லாகுத்தஆலா வுக்கே ஈமான் கொள்ளுங்கள். ஷஹாதத்துக்கலிமா வைச் சொல்வீர்களாக" என அவர்களுக்குச் சொன்னர்கள். மற்ற ஒலிமாரும் இவ்வாறே சொன்னர்கள்.

இப்படி இடித்துரைத்த இச்சொல்லை அப் பதின்மருங்கேட்டு அதற்கு உடம்படாது, திருப்பித்திருப்பி முன் சொன்னவாறே சொல்லி, ஈமானை இழந்து வழி தவறிப் போனர்கள். உடனே நாயகமவர்களின் கபுறில் நின்று கொடிய புலியொன்று புறப்பட்டுவந்து, அவர்களைக் கடித்து உறுப்புறுப்பாகப் பிரித்துச் சிதைத்துவிட்டு மறைந்தது. ஆக அப் பதின்மரும் காபிராய்ச் செத்தார்கள். அல்லாகுத் தஆலா வை உவந்து அரிய பெரிய வணக்கங்களையெல்லாம் புரிந்து பெரும்பேறுபெற்று ஒலி களாயிருந்த அப்பதின்மரும், நாயகமவர்களை உவந்து தாழ்மைபுரியாது வெறுப்புற்று மதத்துப்பேசியதனல், ஈமானை இழந்து காபிராய் மடிந்தார்கள்.

நாயகமவர்களின் பள்ளியுள் நிகழ்ந்த இவ் வற்புதமான விஷயத்தை அங்கிருந்தவரெல்லாம் கண்டு அஞ்சி, ஷஹாதத்துக் கலிமா வை முழக்கினர்கள். பின் எல்லாரும் தெளபா செய்துகொண்டு, நாயகமவர்களை வியந்து புகழ்ந்தவர்களாய்ப் பள்ளியைவிட்டு வெளிப்பட்டுத் தத்தம் இருப்பிடஞ் சென்றார்கள்.

நாயகமவர்கள் உபாத்தா வதற்கு முன்னர் ஷாம் தேசத்துத் திமஷ்கு நகரத்திலிருந்து நூற்றிருபது பேர்கள் நாயகமவர்களிடத்து முரீதாய் அவர்கள் திருமலர்க்கையைப்பிடித்து பைஅத்துக் கொடுத்து, அவர்களுக்குத் தொண்டர்களாயிருக்க நாடிப் புறப்பட்டு வந்தார்கள். அவர்கள் தேசங்களைக் கடந்து நாயகமவர்கள் உபாத்தான சில தினங்களுக்குப் பின்னர் பதாயிகு நகரம்வந்து சேர்ந்

தார்கள். ஊர்க்குள் புகுந்தவுடன் நாயகமவர்கள் உபாத்தாய் விட்டார்கள் என்னும் செய்தி அவர்கள் காதுகளில் விழுந்தது.

விழவே, அவர்கள் இருதயங்கள் துண்டுதுண்டாய்த் தெறித்தன. உபாத்தானார்கள் என்றசொல் அக்கினியாய்ப் பற்றி அவர்கள் உள்ளங்களைக் கருக்கிற்று. நூற்றிருபது பெரியோர்களும் உணர்வழிந்து அடித்து விழுந்து புழுதியிற்கிடந்து புரண்டார்கள்; அழுதார்கள்; அலறினார்கள். இவ்வமளியால் தெருக்களில் கூட்டங்கள் கூடின. அக்கூட்டத்தோடே அந்நூற்றிருபதுபேர்களும் தரையில் உருண்டவர்களாய் நாயகமவர்கள் அடங்கியிருக்கும் பள்ளிக்கு வந்து உள்ளேபுகுந்து, கபுறின் கால்மாட்டில் கைகட்டி நின்று, கண்ணீர்பெருக்கெடுப்ப அழுது, பின்வருமாறு புலம்பி முறைப்பாடுசெய்தார்கள்:—

கொச்சகக்கலிப்பாக்கள்.

109. * துய்ய தகையினுயர் சுல்தானுல் ஆரிபீன்
சையிது அருமதுல் கபீறு திருவளரும்
ஐய கவ்துல்லதுல மன்பின் மஉஷூக்துல்லா
வையம்புகழ் தாஜுல் வாஸிலீ னெங்கோவே.

110. தீனோர்கள் கண்மணியே செல்வத் தனிச்சுடரே
வானோர்கள் போற்றுபெரு மானேயிம் மண்ணகத்தின்
ஏனோர் தினமு மிருதா டலைச்சுமக்கத்
தானோர் திகர்போக வாய்த்த தவத்தேவே.

114. உய்யும் வழியா யுருகிக் கரைந்தான
மெய்புமுயர் வீடளித்த மேன்மைத் திருவாயுஞ்
செய்யும் புதுமைத்தாய்ச் செத்த வெழப்புரிந்த
கையுங் கனிவாயுங் காண்பமோ காணேமே.

115. சூல்படைத்த மேகஞ் சொரியுந் தகைபோல
நூல்படைத்த யாவு நுவலுந் திருச்சவையின்

* இச்செய்யுட்கள் ஏழும் ஆரிபுநாயகம் உபாத்துப் படலத்தினுள்ளவை.

மேல்படைத்த பொற்றவிசில் வீற்றிருக்கு மக்காதுவம்
கால்படைத்த சீர்காணக் கண்டறேடைத்தே மில்லேமே.

116. தஞ்சத் திருந்தீர் தமியேங் [illegible]ங்களிரு
கஞ்சத் திருந்தகழல் கண்டெட[illegible]றைமுழுதாம்
எஞ்சத் திருந்தவென வெண்ணி[illegible]மெண்ணியவந்
தெஞ்சத் திருந்துயர நீங்குமே நீவிரவே.

177. காதங் கமழ்ரிய கத்தூரி மெய்யருயிர்
நீதங் கலந்ததனி நெஞ்சத்தினி திருப்பீர்.
பாதங்க டந்துபரி யாலிப்பீ றென்றடைந்தேம்
பேதம் பெறுமா றகன்றீர் பிறழ்வேமே.

178. உம்மைப்போல் வாரொருவ ருள்ளாரோ னெஞ்சறியும்
எம்மைப்போல் வாரிளிமே லீடேற லாமன்றோ.
தம்மைப் போருமிருந்து தன்னளிசா லந்தகையிற்
கும்மைப்போல் வீரோங் கதிகாண் வகையென்னே.

என்று புலம்பி, கடைசியாக "யா சுல்தானுல் ஆரிபீன் கைமிது அகுமதுல் கபீறு, தாங்கள் சீவனேடு இருக்கின்றீர்கள் என்று நாங்கள் கருதி, தங்கள் கையைப் பிடித்து பைஅத்துக் கொடுத்துத் தீட்சைபெறுதற்காக வெகுதூரங் கடந்து வந்தோம். இப்போது தாங்கள் உபாத்தாயிருக்கின்றீர்கள். யா ஸையிதீ, இனி எங்களுக்கு என்னசொல்கின்றீர்கள் ?" எனச் சொல்லி அலறி அழுதார்கள்.

ஸாலிஹரான நூற்றிருபதுபேர்களும் இவ்வாறு முறையிட்டு அழும்போது, நாயகமவர்களின் சிறப்பான கபுறு இருகூறாய்ப் பிளந்தது. பிளக்கவே, அதனுள் இருந்து "சகோதரர்களே, வாருங்கள்" என ஒரு சத்தம் வந்தது. அதன்பின், அல்லாகுத் தஆலா குர்ஆனில் அருளிய இந்த ஆயத்தும் கபுறுக்குள் தொனித்தது:—

ولا تحسبن الذين قتلوا في سبيل الله امواتاً بل احياء عند
ربهم يرزقون*

இதன் பொருள்:—

[திடனாக அல்லா வுடை பாதையில் மடிந்தவர்களை நீர்
வுத் தானவர்களாக நினை தீர்; என்கினும் அவர்கள் ஹய
தோடே யிருக்கின்றார் . அவர்களுக்கு அவன் பக்கம் இருக்
றிஜ்கு கொடுக்கப்படு ன்பதாம.

நாயகமவர்கள் முன் சொன்னவாறு சொல்லி
ழைத்துப் பின் இந்த ஆயத்தையும் ஓதி, தங்கள் பிர
பான வலக்கரத்தை நீட்டினார்கள். கபுறுக்குள் இருக்
கை புறப்பட்டவுடன் நூற்றிருபது பேர்களும் ஆவ
டே போய்விழுந்து, ஒவ்வொருவராகத் தொட்டு
அத்துக் கொடுத்துத் தீக்ஷைபெற்று, முரீதா ர்கள். நா
கமவர்கள் கபுறுக்குள் இருந்தே அவர்களுக்கு ஞானோ
தேசஞ்செய்து இருதீத்துடைய கிற்கா க்களும் போர்த்
திமஷ்கு நகரத்திற்குப் பயணப்படுத்தினார்கள். பின்பு
ளியேவந்த கை உள்ளேபோக, கபுறு முன்போலப் பெ
ருந்திக்கொண்டது. இவ்வற்புதத்தை அங்கே கூடியிரு
த எல்லாரும் கண்ணாரக்கண்டு ஆச்சரியமுற்று, நாயக
வர்களை வியந்து புகழ்ந்தார்கள்.

நாயகமவர்கள் உபாத்தான வுடன் இவ்வற்புதம்
கழ்ந்தபின்னர், மறுபடியும் இவர்களிடம் இருதத்து ப்
ற நாடி வருவோர்க்கு "என் சகோதரர்க ள, என்னு
ய குமாரர்களிடத்தும் கலீபா க்களிடத் ம் போய்
ஷாது பெற்றுக்கொள்வீர்களாக" என்று கபுறுக்குள்
ருந்து சத்தம் மாத்திரம் பிறக்கும். அவ் றே அவர்
அவர்களிடம்போய் இருதத்துப் பெறுவார்கள். இவ்வாறு
ஏழுவருடம் வரையும் நிகழ்ந்துவந்தது.

சுல்தானுல் ஆரிபீன் சையிது அகுமதுல் கபீறு றலிய
லாகு அன்கு அவர்கள் உபாத்தான பின், அவர்கள் மரு
ரும், கலீபா க்களுள் முதன்மையானவர்களுமாகிய சை

இபுருஹீமுல் அகுறபு அவர்கள் மிகப் பிரபலமுள்ளவர்களானார்கள். இவர்கள் முருகபாவில் தரிபாடாய் அல்லாகுத் தஆலாவுக்கு அச்சமும், வெட்கமும் கொண்டு, நாற்பது வருடம் வரையும் நிமிராமலும், ஆகாயத்தைப் பாராமலும் குனிந்துகொண்டேயிருந்தார்கள். குளிர்காலத்தில் வனத்தில் திரியும் வேங்கை நறுஜீஸ் என்னும் மலரைப் பறித்துக்கொண்டுவந்து இவர்கள் காலில் சூடுண்டாகும் அளவும் தேய்த்துக்கொண்டிருக்கும். பாம்பு வந்து அவ்வாறுசெய்வதும் உண்டு. ஒருநாள் ஒரு வயது சென்றவர் வாலிபர் ஒருவரைக் கூட்டிவந்து சைகு இபுருஹீமுல் அகுறபு அவர்கள் சமுகத்தில் விடுத்து: நாயகமே, இவன் என்னுடைய மகன்; என்சொல்லுக்கு ஒழுகி நடவாதவன். என்றைக்கும் என்மனம் புண்படுமாறு செய்கின்றான் என்று முறையிட்டார். இதை அவர்கள் கேட்டுச் சற்றுநேரம் தலைகவிழ்ந்து இருந்து, பின்பு நிமிர்ந்து அவ்வாலிபரைப் பார்த்தார்கள். உடனே அவர் தம் உடுப்பைக்கிழித்து எறிந்துவிட்டு அம்மணமாய்க் காட்டுக்கு ஓடிச்சென்று, அங்குள்ள மிருகங்களோடு மிருகமாய், அன்ன ஆகாரம் இன்றி நாற்பதுநாள் திரிந்தார். அதன்பின் இவர்கள் அவருடைய தந்தைகையில் ஒரு புடவையைக் கொடுத்து: இதனைக் கொண்டுபோய், வனத்தில் திரியும் உமது மகனுக்கு உடுத்தட்டும் என்று ஏவினார்கள். அவர் அவ்வாறுசெய்யவே, அவர் மகனார் அறிவு தெளிந்து நல்லுணர்வு பெற்று, சைகு அவர்களிடத்தில் வந்து பைஅத்துக்கொடுத்து, இவர்களுடைய கலீபாக்களுள் ஒருவராயிருந்தார்.

சைகு இபுருஹீமுல் அகுறபு அவர்கள் ஒருநாள் தங்கள் மஜ்லிசில் இருக்கும் மனிதர்களைநோக்கி "சகோதரர்களே, என் சமுகத்தேயிருப்பவர்களுள் ஒருவராவது என் நாட்டம் அன்றி எழவும் இருக்கவும் இயங்கவு மாட்டார்கள். இவ்விதத் தத்துவத்தை அல்லாகுத் தஆலா

எனக்குத் தந்திருக்கின்றேன்" என்று சொன்னார்கள். அப்போது அங்கிருந்தவர்களுள் ஷைகு ஸாலிஹூ என்பவர்: ஏன்! நான் விரும்பினால் எழுந்து நடப்பேன்; விரும்பினால் இருப்பேன். இவர்கள் நாடவேண்டுவது என்ன? என்று மனதில் எண்ணினார். அப்போது ஷைகு அவர்கள் அவரைநோக்கி "நீர் சக்தியுள்ளவராயின், எழுந்து நிற்க விரும்பி எழுந்திரும்" என்றார்கள். உடனே அவர் எழுந்தார்; எழக்கூடவில்லை. காலும் கையும் கட்டுண்டாற்போலிருந்தது. அவரைச் சிலர் தோளின்மேல் தூக்கிக்கொண்டு போய் அவர் வீட்டிற் சேர்த்தார்கள். அவர் ஒரு மாதமளவும் அப்படியே கட்டுண்டுகிடந்தார். அதின்மேல் அவர் நினைத்தது ஞாபகம்வந்து: என்னைத் தூக்கிக்கொண்டுபோய் ஷைகு அவர்கள் சமுகத்தில் வையுங்கள் என்று தம்முடைய ஆட்களுக்குச் சொன்னார். அப்படியே கொண்டு வந்து வைத்தார்கள். அவர் ஷைகு அவர்களிடத்து, தாம் செய்த குற்றத்தை முறையிட்டு மன்னிப்புக்கேட்டார். பிறகு ஷைகு அவர்கள் தங்கள் கையை அவர்க்குக்கொடுத்து, இதைப்பிடித்துக்கொண்டு நடப்பீராக எனச் சொல்லி, தாங்களும் நடந்தார்கள். அவர் கட்டுண்ட கால் கைகள் விடப்பட்டுக்கூட நடந்து முன்போலச் சுகம் அடைந்தார்.

இன்னும் ஒருநாள் ஷைகு அவர்கள் தங்கள் மஜ்லிசில் "நான் நாடினால் அல்லாமல் ஒருவரும் என்னைக்காணுதற்கு வரமாட்டார்கள்" என்றுசொன்னார்கள். இதனைக் கேட்டிருந்த அப்துல்மஜீது என்பவர் ஒருநாள் தம் வீட்டிலிருந்து புறப்பட்டு ஷைகு அவர்களைக் காண்பதற்குப் போகின்றபோது வழியில், இப்போது நாம் நாடித்தானே அவர்களைக் காண்பதற்குப் போகின்றோம்? அவர்கள் நாடியா போகின்றோம்? இது நம்முடைய சுய நாட்டந்தானே? என எண்ணினார். இவ்வாறு எண்ணிக்கொண்டு ஷைகு அவர்களின் வீட்டு வாசலைநோக்கி வந்தார். அப்போது அவ்வீட்

டுவாசலில் பெரிய புலியொன்று நின்று அவரை வெருட்டிற்று. அவர் வெருண்டு விலகியோடி நின்று பார்த்தார்; அப்புலி அங்கேயே உலாத்தி நின்றது. மற்றமனிதரெல்லாம் தடையின்றி வீட்டினுள் போய் வருகின்றார்கள்; இவர்மாத்திரம்நெருங்கினால், புலி வெருட்டுகின்றது. அன்று திரும்பிவந்து மறுநாள்போனார்; அன்றும் அப்படித்தான் இருந்தது. இவ்வாறு ஒருமாதமளவும் நிகழ்ந்தது. பின்பு அவர் இச்சங்கதியை பதியில் உள்ள மஷாயிகு மாரிடம் சொன்னார். அவர்கள்: நீர் ஏதும் தவறு நினைத்தீரோ? எனக் கேட்டார்கள். அதற்கு அவர்: ஸைகு அவர்கள் ஒருநாள், தாங்கள் நாடாமல் ஒருவரும் தங்களைக் காணவரமாட்டார் என்று சொன்னார்கள். மறுநாள் நான் அவர்களைக் காணப்போகும்போது: இப்போது நாம் அவர்கள் நாடியாபோகின்றோம்? நாம் நாடியன்றோ போகின்றோம் என்று நினைத்தேன். அன்றுமுதற்கொண்டுதான் அவர்களின் மனைவாசலில் புலி நின்று என்னை வெருட்டுகின்றது என மறுமொழிசொன்னார். இதைக்கேட்ட அவர்கள்: சரி; இவ்வாறு நீர் நினைத்ததாலேதான் ஸைகு அவர்களுடைய ஹால் புலியாய்த் தோற்றுகின்றது. இனி அவர்கள் நாடாமல் அவர்களைக்காணப் போகமாட்டீர் என்றார்கள். இதை அவர் கேட்டுக்கொண்டு ஸைகு அவர்களை மன்னிப்புக் கேட்பவராய்ப் போனார். போகும்போது, அன்றும் தோற்றரவாய் நின்றிருந்த புலி உள்ளேபோயிற்று. அவரும் உள்ளேபோய், ஸைகு அவர்களிடம் மன்னிப்புப் பெற்றுக்கொண்டார்.

யூசுபுல் அஸ்கலானி என்பவர் ஆபத்தானநோய்கொண்டு சுகமுறாமல் மிகவருந்தினார். அவர், நாம் இந்தநோயால் மவுத்தாய்விடுவோம் என்றே எண்ணியிருந்தார். எல்லாரும் அவ்வாறே எண்ணியிருந்தார்கள். ஒருநாள் இபுறாஹீமுல் அகுறபு அவர்கள் அவரிடம் நோய்விசாரிக்கச் சென்றிருந்தார்கள். அவர் இவர்களைநோக்கி: ஸைகே, நான்

இந்த நோயால் மௌத்தா[illegible]டுவேனோ என்று சொன்னார். இதனைக்கேட்டு இவர்கள் சற்றுநேரம் தலைகவிழ்ந்திருந்து, பின் நிமிர்ந்து அவரைநோக்கி: நீர் இப்போது மவுத்தாகமாட்டீர். உம்முடைய ஆயுசு நீண்டிருக்கும் என்றார்கள். அவ்வாறே அவர் சுகம்பெற்று, பின்னும் ஐம்பது வருடம் ஜீவித்திருந்தார்.

சைகு மஆல் என்பவர் இருக்கி லிருந்து அஜமுக்கு வர்த்தகஞ்செய்யப் போகும் கூட்டத்தாரோடு சேர்ந்து தாமும் சரக்குக்கள்வாங்கிக் கட்டிக்கொண்டு புறப்படும்போது, இபுறுஹீமுல் அகுறபு அவர்களிடம் பயணஞ் சொல்லப் போனார். அப்போது இவர்கள் அவரைநோக்கி "நீர் போகும் இடங்களில் அபாயகரம் யாதும் நேர்ந்தால், என் நாமத்தைச்சொல்லிக் கூப்பிடும்" என்று சொல்லிப் பயணம் அநுப்பினார்கள். அவர் வர்த்தகக்கூட்டத்தோடு சேர்ந்து எல்லாரும் புறப்பட்டு இருக் கைக்கடந்து குருஸான் நாட்டில் வரும்போது, வழிபறிக்கும் திருடர்கள் ஒரு கூட்டத்தார் குதிரைவீரர்களாய் வந்துவிழுந்து, அவர்கள் சரக்கு அனைத்தையும் பறித்துக்கொண்டு போய் விட்டார்கள். அப்போது மஆலுக்கு சைகு அவர்கள் சொல்லியநுப்பியது ஞாபகம் வந்தது. வந்தாலும், அவர் அதனைத் தம்முடைய கூட்டத்தாரிடம் சொல்லுதற்கும் தாமாவது அவர்கள் பெயரைச் சொல்லிக் கூப்பிடுதற்கும் வெட்கமுற்று, மனதில்மாத்திரம் நினைத்தார். உடனே அங்குள்ள ஒரு மலைச்சிகரத்தின்மீது சைகு அவர்கள் கையில் தடியொன்றுபிடித்து அத்தடியால் கொள்ளைக்காரக் குதிரைவீரர்களுக்குச் சாடைகாட்டி, பறித்த சரக்குகளைக் கொடுத்துவிடும்படி கண்டித்து ஏவிநிற்பது அவர் கண்ணுக்குத்தோற்றிற்று. அப்போதே அவ் வழிபறிகாரர் தாங்கள் பறித்துக்கொண்ட பொருட்களைத் திரும்பக்கொணர்ந்து கொடுத்தார்கள். மஆல் முதலான வர்த்தகர்கள்:

நீவிர் எங்களிடம் கவர்ந்த பொருளைத் திரும்பக் கொடுக்கின்ற காரணம் என்ன? என அத் திருடர்களிடம் கேட்டபோது, அதற்கு அவர்கள்: அதோ மலையுச்சியில் ஒருவர் நின்றுகொண்டு, நாங்கள் உங்களிடம் கவர்ந்தபொருள் அனைத்தையும் திரும்பக் கொடுத்திடும்படி எங்களை ஏவுகின்றார். அவர் ஏவலை மறுத்தால் மிகக்கொடுமையான ஆபத்து உண்டாகும் என்றுஎங்களுக்கு அச்சமாயிருக்கின்றது. அதனாலேதான் கொடுக்கின்றோம் என்று வதில் கூறி, எல்லாவற்றையும் கொடுத்துவிட்டுச் சென்றார்கள். பின்னர் அவ்வர்த்தகர்கள் க்ஷேமமாய் நாடிய இடஞ்சென்று வர்த்தகம்புரிந்து, நல்லலாபத்தோடு மீண்டுவந்தார்கள்.

ஷைகு இபுறாஹீமுல் அகுறபு அவர்கள் இவைபோன்ற இன்னும் பல அற்புதங்களையெல்லாம் செய்துகொண்டிருந்தார்கள். இவர்கள் அல்லாகுத் தஆலா வுக்கு மிகப் பயந்தவர்களாயும், தங்கள் காரியத்தில் அதிக வியாகுலமுள்ளவர்களாயும் இருந்தார்கள். இவர்களின் கலா முடிகி உபாத்தான அன்றைத்தினம் சூரியகிரஹணம் உண்டாயிற்று. அப்போது ஷாம் தேசத்தில் உள்ள மஷாயிகு மார்கள் "இன்றைத்தினம் பூலோகத்துச் சூரியன் மறைந்தபடியால், வானலோகத்துச் சூரியனும் மறைந்தது" என்று வியப்புறச் சொன்னார்கள்.

குத்புல் ஆலம், கௌதுத் தக்லைன், சுல்தானுல் ஆரிபீன், சுல்தான் சையிது அகுமதுல் கபீறு ஹுஸைனுற்றபாயிறீலியல்லாகு அன்கு அவர்களின் கலீபாக்கள் முதலான முரீதீன் களுடைய மகத்துவமே மனிதர் திடுக்குறத் தக்கது என்றால், இனி அந் நாயகமவர்களின் மகத்துவத்தை அளவிட்டுரைத்தற்கு யாரால் இயலும்! இக்கிரந்தம் முழுவதையும் வாசிக்கும் ஒருவர் அவர்களின் வல்லமையுள்ள மகத்துவத்தை ஒருவாறு நன்கறிவர். ஆதலால், நாயகமவர்கள்மீது விசுவாசமுள்ள ஒருவர்க்கு இக்கிரந்தம் போது

மானது என்னும் மனத் திருப்தியுடன் இதனை இம்மட்டில் முடித்து, அந்நாயகமவர்களின் திருவருட் பொருட்டு இதனை முடிப்பித்த அல்லாகுத் தஆலா வைப் புகழ்ந்து ஷுக்று செய்கின்றேன்.

இனி, மகிமைவாய்ந்த நாயகமவர்களின் திவ்விய சரித்திரமாகிய இக்கிரந்தத்தைச் செய்தவனுக்கும், இஃது அச்சிடப்பட்டு எங்கும் பரவி யாவர்க்கும் பலனருளுமாறு பொருளுதவிசெய்த புண்ணியசீலரான ஐயன்பேட்டை ஸ்ரீமாந். கா. அப்துல்கனி சாகிபு அவர்களுக்கும், இதனைப்பெற்று மனமுவந்து வாசிக்கும் இஸ்லாமான ஒவ்வொரு சகோதரர்க்கும், அல்லாகுத் தஆலா இம்மை மறுமைகளுக்கு இன்றியமையா நற்பலன்களை என்றும் அருளி ரக்ஷிப்பானாக. ஆமீன்.

உப்பாத்து

முற்றிற்று

---

## ஆரிபுநாயக வசனம்

முற்றுப்பெற்றது.

---

இந்நூலாசிரியராகிய

வா. குலாம்காதிறு நாவலர்

இயற்றிய நூல்கள்:—



வசனங்கள்:—

சீறப்புராண வசனம்.

திருமணிமாலே வசனம்.

கன்ஜுல் கருமாத்து.

ஆரிபுநாயக வசனம்.

உமறுபாஷாயுத்த சரித்திர

2 - ம் புத்தகம்.

3 - ம் புத்தகம்.

4 - ம் புத்தகம்.

புராணங்கள்:—

நாகூர்ப் புராணம்.

ஆரிபு நாயகம்.

முகாஷபாமாலே.

பிரபந்தங்கள்:—

நாகூர்க் கலம்பகம்.

குவாலீர்க் கலம்பகம்.

பதாயிகு கலம்பகம்.

திருமக்காத் திரிபந்தாதி,

மும்மணிக் கோவை.

* பகுதாது யமகவந்தாதி.

தர்கா மாலை.

மதுரைக் கோவை.

சமுத்திர மாலை.

சங்கத்துப் புலவராற்றுப்படை.

உரைகள்:—

சீறா நபியவதாரப் படலவுரை.

உரைகடிலக நிராகரணம்.

திருமதினத் தந்தாதியுரை.

பிக்ஹு மாலையுரை.

இலக்கணம்:—

பொருத்த விளக்கம்.

---

* இது வொன்றுமாத்திரம் இன்னும் அச்சிடப்படவில்லை.

159

# பாயிரங்கள்.

இஃது,
யாழ்ப்பாணம், "வித்வான்"
ம-ா-ா-ஸ்ரீ. ஷைகு
சு முகம்மது அசனு லெப்பை
இயற்றியது.

---

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

காரியத்தின் காரணத்துக் காரணனை யறிந்திடலெக் கன்மத்துள்ளும், பேரியற்று மிஞ்ஞான நூல்களிடைக் குறிப்புரையிற் பின்னு மாற்று, லாரிபுக ணெறியாய்த லதுவிளக்குங் கருவியெனி லருஞ்சீர் சான்ற, வாரிபுநா யகசரித மப்பலனும் பிறபலனு மருள்வ தாமால். (1)

எம்பெருமான் சையிதகு மதுல்கபீ ரியல்செயல்க ளேய்ந்த வின்ன, இம்பரிற்சீ ரியற்றமிழி னரிபுநா யகவசன மெனத்தந் தாராற், றம்பெயரித் தமிழ்வலயத் தெஞ்சாகி யத்தாரின் றகுதி யோங்கிப், பம்பரிலை நிறுத்துருலாம் காதிறுநா விலெனும்பேர் பரவி யோரே. (2)

அச்சரிதை யெற்றெனிலோ வறபினமை நூல்களிடை யளவின் றூர்வ, விச்சைபெறத் தெரிந்தெடுத்த பிண்டமமர் வதூரம் மோர் வேண்டு கோளி, னிச்சொலுமா வாசிரிய ரியற்றியதா மாரிபுநா யகபுராண, மிச்சைமிகு வசனமாப் பலர்வேண்ட வாக்கியதென் றிதங்காண் பீரே. (3)

குறித்திடுமிவ் வசனவிய லுரைப்பலது கருமத்தின் குணபாலுள்ளுஞ், செறிக்குமிக வெளிதின்மற் றகமையுந் தோன்றுமற் றிரத்தி னுக்கம், பொறித்திடுநல் லற்புயர்வாக் கியங்களங்ஙன் சுமந்தமையாற் புகல்விற் சீர்மை, யெறிக்குநடை யினிதெளிது சொற்சுருக்கும் பொருள்விரிவு மியைந்த தாமால். (4)

எவ்வெவரு மச்சரித மூணர்ந்திகொளவாராய வின்பம் பூம்பச், செவ்வியகல் லச்செழுத்தி னியைவிப்பான் பொருளுதவி செய்திட் டாராற், பவ்வநுகா முகின்மானு மீகையரை யன்பேட்டைப் பதி வாழ் சிலர், எவ்வமற வியற்றுபொது நலத்தாப்துல் கனிசாகி பென்பார் மாதோ. (5)

முற்றிற்று.

---

இஃது,

கனம்பொருந்திய் தைக்காசாகிபு

[illegible] முகம்மது ஸாலிகு அவர்களின் கலீபாவாகிய

யாழ்ப்பாணம், வித்வான்.

ம-௱-௱-ஸ்ரீ.

மு. சுலைமான் லெப்பை

இயற்றியது.

---

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

மணியுருவா யகிலாண்ட பலகோடி யுயிர்க்குயிராய் மகிமை சான்ற, வணியுருவா யடிமுடிக ளறிவரிதாய் நராதி யமைதற் கேய்ந்தார், பணியுருவாய்த் தெருண்மாக்க ளொளிமாக்க டமக்கி றையாய்ப் பதாயி குற்றாக், கணியுருவா யுயர்வள்ள லியற்கைபொ டு செயற்கைபுனை கழைத தன்னை. (1)

ஒருகால மெனைப்பேசல்வார் நனிவேண்ட நாற்பயனு மூறு மா றுய்ந்தோ, சிறுகால முளகாலும் வியக்கியநற் புராணமென்ன வி யற்றித் தந்து, வருகால வறிவாளர் மகிழ்மாறு முறைநயனின் வரை க வென்னப், பருகால மமுதினெனமர் பெருமானி னெறியர்பலர் பரிந்துகேட்ப. (2)

சொன்னயனும் பொருணயனு மருணயனுந் தெருணயனுந் தொகமுன் யாத்த, பன்னயனுங் குளநூற்கு முதனூலி னக்காரங் கள் பரடை நீங்கா, கின்னயனின் முறைபோலப் பொறித்தமுதம் வெறுத்தாலு மென்னுள் தேனு, மன்னயனி தெருமொழியும் வெ றுக்காத வினியதமிழ் வசனத் தானே. (3)

எர்விளக்க வெழுதிமுடித் தாரிபுரா யகவசன மெனும்பேர் சாற்றிப், பார்விளக்கு கைத்தாமற் றருளுமவ ரிவரென்பாம் பழ-

யீ ரன்னுர், சீர்விளக்க வறிகலைக்கிங் கொரு பொருளு மிலவொரு
காற் செப்பிற் சேணின், கார்விளக்கு ஆளிக் லெயி நாவலரென்
றோதுகுலாம் காதி ன்றே. (4)

அற்புதரா யக்ர்சரித வாரிபுரா யகவசன ம தி ளுவீான், பொ
ற்புயர்நற் பொருளுதவி புரிந்துமிகு புகழ்வகித்தார் புவியி னெற்
கோ, ரற்பினர்மா வையனகர் காதிறுசா கிபுதனிய நருமைசாலுங்,
கற்பகமுநீ தாழ்கொடையின் காதலித்து மகிபாப்துல் கனியென்
பாரே. (5)

முற்றிற்று.

---

இஃது,
திருவாங்கூர். இயற்றமிழ் வித்வான்.
ம-ள-ள-ஸ்ரீ
மு. கு. சுல்தான் முகியித்தீன்
இயற்றியது.

---

## ஆசிரிய விருத்தம்.

சலநிதிசூழ் புடவிபிற பல்லவுமுற் றியங்கவுபா தானப்பெம்
மான், குலநிதியாக் கெழுமுபிரான் மற்றரிய குதுபுகட்குட் கோ
டகத்தும், பலநிதியங் விதிக்குமுதா ரத்துவத்து மகிகாரம் படைத்
த மாண்பின், வலநிதியாம் சுல்த்தானுல் ஆரிபீன் செய்யிதகு மதுல்
கபீறு. (1)

இயற்கைமுதற் செயற்கையவா மான்மியங்க ளொருங்கமைய
விழைத்தநூலின், வியக்கமுறு மிலக்கியத்தை யிலக்கணத்தைப் ப
யின்றுணரா வெளிற்று மாந்தர், மயக்குறுதல் பற்றியரோ வாரிபு
ரா யகவசன மாப்பேர் வாய்ப்பத், தயக்கமுற மொழிபெயர்த்
தெவ் வெவர்க்குமினி தறிபாக்குத் தந்தோர் மன்னே. (2)

நவம்பெறுநா வலர்பெருமா னிலக்கணு கரநாகூர் தர்கா வித்
வான், றுவம்பெறுநா லாசிரியர் ஷீத்வஜன சேகரர்ம துரையார் நா
ன்காந், திவம்பெறுசங் கப்புலவர் தமுளொருவர் ஷமளஜஹா
ன்றுசேர்த்த, நவம்பெறுகா ரணப்பெயர்பல் புனைந்தகுலர்ம்
காதிறுநா வலவ் ரேறே. (3)

சின்னவருங் கவித்திரந்தம் பிரசுரிப்பல் யானெனக்க மெடீஇ த் தந்து, சொல்லணியச்சிடு நனிபிறங்கத் தருந்துரையைச் சொற்று மாமோடு வன்னவிலை மதித்து ....ஞ்சார் தஞ்சையையன் பேட்டைநல்லார் மனத்தும் வாழ, மன்னவனு மன்னியகா வப் துல்கனி யெனும்பெயரான் வளர்சீ மானே. (4)

முற்றிற்று.

—

இஃது,

கோட்டாறு. ம-ள-ள ஸ்ரீ.

கா. ப. ஷெய்குத் தம்பிப் பாவலர்

இயற்றியது.

—

அறுசீர்க் கழிநெடிலடியா சிரியவிருத்தம்.

சீரிருந்த நிலமகட்கோர் நிறைவிருந்த வணிமுகனும் நிலவி யாண்டு, மேரிருந்த திஜ்லாவா மெழினதியாய்த் திடனுறத்தி யில ங் ருக்கிற், சீரிருந்த விழியெனவான் முடிதடவு மூவெரணஞ் செ றிந்து மாறும், பேரிருந்த பெருவிடங்கப் பதாயிகெனு மொருநக ருட் பிறங்கு கோமான். (1)

தலைமயடுத்த மாத்தாவ ரெவரொனினு மவர்பாவர் தடிந்து து யக், கலையடுத்த நெறிபுகுத்தி யிமைப்பொழுதிற் கதியருளுங் க ருத்த ராகி, யுலையடுத்த செய்யிதரு மதுல்கபீற் சல்தானுல் ஆரி பீனு, நலையடுத்த பெருமானி னலனடுத்த விருஞ்சரித நாலை தன்னை. (2)

மாவருத்தும் பெருநிலத்து வாப்புதவு மருண்மகவாய் வந் தெஞ் ஞான்று, மூவருத்துங் கலைமகளு நாமகளோ கும்பர்குறு மு னியே யென்னத், தாவருத்துந் திருநாகை யிருந்துதமிழ்க் கோ லோச்சித் தகைமிக் கார்ந்த, மேவருத்து மிணையில்குலாம் காதிர் நா வலனென்னும் விபுதர் வேந்தன். (3)

தேன்கனியும் பாலமிழ்துங் கற்கண்டுஞ் சர்க்கரையுஞ் சேர்ந் த தென்னத், தான்கனியப் புலவர்குழாந் தலைகுனிந்து மனமுவந் து தகைவிற் கொள்ளக், காண்கனியுஞ் செந்தமிழ்கொண் டுணர்வு ளிக்கு மோர்நூலாய்க் கவினச் செய்து, வான்கனியு மாரிபுநா யக வசனப் பெயர்சிறுவி வழங்கி னானல். (4

அன்னவரும் பெரும்பீனுவ லுலகிடத்து நனிகிடந்திட் டவிர்வான் வேண்டிப் பன்னவரு முயராக்கப் பலன்பகிமை யுவ்பேட்டைப் பதியில் வாழுகவை, மன்னவரு மைந்தருவு முறழ்விலப்துல் கனிசாகிப் மகிழ்ந்தன் பாகத், துன்னவருப் பொருளுதவி யச்சியற்றி யிருஞ்சீர்த்தி துளக்குற் ருனே. (5)

முற்றிற்று.

---

இஃது,

நாகூர். வித்வான். ம-ா-ா-ஸ்ரீ.

மு. செவத்தமரைக்காயர்

இயற்றியது.

---

கொச்சகக்கலிப்பா.

சீர்பூத்த தனிமுதலோன் றிருவொளியி லொருமணியாய்ப்
பார்பூத்த மனுத்தொகுதி பரமநெறி பூண்டொழுகப்
பேர்பூத்த புகழோடும் பிறந்தநபி பெருமானூர்
நார்பூத்த பெயரரென நானிலமேத் தியவந்தோர். (1)

பாரிடத்து வந்தலைத்த படுபஞ்சப் பரிவொழியச்
சீரியவொண் டுளியிடையே செழுநறும்பூ வொடுபன்னீர்
மாரிபெய வைத்தபுகழ் மாண்டாவ சுல்தானுல்
ஆரியின் செய்த்தரு மதுவல் ருண்டகையார். (2)

அரியபெருஞ் சரித்திரமா மாரிபுரா யகமென்னும்
பிரியபுரா ணத்தினின்று பிரபலத்தர் பலர்வேண்ட
வரியமொழி பெயர்த்தரபி யெனுள்ளியசொற் றொடரோடு
மிரிபில்லிய ராரிபுரா யகவசன மென்றொருநூல். (3)

தென்னிலங்கை வர்த்தகருட் சிரோமணியென் றுலகேற்கும்
பொன்னிலங்கப் துல்கனியாம் புரவலனின் பொருள்வலியா
லின்னிலங்க வேயெழுதா வெழுத்திவியை வித்தகிலந்
தன்னிலங்கத்தொடுதழைத்துத தகைமைதரச்செய்தனனுல்.

தலக்கண்ணி பெறுநாகூர் தர்கா மஹாவித்வா
னிலக்கணத்து மீடிலதா வியல்சங்கூத் தொருபுலவ
னலக்கணறு ஷமஸ்ஜஹா னெனுமகிமை யலர்ந்தபட்டங்
கலக்கமறப் புனைந்தகுலாம் காதிறுநா வலரேறே. (5)

முற்றிற்று.

---

பாயிரங்கள்.

இஃது,

பாலக்காட்டுப் புலவர் திலகமாகிய மகாவித்வான்
ஜமால் முகம்மது புலவர் குமாரர்
கிழக்கரை. ம-ா-ா-ஸ்ரீ.
பா. பு ச். சுல்தா னப்துல் காதிறு
இயற்றியது.

---

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கடல்கிடந்த நிலவுலகுக் கொருசுடரா யொலிகடிருக் கருத்தராகி, மிடல்கிடந்த வருநவமு மிருந்தவனு மொன்றெனவே மிளிர்வுற்றென்ன, வடல்கிடந்த செய்யிநகு மதுல்கபீர் சுல்தானுல் ஆரிபீனெம், முடல்கிடந்த வுயிரனைய கோமானி னுயர்சரித வுததிதன்னை. (1)

இன்காட்டும் பாலமிழ்து சர்க்கரைதேன் கற்கண்டோ டிருந்தயாவும், பின்காட்டும் படியரிய செந்தமிழ்கொண்டு றமிகந்த பெருநூலாக. வன்காட்டும் புலவரெலாஞ் சிரந்துளக்கி மனங்களித்து வணங்கி நிற்ப. மன்காட்டு மாரிபுநா யகவசன மெனும் பெயரான் வரைந்து மாதோ. (2)

உள்ளரிய விலக்கணமு மிலக்கியமு மொருங்குதிரண் டொளிநிற்குங்கு, விள்ளரிய விற்நிலத்துத் தோற்றியொரு பதங்கமென விளங்கிநின்றுல், கொள்ளரிய பெரும்புகழி னாற்றிசையுங் குலவுமுயர் குரவனென, எள்ளரிய வெமதுகுலாம் காதிறு[illegible] வலர்பெருமானீந்திட்டானுல். (3)

அத்தகைய பெரும்பனுவ லெவ்விடத்து மெஞ்ஞான்று மமையாநிற்ப, முத்தகைய தமிழ்ப்புலவர்க் கொருமுகிலா யிருந்தியாய் முதன்மைவாய்ந்த, வித்தக வையன்பேட்டை நகரத்தில் கனிசாகிப் விழைவுள் ளார்ந்தில், கெத்தகைய ரும்பரவப் பொருளருளி யச்சியற்றி யிசைபெற்றனே. (4)

முற்றிற்று.

---

## பாயிரங்கள்.

இஃது,
இந்நூலாசிரியரின் மாணாக்கர்
நாகூர். ம-ள-ள-ஸ்ரீ.
ப. மு. வாஞ்சூர் பகீர்
இயற்றியது.

---

விருத்தம்.

அரியபெரும் புகழுடைய சரிதமான, ஆரிபுநா யகவசன மதனைச்செய்து, பெரியதடம் புவிப்புலவர் மற்றுமெல்லாம், பேணிக்கொண் டாடிச்சிறப்பக் கொடுத்தானம்ம, உரியதமி ழிலக்கியத்து மிலக்கணத்து, முள்ளநூலடங்கலையு மொருங்கேகற்றுத், தெரியவுல கெங்கும்பேர் கொண்டொழுஞ், சிறந்தகுலாம் காதிறுநா வலச்சிங் கேறே.

---

இஃது,
காரைக்கால். புலவர் மஸ்தான் சாகிபு குமாரர்
ம-ள-ள-ஸ்ரீ
காதிறுகனி; ம. ச.
இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பேரறிவு நிறைந்தோங்கு மாரிபுநா யகவசனப் பெருநூ றன்னைத், தாரணியி லுதவுகுலாம் காதிறுநா வலர்பெருமான் றகுதி யோர்ந்து, நே[illegible]றைய வல்லவர்யா ரிலக்கியத்து மிலக்கணத்து நிரப்பமெல்லாம், யாரறிவ ரியற்றியநூ லேனையபோ லியற்றவல்லார் யாவர் தாமே.

---

இஃது, கீழக்கரை. ம-ள-ள-ஸ்ரீ.
மு. முகம்மது ஸதகுதம்பி யாலிம் புலவர்
இயற்றியது.

---

கட்டளைக் கலித்துறை.

மகராலயம்புடை சூழ்ந்துறைஞாலத்து வந்துதித்த
சிகராதவொண்கல்வி வான்கட்டுமற்றரு சேயர்கேட்கும்

அகலாநவம்பொலிந் தாரிபுநாயக மாஞ்சரிதம்
இகலாரகங்கண் டிகலாதடங்க விலங்கியதே.

பற்றற்றுயர்ந்த பதாயிஞாதர் பதாம்புயத்தை
நெற்றிக்கணிந்து மூன்செய்தபுராணத்தை நீணிலத்தில்
முற்றத்தெரிந்து சித்தத்தைப நீங்க மொழிபெயர்த்தார்
கற்றுத்தெளிந்த குலாம்காதிறுகலைக் கற்பகமே.

முற்றிற்று.

---

இஃது.

கீழக்கரை, ம-ள-ள-ஸ்ரீ.

சே. மு. முகம்மது சதக்தம்பி ஹாபிலு குமாரர்

செயிது முகம்மது ஆலிம் புலவர்

இயற்றியது.

---

தரவு கொச்சகக்கலிப்பா.

பொன்றுஞ்சு மன்றுதி பொருளுடை மருளுடை
நன்றுஞ்சு பன்கயறுத்துப் பரனுடைந் திருவுளமே
நன்றுடாய்ப் பூண்டொழுகு நாயகர்க்கு நாயகமாம்
மன்றுடைம் சுவ்வுறுவ ஆரிபின் வண்சரிதம். (1)

அணித்தொழுகும் விழுமியதாம் ஆரிபுநாயகமெனப்பேர்க்
கணித்தளவு புனிப்பவொண்ணுக் காவியத்தைத் தந்தனுள்
பணித்துலவு மரும்பயனைப் பல்லோரு மாய்ந்துணர
வணித்திலகுந் திலதமென வரியவுரை தெரிவுடனே. (2)

பண்சிறக்கப் பரிவாகப் பகர்வதுகொண் டேயுபய
கண்சிறக்க நோக்குறினே கரத்தேந்தத் திருத்தமுறும்
வண்சிறக்க மாண்பயனை மனத்திருத்த வனப்பாரும்
விண்சிறக்குஞ் ஞாயபதி மேவுகிற்கவிண்டனனே. (3)

வான்பாயும் வானமுகில் வரக்கிழித்துத் தண்புனலுட்
டான்பாயுந் தண்பதுமத் தடகாகை வடபதியான்
தேன்பாயுஞ் செந்தமிழான் செய்யனுவ லெண்ணிறந்த
கான்பாயுந் திண்குலாம் காதிறுநா வலரேறே. (4)

பாயிரங்கள் முற்றிற்று.

---